# ஆனந்த முதல் ஆனந்த வரை

—அறுபது ஆண்டுகள்

அ. மு. ப.

# ஆனந்த முதல் ஆனந்த வரை

—அறுபது ஆண்டுகள்—

பேராசிரியர்
அ. மு. பரமசிவானந்தம்
நிறுவனர்—வள்ளியம்மாள் கல்வி அறம்
தமிழ்க்கலை இல்லம், சென்னை-30

தமிழ்க்கலைப் பதிப்பகம்
தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30

டிசம்பர் 1992

பகுதி I இளமையின் நினைவுகள்—முதல் பதிப்பு, டிசம்பர் 58

,, II காஞ்சி வாழ்க்கை ,, செப்டம்பர் 80

,, III பச்சையப்பரில்—முதல் பதிப்பு டிசம்பர் 92

**விலை ரூபாய் நாற்பது (40-00)**

இதன் வருவாய் அனைத்தும் ஆசிரியர் நிறுவியுள்ள வள்ளியம்மாள் கல்வி அறத்திற்கே உரியதாகும்.

---

அச்சிட்டோர் :

கவின்கலை அச்சகம்,
கந்தசாமி நகர், பாலவாக்கம்,
சென்னை-600 041.
தொலைபேசி : 41 71 41

# உள்ளே



## I இளமையின் நினைவுகள்

## II காஞ்சி வாழ்க்கை



## III பச்சையப்பரில்

# முன்னுரை

தமிழ்க் காப்பியங்கள் வெறும் கதைகளை மட்டும் கூறுவன அல்ல. அக்கதைகளுடன் மக்கள் வாழ்வுக்குத் தேவையான—சமுதாய நலம்புரக்கும் நல்லபல நீதிகளையும் அறத்தாறு செல்லும் நெறிகளையும் சுட்டிக்காட்டியே தம் கதைகளை நடத்திச் செல்லுவன. அத்தகைய நிலையில் பெருங்காப்பியத்தினைச் சிறந்த முறையில் செய்த 'மானுட' னாகிய கம்பர், தம் இராமாயணத்தில் பல வாழ்வியல் உண்மைகளையும் அறநெறிகளையும் அள்ளியள்ளி வழங்கி யுள்ளார். அவற்றுள் ஒன்றே இலங்கைக் காவல் தெய்வம் அநுமனுக்குக் கூறியது.

அநுமனை இலங்கை நகரில் புகாவண்ணம் தடுக்க முயன்ற அக்காவல் தெய்வம் அவனிடம் தோல்வியுற, இராவணனின் பல கொடுமைகளைக் கூறி, அந்த மறம் நீங்கி அறம் அரும்பும் காலம் வந்தது என்பதனை,

'அன்னதே முடிந்தது ஐய! அறம் வெல்லும்
பாவம் தோற்கும் என்னும் ஈது உண்மை'

என்று காட்டும் உயரிய நெறியில் கம்பர் தம்முடைய கவிதையினை யாத்துள்ளார். ஆம்! அந்த உண்மை அன்று மட்டுமன்றி இன்றும், என்றும் உண்மை என்பதைச் சமுதாய வரலாறுகளும் பேரரசுகளின் வரலாறுகளும் தனி மனித வரலாறுகளும் காட்டுகின்றன—இனியும் காட்டும். இத் தகைய வாழ்க்கை நெறி தனிமனித வாழ்வில் நடைபெறும் என்பதை நான் என் வாழ்நாளில் பலநிகழ்ச்சிகளின் வழியே கண்டுள்ளேன்.

உலகவரலாற்றில் 'சூரியன் என்றும் மறையாத பேரரசா யிருந்த 'ஓர் அரசு, இன்று அனைத்தையும் துறந்து—மறந்து எங்கோ தன்னளவில் சுருங்கி வாழ்வதை அறிவோம். அப்படியே பெரும்கரடி என உலகையே அஞ்சவைத்த ஒரு பேரரசு இன்று சிதறுண்டு, பலவாகப் பிரிந்து, பாழ்பட்டு நிற்ப தையும் காண்கின்றோம். அப்படியே தனி மனிதர்களிலேயும் இரணியன், இராவணன் காலந்தொடங்கி இன்றுவரை நாடு தொறும் நெடிதுவாழ்ந்து நிலைகெட்ட மனிதர்களையும் காண்கின்றோம். இந்த நிலையில்நான் என் அனுபவத்தில் கண்ட பல உண்மைகளை—என் வாழ்வின் நிகழ்ச்சிகளை எண்ணி எண்ணிப் பார்த்தேன். என் வாழ்நாளின் உலக நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்ப்பதுண்டு. என் இளமைக் காலம் தொட்டு, சுமார் எண்பது ஆண்டுகளை நீடுநினைந்த நாட்கள் பல. அந்த நினைவு அலைகளில் அவ்வப்போது எண்ணி எழுதிய என் வாழ்வு பற்றிய கட்டுரைகள் அடங்கியதே இந்த நூலாகும்—நான் பிறந்த ஆனந்த ஆண்டு முதல்—அடுத்த ஆனந்த வரை—அறுபது ஆண்டுகள் வரை என் எண்ணத் தெழுந்த என் வாழ்வின் ஒருசில குறிப்புகளே இங்கே எழுதப்பெற்றன. எழுத வேண்டியவை மிகமிகப் பல

இதில் முதல் பகுதியாக உள்ள 'இளமையின் நினைவுகள் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன், உதகை உச்சியில் இருந்து எழுதப் பெற்றதாகும். 'காஞ்சி வாழ்க்கை', பின் சில ஆண்டு களில் குற்றாலத்திலிருந்து எழுதியதாயினும் எழுதிச் சில ஆண்டுகள் கழித்தே வெளிவந்தது. இவைபற்றியெல்லாம் அவ்வவற்றின் முன்னுரைகளில் குறித்துள்ளேன். மூன்றாம் பகுதியே இப்பொழுது எழுதப்பெற்றது. இந் நிகழ்ச்சிகளை யும் சேர்த்து அறுபது ஆண்டுகள் வாழ்வின் சிறுகுறிப்பினைக் கொண்டதால் இந்நூலுக்கு இப்பெயரிட்டேன்.

இன்று நான் எண்பதைத் தொட்டுக் கொண்டிருக் கின்றேன். எனவே அடுத்த இருபது ஆண்டுகள் நிகழ்ச்சி

யினைத் தொகுத்துப் பின் எழுத நினைக்கின்றேன். சில ஆண்டுகளுக்கு முன் நான் எழுதி வெளியிட்ட, 'திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன்' என்ற நூலில் எங்கள் வள்ளியம்மாள் கல்வி அறம் தோன்றி வளர்ந்த வகையினையும் அதனொடு இணைந்த என் வாழ்வினையும் குறித்துள்ளேன். எனினும் இன்றுவரை, அடுத்த இருபது ஆண்டுகளின் (1974—1994) வாழ்க்கைக் குறிப்பினைப் பின் வெளியிட எண்ணி யுள்ளேன்.

மூன்று பகுதியாக உள்ள என் வாழ்க்கைக் குறிப்பு இன்று 'ஆனந்த முதல் ஆனந்த வரை' என்று வெளிவருகிறது. அங்கங்கே என் உயர்வு தாழ்வுகளையும் உற்ற செயல்களையும் குறித்துள்ளேன். வாழ்க்கை பற்றிய நூல்கள் அதிகம் இல்லாத நிலையில், என்நூலைத் தமிழகம் ஏற்கும் எனும் துணிபுடையேன். ஏற்று நலம் கண்டு குறையிருப்பின் சுட்டிக்காட்டித் திருத்த வேண்டுகிறேன். என் வாழ்வில் துணை நின்ற அனைவருக்கும் நன்றியுடையேன்.

இந்நூல் அச்சிடுங்கால் ஒப்பு நோக்கிப் பிழைதிருத்தி உதவிய பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் சா. வளவன் அவர்களுக்கு என் நன்றி உரித்து.

'வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித்திருநாடு' —பாரதியார்

25-12-92
தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30.

பணிவுள்ள,
**அ. மு. பரமசிவானந்தம்**

# நாளும் நல்வினை செய்க

''தீவினை என்பது யாது?' என வினவின்
ஆய்தொடி நல்லாய்! ஆங்கது கேளாய்
கொலையே, களவே, காமத் தீவிழைவு
உலையா உடலில் தோன்றுவ மூன்றும்;
பொய்யே, குறளை, கடுஞ்சொல், பயனில்
சொல்எனச் சொல்லில் தோன்றுவ நான்கும்
வெஃகல், வெருளல், பொல்லாக்காட்சி என்று
உள்ளந் தன்னில் உருப்பன மூன்றும்—எனப்
பத்து வகையால் பயன்தெரி புலவர்
இத்திறம் படரார்; படர்குவர் ஆயின்
விலங்கும் பேயும் நரகரு மாகி
கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர்

'நல்வினை என்பது யாது?' என வினவின்
சொல்லிய பத்தின் தொகுதியின் நீங்கி
சீலம் தாங்கி, தானம் தலைநின்று
மேல்என வகுத்த ஒருமூன்று திறத்து
தேவரும் மக்களும் பிரமரும் ஆகி
மேவிய மகிழ்ச்சியின் வினைப்பயன் உண்குவர்''

—சாத்தனார்—மணிமேகலை—
(24, ஆபுத்திர நாடு அடைந்த காதை—123-140)

# முதற் பதிப்பின் முன்னுரை

உதகையின் உயர்ந்த மலை உச்சிக்குச் சென்றுவிட்டேன்" தொட்டபெட்டா என்ற அந்த உச்சியிலிருந்து நாற்புறமும் நோக்கினேன். எத்தனை மேடுபள்ளங்கள், கானாறுகள், குன்றுகள், சிறுமலை வழிகள், கணவாய்கள், காடுகள், தோட்டங்கள்... இப்படிப் பலப்பல என் கண்முன் காட்சி அளித்தன. மேட்டுப்பாளையம் தொடங்கி, தொட்டபெட்டா உச்சி வரையில் நான் கடந்து வந்த மைல்களை எண்ணி எண்ணிப் பார்த்தேன். சுமார் நாற்பது கற்கள். அந்த நாற்பது மைலிலும் தான் எத்தனை எத்தனைக் காட்சிகள் - வேறுபாடுகள் காண்கின்றன. பவானியாறும் அதன் பாலமும், அதன்பின் புகை வண்டி மலைஏறும் காட்சியும் - ஒருபுறம் பள்ளத்தாக்கும் மற்றொருபுறம் உயர்ந்த செங்குத்தான மலையும் அவற்றின் இடையில் பல் சக்கரத்தைப் பற்றி ஏறும் புகைவண்டியும் கண்முன் நின்றன. வளைந்து வளைந்து தாழ்ந்தும் செங்குத்தாக நிமிர்ந்தும் செல்லும் கற்பாறைகளும் கண்முன் தோன்றின. பரந்த பள்ளத்தாக்குகளும் குன்னூர் போன்ற நகரங்களும் பிற அமைப்புக்களும் தெரிந்தன. அருகிலே உதகையின் காட்சி கண்ணுக்கு விருந்தாக அமைந்தது. ஆம்! நான் இம் மலைப் பகுதியின் உச்சிக்கு வந்து விட்டோமென நினைத்து நிமிர்ந்தேன். கதிரவன் தன் பொற் கிரணங்களை எழுப்பி மேலே வந்துகொண்டே இருந்தான். மலை உச்சியில் உடன் இருந்த நண்பர் இது இரண்டாவது உயரிய மலை (Second Highest Peak) என்று கூறினார். ஆகவே திகைத்தேன். இதனினும் உயரியஉச்சி ஒன்று உண்டு போலும் என உணர்ந்தேன். நண்பருக்கும் அதுபற்றித் தெரியவில்லை. அது எங்கிருக்கிறது என்று அருகில் உள்ள மற்றவரைக் கேட்டேன். யாரும் அதுபற்றி அறிந்தவர்களாகவே தெரியவில்லை. என்றாலும் பலரும் கூறும் உயரிய உதகையின் உச்சிக்கு வந்து விட்டோம் என்ற நிலையில் சுற்றி நோக்கினேன். அடுத்து வரும் வாழ்வின் உயர்ச்சி நமக்குத் தெரியாது மறைந்து நிற்பது போன்று அக்காலை வேளையில் உயரிய அந்த உச்சி நமக்குப் புலனாகவில்லை போலும் என நினைத்தேன். ஆம்! வானத்துக் கதிரவனை அதே வேளையில் அண்ணாந்து நோக்கினேன். ஆதவன் கொடுமை இன்றேனும் அதிகநேரம் அவன் ஒளியில் நிற்க இயலாது வந்தவழித் திரும்ப முயன்றேன். அந்த வேளையில் அக்கதிரவன்—என் வாழ்நாளைக் கூறிடும் பகலவன் 'இன்று வந்த இச்சிறு நெறியை நோக்கி

நிற்கும் நீ, உன் வாழ்நாளில் நீ வந்த வழியை நோக்கிப் பார்த்தாயா? எண்ணிப்பார்' என்று கூறாது கூறினான். உண்மையில் எண்ணிப் பார்க்கத்தான் வேண்டும் என்ற உணர்வு தோன்றிற்று. மேட்டுப்பாளையத்திலிருந்து நாற்பதுகல் கடந்த இந்த மலைப் பாதையை நினைத்த என் மனம் என் வாழ்நாட் பாதையில் மைல் கற்களாக நாற்பது ஆண்டுகள் கழிந்து விட்டதை உணர்த்திற்று. ஆம். கடந்த நாற்பது ஆண்டுகள்—அறிவு தெளிவுபட்ட அந்த ஐந்தாம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்து இன்று நாற்பது ஆண்டுகள் கழிந்துவிட்டன. என் அறிவறிந்த வாழ்வுப் பாதையில் கடந்த நாற்பது ஆண்டுகளில் நான் கண்ட காட்சிகள், பெற்ற அனுபவங்கள்—வாழ்வின் மேடுபள்ளங்கள் — எத்தனை எத்தனை வேறுபாடுகள்—அளவில! அவை அனைத்தும் ஒன்றன்பின் ஒன்றாகப் படமெடுத்துக் காட்டுவன போன்று வந்து வந்து சென்றன. அந்த ஐந்து வயதை எட்டும் நாளில் அங்கம்பாக்கத்தில் இருந்த நாள் தொட்டு இன்று இதோ உதகையின் உச்சியில் இருக்கும் நாள் வரையில் என் வாழ்வில் ஏற்பட்ட மாறுதல்கள் பலப் பல.

என் வாழ்வைப் புறநோக்காகக் காண்பவர்கள் ஏதோ மகிழ்ச்சியிலே பிறந்து மகிழ்ச்சியிலேயே வளர்ந்த ஒருவன் நான் என்று கணக்கிட்டு விடுவார்கள். 'எப்பொழுதும் சிரிப்பு நீங்காத முகமுடையவன்' என்று உற்றவரும் பெரிய வரும் என்னைப் பற்றிக் கூறுவார்கள். என்றாலும் என் வாழ்வுப் பாதையை நோக்கினால் யாரும் சிரிக்க வழி இருக்காது என்னலாம். துன்ப எல்லையில் நின்று கொண்டே—எதிரே தெரியும் இன்பத்தை எட்டிப் பிடிக்கலாம் என்ற எண்ணத்தோடே—கழிந்த மைல்கள் பல. ஒருபுறம் பள்ளத்தாக்கை வைத்துக்கொண்டே உயரிய உதகை உச்சி யைப் பிடித்த புகைவண்டியைப் போன்று நானும் அன்று தொட்டு இன்றுவரை முயன்று கொண்டுதான் வருகிறேன். புகைவண்டிக்கு வழிகாட்ட—வளைந்து குழிந்து நெளிந்து செல்லும் பாதையை விளக்க—வண்டியிலே பெட்டிக்கு ஒருவ ராகக் கொடியேந்தி நிற்பதோடு, வழியிடையெல்லாம் நிலையத்துள்ளவர்கள் நிறுத்தி நிறுத்தி, வேண்டிய அறிந்து, வேற்று வண்டி வழியிடை முட்டா வகையில் வழி செய்து தொல்லையில்லாமல் காத்து வழியனுப்புகின்றனர். எனது வாழ்வுப் பாதையில் அவ்வாறு வழிகாட்டிகளாக உற்றவரும் உதவுபவருமாகப் பேசத் தக்கவர் இல்லை எனினும் ஏதோ புண்டைய அறிஞர்கள் விட்டுச் சென்ற வாய் மொழிகளையே

ஓரளவு வழிகாட்டிகளாகக் கொண்டு முன்னேறினேன். நான் வழுக்கி விழுந்த இடங்கள் பல. வலிய வீழ்த்தப்பட்ட இடங் களும் சில. அண்ணாந்து நோக்கிச் சிறிது சிறிதாக வளைந்து மேலேறும் புகைவண்டியைப் போலவே சில நாட்களில் மேலே றியதும் உண்டு. இப்படி இன்று இந்த உதகையின் உச்சியில் நிற்பது போன்று வாழ்வில் ஓரளவு முன்னேறினேன் என்று சொல்லலாம். அம்முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்த அனைவரையும் வாழ்த்துகிறேன். இவ்வாறு என் கடந்தகால நிகழ்ச்சிகளை எண்ணும்போது முதலில் என் இளமையின் செயல்களும் அவற்றின் வழிச் சிந்தையில் எழுந்த நினைவு களும் முன் நிற்கின்றன; கல்லா இளமையில் ஒவ்வொருவரும் எத்தனை எத்தனையோ இன்ப துன்பங்களை அனுபவித் திருப்பர். என் இளமையிலும் நான் பெற்ற இன்ப துன்பங் கள் பல. அக்காலத்தில் அவற்றைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றல் ஏது? எனவே அன்று அனுபவித்த அத்தனையும் விளையாட்டுச் செயல்களாகவே கழிந்தொழிந்தன. இன்று அந்த இளமை எண்ணங்கள் உள்ளத்து எழும்போது ஒவ்வொன்றிலும் பொதிந்துள்ள உண்மைகளும் கருத்துக் களும் அவற்றின் வழி நான் மட்டுமன்றி மனித இனமே அறிந்து செல்லக் கூடிய வழிதுறைகளும் அவற்றைக் காட்டும் அறநெறிகளும் உடன் தோன்றுகின்றன. சிறுசிறு செயல்களும் சிந்தையைத் துலக்கும் ஒளி விளக்கங்களாக அமைந்துள்ளன என்னலாம். ஆயினும் அவற்றையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வரிசைப்படுத்தி வகையாக ஒரு வரலாற்றை எழுத நான் முன்வரவில்லை. அது விரிவாகச் செல்வதாக அமைவ தன்றிப் பலருக்கும் வேண்டாததாகவும் ஆகும். எனவே இங்கு என் உள்ளத்தில் தோன்றுவனவற்றுள் ஒரு சிலவற்றை மட்டும் எடுத்துக்காட்ட எண்ணுகிறேன்.

நான் உதகையில் ஒரு திங்கள் தங்கினேன். என் அறை யின் உள்ளிருந்து நேர் நோக்கின் எதிரில் நாளும் இவ்வுயரிய சிகரம் தோன்றிக் கொண்டுதான் இருக்கும். அதைச் சென்று காணவேண்டும் என்று நான் முதலில் நினைக்கவில்லை. சுற்றித் தோன்றும் பல குன்றுகளில் இதுவும் ஒன்று என எண்ணினேன். எனினும் சிலநாளில் அக்குன்றின் பெயர் என்ன என்றும் அதுவே அப்பகுதியில் உயரிய குன்று என்றும், அது பல இயற்கைச் சூழல்களைக் கொண்டுள்ளது என்றும் அதைக் காண வேண்டுமென்றும் என் நண்பர்கள் கூறினர். பிறகு தான் அக்குன்றினைச் சென்று காணவேண்டும் என்ற கருத்து

எழுந்தது. காலை சிற்றுண்டிக்குப் பின் புறப்பட்டதால் திரும்ப நண்பகலாகிவிட்டது. என்றாலும் கதிரவன் வெம்மையை வீசுவதற்குப் பதில் என் உள்ளத்தில் பல விளைவுகளை வீசி என்னைத் திரும்பிப் பார்க்கத் தூண்டி விட்டான். ஆம். திரும்பி வந்துகொண்டிருக்கும் காலையில் தான் என் சிந்தனை நீண்டது. இளமையின் நினைவுகளும் பிற நிகழ்ச்சிகளும் ஒன்றன் பின் ஒன்றாக உள்ளத்து எழுந்தன. இந்நினைவுகளை உணர்த்திய அந்நெடுங்குன்று 'நிலைத்து வாழ்க' என வாழ்த்துகிறேன்.

தத்தம் வாழ்க்கை வரலாற்றைப் பல பெரியவர்கள் மேலை நாட்டில் எழுதியுள்ளனர். அண்ணல் காந்தியடிகளார் போன்ற நம் நாட்டுப் பெரியவர்களுள் சிலரும் எழுதியுள்ளார் கள். அவர்தம் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும்போது நாம் எத்தனை எத்தனையோ உண்மைகளை உணர்ந்து கொள் கிறோம். ஒருவருடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறும் போது அதில் எத்தனையோ இடர்ப்பாடுகள் உள. நல்லதை யும் பொல்லாததையும் அப்படியே கூற வேண்டி இருக்கும். நல்லவரையும் அல்லவரையும் காட்டவேண்டியிருக்கும். அதனால் வேறுபாடுகளும் மாற்றங்களும் உண்டாகலாம். அவற்றையெல்லாம் கடந்து இனிய முறையில் வாழ்க்கை வரலாற்றை எழுதுபவர்கள் மிகச் சிலரே.

இது என் வாழ்க்கை வரலாறு அன்று; அவ்வாறு என் வரலாற்றை எழுதத் தேவையும் இல்லை; அதனால் பயன் பெறுவாரும் இருக்க மாட்டார்கள்; எனினும் இளமையில்—எனது பதினாறாம் ஆண்டு வரையில்—நான் பெற்ற சில அனுபவங்களையே இந்த இளமையின் நினைவுகள் வழி வெளியிட நினைத்தேன். அந்நினைவில் மலர்ந்ததே இந்நூல்.

இந்நூல் வருங்காலத்தை உருவாக்கும் வகையில் இளைஞர்களுக்கும் தமிழ்நாட்டு வாழ்வை வளப்படுத்த முன் நிற்கும் நூல் நிலையங்களுக்கும் பெரிதும் பயன்படும் என்ற துணிபுடையேன். இந்நூல் வெளிவருங்கால் ஒப்பு நோக்கி உதவிய செல்வர் அ. திருமலை முத்துசாமி அவர்களுக்கு என் நன்றி. இந்நூல் மறைந்த மனைவி சந்திராமணி—முதலாண்டு நினைவுநாள் வெளியீடு.

உக்கல்
30-12-58

அ. மு. ப.

# முதற் பதிப்பின் முன்னுரை

## II

மனிதன் வாழப்பிறந்தவன். பரந்த அண்ட கோள வாழ்வியலில் மனித வாழ்வு ஒரு நொடிக்கும் குறைந்தது என்றாலும் அதில் அவன் சிறக்க வாழவே பழகவேண்டும். உள்ளத்தில் உண்மை ஒளியும் உதட்டில் வாய்மையும் செயலில் செம்மையும் சிறக்க வாழும் மனிதனே அந்த 'நொடி' எனும் கால எல்லையைத் தாண்டி நெடிது வாழ்பவனாவான். இந்த மனித இனம் தோன்றி எத்தனையோ ஆண்டுகள் ஆயின. எனினும் அந்த இனம் பற்றித் திடமான வரலாறு இல்லை. இந்த நூற்றாண்டில் பல்வேறு சாதனங்கள் உண்டானமையின் பலவகையில் மனித வரலாறு விளக்கப் பெறுகிறது. அறிஞர் கள் தம் வாழ்வைப் பற்றி நூல்களும் வடித்துள்ளார்கள். அந்தப் பெருவரிசையில் ஒன்றாக இது அமையாததாயினும் ஓரளவு இந்த நூற்றாண்டின் இடைக் காலத்தில் இருந்த காஞ்சியைச் சார்ந்த ஒரு நிலையினை இது காட்டும் என நம்புகிறேன்.

பல பேரறிஞர்கள் நாட்குறிப்பினை முறையாக எழுதி வைத்து, அடுத்துத் தேவையாயின் அவற்றைத் தொகுத்தும் விரித்தும் நூல்களை வெளியிடுவர். சில நாட்குறிப்பு ஏடுகள் அப்படியேயும் அச்சிடப் பெற்றுள்ளன. மேலைநாடுகளில் இத்தகைய 'சுய வரலாறுகளும்' மற்றவர்கள்—தம் ஆசிரியர் போன்றார் பற்றி எழுதிய வரலாறுகளும் அதிகமாக உள்ளன என அறிகிறோம். எனினும் நம் தாய்நாட்டில் அதிலும் தமிழ்நாட்டில் அதிகமாகத் தனி மனிதர்தம் வரலாற்று நூல் கள் இல்லை. பள்ளிப் பிள்ளைக்கென எழுதப் பெற்ற ஒருசில வரலாற்று நூல்கள் உண்டேனும் தம் வரலாற்றைத் தாமே எழுதும் மரபு இன்னும் நம்மிடை வளரவில்லை. திரு.வி.க. போன்ற பெரியவர்களுள் இரண்டொருவர் எழுதிவைத்த

வாழ்க்கைக் குறிப்புகள் உள்ளன. அந்த வரிசையில் இன்றே னும், ஏதோ ஒருவகையில் என் வாழ்க்கைக் குறிப்பை எழுதி அதன் ஒரு பகுதியையே இன்று உங்கள் முன் வைக்கிறேன்.

உயிர் வளர்ச்சியின் உச்சியில் வாழ்கின்ற மனிதன் தன் வாழ்வினைப் பிற உயிர்களின் வாழ்க்கையோடு, பிறமக்களின் வாழ்க்கையோடு, சமுதாய உணர்வோடு எண்ணிப் பார்ப்பா னாயின் உலகில் இன்று நடைபெறுகின்ற பல போராட்டங்கள் இல்லையாகக் கழியும். இன்றைய உலகில் மனிதன், பல பேரறிஞர்கள் சுட்டிக் காட்டுவதுபோன்று, மனித உணர்வை விட்டு விலங்கு உணர்வினை மேற்கொண்டு எங்கோ சென்று கொண்டிருக்கிறான். இந்த உணர்வினால் பல உண்மைகள் மங்கி மடிகின்றன. உதாரணமாக ஒன்றைமட்டும் இங்கே சுட்டிக்காட்ட நினைக்கின்றேன். இலஞ்ச ஒழிப்புப் பற்றி அரசாங்கம் தீவிரமாகப் பிரசாரம் செய்ய, சில மேல் நிலையில் உள்ள அமைச்சர்களும் ஒரு சில உயர் அதிகாரிகளும் உண்மை யில் கைநீட்டாத நல்ல கடப்பாட்டில் வாழ்கின்றார்கள். என்றாலும் இலஞ்சம் 'அங்கிங்கெனாதபடி', ஆண்டவனைப் போல் தெளிவாகக் காட்ட முடியாததாய் நிலவுகிறது. இப்படியே பிறவகைகளும். இத்தகைய கொடிய சூழலில் மனிதன் சிக்கி வாழும்போது, 'அவன் சுயவாழ்வு ஒரு கேடா' என்று கூட நினைக்கத் தோன்றுகின்றது. எனினும் ஒருசிலர் என்றாயினும் உண்மை உணர்ந்து, நேர்மை, நாட்டிலும் நிலவுலகிலும் நிலவாதா என்ற உணர்விலேயே பல நல்ல நூல் களை நாட்டில் உலவ விடுகின்றனர். வள்ளுவர் காலம் தொடங்கிக் காந்தி அடிகள் காலம்வரை எத்தனையோ அறவோர்கள் எழுதிவைத்த அத்தனையையும் படித்துக் கொண்டே, பேசிக்கொண்டே, அவர்களைப் பற்றிய மகா நாடுகளை நடத்திக் கொண்டே, மனிதன் தன் மாறுபட்ட வழியிலேதான் சென்று கொண்டிருக்கிறான். இந்த நிலையில் இத்தகைய நூல்கள் தேவையா என்ற எண்ணம் என்

உள்ளத்திலும் எழத்தான் செய்தது. எனினும் என் அன்னையார் இருவர் பிரிந்தமையும் வேறு பிற நிகழ்ச்சிகளும் என்னை இதை எழுதி வெளியிடத் தூண்டின என்பதோடு, பிற காரணங்களை முன்னுரையிலும் காட்டியுள்ளேன். என் அன்னைக்கு என் ஊரின் பக்கத்திலேயே நிலைத்த நினைவுச் சின்னம் ஏற்படுத்த வாங்கிய நிலமும் (நூலில் குறிக்கப் பெற்றது) தற்போது என்வசம் இல்லை. எனவே இன்று அண்ணாநகரில் உள்ள அன்னையின் பெயரால் அமைந்த அறப்பணியினைச் செம்மையுறச் செய்தால் போதுமானது என்ற முடிவுக்கு வந்தேன். ஆனால் அதற்கும்தான் எத்தனை இடர்ப்பாடுகள்?

நாற்பது ஆண்டுகளுக்கு முன் நான் வாழ்ந்த காஞ்சி வாழ்க்கையின் கூறுகள் சிலவற்றை இங்கே சுட்டிக்காட்டி யுள்ளேன். அக்காலத்தில் வேறு நிகழ்ச்சிகள் பலவும் இன்று என் கண்முன் நிழலிடுகின்றன. எனினும் பத்தாண்டுகளுக்கு முன் எழுதியதை மாற்றியோ கூட்டியோ குறைத்தோ வெளி யிடக் கூடாது என்ற எண்ணத்திலே இந்த அளவில் இந்த நூலை உங்கள் முன் வைக்கின்றேன்.

காலம் நமக்கென நிற்பதில்லை. 'நிகழ்காலம்' என்ற ஒன்றே இல்லை என்று அறிஞர்கள் கூறும் அளவுக்குக் காலம் விரைந்து செல்லுகிறது. 'செல்லுகிறது' என்று முடிப்பதற்குள் அந்தநிலை இறந்தகாலமாகி விடுகிறது. இவ்வளவு விரைந்து செல்லும் காலச் சூழலுக்கிடையில் கடந்த காலத்தை நினைப் பது ஒரு மகிழ்ச்சிக்குரிய செய்கையாகவே அமைகின்றது. பல்வேறு நிகழ்ச்சிகள் துக்கம் தோய்ந்தவையாக இருந்தாலும் மனிதன் அதனுள்ளேயே மூழ்கி இருந்து தன் காலத்தையெல் லாம் வீணாக்காது, சிறிது சிறிதாகத் தெளிவு பெற்று, சமூகத் தோடு தன்னை இணைத்துக் கொண்டு எப்படி எப்படி மாறி வாழக் கற்றுக் கொண்டான் என்பதையும் இந்த நினைவால்

உணரமுடிகின்றது. ஒவ்வொரு சாதாரண மனிதனும்—கல்லாதவனும்கூட—அவனுடைய கடந்தகால நிகழ்ச்சிகளை எண்ணிச் செயலாற்றுவனாயின் நிச்சயமாக அச் செயல்கள் தெளிவு பெற்றவனாகச் செய்யும் என்பது உண்மையாகும். எனவே மற்றவர்களுக்குப் பயன்படுகிறதோ இல்லையோ, இந்நூல் என்னைப் பொறுத்தவரையில் என் உளத்துக்குத் தெளிவூட்டி, உணர்வை நல்லவழியில் திருத்தி, உலகில் உலவ வழிகாட்டியாக அமையும் என எண்ணுகிறேன்.

என் நூல்களின் விற்பனை வருவாய் அனைத்தும் வள்ளியம்மாள் கல்வி அறத்துக்கே என உரிமைப்படுத்தி நின்ற நெறியில் இந்நூலும் 'வள்ளியம்மாள் கல்வி அறத்'துக்கெனவே வெளிவருகிறது. தமிழ் உலகம் இந்நூலை நலமிருப்பின் ஏற்றுப் புரக்க வேண்டுகிறேன். இந்நூல் வெளிவரக் காரணமாயிருந்த அனைவருக்கும் நன்றியுடையேன்.

'தமிழ்க்கலை இல்லம்'
சென்னை-30
1-9-'80

பணிவுள்ள,
**அ. மு. பரமசிவானந்தம்**

# 1. தாத்தாவின் கதைகள்

அக்காலம் என்னை நான் நன்றாக அறிந்து கொள்ளாத காலம். வயது ஐந்துக்கும் கீழ்ப்பட்டிருக்கும். பெற்றோர் மடியில் இருந்து, தலைவைத்துப் பொழுதுபோக்கிய காலம் என்னலாம். நான் எனது தாய்ப்பாட்டனார் வீட்டிலேயே இருந்துவிட்டேன். என் தாத்தாவுக்கு என் தாயாரும் பெரியம்மாவுமே இரு குழந்தைகள். ஆதலால் அவர்கள் இருவருக்கும் கலியாணம் செய்து வீட்டிலேயே தங்க வைத்துக் கொண்டார்கள். எனவே நானும் என் தாத்தா வீட்டி லேயே வளர்ந்தேன். அந்தத் தாத்தாவுக்கு நான் ஒருவனே பேரன். ஆதலால் என்னை நன்றாகச் சீராட்டிப் பாராட்டிப் போற்றி வளர்த்து வந்தார்கள். அவர்கள் சாப்பிடும்போது நானும் உடன் சாப்பிடவேண்டும். அவர்களுக்குக் கல்கண்டு கொடுத்தால் எனக்கும் பங்கு உண்டு. காப்பி நான் அந்தக் காலத்தில் குடித்தேனா, இல்லையா என்பது திட்டமாக நினைவுக்கு வரவில்லை; என்றாலும் வெய்யில் சுவரிலிருந்து கீழ் இறங்குவதற்குள், அதாவது காலை ஒன்பது மணிக்குள், நானும் தாத்தாவும் சாப்பிட்டு விடுவோம். தாத்தாவுக்கு அப்படி ஒன்றும் வயது அதிகம் இல்லையாயினும் காலை ஒன்பது மணிக்குள் சாப்பிடாவிட்டால் மயக்கம் வந்து விடுமாம். எனக்கு மயக்கம் வருகிறதோ இல்லையோ நானும் அவருடன் சாப்பிட்டு விடுவேன். இப்படி என்னை அறியாமலேயே என் இளமை கழிந்தது.

தாத்தாவுக்கு ஒரு சிறு ஒற்றை மாட்டு வண்டி உண்டு. அவர் பக்கத்து ஊருக்கு வயல் பார்க்கச் சென்றாலும் வாலாஜாபாத்துக்கு வேறு சாமான்கள் வாங்கச் சென்றாலும்

அந்த வண்டியில் தான் செல்வார். அவருக்கு வண்டி ஓட்டுவதற்கு என்று தனி ஆள் இருந்தான். அவன் பெயர் சரியாக நினைவு இல்லை. முனியன் என்று இருக்கலாம் என நினைக்கின்றேன். அந்தச் சிறிய மாடு முனியன் கைப்பட்ட வுடன் வேகமாக ஓடும். பாலாற்றில் கூட எங்கும் நிற்காது என நினைக்கின்றேன். தாத்தாவோடு வாலாஜாபாத்துக்குப் பலசரக்குக் கடைக்குப் போவேன். ஏதேதோ சாமான்களை யெல்லாம் கடைக்காரன் கட்டிவைப்பான். கடைசியில் அவன் என் கையிலும் ஒரு சிறு பொட்டலத்தை நான் கேளா மலேயே திணிப்பான். அதில் கல்கண்டு அல்லது முந்திரிப் பருப்பு அல்லது திராட்சை இருக்கும். இரண்டொரு நாள் இப்பொட்டலம் தரப்படுவதைக் கண்ட நான் தாத்தா எப்போது சென்றாலும் உடன்செல்லப் பிடிவாதம் செய்வேன். அவர்களும் என்னை அழைத்துக் கொண்டுதான் செல் வார்கள். என் அம்மா சிலவேளை அதட்டித் தடுக்க முயன்றாலும் அது நடக்காது.

ஆண்டுக்கு ஒரு முறை—கார்த்திகை மாதத்தில்— தோப்பில் ஒரு திருவிழா நடக்கும். அதற்குக் 'கடைஞாயிறு' விழா எனப்பெயர் உண்டு என்பதைப் பிறகுதான் தெரிந்து கொண்டேன். அதில் பல பிராமணர்களுக்கு வனபோசனம் அளிப்பார்கள். அப்போது நானும் தாத்தாவும் அந்த ஒற்றை மாட்டு வண்டியில் செல்வோம், திருவிழா எங்களுடையது. எங்கள் தாத்தாவுக்கு அண்ணா ஒருவர் இருந்தாராம். அவர் இவ்வாறு செய்யச் சொல்லி ஏற்பாடு செய்து, அது ஆண்டு தோறும் தவறாமல் நடப்பதற்காக நிலமும் விட்டுச் சென்றி ருக்கிறாராம். ஆகவே நாங்கள் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் அந்த விழா நடந்துகொண்டேதான் இருக்கும் போலும். (ஆனாலும் இப்போது கிராமத்தில் யாரும் பிராமணர்கள் இல்லையாதலால் வனபோசனம் இல்லை. விழா மட்டும் அதற்காக அமைக்கப்பெற்ற மண்டபத்தில்

நடைபெற்றுக்கொண்டு வருகிறது.) அந்த வனபோசனம் மாலை மூன்று மணிக்கு நடக்கும். அதுவரை தாத்தா சாப்பிடாமலா இருப்பார். இல்லை; காலை ஒன்பது மணிக் கெல்லாம் அவரும் நானும் வீட்டில் சாப்பிட்டு விடுவோம். இரண்டு மணிக்குத் தோப்புக்குச் செல்வோம். அந்தப் பிராமணர்களெல்லாம் சாப்பிட்டு வருவார்கள். வந்த பிறகு எல்லாரும் ஓர் இடத்தில் உட்காருவார்கள். குறைந்தது ஐம்பது அறுபதுபேருக்குமேல் இருப்பார்கள்; பெண்களும் குழந்தைகளும் கூட இருப்பதுண்டு. பிறகு அவர்களுக்கெல் லாம் வெற்றிலைப் பாக்குத் தருவார்கள். அதில் 'தட்சணை' என்று இரண்டணா, நான்கணா வைக்கப் பெற்றிருக்கும். அத்துடன் வாழைப்பழமும் பொடிப்பொட்டலமும் வைத் திருக்கும். இதெல்லாம் எதற்கு என்பது எனக்குத் தெரியாது. பெண்களும் பிள்ளைகளும் கூடப் பொடிப்பொட்டலம் எடுத்துக் கொள்வார்கள். இப்பொடி எல்லாம் எதற்கு என்று நான் தாத்தாவைக் கேட்பேன். அவர் ஏதாவது பதில் சொல்லி இருப்பார். அது என்னவாயிருக்குமென்று கூட இன்று என்னால் ஊகிக்க முடியவில்லை. என்றாலும் பின்னால் இப்படியா பொடியும் புகையிலையும் வாங்கிக் கொண்டு ஒரு வனபோசனம் பெறுவார்கள் என்று நான் நினைப்பதுண்டு. அன்றைக்கு எனக்குப் பொடி புகையிலை எல்லாம் பெறுதல் கெட்ட சகுனம் என்பது தெரியாது.

பிராமணர்களுக்கு எல்லாம் கொடுத்தபிறகு அவர்கள் காலில் விழுந்து தாத்தா 'கும்பிடு'வார்கள். நானும் உடன் கும்பிடவேண்டும். பிறகு அவர்கள் போய்விடுவார்கள். உள்ளே சமையல் செய்த ஐயர் 'சித்திரான்னங்'களையும் வடை பாயாசம் முதலியவற்றையும் கொடுப்பார். நாங்கள் எடுத்துக்கொண்டு அருகிலிருக்கும் ஆற்றுக் கால்வாய்க்குச் செல்வோம். அப்போது எங்கள் உறவினர் சிலராவது எங்களை வட்டமிட்டுக்கொண்டு வருவார்கள். அனைவரும்

உள்ளவற்றைச் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கும் கொஞ்சம் கொடுத்தனுப்புவோம். இப்படி அந்தக் காலத்தில் எங்கே போனாலும் தாத்தாவை விட்டுப்பிரியாது செல்வது வழக்கம்.

தாத்தா எப்போதும் 'சும்மா' இருக்கமாட்டார்கள். ஏதாவது கதை சொல்லிக்கொண்டே இருப்பார்கள். அப்போது எனக்கு ஐந்துவயதுகூட நிரம்பவில்லையாதலால் அவர்கள் சொன்ன கதைகளெல்லாம் இன்று நினைவுக்கு வரவில்லை. என்றாலும் கிளிக்கதை ஒன்றுமட்டும் இன்னும் நினைவில் இருக்கிறது. அதைப் பின்னாலும் வேறு கதைப் புத்தகங்களில் படித்தும் இருக்கிறேன். ஆதலால் அப்படியே மனத்தில் பதிந்துவிட்டது என்னலாம். மேலும் அவர் இந்தக் கதையை அன்றாடம் மாலை ஆறுமணிக்கு மேல் விசிப்பலகையில் படுத்துக்கொண்டு நான் பக்கத்தில் உட்கார்ந்திருக்கச் சொல்லிக்கொண்டே இருப்பார்.

தாத்தா புராண இதிகாசங்களெல்லாம் படித்தவர். தெய்வபக்தி உள்ளவர். ஆகவே தெய்வபக்தி உள்ள கதைகளெல்லாம் கூடச்சொல்லி இருப்பார். ஒருநாள் மாலை கதை சொல்லிக்கொண்டே இருந்தார். அந்த வேளையில் என் அம்மா நான்கைந்து விறகுக் கட்டைகளைக் கையில் எடுத்துக்கொண்டு தெருவிலிருந்து உள்ளே வந்தார்கள். அதைக்கண்ட தாத்தா அதட்டிக் கூப்பிட்டார்கள். நான் பயந்தே போனேன். 'எங்கிருந்து கொண்டு வந்தாய் விறகை?' என்றார்கள். 'பெரியவீட்டுத் திண்ணையில் இருந்து' என்று என் தாயார் பயந்து பயந்து பதில் சொன்னார்கள். என் தாத்தா கோபம் கொண்டால் யாராலும் எதிர்நிற்க முடியாது. என்னை அம்மா எவ்வளவு மிரட்டினாலும் தாத்தாவுக்கு முன் அவர்கள் அலறுவார்கள். 'அடுப்புக்கு வேண்டும்' என்றார்கள் மெதுவாக அம்மா. 'தெரியும்; முதலில் இதை எடுத்த இடத்திலேயே வைத்துவிட்டு வா, பிறகு சொல்லுகிறேன்' என்றார் அவர். அம்மா ஒன்றும்

சொல்லாமல் அப்படியே செய்துவிட்டு வந்தார்கள். அதற்குள் என்னை வளர்த்த பாட்டி-தாத்தாவுக்கு அக்கா. காமாட்சி அம்மாள் எங்கிருந்தோ அதட்டல் கேட்டு வந்தார் கள். 'ஏன் இப்படிக் குழந்தைகளை அதட்டுகிறாய்?' என்று பரிவோடு கேட்டார்கள். 'ஏனா? அவள் ஏன் அந்த விறகை எடுத்தாள்? அந்த இலுப்ப விறகு கோயில் விறகு என்று தெரியாதா? நம் விறகு தொழுவத்தில் இருக்கிறதே, பொழு தோடே முனியனை எடுத்துவரச் சொல்வதுதானே' என்றார்கள், அப்போதுதான் எல்லாருக்கும் புரிந்தது. கோயில் விறகை உலர்த்திக் கோயிலுக்குக் கொண்டு செல்வதற் காக எங்கள் பழைய பெரியவீட்டுத் திண்ணையில் அடுக்கி வைத்தார்கள். எங்கள் விறகு எல்லாம் பக்கத்தில் தொழு வத்தில் அடுக்கி இருக்கும். அம்மா இது தெரியாது அவசரத் தில் கோயில் விறகை எடுத்து வந்துவிட்டார்கள். 'நாம் எவ்வளவுதான் கோயிலுக்குத் தானம் கொடுத்தாலும் அக்கோயில் சொத்தில் ஒரு சிறு துரும்புகூட நமக்குப் பயன் படலாகாது' என்ற கொள்கையில் தாத்தா தீவிரமாக இருப்ப வர்கள். (அவர்கள் நிலத்தை மூன்றாய்ப் பிரித்து ஒன்றைக் கோயிலுக்கும் இரண்டை இருமக்களுக்கும் வைத்தார்கள் என்பர் ஊரார். இன்றும் அவர்கள் ஏற்படுத்திய பல நிபந்தங்கள் ஊர்க் கோயிலில் நடைபெற்று வருகின்றன.) இப்படிச் சிலச்சில நாட்களில் நான் கேட்டுக்கொண்டிருக்கும் கதைகளில் தடை ஏற்படுவதும் உண்டு. ஆயினும் அந்தக் கிளிக்கதை மட்டும் அப்படியே மனத்தில் நின்றுவிட்டது.

கிளிகள் கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிக்கும் காடு. அக் காட்டில் அக்கிளிகளைக் கண்ணி வைத்துப் பிடிக்கும் வேடர் களும் சுற்றிக்கொண்டிருந்தார்கள். ஒரு நாள் ஒரு வேடன் வலையை விரித்துக் கீழே தானியங்களையும் பழத்துண்டுகளை யும் தூவிவிட்டு ஒரு புதரில் மறைந்திருந்தான். எங்கிருந்தோ கிளிகள் கூட்டமாகப் பறந்தோடி வந்து வலைவிரித்திருந்த

மரத்தின் மேல் உட்கார்ந்தன. சில கிளிகள் கீழே பார்த்தன. பழத்துண்டுகளும், தானியங்களும் தெரிந்தன போலும். அவற்றை உண்ண விரும்பின. எனினும் ஒரு கிழக்கிளி அவை விரிக்கப்பட்ட வலையில் உள்ளதென்றும், அதில் ஆபத்து இருக்கிறது என்றும் சொல்லிற்றாம். என்றாலும் பெரும்பாலான கிளிகளின் விருப்பப்படி அனைத்தும் பறந்து வந்து கீழ் இறங்கிப் பழங்களைத் தின்னவந்தன. வேடன் வலையில் எல்லாம் சிக்கின. அப்போது எல்லாக் கிளிகளும் அந்தப் பெரிய கிளி சொன்ன பேச்சைக் கேட்காது போனோமே என வருந்தினவாம். ஆயினும் அந்தப் பெரிய கிளி அப்போதும் தளராமல், 'இப்போதும் ஒன்றும் கெட்டு விடவில்லை. உடனே தாமதிக்காமல் அனைவரும் அப்படியே பறப்போமேயானால் வலை நம்முடன் வந்துவிடும். நாம் வேறு எங்காவது சென்று அறுத்துக்கொள்ளலாம். உடனே வேடனிடமிருந்து விடுதலைபெற அதுவே வழி' என்றதாம். உடனே தாமதம் செய்யாமல் அனைத்தும் பறந்துவிட்டன வாம். பாவம் வேடன் வேகமாக ஓடிவந்தும் அவற்றைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. இவ்வாறு அக்கிளிகள் தப்பின. இதுதான் கதை. கிளி பேசுமா பேசாதா என்றெல் லாம் அன்று நான் ஆராய்ச்சி செய்யவில்லை. தாத்தா சொன்னவற்றை அப்படியே நம்பிவிடுவேன். அவர் இந்தக் கதையைச் சொல்லி 'ஆகையால் சிறியவர்கள் பெரியவர் சொல்லுவதை எப்போதும் கேட்க வேண்டும்' என்றும், எல் லாரும் ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்தால் எதிரியால் நம்மை ஒன்றும் செய்ய முடியாது என்று அறிந்து கொள்ளவேண்டும் என்றும், நல்ல நீதிகளை உடன் சொல்லுவார்கள். ஆம்! இதுபோன்று எத்தனையோ கதைகளை நல்ல நீதிகளோடு இணைத்து எனக்கு அந்த ஐந்தும் நிரம்பாத அறியாப் பருவத் தில் சொல்லுவார்கள். நான் பெரியவனாகிய பிறகு அந்தக் கதை பஞ்ச தந்திரத்தில் உள்ள ஒரு கதை என்று அறிந்த பிறகும்கூட, அதைத் 'தாத்தாவின் கதை' என்றுதான் நான்

சொல்லுவது வழக்கம். இப்படி எத்தனையோ கதைகள். ஆம்! தாத்தா இறந்து மறைந்து விட்டார்கள். அவர் நினைவை மறக்காது வாழவைக்கும் இக்கிளிக் கதையும் அதன் வழி அவர் சொல்லிச் சென்ற நீதியும் எனக்கு இன்றும் முன் நின்றுகொண்டிருக்கின்றன. அவர்கள் சொன்ன அந்த இரண்டு நீதிகள்—பெரியவர்கள் பேச்சைக் கேட்டு நடத்தலும், கூடிவாழ்தலும்—அன்றைக்கு மட்டுமின்றி இன்றைக்கும் என்றைக்கும் தேவையான நீதிகளாகவே உள்ளதை அறியாதார் யார்! என் தாத்தாவின் நினைவைச் சாகாமல் வாழவைக்கும் அக்கிளிக்கதையும் நீதிகளும் நெடுங்காலம் வாழ்க என வாழ்த்துகின்றேன்.

# 2. பாட்டியின் அறிவுரை

என் தாயார் என்னைப் பெற்ற கடன் ஒன்றைத்தான் அறிவார். வளர்த்தவர் என் பாட்டி காமாட்சி அம்மாள் தான். பாட்டி என்றால் தாயைப்பெற்ற பாட்டியோ தந்தையைப் பெற்ற பாட்டியோ அல்லர். மேலே கண்ட என் தாத்தாவின் உடன்பிறந்த என் அம்மாவின் அத்தையாகிய பாட்டியாவர். அவர்கள் இளமையிலேயே கணவனை இழந்து எங்கள் பாட்டனாருடைய குடும்பத்தோடு குடும்பமாக ஒன்றி விட்டவர்கள். அக்குடும்பத்தில் பலநாட்கள் ஆண் குழந்தையில்லாது நான் பிறந்தமையின் அவர்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. அதிலும் பாட்டி எப்போதும் என்னைச் சீராட்டிக் கொண்டே இருப்பாளாம். தாத்தா இறந்தபிறகு இந்தப் பாட்டியுடன்தான் பெரும்பாலும் இருப்பேன். நான் பள்ளிக் கூடம் போகும் வேளை தவிரப் பெரும்பாலும் அவர்களோடு தோட்டங்களுக்குச் செல்வேன். அவர்கள் விடியற்காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து வீட்டு வேலைகளைச் செய்து

விட்டு, பூந்தோட்டத்திற்குச் செல்வார்கள். அவர்கள் காலைதோறும் மலர்கள் கொண்டுவந்து பகலில் கட்டி மாலையில் கோயிலுக்குக் கொண்டு சென்று கொடுப்பார்கள். அவர்களை இது குறித்துச் சிலர் பண்டாரப்பாட்டி என்றுகூடக் கேலி செய்வார்கள். எங்கள் ஊரில் கோயிலுக்கு மலர் கொண்டு கொடுப்பவர்கள் பண்டாரங்கள்தாம். அவர்கள் அதற்காக மானியம் பெறுவார்கள். ஆனால் என் பாட்டி அன்பினால் ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டினையும் பண்டாரத்தொண்டு எனக் 'கிண்டல்' செய்வது அவ்வூரில் சிலரது வழக்கமாக இருந்ததாம். எனினும் பாட்டியார் மனங் கோணாது தவறாது தன் தொண்டைச் செய்து வந்தார்கள். நான் அவர்கள் பக்கத்திலேயே படுத்துத் தூங்குவேன். எனவே அவர்களோடு எழுந்து பல்துலக்கிக்கொண்டு, நானும் காலையில் பூப்பறிக்கச் சென்றுவிடுவேன். திரும்பிவர மணி ஏழுக்கு மேலாகிவிடும். வந்ததும் வீட்டில் 'அம்மா' காலை எழுந்து படிக்காது போய்விட்டதற்காகத் திட்டுவார்கள். நான் ஆற்றுக்கு ஓடி விடுவேன். குளித்து வந்து பிறகு படித்துச் சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடம் சென்றுவிடுவேன். வீட்டில் என் தாத்தா இறந்த பிறகு—என் ஐந்து வயதுக்கு மேல்—அவருடன் ஒன்பது மணிக்குச் சுடச்சுடச் சாப்பிட்ட நிலை மாறிவிட்டது. காலையில் 'பழையது' போடுவார்கள். ஊறுகாயுடன் பழையதைச் சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கு ஓடி விடுவேன்.

என் பாட்டி என் வாழ்வில் மிகுந்த அக்கறை காட்டுவார்கள். அதனால் சில சமயங்களில் என் அம்மாவுடன் 'சண்டை' போடுவதுகூட உண்டு. என் அம்மாவுக்கும் பாட்டிக்கும் என்னை வளர்ப்பதின் நோக்கம் ஒன்றாக இருந்தும் வளர்க்கும் முறையில் வேறுபாடு உண்டு. அம்மா என்னை நன்றாக அடித்து உதைத்து வளர்த்து நல்லவன் ஆக்க வேண்டும் என்று நினைப்பார்கள். பாட்டியோ அடிக்

காது உதைக்காது அன்பினாலேயே வளர்த்து நல்லவனாக்க முடியும் என்று நம்பினார்கள். எனவே அம்மா என்னை அடிக்கும் போதெல்லாம் பாட்டி 'சிபாரிசு'க்கு வருவார்கள். இதனால் அவர்களுக்குள் வார்த்தைகள் முற்றும். நான் உண்மையில் என் அடிக்கு அழுவதைவிடப் பாட்டியின் பரிவுக் காகவே கண்ணீர் விடுவதுண்டு.

என் தாத்தா இறந்தவுடனேயே என் அம்மாவும் பெரியம்மாவும் பங்கிட்டுக்கொண்டார்கள். எனவே என் னுடன் அம்மா, அப்பா, பாட்டி மூவரும்தான் இருந்தார்கள். அப்பா ஊரிலுள்ள சில 'நல்லவர்'களோடு சேர்ந்து வேறு வழியில் திரும்பிவிட்டார் என்னலாம். எனவே என்னைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு அம்மாவுக்கு அதிகமாயிற்று. அதனாலேதான் அம்மா என்னை எப்படியும் நல்லவனாக்கி முன்னுக்குக் கொண்டுவர வேண்டும் என்று ஆசைப்பட்டார். அப்படியே பாட்டியும் ஆசைப்பட்டார். அவர்கள் இருவருக் கும் இடையில் நான் எங்கள் ஊரிலேயே பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டு வந்தேன்.

பாட்டியுடன் காலையில் பூந்தோட்டத்திற்குச் செல் வேன். பகலில் ஓய்வு வேளையின்போது கத்தரித் தோட்டத் திற்குச் செல்வேன். மாலையில் கோயிலுக்குச் செல்வேன். இப்படிச் செல்லும் போதெல்லாம் அவர்கள் பலப்பல சிறு கதைகளையும் பாட்டுக்களையும் சொல்லிக்கொண்டே இருப் பார்கள். அவர்களுக்கு 'அ, ஆ' படிக்கத் தெரியாது; எழுத்து வாசனையே கிடையாது. என்றாலும் பல கதைகள் சொல்லுவதிலும் பண்பாட்டோடு நடந்துகொள்வதிலும் அவர்கள் திறம் வாய்ந்தவர்கள். எந்த வேளையிலும் ஓய்வாக உட்காரமாட்டார்கள். அப்போது எங்களுக்கு ஒரு மாந்தோப்பு இருந்தது. அதில் துடைப்பங்கள் உயரமாகச் செழித்து வளர்ந்து இருக்கும். அவர்கள் அந்தப் புதர்களி லெல்லாம் சென்று அவற்றைச் சேகரித்து வருவார்கள். பலர்

அவர்களை இதுபற்றிக் கேலி செய்தாலும் 'நம் வீட்டுக் காரியங்களைச் செய்வதற்கு நாம் ஏன்வெட்கப்படவேண்டும்?' என்று அவர்கள் அறிவுரை கூறி நீதி உணர்த்துவார்கள். என்னையும் அப்படியே எல்லா வீட்டு வேலையையும் செய்யச் சொல்லுவார்கள். சாமான் துலக்கும் வேலை முதல் வீடு துப்புரவு செய்யும் வேலைவரை எந்தச் சிறிய வேலையாயினும் நமக்காக நாமே செய்துகொள்வதில் தவறு இல்லை என்று கூறி அவற்றிலெல்லாம் என்னை ஊக்குவார்கள். அத்துடன் படிக்கும் வேளையில் படிப்பை நிறுத்தவும் ஒப்பமாட்டார்கள். எனவே அந்த இளம் வயதில் பள்ளிப்படிப்போடு வீட்டு வேலைகளையும் நான் கற்றுக்கொண்டே வந்தேன்.

அவர்களோடு தோட்டங்களுக்குப் போகும்போது அவர்கள் எத்தனையோ பாட்டுகளும் கதைகளும் சொல்லு வார்கள் என்று கூறினேன். அவர்கள் சொல்லிய அத்தனை யும் இன்று என் நினைவில் இல்லை. ஏதோ ஒரு பாட்டில் சில அடிகள்தாம் நினைவுக்கு வருகின்றன. அந்தப் பாட்டு வேடிக்கைப் பாட்டுத்தான். என்றாலும் அதன் அடிகள் ஒருசில எப்படியோ என் உள்ளத்தில் நிலைத்த இடம் பெற்று விட்டன.

'பிள்ளையார் பிள்ளையார் எங்கேயோ பிள்ளையார்?
கத்தரித் தோட்டத்திலே களைபறிக்கிறாராம் பிள்ளையார்
அங்கேயும் போய்ப்பார்த்தேன் அவர் எங்கேயோ பிள்ளையார்?
வண்டைக்காய் தோட்டத்திலே வந்திருக்கிறார் பிள்ளையார்
அங்கேயும் போய்ப்பார்த்தேன் அவர் எங்கேயோ பிள்ளையார்?'

என்ற இந்தச் சில அடிகள்தாம் என் உள்ளத்தில் நின்றன. இதன் கருத்து என்ன என்று விளக்கஉரை கேட்குமாறு அன்றைக்கு நான் படிக்கவில்லை. என்றாலும் பிள்ளையார்

இப்படித் தோட்டங்களுக்கெல்லாம் ஏன் போகவேண்டும் என்றுமாத்திரம் கேட்பேன். பாட்டி சொன்ன பதில் ஒரு சிறிது என் நினைவுக்கு வருகிறது. பிள்ளையார் கத்தரித் தோட்டத்துக்கும் வெண்டைத் தோட்டத்துக்கும் ஏன் போக வேண்டும் என்பது மட்டும் எனக்குப் புதிராக இருந்தது. பாட்டி ஒருநாள் அதைப்பற்றிச் சொன்னார்கள்' 'பிள்ளையார் இங்கெல்லாம் வரமாட்டார் என்று நினைக் காதே. அவர் எங்கும் இருக்கின்றவர். அவர் இங்கெல்லாம் களைபறித்து வேலை செய்கிறார் என்றால் அவரே செய் கின்றார் என்பது அல்ல. நம் போன்ற மக்களெல்லாம் இவ் வேலைகளைச் சோம்பல் இல்லாது ஒழுங்காகச் செய்கிறார் களா என்று அவர் மேலே பார்த்துக் கொண்டிருப்பார். சிலர் இது போலத் தோட்டங்களில் வேலை செய்வது இழிவு என்று நினைக்கிறார்கள். அது தவறு. உழவுத்தொழில்தான் எல்லாவற்றிலும் மேலானது. இதைத் தவறாது ஒழுங்காகச் செய்கிறார்களா என்று அவர் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டே மறைந்திருப்பார். அதனால்தான் எங்கும் யார் கண்ணுக்கும் அவர் தெரிவதில்லை. ஆகவே நாம் எந்த வேலை செய்தாலும் மனநிறைவுடன் தவறாது ஒழுங்காகச் செய்யவேண்டும்' என்றார்கள். எனக்கு அவையெல்லாம் சரியா தப்பா—அவர் பார்க்கிறாரா இல்லையா—என்பது பற்றி எல்லாம் ஆராய்ச்சி செய்யத் தெரியாது. இவை மட்டும் தெரிந்தன. உழவுத் தொழில் சிறந்ததென்பதும் அதைச் செய்யத் தயங்கலாகாது என்பதும், எத்தனை சிறுமை வாய்ந்த தொழிலாயினும் அதைச் செய்யத் தயங்கலாகாது என்பதும், எத்தனை சிறுமை வாய்ந்த தொழிலாயினும் அதைச் செய்ய ஏற்றுக்கொண்டால் ஒழுங்காகச் செய்து முடிக்க வேண்டும் என்பதும் அப்படிச் செய்யாவிட்டால் கடவுள் தண்டிப்பார் என்பதும் அன்று என் மனத்தில் பதிந்து விட்டன. செய்யும் செயலைத் திறம்பட ஒழுங்காகச் செய்பவன்தானே மனிதன்.

இங்கே பாட்டியின் மற்றொரு பாட்டும் நினைவுக்கு வருகிறது.

'வெந்நீர் வளாவிவைத்தேன் விசிப்பலகை போட்டு
வைத்தேன்
கோட்டைக்குப் போன ராசா வீடுவந்து சேரலியே
மாட்டின் குவளையிலே மாண்டானோ என் கணவன்
சேற்றின் குவளையிலே சேர்ந்தானோ என் கணவன்
நாலுகாலும் தொங்கத் தொங்க நடுவயிறு கொத்தக்
கொத்தப்
போனாரோ என்கணவன் பொன்னு ரதத்து மேலே'

என்ற பாட்டு இன்னும் முடியாமல் சென்றுகொண்டே இருக்கிறது. ஆனால் இதுவரைதான் இன்று எனக்கு நினைவு இருக்கிறது. ஒரு பெண் தவளை வெளியே சென்ற ஆண் தவளை திரும்பிவராத வருத்தத்தில் பாடிய பாட்டாம் இது. தவளை பேசுமா? எனக்குச் சிரிப்பு வரும். பாட்டி அதற்கு உரை சொல்லுவார். ஆண் தவளை வந்தால் குளிக்க வெந்நீரும் விசிப்பலகையும் போட்டு வைத்ததாம். ஆனாலும் ஆண் தவளை வரவில்லை. அது மாண்டுவிட்டதாக முடிவு கட்டிவிட்டது பெண். கோட்டைக்குப் போயிற்றாம். வரும் வழியில் என்ன ஆபத்தோ தெரியவில்லை என்கிறது. மாடுகள் மிதித்துக் கொன்றுவிட்டனவோ, சேற்றுக் குவளையிலே சிக்கி மாண்டதோ, அல்லது 'பொன்னு ரத'மாகிய காக்கை காலையும் வயிற்றையும் கொத்திக் கொத்தி ஆகாயத்தில் தூக்கிச் சென்றதோ என்று பெண் தவளை வருந்துகின்றதாம். உயரப் பறப்பதைப் பொன்னுரதமாகச் சொல்லுகிறது. பொன் இரதத்தில் நல்லவர் ஏறிப் பொன் உலகம் செல்வார்கள். ஆதலால், 'பாட்டி அந்தத் தவளைப் பாட்டெல்லாம் நமக்கு எதற்கு' என்பேன் நான்.

பாட்டி சாவதானமாகச் சொல்லுவாள் : 'குழந்தாய் தவளை அப்படிப் பாடுமா? பாடாது. யாரோ பாடினார். நான் அதைக்கேட்டு உனக்குச் சொல்லுகிறேன். இது எதற்

காகச் சொன்னார்கள் என்றால் நமக்காகத்தான். வெளியே சென்ற தவளை வீடு திரும்பவில்லை, எந்த நேரத்திலோ சாவு பிடித்துக்கொண்டது. மனிதன் வாழ்வும் இப்படித் தான். இவன் என்றைக்கும் இருப்பானா? வெளியே சென்றவன் வீடு திரும்புவானோ வரமாட்டானோ? யார் கண்டார்கள்? எந்த வேளையிலும் சாவு வரும். மனிதன் செத்து விடுவான். ஆகையினால் அவன் இருப்பதற்குள் நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும்' என்று அறிவுரை கூறி நீதி புகட்டுவார்கள்.

அன்றைக்கு என் பிஞ்சு உள்ளத்தில் அவற்றின் பொரு ளெல்லாம் நன்கு பதியவில்லை என்றாலும் இன்று விளங்கு கிறது. அதுவும் ஒருநாளைக்குப் பல அபாயங்கள் நடைபெற வாய்ப்பளிக்கும் விமானம், பேருந்து, இரயில் போக்கு வரத்துக்கள் அதிகமான இன்றை நாளிலே புறப்பட்டவர் வீடு திரும்பிய பின்தான் வாழ்வது நிச்சயம் என்பதை எல்லாரும் அறிகிறோம். எப்படியாயினும் பாட்டியின் உரையால் மக்கள் மாய்வது எப்போது என அறியாத வகையில் 'இப்பவோ, பின்னையோ, சற்று நேரத்திலோ' அமையும் என்பதும், ஆகவே அந்த வாழும் சிறிது நேரத்திலே எவ்வளவு நல்ல செயல்கள் செய்ய முடியுமோ அத்தனையும் செய்துவிட வேண்டும் என்பதும், அதுவே மனித வாழ்வின் குறிக்கோளாக அமையவேண்டும் என்பதும் நன்கு விளங்குகின்றனவன்றோ!

இதுபோன்றே பாட்டி எத்தனையோ பாட்டுக்களையும் கதைகளையும் சொல்லிக்கொண்டே இருப்பார்கள். அவற்றை யெல்லாம் நான் மறந்தேவிட்டேன் என்னலாம். பிற்காலத் தில் என் உழவுத்தொழிலை விட்டு, இப்படி ஓர் ஆசிரியனாக வந்து இவற்றை எல்லாம் எழுதும் வாய்ப்பும் எனக்குக் கிடைக்கும் என்பதை அன்றே நான் எப்படியாவது அறிந் திருப்பேனாயின் ஒருவேளை ஒரு நோட்டுப் புத்தகத்தில் பாட்டி சொன்ன அத்தனையும் குறித்துவைத்துக் கொண்

டிருப்பேன். அடுத்து வருவதை அறியும் ஆற்றல்தான் நமக்கு இல்லையே! எனவே நினைவிருந்த இந்த இரண்டொன் றோடு நிறுத்தி மேலே செல்லுகிறேன்.

# 3. அன்னையும் அத்தனும்

என்னை என் அன்னை தன் இளமையிலேயே பெற்று விட்டாள். அவளுக்குப் பதினைந்து வயது நிரம்பாமுன்னமே அவள் தாயானாள். பாட்டனாருக்கும் பிற பெரியவர் களுக்கும் நான் பிறந்தது மகிழ்ச்சிதான் என்றாலும் பத்தொன்பது வயதான அத்தனும் பதினைந்து வயதான அன்னையும் என் பிறப்பை எப்படி ஏற்றுக்கொண்டார்களோ நான் அறியேன். என்னை வளர்க்க ஒரு பாட்டி வீட்டிலே இருந்தமையானும் என் அன்னையார் தமக்கைக்குக் குழந்தை கள் இன்மையாலும் நான் அவர்கள் கையில் அதிகமாகத் தவழ்ந்து விளையாடி வளர்ந்திருப்பேன். இளமை மணமும், அந்த இளமையிலே மகப்பேறு எய்துதலும் தவறு என்று இன்று பலர் பேசுகிறார்கள். என்றாலும் அந்தக்காலத்தில் என் அன்னைக்குப் பன்னிரண்டு வயதில் திருமணம், பதினான்கு வயதில் ‘சீமந்தம்’, பதினைந்தாவது வயதில் குழந்தைக்குத் தாய் என்ற நிலைகள் ஏற்பட்டுவிட்டன. ஐந்து வயது வரை எனக்கு ஒன்றும் தெரியாது ஆதலாலும், பல பெரியவர்கள் வீட்டில் இருந்ததாலும் எனக்கு என் அன்னையையும் அத்தனையும் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது.

எனது ஐந்தாவது வயதில் என் பாட்டனார் இறந்து விட்டார். எனவே குடும்பத்தலை சாய்ந்தது என்னலாம். எனக்கும் அப்போது சிறிதுசிறிதாகப் புத்தியும் தெரியத்

தொடங்கியது என நினைக்கின்றேன். உடன்பிறந்தவர்களா யிருந்த அன்னையும் பெரியன்னையும் மாறுபடத் தொடங்கி னார்கள். என் அப்பாவுக்கும் என் பெரியப்பாவுக்கும் தனித்த முறையிலே நிலபுலன்கள் ஒன்றும் கிடையாது போலும். எனவே இருவரும் மாமியார் வீட்டிலே வந்து தங்கி விட்டார்கள். அவர்கள் தங்கள் தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்ட விரும்பினார்கள். என் தந்தையாரோ இளமையின் விளையாட்டில் 'தையலார் மையலிலே தாழ்ந்து விழுந்து விட்டார்' என்பார்கள். ஊரில் சில 'நல்லவர்'கள் அவரை அவ்வாறு கெடுமாறு செய்த பணிக்கு முதலாளியாக இருந் தார்கள் என அம்மா அடிக்கடி சொல்லுவார்கள்.

என் தந்தையார் பெருஞ் செல்வர் அன்றேனும் தாராள குணமுடையவர். நாளைக்கு என்று பாராது எதையும் யாருக்கும் வாரிவழங்கும் நிலையில் வாழ்ந்துவந்தார். அவருக்கும் அன்னையும் பெரியன்னையும் இருந்தார்கள். அவர்கள் இவருக்கு வேண்டியவற்றைக் கொடுத்துக் கொண்டே வந்தமையாலும் ஊரில் 'நல்லவர்' நாலுபேர் இவரைச் சுற்றிக்கொண்டே இருந்தமையாலும் அவருடைய வள்ளல் தன்மை அவருக்கே தீமையாக முடிந்தது. அவருக்கு ஊரில் வேண்டாதவர்களே கிடையாது. ஒருசில நண்பர்கள், வீட்டில் உள்ள பொருள்களைக் கடத்திச்செல்ல அவருக்குத் துணையாகவும் இருந்தார்கள். அவர்களுள் யார் யார் எவ்வெவ்வாறு உதவினார்கள் என்பது தெரியாது. என் தந்தையார் இந்த நிலையில் இருக்கத் தாயாரோ 'தன் ஒரே மகன்' வாழவேண்டும் என்ற காரணத்தாலே பாட்டனார் சொத்தை அழியாமல் பாதுகாக்க வேண்டும் என்று கருத முயன்று, அதனால் கணவனொடு மாறுபட்டுக்கூட நிற்பார் கள். இவர்கள் இவ்வாறு இருப்பதைக் கண்ட என் பெரிய தாயாரும் பெரிய தந்தையாரும் இவர்களோடு ஒரே குடும்ப மாக இருந்தால் என் தந்தையால் அவர்கள் உடைமைகளும்

அழிந்துவிடுமோ என்று கருதித் தனியாகப் பங்கிட்டுக் கொண்டார்கள். என் பாட்டனாரும் தன் சொத்தினை இவர்களுக்கிடை இறக்குமுன்பே பாகப் பிரிவினை செய்யும் வகையில் எழுதிவைத்துவிட்டுச் சென்றார்கள். என்றாலும் அவர்கள் பங்கிடும்போது நடைபெற்ற சண்டை சச்சரவுகளுள் பல எனக்கு நினைவில்லை என்றாலும் ஒரு சில இன்னும் நினைவில் இருக்கின்றன. இந்தச் சண்டை சச்சரவுகளைச் சுமார் நூறு வீடுகளுக்கு மேலிருக்கும் எங்கள் ஊரிலுள்ள உறவினரில் ஒருவர்கூடத் தீர்த்து வைக்க முன்வரவில்லை. அதற்கு மாறாக உடன் பிறந்த சகோதரிகளையும் அவர்தம் கணவர்களையும் தூண்டி விட்டு அதனால் தாம் தாம் லாபமடையப் பார்த்தார்கள். பதினைந்து மைல்களுக்கு அப்பால் உள்ள ஓர் உறவினர் வந்து பாகப்பிரிவினை செய்து வைத்தார். இருபது வயதுகூட நிரம்பாத என் அன்னையார் தனிக்குடித்தனம் செய்ய நேர்ந்தது. உடன், என் மீது உள்ள பாசத்தால் என் பாட்டியும் அன்னையின் அத்தையுமாகிய காமாட்சி அம்மாள் எங்களோடு தங்கியிருந்தார்கள்.

என் தந்தையார் நான் மூன்றாவது பாரம் படித்துக் கொண்டிருக்கும் போது, எனது பதினான்காவது வயதில் மரணமடைந்தார். அவர்கள் தாயாரோடு அடிக்கடி சண்டை இட்டுக்கொண்டே இருப்பார்கள். எனக்கு அப்போதெல்லாம் சிறிது சிறிதாகப் புத்தி தெளிவடைந்த காலமாதலால் அதை யெல்லாம் பார்த்துத் திகைப்பேன்—அழுவேன்—வருந்துவேன். ஆனாலும் என்னால் ஒன்றும் செய்ய முடியாது. பக்கத்து வீட்டில் இருந்த பெரியம்மாவோ, பெரியப்பாவோ ன்றித் தெருவிலுள்ள மற்ற பெரிய மனிதர்களோ இந்தச் சண்டைகளையெல்லாம் வேடிக்கை பார்ப்பார்களே தவிர சமாதானம் செய்யமாட்டார்கள். பாவம் என் தந்தைக்கு அவர் நண்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுக்கப் பொருள் வேண்டுமே என்ற பிரச்சினை. என் அன்னைக்கோ உள்ள

ஒரே மகனிடம் தன் தந்தையார் வைத்துப்போன பொருளைப் போக்காது பாதுகாத்து அளிக்க வேண்டுமே என்ற கவலை. இவற்றின் இடையில் நானும் பல தொல்லைகளுக்கு ஆளானது உண்டு. என் பாட்டிதான் எல்லாத் தொல்லைகளையும் சண்டை சச்சரவுகளையும் நீக்க முயற்சி செய்வாள். அதனால் அவர், தனக்கு இருவராலும் வரும் வசவுகளை எல்லாம் பொருட்படுத்தமாட்டார். எப்படியாயினும் அவர்கள் சண்டை இல்லாது சமாதானத்தோடு வாழ வேண்டும் என்பதுதான் அவர் ஆசை.

என் தந்தையார் வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களையும் எப்படியாவது கொண்டு சென்று மற்றவர்களுக்குக் கொடுப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தார். அவரது நன்கொடையால் அக்காலத்தில் அவ்வூரில் நான்கைந்து குடும்பங்கள் நன்கு செழிப்பாக வளர்ந்தன. என்றாலும் என் அன்னை தன் வாழ்வை ஒறுத்துத் தியாகம் செய்தாகிலும் என் வாழ்வை வளமுறச் செய்ய வேண்டும் என்று நினைத்தவர். எனவே பொருளைக் கட்டிக் காப்பதில் கருத்தாயிருப்பார். அதனால் தந்தை வெளியில் வயல் வரப்புகளிலிருந்தும், களத்து மேட்டிலிருந்தும் நெற்கட்டுகள், நெல் மூட்டைகள் முதலியவற்றை அப்படியே தம் நண்பர்கள் வீட்டுக்கு அனுப்பி விடுவார். அங்கு வயலிடத்தே நடப்பனவற்றையும் உடனே கொண்டு வந்து அம்மாவிடம் கோள் சொல்லவும் நல்லவர் சிலர் இருந்தார்கள். எனவே அதை அறிந்த அன்னையார் சில நாட்களில் என்னையும்கூடக் களத்துக்குக் காவல் காக்க அனுப்புவார். அப்போதெல்லாம் நான் எப்படி எப்படிக் கண்காணிப்பாக இருக்க வேண்டுமென்றும் இன்னின்னார் வந்து இன்னின்ன வகையில் நெல்லையும் நெற்கட்டையும் கொண்டு செல்வார்கள் என்றும், ஆகவே விழிப்பாக இருக்க

வேண்டும் என்றும் சொல்லுவார்கள். என் காவலில் சில திருட்டுக்கள் அகப்படும்.

ஒரு நாள் நெல் விலைக்கு அளப்பதற்கு வண்டி வந்தது அந்த வண்டி ஓட்டி வந்தவர் என் அப்பாவுக்கு வேண்டியவர். அதில் வண்டியின் தேவைக்கு அதிகமாகவே ஒரு மூட்டையை அளந்து விட்டார்கள். எனக்கு அவ்வளவு கவனிக்கத் தெரியாது. அவர்கள் எண்ணம் நெல் மண்டிக்குப் போவ தற்குள் அந்த ஒரு மூட்டையை வழியில் இறக்கிப் போட்டு விடலாம் என்ற நினைப்புப் போலும். இது நடந்து வண்டி கட்டுவதற்குள் என் அம்மாவுக்கு இந்தச் செய்தியை யாரோ எட்டவைத்து விட்டார்கள். எனவே அவர்கள் என்னை வண்டியோடு மண்டிக்கு அனுப்பி விட்டார்கள். அங்கு சென்றதும் ஒவ்வொரு வண்டியையும் அளப்பார்களாம். அந்த மண்டிக்காரர் நல்லவர். அளந்து உள்ளதற்கும் அதிக மான ஒரு மூட்டைக்கும் சேர்த்து வீடு தேடிவந்து அம்மாவிடம் பணத்தைக் கொடுத்துச் சென்றார். நான் சரியாகக் கவனிக்காததால் அன்று இரவு எனக்கு நல்ல உதை. என் தகப்பனார் வெட்கத்தாலோ என்னவோ அதற்குப் பிறகு இரண்டொரு நாள் வீட்டுக்கு வரவில்லை என நினைக் கிறேன். அதன் பிறகு அம்மா 'இந்தப் பயிர் வேலையே வேண்டாம்' என்று மாடுகளையும், வைக்கோல் போர் முதலியவற்றையும் விற்றுவிட்டுப் பயிரையும் குத்தகைக்கு விட்டுவிட்டார்கள். அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே சுகமாக உட்கார்ந்து வாழ விரும்பிய என் பெரிய தந்தையார் அவர்தம் நிலத்தைக் குத்தகைக்கு விட்டுவிட்டார். இப்படி ஊரில் பெரும் பங்கை வைத்துக் கொண்டு உழுது பயிரிட்டுக் கொண்டு பரம்பரையாக வந்த ஒரு குடும்பம் பயிர் செய் வதையே அடியோடு விட்டுவிட்டது. விட்டு இன்று சுமார் நாற்பது ஆண்டுகள் ஆகின்றன. அன்று தொட்டு இன்று

வரை அந்த நிலம் யார் யார் கையிலோ மாறி மாறிப் பயிரிடப் பெற்றுக் குத்தகை நெல்லை மட்டும் நாங்கள் கொள்ளும் வகையில் அமைத்து விட்டது. எனக்குத் தற்போது இளமையில் நிலங்களைச் சுற்றிப் பார்த்தமையில் பலவிடங்களில் உள்ள வயல்கள் தெரியும். என்றாலும் பயிரிடத் தெரியாது. என் மகனுக்கோ ஊரில் உள்ள நிலங்களே தெரியாது. ஊருக்குச் செல்லக்கூட அவனுக்கு விருப்பமில்லை. இப்படிக் கிராமந்தோறும் வளம் பெருக்கி உழவுத் தொழில் செய்திருந்த மக்கள் பலர் நிலங்களைக் குத்தகைக்கு விட்டுவிட்டு நகர வாழ்வை நாடி வருவது மிகச் சாதாரணமான ஒன்றாகிவிட்டது. அம்மா அவர்கள் அடிக்கடி என்னை அருகழைத்துப் புத்திமதி சொல்லுவார்கள். அப்பா சில நாட்கள் வீட்டுக்குக்கூட வரமாட்டார். என்னை எங்காவது வழியில் கண்டால் சாப்பிட ஏதாவது 'மிட்டாய்', 'பிஸ்கோத்து' கொடுப்பார். அதை வாங்கினது தெரிந்தாலோ அம்மா அடிப்பார்கள். அப்பா என்னைப் பொறுத்த வரையில், என்னை ஒன்றும் செய்யாததால், நல்லவர் என்னுமாறே இருந்தார். அதற்கு நேர்மாறாக, நான் செய்த தவறுகளுக்கெல்லாம் அம்மா அடித்துத் தண்டிப்பார். ஆதலால் சில நாட்கள் அவர்கள் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வரும். என்றாலும் அவர்கள் என் வளர்ச்சியிலும் படிப்பிலும் கொண்ட அக்கறையினைச் சில வேளை எண்ணும்போது அந்தச் சிறுவயதிலேயே பூரிப்பேன். இன்று பெரியவனான பிறகு அம்மாவைத் தெய்வமாகவே கொண்டாட வேண்டிய நிலையில் உள்ளேன். கொண்டாடுகிறேன். அவர்கள் அடித்த ஒவ்வொரு அடியும் என்னை வாழ்வுப் பாதையில் ஒரோர் படி முன்னேற வைத்தது என்னலாம்,

இவ்வாறெல்லாம் என்னைப் படிக்கவைத்த அன்னையார் பின் நான் மேல் வகுப்பிற்குச் செங்கற்பட்டுக்குச் செல்ல நினைத்தபோது அன்பின் காரணமாக என் படிப்பைத்

தடுக்க நினைத்தார்கள். நான் அவர்களையும், அவர்கள் முன்னோர் கட்டிய வீட்டையும் பிற நிலபுலங்களையும் விட்டுச் செல்லலாகாதே என்ற காரணத்தால் நான் படிக்க வேண்டாம் என்றார்கள். நான் 'வாலாஜாபாத்தில் மூன்றாவது பாரம் தேறினால் மேலே படிக்கச் செங்கற்பட்டு செல்கிறேன்; இன்றேல் நின்று விடுகிறேன்' என்றேன். ஆகவே அவர்கள்—நான் படிக்க வேண்டும் என்று அல்லும் பகலும் பாடுபட்ட அன்னையார்—அன்பின் காரணமாக என்றும் அருகிலேயே இருக்க வேண்டும் என்ற பாசத்தாலே நான் தேர்வில் வெற்றி பெறக்கூடாது என்று ஆண்டவனிடம் வேண்டுவார்கள். 'தேறினால்தானே வெளியூர் செல்வான்; இல்லாவிட்டால் இங்கேதானே இருப்பான்' என்று கருதிற்று அவர்கள் அன்புள்ளம். ஆயினும் நான் தேறி மேலே படிக்கச் செல்லும்போது, தான் தனியாக வீட்டில் இருந்து கொண்டு, ஊரில் பயிர் பச்சைகளைப் பார்த்துக் கொண்டு, பாட்டியையும் என்னுடன் அனுப்பி என் படிப்புக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்கள். நான் வாலாஜாபாத், செங்கற்பட்டு முதலிய ஊர்களில் படிக்கச் செல்லும்போது தந்தையாரோ, பெரிய தந்தையாரோ ஒருவரும் முன் வந்து உதவவில்லை. அம்மாவே யார் யாரையோ பிடித்து என் படிப்புக்கு வழிகாட்டச் சொன்னார்கள். பின் நான் படித்துக் கற்றோர் அவையில் முன்னின்று பல ஊர்களுக்குச் சென்று சொற்பொழிவு ஆற்றுவதையெல்லாம் கண்டபோது அவர்கள் பெரிதும் மகிழ்ந்தார்கள்.

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'

என்று வள்ளுவர் குறளுக்குச் சான்றாக நின்றார்கள். அவர்கள் என்னைத் தாயின் அன்போடு வளர்த்தார்கள். தந்தைக்குரிய கல்வி பயிற்றுவிக்கும் பணியில் தலைநின்றார்கள். அரசனைப் போல் தவறு செய்யுங்காலைத் தண்டித்

தார்கள். நாள்தோறும் வீட்டில் உட்கார வைத்து ஆசிரியரைப் போல் பாடங்களைச் சொல்லிக் கொடுப்பார்கள் எல்லாவற்றிற்கும் மேலாக என் வாழ்வை ஒளிபெறச் செய்வ தற்காகவே தன் வாழ்வை ஒறுத்துத்தியாகம் செய்து, எனக் காகவே வாழ்ந்து, நான் செம்மை நெறியில் வாழ வழிகாட்டி யாக நின்று தெய்வமாக விளங்கினார்கள்; விளங்கி வருகிறார்கள். இன்றும் நான் அல்லலுறும்போதும். அன்றி மகிழ்வில் திளைக்கும் போதும், கனவில் தோன்றி நலக்கேடு களை அறிவிக்கும் தெய்வமாக நிற்கின்றார்கள். காலஞ் சென்ற என் மனைவி சந்திராமணியின் கனவில் அடிக்கடி தோன்றிக் குடும்ப நிலைபற்றி எல்லாம் குறிப்பாக விளக்கிச் சென்றதாகப் பலமுறை அவள் கூறக் கேட்டிருக்கிறேன்— அனுபவித்தும் இருக்கிறேன். ஆம். இன்றும் அன்னையும் மறைந்த மனைவி சந்திராமணியும் என் குடிகாக்கும் தெய்வங்களாக இருபுறமும் எங்களைக் காத்து வருகிறார்கள் என்பதை நான் முற்றும் நம்புகிறேன். அவர்கள் வழி என் கான் முளைகள் வாழும் வழியறிந்து சிறப்பார்கள் என்னும் துணிபுடையேன்.

## 4. உடன்பிறந்தார் சுற்றத்தார்

நான் தனியாகப் பிறந்தேன். கூடப்பிறந்த ஆணோ பெண்ணோ கிடையாது. பிறந்தவனே நான் ஒருவன்தான். யாரும் பிறந்து இறக்கவும் இல்லை. எங்கள் வீட்டில் குழந் தைகள் பிறந்து இறக்கும் நிலை என்றைக்கும் கிடையாதாம். எனவே எனக்கு உடன் பிறந்தவர்கள் என்று யாரும் கிடையாது. என்றாலும் என் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் உடன் பிறந்தவர்கள் இருந்தனர். ஆனால் ஒருவரும் எங்கள் குடும்பத்துக்கு உதவி செய்தது கிடையாது. என் அப்பாவுடன்

பிறந்த பெரியப்பா வீட்டில் நான் ஒரு நாளாவது சாப்பிட்டதோ சிற்றுண்டி கொண்டதோ கிடையாது. இத்தனைக்கும் அவர்கள் நான் வாழ்ந்த அதே ஊரில்தான் இருந்தார்கள். அவர்கள் எனக்குச் சாப்பாடு போடாவிட்டாலும், வசைமொழி வாரி வழங்கியதை அறிவேன். எத்தனையோ நாள் என்னையும் என் அன்னையையும் பெரியப்பாவும் அவர்தம் பிள்ளைகளும் வசைமொழியால் வாழ்த்தியது நினைவிருக்கின்றது. என் தந்தையார் அவர்கள் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வந்து விட்டமையாலும் அவர் குடும்பப் பொறுப்பை நன்கு கவனிக்காமையினாலும் அவர் உடன் பிறந்தவர்களோடு அதிகமாகக் கலந்து வாழவில்லை என்னலாம். என் அப்பாவுடன் பிறந்த அத்தை ஒருவர் பதினைந்து கல்தொலைவுக்கு அப்பால் வாழ்ந்து வந்தார். நான் எப்போதாவது அங்கே செல்வேன். இரண்டொருநாள் தங்குவேன்; அவர்கள் வந்து ஓரிரு வேளை தங்கிச் செல்வார்கள்; அவ்வளவுதான். அவர்களோடு நான் அதிகமாகப் பழகியது கிடையாது.

அப்பாவுடன் பிறந்தவர்கள் நிலை இதுவாக அம்மாவுடன் பிறந்த பெரியம்மா தனியாகப் பிரிந்து விட்டனர் என மேலே கூறினேன். இருவரும் பக்கத்துப் பக்கத்து வீட்டில் தான் குடியிருந்தார்கள் என்றாலும் பேசுவதுகூடக் கிடையாது. இரண்டு வீட்டுக்கும் இடையில் செல்லுவதற்காக ஒரு வாயிற்படி வழி இருந்தது. இருவரும் அதை அடைத்துப் பூட்டிவிட்டு, இரண்டு பக்கங்களிலும் பழம் பானைகளையும் மரங்களையும் அடுக்கி வைத்து, யாரும் திறக்க முடியாத வகையில் மூடிவிட்டார்கள். வாயிற்கதவு மட்டும் மூடப்பெறவில்லை; அவர்கள் உள்ளங்களும்கூட மூடப்பட்டன என்னலாம். உடன் பிறந்த சகோதரிகள் இருவர் இப்படிப் பொருளால் வேறுபட்டார்கள் என்பதை இன்று நினைத்தால்

வருந்த வேண்டியுள்ளது. அன்று இவையெல்லாம் எனக்கு அவ்வளவாகப் புரியாத புதிராக இருந்தன. 'நேற்று வரையில் போற்றி வளர்த்த என் பெரியம்மா இன்று தெருவில் பார்த்தாலும் பார்க்காததுபோலப் போவது ஏன்?' என்பது எனக்கு விளங்கவில்லை. அவர்கள் ஒரு வேளை பார்த்து ஏதாவது பேசினாலும் அதை அறிந்த அன்னை என்னை அவர்களோடு பேச வேண்டாம் என்று அடிக்கக் காரணம் என்ன? என்பதும் அப்போது விளங்கவில்லை. அவர் கள் இருவர் வேறுபாட்டுக்கும் அவர்தம் மனப்போக்குக்கும் கணவன்மார்களே காரணம் என்றாலும் ஊரார் இருவரையும் சேர்க்காது மேலும் மேலும் பிரித்து வைக்க முயன்றதே முக்கியக் காரணம் என்று அன்று ஒரு சிலர் பேசிக் கொள் வார்கள். இன்றைக்கும். பல ஊர்களில் இந்த நிலை இருக்கக் காண்கிறோம். சில நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள் ஏதோ எதிர்பாராத காரணங்களால் மாறுபாடும் வேறுபாடும் கொண்டு நின்றால் அவற்றை நீக்கி, அவர் தம் குடும்பத்தைக் கூட்டி வைப்பதற்குப் பதில், ஊரில் உள்ள பலர் அவ்வேறு பாட்டை வளர்ந்து அவர்களை என்றும் ஒன்று சேராதபடிச் செய்து அவற்றின் வினையால் தாம் வாழ வழிசெய்து கொள்வது அன்றாட நிகழ்ச்சியாக உள்ளது. கிராமங்களில் மட்டுமன்றிப் பெரும் அரசியல் அரங்கங்களிலும்கூட இந்தப் பிரித்துப் பயன்பெறும் சூழ்ச்சியைத்தானே காணமுடிகின்றது. எங்கள் சிறு கிராமம் அதற்கு விலக்காகுமா? எது எப்படி யாயினும், ஒரு சிலர் என் அன்னையையும், பெரியம்மாவை யும் பிரித்தாளும் சூழ்ச்சியிலே வல்லவராகவே இருந்தார்கள். என் பெரியம்மாவுக்குக் குழந்தைகள் கிடையா. எனவே என் பெரியப்பாவை ஊரில் சிலர் வற்புறுத்தி மறுமணம் செய்து கொள்ளத் தூண்டினார்கள். என்றாலும் எல்லாச் சொத்துக்களும் என் பெரியம்மா பேரில் இருந்ததாலும் அவர்கள் இசையாத காரணத்தாலும் மணம் நடக்கவில்லை.

ஆயினும் பெரியப்பாவுக்கு ஓர் அண்ணன் உண்டாம். அவருக்கு ஒரு மகன் இருந்தானாம். அவனைச் 'சுவிகாரமாக' வைத்துக் கொள்ளலாம் என்று பேசிக் கொண்டார்கள். என்றாலும் ஒன்றும் நடக்கவில்லை.

அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் பொருள் பங்கிடுவது முதல் பலவற்றில் மாறுபாடுகள் தோன்றும். ஒரு சிறு உதாரணம் போதும் எனக் கருதுகிறேன். வீட்டிலுள்ள பித்தளை வெண்கலப் பாத்திரங்களையெல்லாம் பங்கிட்டுக் கொண்டார்கள். அதில் ஒரு நான்கு பாத்திரங்கள் கொண்ட தூக்குக் கொத்து இருந்தது. அதை அப்படியே யாராவது ஒருவர் எடுத்துக் கொண்டிருக்கலாம். அதற்கு இருவருமே ஒப்பவில்லை. அன்று அதன் விலை ஐந்தாறு ரூபாய்க்குள் இருக்கலாம். அதை ஒருவர் எடுத்துக் கொண்டு பதிலுக்கு வேறொன்றை மற்றவர் எடுத்துக் கொள்ளலாம். ஆனாலும் அப்படிச் செய்ய ஒருவரும் விரும்பவில்லை. நான்கு பாத்தி ரங்களைப் பிணைத்திருந்த கம்பியை இரண்டாக்கினார்கள். இரண்டிரண்டு துண்டுகளாகப் பிரித்தார்கள். ஆளுக்கு ஒன்று என்று வைத்துக் கொண்டார்கள். அத்தனை வேறுபாடு இருவர் உள்ளங்களிலும் முகிழ்த்துவிட்டது. பின்பு பெரியம்மா இறக்கும்போது அவர்தம் பொருளையெல்லாம் எனக்கு வைத்துச் செல்ல, அந்தப் பிரிந்த தூக்கை ஒன்றாக்கி வைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அது அன்றாடம் எனக்குப் பழமையை நினைவூட்டிக் கொண்டு, பிரித்துக் கெடுக்கும் மக்களைப் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று புத்தி சொல்லிக் கொண்டே இருக்கிறது.

உடன் பிறந்தவர்கள் நிலை இது என்றால் சுற்றத் தாரைப் பற்றியும் இரண்டொன்று கூறவேண்டும். எங்கள் ஊரில் வாழும் சுமார் நூறு குடும்பத்தார்களும் ஒருவருக்கு ஒருவர் மிக நெருங்கிய சுற்றத்தாராகத்தாம் இருப்பார்கள்.

என்றாலும் அவர்களுக்குள்ளே நடைபெற்ற சண்டைகளும் சச்சரவுகளும்—அப்பப்பா—அளவிறந்தன. துப்பாக்கியால் ஒருவரை ஒருவர் சுட்டுக் கொள்ளத் துணை செய்யும் அந்த அளவிற்கு அவர்கள் உறவு முறை வளர்ந்திருந்தது என்ன லாம். அந்த நிகழ்ச்சியின் நினைவுகளைப் பின்னால் பார்க்க லாம். இந்த நிலையில் எனக்கும் அந்த ஊரில் நெருங்கின உறவினர் இரண்டொருவர் இருந்தனர். மற்றெல்லாரும் கூட உறவினர்கள் தாம். ஆயினும் அவர்கள் ஒருவரைப் பற்றி மற்றொருவர் பின்னால் பழித்துரைப்பதும் எதிரில் போற்று வதும் செய்யும் செயல் கண்டால் அன்றைக்கே எனக்கு அருவருப்புத் தோன்றும். பின் திருக்குறளை விளக்கமாகப் படிக்கும்கால் அவர்களது நிலைபற்றி எல்லாம் எனக்கு நன்கு புரிந்தது.

எனக்கு நெருங்கிய ஓர் உறவினர் வெளியூரிலிருந்து எங்கள் வீட்டுக்கு வந்திருந்தார்கள். யாராவது உறவினர் வந்தால் பிள்ளைகளுக்குக் கொண்டாட்டம்தானே. அம்மா அப்பா அடிக்கமாட்டார்கள். புதுத் தின்பண்டங்கள் கிடைக்கும். பெரியவர்கள் கண்ணில் படாமல் சிலகாலம் ஓடி விளையாடலாம். இப்படி நானும் நினைப்பது உண்டுதான். விருந்தாக வந்தவர் ஐம்பது வயதுள்ள மூத்த பெண்மணி. அவர்கள் இன்று இல்லை. அவர்கள் பெயரும் வேண்டாம். அவருக்கு வேறு ஒரு உறவினரும் ஊரில் இருந்தார்கள். அவர்கள் என் அம்மா உடல் நலமாக இல்லை என்று காண வந்தார்கள். அவர்கள் வந்தபோது அம்மா சற்று எழுந்து உலாவும் நிலை பெற்றிருந்தார்கள். காலையில் காப்பி வைப்பது வழக்கம். இந்தக் காலத்துக் காப்பிக்கொட்டைக் காப்பியை நான் இங்குக் குறிக்கவில்லை. சுக்கு மிளகு போட்டு, வெல்லமிட்டுப் பால்விட்டுக் காலையில் நாங்கள் குடிப்பது வழக்கம். இன்றும் காலையில் நான் அந்த வகைப் பானமே அருந்தி வருகிறேன். அன்று அம்மா அதற்கான சுக்கு

மிளகுத் தூளையும் வெல்லத்தையும் கொண்டு வைத்தார்கள். வந்த விருந்தாளி சுக்குக்காப்பி வைக்க அடுப்படியில் உட்கார்ந்தார்கள். அடுப்படிக்கு நேராகத் தாழ்வாரத்தில் ஒரு விசிப் பலகை இட்டிருக்கும். அதில் நான் உட்கார்ந்து படிப்பது வழக்கம். அன்றும் அப்படித்தான் உட்கார்ந்து இருந்தேன். உள்ளே காப்பி வைக்க உட்கார்ந்த அம்மையார் நான் இருப்பதைக் கவனிக்கவில்லை. காப்பிக்கு வெல்லம் போதாது என்றார்கள். அம்மா அறைக்குள் சென்று வேறு வெல்லம் எடுத்து வந்தார்கள். அதற்குள் அந்த விருந்தாளி முன் கொண்டு வந்த வெல்லக் கட்டியை எடுத்து இடுப்பில் புடவை இடுக்கில் சொருகிக் கொண்டார்கள். பின் அதை அவர்களுக்கு வேண்டியவர்களிடம் சென்று சேர்த்திருப்பார்கள். ஆயினும் அம்மா வந்தவுடன் அந்த வெல்லத்தைக் காப்பியில் போட்டு விட்டதாகச் சொன்னார்கள். நான் திகைத்தேன் இப்படியும் உறவினரா என்று! அதை நான் அம்மாவிடம் சொல்லவே இல்லை. சொன்னால் அப்போதே அவர்களிடம் சண்டையிட்டு என்றும் அவர்களை வீட்டுக்கு வராமல் செய்திருப்பார்கள் அவர்கள். அத்தனை கண்டிப்பு அவர்களுடையது. என்றாலும் என் உள்ளம் மட்டும் அவர்களைக் காணும் தோறும் 'நம்பிக்கைத் துரோகி' என்று எண்ணிக் கொண்டே இருக்கும். இன்றைக்கும்கூட அவர்கள் செய்து விட்ட அந்தச் சிறுசெயல் 'யாரையும் ஆராயாது நம்பாதே' என்று புத்தி புகட்டிக் கொண்டே இருக்கிறது.

இன்னொரு உறவினர் எங்கள் வீட்டில் உண்டான சிறு பாகப் பிரிவினையைத் தீர்க்க வந்தார். என் அம்மாவுக்கும் பெரியம்மாவுக்கும் உண்டான பாகப்பிரிவினை அல்ல. அது வேறு ஒரு பாகப் பிரிவினை. அதில் உள்ள அத்தனையையும் எங்களுக்கும் எதிரில் உள்ள மற்றவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தல்தான் முறை. ஆனால் அவர் அப்படிச் செய்ய

வில்லை. உள்ள பொருள்களில் தனக்கு வேண்டியதென்று ஒரு சிலவற்றை எடுத்து வைத்துக் கொண்டார். நாங்கள் இல்லாதபோது சிலவற்றை மற்றவருக்குக் கொடுத்துவிட்டார். ஒரு வீட்டில் சாமான்களை இட்டுப் பொதுவாக அவ்வீட்டின் சாவியையே மற்றவரிடம் கொடுத்து அவருக்கு வேண்டியவற்றை நாங்கள் அறியாமலேயே எடுத்துச் செல்லச் சொல்லிவிட்டார். இவையெல்லாம் நான் சற்று வளர்ந்த பிறகு நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஆனமையின் அவர்களைப் பற்றி 'இன்னார்' 'இனியார்' என அறுதியிட எனக்கு வாய்ப்புக்கள் அளித்தன. எப்படியோ அவற்றையெல்லாம் கண்டுகொண்டே என் இளமைப்பொழுது கழிந்து கொண்டே வந்தது,

இந்த உற்றாரையும் உடன் பிறந்தாரையும் எண்ணும் போதுதான் ஔவைப்பாட்டி எப்படி உணர்ந்து உணர்ந்து அந்தப் பாடலைப் பாடினாள் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆய்ந்து பார்த்தால் இந்நிலை பெரும்பாலும் வீட்டுக்கு வீடு காணும் ஒன்றாக உள்ளது. அந்த மூதாட்டியின் உள்ளம் இவற்றையெல்லாம் கண்டுதான் நொந்து நொந்து அந்தப் பாடலைப் பாடி இருக்கும். அது நாடறிந்த பாட்டுத்தான், இதோ அந்தப்பாட்டு.

> உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
> உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
> மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கும்
> அம்மருந்து போல்வாரும் உண்டு!

ஆம்! அம்மருந்து போன்று அன்றும், இன்றும் எனக்குத் துணை செய்பவர் இருக்கிறார்கள். அவர்களை வணங்குகிறேன்.

# 5. நல்லவர் யார்?

அந்த இளமையில் எனக்கு எங்கள் தெருவில் நான்கைந்து நண்பர்கள் உண்டு. அவர்களோடு சேர்ந்து ஓடி ஆடி விளை யாடுவது உண்டு. எனக்கு ஐந்து வயது ஆகும் காலத்தில் எங்கள் தெருவிலேயே உள்ள கணக்கப்பிள்ளை ஒருவர் சிறு பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பார். விடியற் காலையில் எழுந்து போக வேண்டும். அவர் அந்தக் காலத்தில் எட்டாவதுவரை படித்த 'வாத்தியார்' போலும், பிள்ளை களுக்கு 'ஏ பி சி டி' சொல்லிக் கொடுப்பவர் அவர்தாம். எனவே அவரை 'ஏ பி சி டி' வாத்தியார் எனவே அழைத்தார் கள் என நினைக்கிறேன். கணக்கிலும் கீழ்வாய் இலக்கம் முதலிய தமிழ்க் கணக்கு வகையிலும் அவர் கெட்டிக்காரர். விடியற்காலையில் வரச்சொல்லி ஆத்திசூடி முதலியவற்றைப் பழங்கால முறைப்படி 'முறையம்' சொல்லி மனப்பாடம் செய்ய வைப்பார். அவருக்கு மாதத்துக்கு எங்கள் வீட்டில் ஒரு ரூபாய்தான் கொடுப்பார்கள். அப்படி அவரிடம் படிக்கும் காலத்தில் சில பிள்ளைகள் எனக்கு நண்பராயினர். நான் என் தந்தையின் மேற்பார்வையில் இல்லாததாலும், கேட்பாரற்ற பிள்ளையாதலாலும் என்னை அவர்களெல்லாம் எப்போதும் கேலி செய்வார்கள். என் அம்மாவுக்கு இதெல் லாம் தெரிந்தால் விடமாட்டார்கள். அவரவர்கள் பெற்றோ ரிடம் சொல்லி அவர்களின் வாயடக்குவார்கள். என்றாலும் ஒரு சிலர் என்னைத் துன்புறுத்துவதிலே இன்பம் காண் பார்கள்.

ஒருநாள் அத்தகைய நண்பர் இரண்டொருவர் என்னை வேடிக்கை பார்க்க ஆற்றங்கரைக்கு அழைத்துச்சென்றார்கள். அந்தக் காலத்திலெல்லாம் நான் ஆற்றுக்குச் சென்று அங்கு மணலில் சிவலிங்கம் செய்து, பாட்டி கோயிலுக்கு எடுத்துச் சென்ற பூக்களில் மீதி இருப்பவற்றையும் கழித்தவற்றையும்

கொண்டுவந்து பூசை செய்வேன். அப்படியே சில சமயங்கள் என்னை அறியாது உட்கார்ந்து விடுவதும் உண்டு. இரண் டொரு நல்ல நண்பர்கள் என்னுடன் ஒத்துழைத்து நீர் ஊற்றுத் தோண்டி உதவுவார்கள். சிலர் 'கிண்டல்' செய்து மணலை வாரியும் இறைப்பார்கள். அன்று அழைத்துச் சென்ற நண்பர்கள் அந்தக் கிண்டல்காரர்கள்தாம். நான் அவர் களோடு வேடிக்கையாக ஆற்றங்கரைக்குச் சென்றேன். அங்கே ஒரு நாய்க்குட்டி உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருந்தது. கண் விழிக்கவில்லை; அசைவும் இல்லை. மூச்சு மட்டும் அதிகமாக முட்டிக்கொண்டு வந்தது. அந்த நண்பர்கள் இருவரும் அதைக் கையில் எடுத்துக்கொண்டு நடு ஆற்றிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு பள்ளமும் தோண்டினார்கள். பிறகு என்னிடம் 'இந்த நாய்க்குட்டிக்கு எல்லாம் ஒடுங்கிவிட்டது. அது மூச்சுவிடுவதைப் பார்த்தால் ஐயோ பாவம் என் றில்லையா' என்றார்கள். உண்மையிலேயே அந்தக் காட்சி கொடுமையாகத்தான் இருந்தது. நான் 'ஆம்' என்றேன். 'நீ பூசை செய்வதைப்போல் இன்றும் செய். ஆனால் இந்த நாய்க்குட்டியைப் பள்ளம் தோண்டி அதில் மூடி அதன்மேல் சிவலிங்கம் எழுப்பினால் அப்போது நாய் துன்பம் இல்லாமல் சாகும்' என்றார்கள். நானும் சரி என்றேன். மூவரும் சேர்ந்து குழி தோண்டிப் பின் கோயில் எடுக்கலாம் என்றேன். அவர்கள் குழியெல்லாம் தோண்டினார்கள். என்றாலும் கடைசியில் மூடிச் சிவலிங்கம் செய்யும் போது தாங்கள் பூக்கள் கொண்டு வருவதாகவும் அதற்குள் எல்லாம் செய்தாக வேண்டும் என்றும் சொன்னார்கள். ஆனால் அதற்குள் நாயின் மூச்சு ஒடுங்கி உயிர் பிரிந்தேவிட்டது. நான் என்ன செய்வது என அறியாது திகைத்தேன். வந்திருந்தவர்களோ என்னைவிட ஒன்றிரண்டு வயது மூத்தவர்கள். அவர்கள் சொல்லியபடி செய்யாவிட்டால் என்னை அடிக்கவும் செய் வார்கள். 'நாம் ஏன் வந்தோம்' என நடுங்கினேன். என்றா

லும் உயிர் நீங்கிவிட்டபடியால் நாய்க்குட்டியைப் புதைத்து விடலாம் என்றார்கள். அப்படியே புதைத்துவிட்டு, அருகில் இருந்த ஊற்றில் முழுகி வீட்டுக்கு வந்து விட்டோம்.

மறுநாள் காலையில் அந்தத் தெருப்பள்ளிக்கூடத்தில் பாடம் படித்துக் கொண்டிருந்த போது 'வாத்தியார்' என்னைக் கூப்பிட்டார். ஏன் என்று எனக்குத் தெரியாது. அவர், 'நேற்றுச் சாயங்காலம் நீ உயிரோடு ஒரு நாய்க்குட்டியை ஆற்றில் புதைத்தாயாமே. மெய்தானா?' என்று கேட்டார். நான் நடுங்கிவிட்டேன். உள்ளது உள்ளபடியே நடந்தவற்றைச் சொன்னேன். அவர் 'இருக்கும், நான் அப்போதே நினைத்தேன்' என்று சொல்லி அந்த இரு பிள்ளைகளையும் கூப்பிட்டுப் பிரம்பைக் காட்டி மிரட்டி உண்மையைக் கூறும்படிச் சொன்னார். அவர்களும் பிரம்புக்கு அஞ்சி நடந்ததை நடந்தபடிச் சொல்லிவிட்டார்கள். அந்த மாதிரிப் பொய்க் கதைகளைக் கட்டக்கூடாது என்றும் மேலும் குறும்பு செய்தால் தண்டனை அதிகமாகும் என்றும் எச்சரித்து அனுப்பினார். நானும் நடுங்கிக்கொண்டே பக்கத்தில் இருந்தேன். வெளியே வந்தால் அந்த இருவரும் என்ன செய்வார்களோ என்ற பயம்தான். ஆசிரியர் என்னை அருகே அழைத்து 'அந்தப் பொல்லாத பயல்களோடு சேரவேண்டாம். நல்லவர்களுடன் சேர்ந்து பழகு' என்று எச்சரித்து அனுப்பினார். 'நல்லவர்கள் யார்?' என்ற கேள்வி என் உள்ளத்தில் பிறந்தது.

இந்தச்சேதி என் அம்மாவுக்கும் எப்படியோ தெரிந்தது. அவர்கள் என்னை நன்றாக அடித்துவிட்டார்கள். நான் செய்தது தவறோ சரியோ அதைப் பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. அந்தப் பிள்ளைகளோடு சேர்ந்து பெயரைக் கெடுத்துக் கொண்டேன் என்பது தான் அவர்களுடைய வருத்தம். செத்த நாயை உயிருள்ள நாய் என்று அந்த இரண்டு பிள்ளைகளும் ஊரில் எல்லாப் பிள்ளைகளிடமும் சொல்லிக் கேலி

செய்வார்கள். அதனால் தான் அம்மா மிகவும் கோபித்துக் கொண்டார்கள். அவர்களும் 'கெட்டவர்களோடு சேராதே' என்றார்கள். ஆனால் யார் நல்லவர், யார் கெட்டவர் என்று கண்டுபிடிக்க முடியாதே என்று திணறினேன். திக்திக்கிப் பேசுபவர் நல்லவரா? அல்லது திட்டி அதட்டி நல்வழி காட்டுபவர் நல்லவரா? ஒன்றும் தெரியவில்லை. பின்னால் நல்லவர் கெட்டவர்களைப் பற்றிப் பலப்பல பாடல்களையும் பாடங்களையும் படித்தேன், என்றாலும் இன்னும் நல்லவர் கெட்டவர்களைக் காணமுடியவில்லை. அன்று அம்மாவும் ஆசிரியரும் சொன்ன 'நல்லவர்' யார்? என்ற வினாவிற்கு. இன்னும் விடை காண முடியவில்லை. பொதுவாக உள்ளத் தால் நல்லவரைத் தேடி அடையவேண்டும் எனத் திருக்குறள் முதலிய பல நூல்கள் பறைசாற்றுகின்றன. உள்ளத்தை எதனால் அளப்பது? உதட்டாலா? அம்மம்மா! வேண்டாம், வேண்டாம். ஆகா! மேடைமேல் ஒழுக்கத்தைப் பற்றித் தவறாது பறைசாற்றுவதுபோல் பேசிப் பின் வாழ்வில் ஒழுக்கத்தைக் கனவிலும் கருதாதவர்கள் 'நல்லவர்'களா? உள்ளத்தை எவ்வாறு உணர்வது? எனினும் நல்லவர்கள் இல்லாமல் இல்லையே! ஒருவர்கூட இல்லையானால் வானம் பொய்த்து மனழவளம் கெட்டு அனைத்தும் அழியும் என் கிறார்களே!

> பண்புடையார் பட்டுண்டு உலகம் அது இன்றேல்
> மண்புக்கு மாய்வது மன்.

என்ற குறள் என் நினைவுக்கு வருகிறது, ஆகவே நல்லவர் வாழத்தான் வேண்டும். அந்த நல்லவரைக் காண்பது எப்படி?

பாரதத்திலே ஒரு கதை உள்ளதாகக் கர்ண பரம்பரை வழக்கு உண்டே! தருமபுத்திரர் உலகிலே கெட்டவரைத் தேடிக் காணாமல் அலுத்தார் என்றும், துரியோதனன் நல்ல வரைத் தேடிக் காணாமல் நின்றான் என்றும் சொல்லுவர்,

அதனால் நல்லவர் கண்களுக்கு அனைவரும் நல்லவராகத் தெரிவர். அல்லாதவர் கண்களுக்கு அனைவரும் மற்றவராகத் தெரிவர். இதுவும் உண்மைதானா? இன்றைய உலகில் நல்ல வரையும் கெட்டவரையும் இதன்படி பிரிக்க முடியுமா? கெட்டவர்கள் யார்? நல்லவர்கள் யார்? என்று எப்படிப் பிரிப்பது? உலகில் நடக்கும் கொடுமைகளுக்கெல்லாம் படித்த 'நல்லவர்' தாமே காரணம். படித்தவர் நல்லவரா? அல்லாதவர் நல்லவரா?

'கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றும், அறிவில்லாத என் கன்மத்தை என்
[சொல்லுகேன்?'

என்ற அடிகள் எண்ணத்தக்கனவாம். இதற்கு முடிவு காண்பது எளிதன்று. யார் நல்லவர் என்று அறிஞர் உலகம் காணட்டும். 'கொல்லா விரதமெனக் கொண்டவரே நல்லோர்' என்கின்றார் தாயுமானவர். ஆனால் இன்றைக்குப் பல பேரைக் கொன்று குவிக்கும் தலைவர்களையே எல்லாரும் நல்லவர் என்கின்றனரே? எது சரி? எண்ணிப் பார்க்கட்டும்.

# 6. அல்லி அர்ச்சுனா

எங்களூரில் அப்போது மாவட்ட ஆரம்பப்பள்ளிக்கூடம் ஆரம்பித்துச் சில ஆண்டுகளே ஆயிற்று என்னலாம். அதற்கு முன் சாதாரணக் கிராமப் பள்ளிக்கூடம்தான் இருந்தது. அந்தப் 'போர்டு' பள்ளிக்கூடத்தில் நான் சேர்ந்து படித்து வந்தேன். எனது தெரு நண்பர்கள் எப்போதும் என்னோடு கூட இருப்பார்கள். பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியர் நடேச அய்யர் என்பவர். அவர் முதன் முதல் ஆரம்பிக்கப்

பட்ட அந்தப் 'போர்டு' பாடசாலையின் தலைமை ஆசிரியராய் வந்தவர். ஆதலால் அதை நன்றாக நடத்தி நல்ல பெயர் வாங்க முயன்றார். ஊரில் சிலரும் அதுவரையில் வராத பள்ளிக்கூடம் வந்ததால், அதை வளர்க்கவேண்டும் என்று முயற்சி செய்தார்கள். ஆசிரியர்கள் மூவர் அல்லது நால்வர் இருந்தார்கள் என நினைக்கிறேன். ஐந்தாம் வகுப்பு வரை அப்பள்ளியில் இருந்தது. அங்கேயே ஐந்தாவது வரை படித்தேன். என்றாலும் ஊரில் சிலர் அங்கே படிப்பு நன்றாக வராது என்றும், வாலாஜாபாத்தில் நன்றாகச் சொல்லிக் கொடுப்பார்கள் என்றும் தத்தம் குழந்தைகளை இரண்டாவது மூன்றாவது வகுப்புகளுக்குக்கூடப் பாலாற்றைக் கடந்து செல்லுமாறு ஏழு எட்டுவயதுடைய பிள்ளைகளை வாலாஜாபாத் அனுப்புவார்கள். நானும் அவர்களோடு செல்ல விரும்பிய நாட்கள் பல உண்டு. என்றாலும் பின்னால் ஆறாம் வகுப்புக்கு வாலாஜாபாத் சென்று படித்தபோது அதில் உள்ள தொல்லைகளை அறிந்தேன். அப்படி அங்கு அதிகமாக ஒன்றும் சொல்லிக் கொடுத்துவிடவில்லை. பாவம் இளம் வயதில் தொல்லைகளுக்குட்பட்டுச் சென்று படித்த என் நண்பர் சிலருடைய நிலை இரங்கத்தக்கதாகும்.

நான் ஐந்தாம் வகுப்புவரை ஊரிலேயே அந்தப் 'போர்டு' பள்ளியில்தான் படித்துக்கொண்டிருந்தேன். பள்ளி ஆசிரியர் கள் ஊக்கத்தோடு பாடம் சொல்லிக்கொடுப்பார்கள். சில புதுப்புதுப் பாட்டுகள் கற்றுத் தருவார்கள். 'இன்ஸ்பெக்டர்' வரும்போது சிறுசிறு நாடகங்கள் நடிக்கக் கற்றுக் தருவார்கள். அந்தக் காலத்தில் பள்ளிக்கூடத்துக்கு என்று புதிதாக வேறு கட்டடம் கட்ட ஆரம்பித்தார்கள் 'ஜில்லா போர்டார்'. எனவே மக்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. நான்காயிர ரூபாயில் அமைந்த கட்டடம் அது. ஏதோ 'ஜில்லா போர்டார்' தங்கள் சொந்தப் பணத்தைக் கொண்டுவந்து

போட்டுக் கட்டடம் கட்டுவதாகவே கிராமத்தார் நினைத்தார்கள். அதுவரையில் அரசாங்கம் செலவு செய்து கட்டிய கட்டடம் ஒன்றும் ஊரில் இல்லையாதலால் அவர்களுக்கு ஒரே அதிசயமாகவே இருந்தது. மக்களிடத்தில் இருந்து வாங்கும் வரிப் பணத்தில் ஒரு பகுதியே இப்படி எத்தனையோ ஆண்டுகளுக்கு ஒரு முறை கட்டடமாகவும், கால்வாய்த் துப்புரவாகவும், பிறவாகவும் வருகின்றது என்பதை அன்று அவ்வளவாக மக்கள் அறிய மாட்டார்கள். ஆனால் இந்தக் காலத்தில் ஒவ்வொரு கிராமமும் தங்கள் வரிப்பணத்தில் பங்கு கேட்டுத் தத்தமக்கு வேண்டிய வசதிகளைச் செய்ய முன் நிற்கின்றது. அதற்கெனவே அரசாங்கமும் பஞ்சாயத்துச் சபைகள் அமைத்து அவற்றின் வழியே ஆண்டு தோறும் வரிப் பணத்தில் ஒரு பகுதியைக் கொடுத்து உதவுகின்றது. ஆனால் அந்தக் காலத்தில்எல்லாம் பஞ்சாயத்துச் சபைகள் ஊர்தோறும் கிடையாது.

நான் ஐந்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருக்கும்போது ஒரு நாடகம் நடத்த ஏற்பாடு செய்யப்பெற்றது. 'அல்லி அர்ச்சுனா' என்ற நாடகமே அது. அந்தக் காலத்தில் சில சில சிறிய 'கம்பெனி'கள் நாடகம் நடத்துவதாக ஊர் தோறும் வந்து மாட்டுக் கொட்டகைகளை வாடகைக்கு எடுத்து ஒரு சில நாடகங்களை நடத்திச் செல்வார்கள். அந்த நாடகங்களைப் பாட்டுகளுடன் அச்சிட்டுச் சிலர் விற்றுப் பணம் சம்பாதித்தார்கள். அப்படி அச்சேறிய நாடகங்களுள் 'அல்லி அர்ச்சுனா'வும் ஒன்று. பாரதக் கதையில் இல்லாத ஒரு புது நாடகம் இது. சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் இப்படி எத்தனையோ நாடகங்கள் எழுதப் பெற்றன போலும். பெரிய புராணத்தில் இல்லாத புனைந்துரை பெற்ற நந்தனார் சரித்திரம் கோபாலகிருஷ்ணபாரதியாரால் கீர்த்தனை வடிவத்தில் வெளிவந்துள்ளதை அனைவரும் அறிவர். அக்

கீர்த்தனைகள் நடந்த கதையைக் கூறாவிட்டாலும் காதுக்கு இனிமையாகப் பாடிக் கேட்கப் பயன்படுகின்றன. ஆனால் இந்த 'அல்லி அர்ச்சுனா' 'பவளக்கொடி' போன்ற நாடகங்கள் நல்ல தமிழிலும் இனிய பாட்டுக்களிலும் அமைந்தன வல்ல. ஏதோ கண்டவர் எழுதி அச்சிட, கண்டவர் நடித்த நாடகங்களாக அவை இருந்தன என்னலாம்.

அந்தக் காலத்தில் எனக்கு இந்த வகையிலெல்லாம் எண்ணத் தோன்றவில்லை. நாடகத்தில் நடிப்பதைப் பெறு தற்கரிய பேறு என நினைத்தேன். நல்ல வேளை நடேச ஐயர் எனக்கு அந்த நாடகத்தில் கிருட்டினன் வேடம் கொடுத்தார். என் வீட்டில் அடிக்கடி அலங்காரம் செய்வார். கள். நான் என் வீட்டில் பிள்ளையும் பெண்ணுமாக வளர்ந்த காரணத்தால் என் அன்னை நன்றாக நகைபூட்டி என்னை அலங்கரிப்பார்கள். பெண் வேடம் அணிவிப்பார்கள். என் தலையில் அதிக மயிர்த்திரள் இருக்கும். அதை அழகழகாகப் பின்னித் தொங்க விடுவார்கள். என் பாட்டிக்கு அழகாகப் பின்னத் தெரியும். கோயில் அம்மனுக்கு மலர் வகைகளில் அவர்கள் அழகாகப் பின்னல்களை வனைந்து தருவது வழக்கம். அந்த முறையில் எனக்குப் பின்னிப் பூச்சூட்டி, பெண்வேடம் புனைந்து, நகைபூட்டி ஒப்பனை செய்து பார்ப்பார்கள். சில சமயம் 'கிருஷ்ணன் கொண்டை' என்று தலையை முன்னே முடிந்து, அழகாகக்கட்டிக் கிருஷ்ண வேடமும் புனைவார்கள். அதை ஒருநாள் எங்கள் தலைமை ஆசிரியர் கண்டார். அந்த வேடம் எனக்குப் பொருத்தமானதாக இருந்ததாம். எனவே எனக்கு 'அல்லி அர்ச்சுனா'விலும் அதே கிருஷ்ண வேடத்தைக் கொடுத்தார். அல்லி அர்ச்சுனாவில் கிருஷ்ணன் வேடம் நல்ல பகுதிதான். அர்ச்சுனனுக்கு அல்லியை மனைவியாக்க வேண்டிய பொறுப்பு கிருஷ்ணனுடையது. கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தீர்த்த யாத்திரையின் போது மதுரைக்கு வர, அங்கு 'ஆண்வாடை

வீசாது' ஆண்ட அல்லியை எப்படியோ அறிந்து காதல் கொள்ளுகின்றான் அர்ச்சுனன். கிருஷ்ணனுக்குத் தெரியா வகையிலே எப்படியும் அவளை அடைய முயன்றான். தெருக் கூத்துப் போன்று அது அமையினும் நாங்கள் பள்ளிக் குழந்தைகள் நடித்தமையின் அதற்கு ஒரு தனி மதிப்பு இருந்தது. எங்கள் தெரு நண்பர்கள் இருவர் தாம் அல்லியாகவும் அர்ச்சுனனாகவும் நடித்தார்கள். அந்த நாடகத்தில் எனக்குக் கிருஷ்ணன் பாகம்தான் கொடுத்திருந்த தென்றாலும் ஒத்திகை பலமுறை நடத்தியதால் எல்லாப் பாகங்களுமே எனக்கு மனப்பாடமாக வந்துவிட்டன. எனக்கு அப்போது இராகத்தோடு பாடுவதென்பது இயலாது. ஆகவே எனக்குப் பாட்டு அதிகமில்லை. என்றாலும் அல்லிக்கும் அர்ச்சுனனுக்கும் ஒரு சில பாட்டுகள் இருந்தன. அவை இன்றும் என் மனத்தில் எப்படியோ இடம் பெற்று இருக்கின்றன.

கிருஷ்ணன் படுத்துக் கொண்டு அர்ச்சுனன் காலில் தலையை வைத்து உறங்குகிறான். அர்ச்சுனன் அப்போது தனியாகச் சென்று அல்லியைக் காண நினைத்து அவனுக்குப் பாராங்கல்லைத் தலையணையாக வைத்துப்போகிறான். இதற்கு ஒரு பாட்டு. இன்றும் தமிழ்ச் சினிமாக்களின் விறுவிறுப்பை வெறும் சத்தற்ற பாட்டுக்களை இட்டுக் கொலை செய்வதை நாம் காண்கிறோ மன்றோ! அது போன்ற பாட்டுக்கள் தாம் அன்றைய நாடகப் பாடல்களும்.

'தக்கப் பாராங் கல்லைத் தூக்கி—மாமன்—தலைக்
[குயரம தாக்கி
பக்குவமாய் வழி நோக்கி—சென்று—பார்ப்போம்
[அல்லியைக் கண்டுதேடி.
அன்பாய் அல்லியை மணந்து—அவள்—ஆசை
[தணியவே சுகித்து
இன்பமாய் நம்மோ டழைத்து நாம்—இந்திரப்
[பிரஸ்தம் செல்வோமே'

என்ற பாட்டுத்தான் அது. இதில் ஒன்றுமில்லை என்று இப்போது தெரிகிறது. ஆயினும் அந்த இளமை வயதில் இது எப்படியோ என் மனத்தில் இடம் பெற்றுவிட்டது. இது போன்றே அல்லி பாடியதாக ஒரு பாடல்.

பெண் வேடத்தோடு காலைப் பிடித்துத் தன் கதையைச் சொல்லிவிட்டு ஓடிவிடுகிறான் அர்ச்சுனன். ஆம் அந்தக் கதையும் ஒரு நொண்டிச் சிந்துப் பாட்டால் ஆகியது.

'மாமதி மிகுமதுரை—வாழும் மாதரே அல்லி மகாராணி'

என்று தொடங்கித் தன் கதையைச் சொல்லி

'உனக்கு இசைந்த கணவன்—நான் தான் - உத்தமியே
[உந்தன் இருகாலைப் பிடித்தேன்'

என்று முடித்து ஓடிவிடுகிறான். உடனே ஆண் வாடை விரும்பாத அல்லி ஆவேசத்தோடு எழுகிறாள்; அலறுகிறாள்; பக்கத்தில் இருந்த சேடியர்களையெல்லாம் அழைக்கிறாள்; பாடுகிறாள்.

'அஞ்சாத நெஞ்ச முற் றிங்ஙனம் வந்தவன் ஆரடா
[ஆரடா சொல்
ஆண்மைத்தன மறியாத மடையனே ஓடாதே ஓடாதே நில்
வஞ்சிமுன் நின்றிடில் நெஞ்சைப் பிளந்துனை வாட்டி
[வதைத்திடுவேன்
வக்கணை பேசினாய் வெட்கமில்லாமலுன் வாயைக்
[கிழித்திடுவேன்
கொஞ்சமும் அஞ்சாது மிஞ்சி எனக்கொரு கொச்சைக்
[கதை உரைத்தாய்
கோதைமுன் நின்று பதில் உரைக்காமலே பாதகா
[எங்கொளிந்தாய்'

என்று பாடித் துள்ளிக் குதிக்கிறாள். இப்படி எத்தனையோ, பாடத் தெரியாத எனக்குக்கூட ஒரு பாட்டு. கிருஷ்ணன் குறத்தியாக வந்து அர்ச்சுனனுக்குக் குறி சொல்லுகிறான். எனக்குக் குறத்தி வேடம் போட்டார்கள். தெய்வம் வந்தது

என் பேரில். 'ஆஹா' என்றது. அவனைப் பற்றிக் குறி சொல்லிப் பாடிற்று. கடைசியில் ஒரு 'குளிகை' மருந்தைக் கொடுத்துக் குளத்தில் கரைக்கச் சொல்லிற்று. தெய்வம் பாடிய பாட்டு எப்படியோ இன்று மறந்துவிட்டது. குளிகை பெற்ற அர்ச்சுனன் குளக்கரையில் உட்கார்ந்து கொண்டு அல்லியின் தோழிப் பெண்கள் பக்கத்தில் இருப்பதையும் உணராமல் பாட்டுப் பாடிக் கொண்டே கரைக்கிறான். மெட்டு 'வழிநடைச் சிந்து' மெட்டாம்.

வஞ்சிகுற மாதுதான் தந்த - மாத்திரை தன்னை—
[நேர்த்தியாக
வாகுடன் உறைக்கின்றேன் அந்த
வண்ணமுளதொரு—அன்ன நடை அல்லி—தன்னிட மன
[மிளகவில்லையே
மட்டிலா மதுரை ராணியே—வந்துமே என்னை—சிந்தை
[மகிழ
மாமணம் புரிய வா நீயே

உந்தனை நினைந்தினிதாக-உல்லாசமாக-மெல்லியே
(யானும்
உறைக்கின்றேன் மருந்தை நேராக
உற்றதோர் ஆவலைத் தீர்ப்பாயே-உற்பனமுள்ள —
(விற்பன மாதே
உரிய நேசம் என்னைக் கொள்வாயே'

என்று பாடுகிறான். பின் தோழியர் அவனை அல்லியிடம் அழைத்துச் செல்லுகிறார்கள். கடைசியில் கிருஷ்ணன் முயற்சியில் கலியாணம் நடக்கிறது.

இந்த நாடகத்தைச் சுமார் நான்கு மணி நேரம் நடத்தி இருப்போம். ஒன்றுமில்லாத இந்தப் பாட்டுக்களைப் பாடும் போது ஊர் மக்கள் கைதட்டி எங்களை ஊக்குவித்தார்கள். இன்றைக்கும் பல சினிமாப் பாட்டுக்கள் இப்படித்தானே இருக்கின்றன.

நாடகம் முடியுமுன் ஒவ்வொரு நடிகருக்கும் மாலைகள் சூட்டிப் பரிசளித்தார்கள். வந்த 'இனிஸ்பெக்டரும்'

நாடகத்தைப் புகழ்ந்தார். அன்று கழிந்தது. ஆனால் என்னை நாடகம் விடவில்லை. எனது எதிர் வீட்டில் இரண்டு பாட்டிகள் இருந்தார்கள். பக்கத்திலும் பெரியம்மாவும் வேறு சில பெண்களும் இருந்தார்கள். நாடகம் முடிந்த மறுநாளிலிருந்து எல்லாரும் எங்கள் தெருவில் கூடிவிடுவார்கள். என்னை அந்த நாடகப் பாடல்களை யெல்லாம் பாடச் சொல்லு வார்கள். நான் உள்ளே ஓடி விட்டாலும் ஓடிவிடுவேன். என் பாட்டியும் 'கற்றதைக் காச்சியா குடிக்கப் போகிறாய்; ஏதோ ஆசையாகக் கேட்கிறார்களே பாட்டிகள் என்று பாடுவாயா! என்னமோ பிகுப் பண்ணுகிறாயே' என்பார்கள். அவர்கள் சொல்லுக்கு நான் மறுபேச்சே பேசுவது கிடை யாது. நாள்தோறும் இப்படி எங்கள் தெருவே நாடக மேடையாய்க் கழிந்தது, அடுத்த இரண்டு மூன்று ஆண்டு களில் நான் பல தடவை அவர்களுக்காக இந்த நாடகப் பாட்டுகளைப் பாடி இருப்பேன். இராகம் ஒன்றும் தெரியா விட்டாலும் அந்தக் கிழங்களுக்கு எப்படியாவது பாட்டைக் கேட்பதில் ஓர் ஆசை. நான் வாலாஜாபாத்தில் எட்டாவது படிக்கும் காலத்தில் கூட ஓரிரு நாட்கள் அப்பாடல்களை அவர்களுக்காகப் பாடி இருக்கிறேன்.

இப்படி ஆரம்பப் பள்ளியில் படித்து, நடித்து, பிறகு ஐந்தாம் வகுப்பு முடிந்து ஆறாம் வகுப்புக்கு வாலாஜாபாத் திற்கு வந்து சேர்ந்தேன். ஊரில் படித்த அந்த ஐந்து ஆண்டு களில் நடைபெற்ற எத்தனையோ நிகழ்ச்சிகள் இன்னும் ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டே இருக்கின்றன. ஒரு சில கண்டு மேலே செல்லலாம்.

# 7. மத்தளத் தட்டு

நான் ஊர்ப் பள்ளியிலே நான்காவது ஐந்தாவது படித்துக் கொண்டிருந்த காலம். பள்ளிக்கூட நேரம்போக மாலை வேளையில் நண்பர்களுடன் சில நாட்களில் விளையாடுவதுண்டு. ஒரு நண்பர் வேடிக்கையாகப் பொழுது போக்கும் விருப்புடையவர். அவருக்கு நாடகம் நடித்தல் முதலியவற்றில் ஆர்வம் உண்டு. அப்படியே புல்லாங்குழல், மிருதங்கம் அல்லது மத்தளம் முதலியன வாசிப்பதில் ஆசை கொண்டவர். அதற்காகச் சிலர் அவருக்கு நண்பரானார்கள். இரண்டொரு மத்தளங்களை வாங்கி வைத்துக் கொண்டு அவர்கள் வீட்டில் வாசிக்கக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தார். நானும் அவர்களோடு உட்கார்ந்து கொண்டு வேடிக்கையாக அந்த மத்தளம் தட்டுவதைப் பார்த்துக் கொண்டிருப்பேன். நண்பர் சிலர் தேவாரம் முதலியவற்றைப் பாடுவார்கள், எனக்குப் பாடவும் வராது; மத்தளம் தட்டவும் வராது. வேடிக்கையாகத்தான் பார்த்துக் கொண்டிருப்பேன். இப்படிச் சில நாட்கள் நேரம் கழிவது கூடத் தெரியாமல் இருக்கும். வீட்டிலிருந்து என் பாட்டி என்னைத் தேடிக் கொண்டு வருவார். நான் அவர்களோடு போகாவிட்டால் அம்மா அடிப்பார்கள் என்பது தெரியுமாதலால் உடனே ஓடி விடுவேன். என்றாலும் அந்த மத்தளம் அடிப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பதில் தனி மகிழ்ச்சி பெற்றதை இழக்க வேண்டுமே என்ற எண்ணத்தில் வருத்தம் தோன்றும். மத்தளம் அடிக்கும் நண்பரும் மற்றவரும் அக்கலையில் வல்லவர்கள் அல்லர் ஆனாலும் எவ்வாறோ என் பிஞ்சு உள்ளத்தில் அந்தப் பாட்டையும் தட்டையும் கேட்பதில் தனி இன்பம் உண்டாயிற்று.

சில சமயங்களில் நானே மத்தளத்தை வேடிக்கையாகத் தட்டுவதும் உண்டு, அது அலறும். நான் அடிப்பதைப் பொறுக்காமல் அது கத்துவது போல் இருக்கும். நான் பயந்து

விடுவேன்; என்றாலும் வேடிக்கையாக இடது கை முட்டியை மடித்துக் கொண்டு வலது கையால் மத்தளத்தின் ஒரு பக்கத்தை அடிப்பது போல் அடித்துக் கொள்வேன், அங்கு உட்கார்ந்து கொண்டே அவர்கள் அடிக்கும் போதே அப்படி வேடிக்கையாக அடிப்பதும் உண்டு. தனியாகத் தெருவில் செல்லும்போது கூட எதையோ எண்ணிக் கொண்டே கைத் தட்டுதலையும் செய்து கொண்டிருப்பேன். இப்போதும் சிலர் சினிமாப் பாடல்களைத் தம்மை மறந்து தெருவில் பாடிக் கொண்டு போவதைப் பார்க்கலாமல்லவா.

என் மத்தள நண்பருடைய தந்தையார் வயதானவர். அவர் எப்போதும் திண்ணைமேல் உட்கார்ந்து கொண்டிருப் பார். உள்ளே நாங்கள் செய்யும் ஆர்ப்பாட்டங்கள் சில சமயம் அவருக்குத் தொல்லை தரும். ஏண்டா பசங்களா? உங்களுக்கு வேலை இல்லையா? இங்கே வந்து எல்லாம் கூத் தடிக்கிறீர்களா?' என்று கோபிப்பார். என்றாலும் அவர் தம் மகனார் எப்படியாவது நன்றாக மத்தளம் தட்டக் கற்றுக் கொள்வதில் அவருக்குத் தனி ஆர்வம் இருந்த காரணத்தால் எங்கள் தொல்லைகளை யெல்லாம் கூடியவரையில் பொறுத்துக் கொள்வார்.

ஒருநாள் காலை நான் தெரு வழியாக எங்கள் வீட்டுப் பசுமாடுகளை மந்தைக்கு ஓட்டிக் கொண்டு போனேன். எங்கள் தொழுவத்திலிருந்து தெருவழியாகத்தான் மாடுகளை ஓட்டிச் செல்ல வேண்டும். நாள்தோறும் நான் காலையில் எழுந்து மாட்டை ஓட்டிக் கொண்டு சென்று மந்தையில் விட்டுவிட்டு, அப்படியே ஆற்றுக்குச் சென்று காலைக்கடன் களைக் கழித்து, துணி துவைத்து நீரில் மூழ்கிவிட்டு வருவது வழக்கம். அப்படியே அன்று காலையில் மாடுகளை ஓட்டிக் கொண்டு சென்றேன். எங்கள் வீட்டில் பயிர் எல்லாம் எடு பட்டதால் உழும் மாடுகளையெல்லாம் விற்றுவிட்டோம். பால் தயிருக்காக மட்டும் இரண்டொரு பசுக்களை வைத்துக்

கொண்டிருந்தோம். அவற்றை ஓட்டிச் செல்வது வழக்கம். மாடுகள் மெதுவாகச் சென்று கொண்டிருந்தன. நானும் அவற்றின் பின்னால் மெதுவாக அசைந்தாடிச் சென்று கொண்டே இருந்தேன், இடது கையை மடித்து வலது கையால் மத்தளத்தைத் தட்டுவதுபோல் தட்டிக் கொண்டு சென்றேன். வாய் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்திருக்கும். நான் அந்த நண்பர் வீட்டுத் தெரு வழியே செல்லும்போது அப்பெரியவர் திண்ணைமீது உட்கார்ந்திருந்தார். 'டே சிவானந்தம்' என்று அவர் கூப்பிட்டார். என்னை முழுப் பெயரோடு ஊரில் யாரும் அந்நாளில் கூப்பிடமாட்டார்கள், மேற்சொன்னபடிதான் கூப்பிடுவார்கள். வீட்டில் எனக்குப் பெயர் வைத்ததே ஒரு வேடிக்கை. எங்கள் குடும்பத்தில் சில தலைமுறைகளுக்கு முன்பு யாரோ 'பரமசிவ' முதலியார் என்ற ஒருவர் வாழ்ந்து வந்தாராம். அவர் எங்கோ தெற்கே திருச்சிராப்பள்ளி சென்று தாசில்தார் உத்தியோகம்கூடப் பார்த்திருக்கிறாராம். அந்தக் காலத்தில், ஹைதர் அலி, திப்புசுல்தான் சண்டைகள் நடந்தன போலும்; வெள்ளைக்காரர் உள்ளே நுழைந்த காலம். அவர் அந்தக் கலகம் நடைபெற்ற காலத்தில் வாழ்ந்தவராம். நான் இன்று முதல் மகாயுத்தமாகிய கலகம் நடக்கத் தொடங்கிய 1914இல் பிறந்தவன். எனவே அந்தக் கும்பினி யுத்தகாலத்தில் வாழ்ந்த பரமசிவ முதலியார்தான் இப்போது மறுபடியும் உலக யுத்த காலத்தில் வந்து பிறந்தார் என்று கருதி எனக்குப் பரமசிவம் எனப் பெயரிட்டார்களாம், மேலும் ஆனந்த வருடத்தில் பிறந்தமையால் 'பரமசிவானந்த'மாக்கப்பட்டேன். என்றாலும் ஊரில் என்னை எல்லாரும் 'சிவானந்தம்' என்றே கூப்பிடுவார்கள்.

'சிவானந்தம் வாடா' என்று கூப்பிட்டார் அந்தப் பெரியவர். எனக்கு அவரிடம் எப்போதுமே ஒரு அச்சம் உண்டு. ஏன்? ஊரில் எல்லாரிடமுமே நான் பயந்து நடந்து வந்தேன்.

மெள்ள அருகில் சென்றேன். கை அசைவற்று நின்றது. 'இப்போது என்ன செய்து கொண்டு போனாய்?'' என்றார் அவர். 'நான் ஒன்றும் செய்யவில்லையே, அதோ பசுமாடுகள் போகின்றன, அவற்றை ஓட்டிக் கொண்டு ஆற்றுக்குப் போகிறேன் நான்' என்றேன். 'அது சரி. கையை ஏன் அப்படி மடித்து இவ்வாறு அடித்துக் கொண்டு போகிறாய் பயித்தியம் போல' என்றார். நான் 'சும்மா' என்று வாய்மூடி நின்றேன். அவர் 'என்னடா சும்மா! எல்லாரும் பெரிய மத்தளக்காரர் ஆகிவிடலாம் என்ற யோசனையோ! முட்டாள். மத்தளம் அடிப்பதென்றால் உன் போன்ற முட்டாள்களுக்கு அவ்வளவு சுலபம் அல்ல; தெரிஞ்சுதா! எங்கள் பையன் கற்றுக் கொள்ளுகிறான் என்றால் அதைப் பார்த்து நீயும் கைத்தட்டுகிறாயே; புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொள்வது போல அல்லவா இருக்கிறது. போ! இனிமேல் அந்த மாதிரியெல்லாம் கைதட்டி கால்தட்டி நின்றால் உதைப்பேன்' என அதட்டி ஆணையிட்டார். நான் உண்மையிலேயே பயந்து போய் விட்டேன். 'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோயில் ஆண்டி' என்றபடி, நான் பேசாமல் வாய்மூடிக் கிடந்தாலும், மேலே கேட்க யாரும் ஆண் துணை இல்லாததாலும், எல்லாரும் அடித்து உதைப்பதாகவே பேசுவார்கள். நான் எல்லாவற்றையும் கேட்டு வாய்மூடிக் கொண்டு போய் விடுவேன். என்றாலும் எங்கள் அம்மா காதில் இவை எல்லாம் விழுந்தால் அவர் பொறுக்கமாட்டார். உடனே அவர்களோடு சண்டையிட்டு, அவர்கள் தவறுகளை உணர்த்திவிடுவார். பெரியவர் சொன்னபடி நான் நடப்பதாகத் தலையசைத்தேன். 'ஆமாம் இனிமேல் இப்படிப் பார்த்தால் உதைதான்' என மறுபடியும் எச்சரித்து அனுப்பினார்.

இதை நான் யாரிடமும் சொல்லவில்லை. ஆனாலும் அவர் இது பற்றி யாரிடமாவது பெருமையாகச் சொல்லி

இருப்பார். அல்லது பக்கத்து வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தவர்கள் கேட்டிருப்பார்கள். அது எங்கள் அம்மாவிற்கு எப்படியோ எட்டிவிட்டது. அவரைக் கேட்டார்களோ இல்லையோ எனக்குத் தெரியாது. மறுநாளிலிருந்து நான் அவர்கள் வீட்டுக்குப் போகக் கூடாது என்று கட்டளை இட்டு விட்டார்கள். திங்கள் கிழமை தோறும் 'பசனை' நடக்கும். அதற்கு அந்த மத்தளக்காரர் தான் முன் நின்று எல்லாவற்றையும் செய்வார். நான் தவறாது பசனைக்குப் போவேன். அம்மா அதுமுதல் அந்த பசனைக்கும் போக வேண்டாம் என்று கூறி விட்டார்கள், எனக்கு எவ்வளவுதான் பாட்டுக் கேட்பதிலும் மத்தளம் தட்டுவதைக் காண்பதிலும் ஆசை இருந்தாலும் அம்மாவின் சொல்லை மீற முடியாது; மீறினால் அடி உதை கிடைக்கும் என்ற அச்சம்தான். அந்தக் காலத்தில் எல்லாம் இப்படிக் கட்டுப்பாடு செய்கிறார்களே என்று அவர்கள் மேல் கோபித்துக் கொள்வது உண்டு. வெளியில் அல்ல; மனத்தில். என்றாலும் பின், புத்தி வந்த பிறகு அவர்கள் செய்து வந்த ஒவ்வொன்றும் எனக்கு எவ்வளவு நல்லதாக முடிந்தது என உணர்ந்து அவர்களைத் தெய்வமாகப் போற்றி வழிபடுகிறேன்.

அன்று அந்தப் பெரியவர் தன் பையனைப்போல் நானும் மத்தளம் கற்றுக் கொண்டு கலையில் வல்லவனாக வரக் கூடாது என்ற எண்ணத்தில் அப்படி எச்சரித்தார். நான் அன்று அவரை வெறுத்தேன். என்றாலும் இன்று அவர் எனக்கு நல்ல வரம் கொடுத்தவர் என நினைக்கின்றேன். அவர் அப்படித் தடுத்திருக்காவிட்டால், அதை அறிந்த அன்னை என்னைக் கட்டுப்பாடு செய்திராவிட்டால் நான் அந்த வேடிக்கைகளையெல்லாம் விட்டுச் சற்று கல்வியில் கவனம் செலுத்தி இருக்க முடியாது. கண்டவர்களோடு கூடி ஒரு வேளை மற்றவர்கள் பழக்கத்திலுள்ள பீடி பிடித்தல்,

பொடி போடுதல் முதலியவற்றில் பழகி நான் வேறு வகையில் மாறி இருக்கவும் கூடும். அவர் தம் எச்சரிக்கையும், அதன் வழி உண்டான அம்மாவின் கட்டுப்பாடும் என்னை ஓரளவில் மனிதனாக்கின என்னலாம். ஆகவே இன்றும் அந்தப் பெரிய வருக்கு ஒரு வணக்கம் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

## 8. சர்க்கரைப் பொங்கல்

அந்த இளம் வயதில் என் தாயார் எவ்வளவு கட்டுப் பாடுகள் செய்து வைத்திருந்தபோதிலும் நான் மற்றப் பிள்ளைகளோடு விளையாடுவதையே விரும்பினேன். அப் பிள்ளைகளுள் எனக்குப் பிடித்தமானவர் இரண்டொருவர் இருந்தனர். அவர்களோடு மாலை வேளைகளில் ஆற்றங்கரை யிலும் ஆற்று மணலிலும் விளையாடுவது வழக்கம். ஒரு நாள் மாலை நானும் என் நண்பரும் அவ்வாறு விளையாடுவதற்கு ஆற்றங்கரைக்குச் சென்றோம். மாலை ஐந்து மணி இருக்கும். கோயில் பூசை தொடங்க நாழி இருந்தது. நாங்கள் கோயிலுக்கு அருகில் சென்று பக்கத்து மணலில் உட் கார்ந்தோம். கோயில் உள்ளே நான்கைந்து பேர் உட்கார்ந்து கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். அந்நேர வேளையில் பேச்சுக் கேட்கவே நானும் என் நண்பரும் கூட அங்கு என்ன நடக்கிறது என்ற விருப்பினால் உள்ளே காணச் சென்றோம். முன் மண்டபத்திலே அப்போது 'தருமகர்த்தா' வாக இருந்த ஒரு பெரியவரும் அவருக்குத் துணையாட்கள் என்று பேசிக் கொள்கின்ற மற்ற இருவரும் உட்கார்ந்திருந் தார்கள். கோயிலில் பூசை செய்யும் ஐயர் இரண்டு தட்டு களில் சூடாக எதையோ கொண்டு வந்து வைத்தார். அவர் வைத்த வேளையும், நாங்கள் உள்ளே சென்ற வேளையும் ஒன்றாக இருந்தன. எங்களைக் கண்ட தருமகர்த்தாவுக்குக் கோபம் உண்டாயிற்று. 'சனியன்கள் எங்கிருந்து வந்து

விட்டன' என்று கூப்பாடு போட்டார். 'பூசை வேளை இல்லையே! ஏனடா கதவைத் திறந்தாய்' என்று தூரத்திலிருந்த வேலைக்காரன் மேல் எரிந்து விழுந்தார். அவன் பாவம் அப்போதுதான் ஓடிக் கதவை அடைக்க முயன்றான். 'போடா போ' என்று அவனை அதட்டினார். நாங்கள் உண்மையில் பயந்து விட்டோம். 'டே பசங்களா! இங்கே வாருங்கடா' என்று அவர் அதட்டிக் கூப்பிட்டார். எங்களை ஏதோ செய்யப் போகிறார் எனப் பயந்து கொண்டே அருகே சென்றோம். ஐயரைக் கூப்பிட்டு 'இந்தச் சனியன்களுக்கு இரண்டு கை போடுங்கள்; தொலையட்டும்' என்றார். அவர் உடனே தம் திருக்கையால் எடுத்து ஆளுக்கு ஒரு கைச் சர்க்கரைப் பொங்கலைக் கொடுத்தார். 'ஓடி விடுங்கள், போய் ஆற்றில் தின்னுங்கள். யாரிடமும் சொல்லாதீர்கள்' என்று ஆணையிட்டு எங்களை வெளியே அனுப்பிவிட்டுக் கதவைச் சாத்திக் கொள்ளச் சென்றார்.

'பாவம்! அவர் 'தர்மகர்த்தா.' கோயில் அறத்தைப் பாதுகாக்க வந்த உத்தமர். கோயில் பணத்தை எல்லாம் பிறர் கொள்ளைகொள்ளா வகையில் பாதுகாத்து,நல்லமுறையில் அறம் சிறக்கச் செயலாற்ற வேண்டிய அன்பர் அவர். ஆனால் அன்றாடம் கோயில் பணத்தில் இப்படிப் பலப்பல பண்டம் பலகாரங்கள் செய்து மாலைதோறும் தாம் சுவைத்து உண்பதோடு வீட்டுக்கும் கொடுத்தனுப்புவாராம். அப்பாவிகளாகிய நாங்கள் வேளை தெரியாது உள்ளே சென்று விட்டோம். ஆகவே அவர் வசைக்கு ஆளானோம்.

எங்கள் வீட்டில் அம்மா அடிக்கடி சொல்லுவாள் 'கோயில் சொத்துக்கு ஆசை வைக்காதே' என்று. இப்போது கோயில் சோறு என் கையில் இருந்தது. அதன் மணம் மூக்கைத் துளைத்தது. அதைச் சாப்பிடுவதா வேண்டாமா என எண்ணிக் கொண்டே இருந்தேன். என் நண்பனோ அதை நன்றாகச் சுவைத்துச் சாப்பிடத் தொடங்கி விட்டான்.

என்றாலும் தின்னும்போது எத்தனையோ எண்ணங்கள் உள்ளத்தே ஊசலாடின. எனக்குப் புத்தி தெரிந்த அந்த நாளில் எங்களூர்க் கோயில் 'தர்மகர்த்த'ராக இருந்தவர் நான்கு பேருக்கு மேல் இருப்பர். அவர்கள் ஒருவரும் முன்னை நிலையைவிட மேல் நிலைக்கு வரவில்லையே என்ப தோடு, உள்ள நிலையிலும் தாழ்ந்துதான் போனார்கள். இன்று நன்றாகத் தெளிவுபெற்ற பின் எண்ணிப்பார்த்தேன். ஆம்! உள்ளூரிலும் வெளியூரிலுமிருந்து சுமார் பத்துப்பேர் தர்மகர்த்தர்களாக வேலை பார்த்திருக்கிறார்கள். ஒரு வராவது மேலே உயரவில்லை. உள்ள பொருளையும் நிலத்தையும் இழந்து கடன்காரர்களாக இருப்பதைத்தான் காண்கிறேன். இறைவனுக்கு உண்டான பொருளைக் காப்பதாகச் சொல்லிக் கொண்டே அதைச் சுரண்டும் எலிகளாக மாறிவிட்டால் அவர்கள் வாழ்வு எப்படி உயரும்? தர்ம கர்த்தராக இருந்தவர் குடும்பங்களும் வேலை பார்த்த வர்கள் குடும்பங்களும் நிலையில் தாழ்ந்தே இருக்கின்றன என்பதை ஊரில் யாரும் அறிவார். அதனாலேயே தற்போது உள்ளவரை நான் 'நீ தர்மகர்த்தாவாக இராதே. வேண்டு மானால் செயலாற்றும் அலுவலராகப் (Executive Officer) பணியாற்று. தர்மகர்த்தாக்களோ, அன்றி அறநிலையப் பாதுகாப்பாளரோ செய்ய வேண்டும் எனப் பணித்ததைச் செய். வேறு செய்யாதே' என்று வற்புறுத்துவேன். அவரும் இன்று தர்மகர்த்தராக இல்லை.

கையில் உள்ள பொங்கலோடு பல சிந்தனைகள் என் உள்ளத்தில் தோன்ற ஆற்றுக்கால்வாய்க் கரையில் உட்கார்ந் திருந்தேன். நண்பனோ பொங்கலைச் சாப்பிட்டுவிட்டு 'மிகவும் நன்றாக இருக்கிறது. என்றான். என் பிஞ்சு உள்ளமும் அதைச் சுவை பார்க்க நினைத்தது. சுவைத்தேன். நல்ல நெய், தேன், கற்கண்டு, திராட்சை இவற்றில் மூழ்கி எழுந்த அந்தச் சர்க்கரைப் பொங்கல் மிகவும் இனித்தது.

என்றாலும் உள்ளத்தில் மட்டும் ஏதோ ஒன்று உறுத்திக் கொண்டிருந்தது.

நான் உண்டுகொண்டே இருந்த வேளையில் என் ஊரில் இருந்த பெரியவர் ஒருவர் தம் வயல் வேலையை முடித்துக் கொண்டு குளிப்பதற்காக அங்கு வந்து உட்கார்ந்தார். நான் ஏதோ உண்பதைக்கண்டு 'டே பையா! என்னடா தின்கிறாய்' என்று உரிமையோடு கேட்டார். நான் பொங்கலென்று கூறி, அது வந்த விதத்தையும் சொன்னேன். அவர் அது பற்றி வியப்படையவில்லை. தர்மகர்த்தா வீட்டிற்கு, 'டின் டின்னாகக்' கடலை எண்ணெயும் பிற பண்டங்களும் 'டன் டன்னாக' கோயில் இலுப்பை விறகும் போகும் என்றும் அவர்கள் வீட்டு வாழ்வே இதனால்தான் நடைபெறுகிற தென்றும் கூறிச் சிரித்தார். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. இவர் என்ன 'அறக் காப்பாளரா' அன்றி 'அறக்கொலைஞரா' என்று எண்ணத் தோன்றிவிட்டது. பொழுதும் போயிற்று. அதற்குள் இருட்டத் தொடங்கிவிட்டது. நான் நண்பனுடன் எழுந்து வீட்டுக்கு வந்துவிட்டேன்.

என்றாலும் அன்று இரவெல்லாம் என்னென்னவோ நினைவுகள் உண்டாயின. அந்தக் கோயிலின் தர்மகர்த்தா வேலையின் பொருட்டே ஊர் இரண்டுபட்டது. பின்னால் பெருங் கொலைகள் நடக்கும் வகையில் ஊரில் இரண்டு கட்சிகள் உண்டாகிவிட்டன. ஒவ்வொரு தேர்தல் சமயத்தில் தடிச் சண்டைகள் நடைபெறும். வெளியூருக்குச் சென்று தனி ஆளாய் வந்தால் இருட்டும் சமயத்தில் எதிர்க்கட்சியைச் சேர்ந்த நான்கைந்து பேர் அந்த ஆளை நையப் புடைத்து அனுப்புவார்கள். மறுநாள் இது திருப்பி மாற்றுக் கட்சி யாருக்கு வழங்கப்பெறும். இந்த நிலையில் சில நாட்கள் பெண்கள் வெளியே வரக்கூட அஞ்சுவார்கள். கோவிலுக்காக இம்மாதிரிக் கட்சிகள் பல ஊர்களில் இருக்கின்றனவாம். பணம் உள்ள கோயிலாயின், அங்கே வேளாளரும் குடியிருப்

பார்களாயின், கட்டாயம் அந்த ஊர் இரண்டுபடும் என்று பேசிக்கொள்வார்கள். அந்தோ மக்கள் சமுதாயத்தை வாழ வைக்க வந்த அந்தக் கோயில்கள் காரணமாக இப்படிச் சமுதாயங்களே பிளவுபடுவானேன்? அந்தக் கோயிலுக்கு உள்ள நிலபுலன்கள்தாம் காரணம். இந்த நிலையில் என் பாட்டன்மார் கோயிலுக்கு அதிகமாக நிலங்களைத் தானம் செய்துள்ளமையின் அவர்களையும் மனமாரச் சபித்தேன். வேறு என்ன செய்யமுடியும்? இப்படி நன்மை செய்வதை விடுத்துத் தீமையை விரும்பினால் பிஞ்சுள்ளம் நையாது என்ன செய்யும்?

கோயில் தூய்மையான இடம். அங்கே அறச் செயலன்றி வேறு கொடுமைகள் நடைபெறலாகா. சமுதாய வாழ்வின் அடிப்படையே கோயில், அங்கு மக்கள் தீமையை மறந்து அறவழி நின்று ஒழுங்காகச் செயலாற்ற வேண்டும். அவ்வறங்களை மேற்பார்க்கும் பண்புடையவரே அறக்காப் பாளர். ஆனால் வேலியே பயிரை மேய்வதுபோல அவரே இது போன்ற கொடுமைகளைச் செய்தால் அறம் வாழ்வது எங்கே? அறத்தின் வழி மக்கள் சமுதாயம் செழித்துச் சிறப்பது எங்கே? எண்ணிப்பாருங்கள்.

# 9. மிட்டாய்ச் சண்டை

என் தாயாரும் பெரியம்மாவும் தனிக்குடித்தனம் செய்ய ஆரம்பித்த பிறகு ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகுவதில்லை. என் தந்தையார் வீட்டுக்கு வராமல் தனியே இருந்து, எப்போதோ பொருள் வேண்டும்போது வந்து சண்டை இட்டுச் செல்லுவார். என் தாயாரே எல்லாவற்றையும் பொறுப்பாகக் கவனித்து வந்தார்கள். என்

பாட்டியார் துணையாக உடன் இருந்தாலும் பெரும்பாலும் மலர் எடுத்தல், மலர் தொடுத்தல் முதலிய பணியிலேயே அவர்கள் காலம் கழிந்தது. எனது வாழ்வோ அன்னையின் ஆணைக்கு அஞ்சி அஞ்சி, கூடியவரையில் மற்றவர்களோடு கலக்கா வகையில் அமைதியாகச் சென்றது.

என் பெரியம்மாவுக்கு ஒரு குழந்தையும் பிறக்கவில்லை. அவரும் பெரியப்பாவும்தாம் அவ்வீட்டில். இரண்டு வீடும் பக்கத்துப் பக்கத்து வீடுகள். என் பாட்டனாரும் பெரிய பாட்டனாரும் தனியாகப் பங்கிட்டுக்கொண்டு இருந்தார்களாம். பிறகு பெரிய பாட்டனாருக்குக் குழந்தைகள் இல்லையாதலால் சிலவற்றைக் கோயிலுக்கு எழுதி வைத்து விட்டு, மிகுந்த நிலபுலன்களையும் அந்த வீட்டையும் தம்பிக்கே கொடுத்துவிட்டு இறந்தாராம். இன்றும் என் பெரியம்மாவும் அம்மாவும் பாகம் பிரித்துக்கொண்டார்கள். பெரியம்மாவுக்குக் குழந்தைகள் இல்லை. எனவே மறுபடியும் இரண்டும் ஒன்று சேரப்போகிறது என்று ஊரில் உள்ளவர்கள் பேசிக்கொண்டார்கள். ஆகவே எங்கள் பெரியப்பா அப்பேச்சுக்களை முறியடிக்கவேண்டும் என நினைத்தார். மறுமணம் செய்துகொண்டு எப்படியாவது குழந்தைகளைப் பெற்று அந்தச் 'சொத்து'க்கு உரியவர்களாக்க வேண்டும் என முடிவு செய்தார். ஊரில் பல 'நல்லவர்'களும் அவருக்குத் துணையாக இருந்தார்கள் என்பர். என் பாட்டனார் எழுத்திலும் அவரவர் விருப்பம்போல் சொத்தைச் செலவிடலாம் என இருந்தது. என்றாலும் சொத்துக்கள் அனைத்தும் என் பெரியம்மா பேரில் இருந்த தால் அவர் வற்புறுத்தவில்லை. இப்படிப் பக்கத்து வீட்டில் வாழ்ந்த இரு உடன் பிறந்த தாயர்களும் வாழ்ந்து வந்தார்கள். எனினும் அவர்கள் மனம் வேறுபட்டே வாழ்ந்து வந்தார்கள். முன் பாகப் பிரிவினையில் அவர்கள் கொண்ட வேறுபாட்டை ஊரிலுள்ளவர்கள் மேலும்

வளர்த்துவிட்டார்கள் என்பர். எனவே உடன்பிறந்த சகோதரிகள் இருவரும் மிகக் கொடிய விரோதிகளாக மாறி விட்டார்கள். என்றாலும் என் பெரியம்மா மாத்திரம் என்னைக் கண்டால் அன்பாகக் கூப்பிடுவார்கள்.

என் அம்மா என்னைத் திட்டமாக அந்த வீட்டுப் பக்கம் கால் எடுத்து வைக்கக்கூடாது என்று கட்டளை இட்டிருந் தார்கள். ஆகவே நான் அந்தப்பக்கம் திரும்பினதுகூடக் கிடையாது. அப்படித் திரும்பிப் பார்த்தாலும் உடனே யாராவது அம்மாவிடம் வந்து 'கோள்' சொல்லி விடுவார்கள். அன்று முழுவதும் நான் உதை வாங்க வேண்டியவன்தான். ஆகவே மிகவும் பயந்துபயந்து நான் நடந்துவந்தேன். நான் ஒரே பிள்ளை ஆனாலும் அம்மா என்னை அடித்து வளர்க்க அஞ்சமாட்டார்கள்.

ஒருநாள் நான் தெருவோடு வந்துகொண்டிருந்தேன். பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டிற்குத் திரும்பிய நான் தெருவில் பெரியம்மா நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன். பக்கத்தில் எதிர்வீட்டுப் பாட்டியும் உடன் நின்றுகொண்டிருந்தார்கள். பெரியம்மா என்னை 'வாடா கண்ணே!' என்று கூப்பிட்டார் கள். நான் பயந்து ஓடத்தொடங்கினேன். அந்தப் பாட்டி என்னை நிறுத்தி 'அப்பா! பயப்படாதே. உன் பெரியம்மா உன்னிடம் எவ்வளவு அன்பாய் இருக்கிறார்கள். வா! உன்னைக் கட்டித்தழுவி முத்தமிட ஆசையாய்க் கூப்பிடு கிறார்களே' என்றாள். நான் மெதுவாக 'அம்மா' என்றேன். 'எல்லாம் அம்மாவுக்குத் தெரியாது; வா' என்று கையைப் பிடித்து இழுத்தார்கள். பெரியம்மா என்னைக் கட்டித்தழுவி முத்தமிட்டார்கள்; கண்ணீர் விட்டார்கள். 'பாவி குழந்தை யைக்கூட வரவேண்டாம் என்கிறாளே' என்றார்கள். உண்மையில் அவர்கள் அழுவதைக் கண்டு அம்மா செய்தது தவறோ என்று கூட அன்று அந்த இளம் உள்ளம் எண்ணிற்று. எனினும் அதை எல்லாம் எண்ணி நிற்க

நேரமில்லை. நான் வாய்திறந்து ஒன்றும் பேசவும் இல்லை. பெரியம்மா என் கையில் ஒரு சிறிய பொட்டலம் ஒன்றைக் கொடுத்தார்கள், நான் வாங்க மறுத்தேன். 'மிட்டாய்' என்றும் 'பள்ளிக்கூடம் சென்றதும் சாப்பிடு' என்றும் சொன்னார்கள். நான் அதைப் பத்திரமாக துணியில் முடிந்து கொண்டு ஓடினேன். வீட்டில் பகல் உணவு கொண்டு மறுபடியும் பள்ளிக்கூடம் புறப்பட்டுவிட்டேன்.

பள்ளிக்கூடத்தில் பெரியம்மா கொடுத்த பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தேன். சில மிட்டாய்கள் இருந்தன. தின்றேன்; பக்கத்தில் உள்ள பிள்ளைகளுக்கும் கொடுத்தேன். ஆனால் அவ்வாறு கொடுத்ததால் பின்னால் பெருந் துன்பம் வரும் என்று தெரிந்திருந்தால் தனியாக ஒரு மரத்தடியில் அத்தனையும் தின்றுவிட்டு வந்திருப்பேன். எங்கள் தெரு நண்பர் சிலருக்கும் மிட்டாய் கொடுத்தேன். மிட்டாய் இனிப்பாய் இருந்தது. ஆனால் அன்று மாலை... எங்கள் தெரு நண்பன் ஒருவன் நேராக என் வீட்டிற்குச் சென்று அம்மாவிடம் 'இன்று சிவானந்தம் பள்ளிக்கூடத்திற்கு மிட்டாய் கொண்டு வந்தான்; யாவருக்கும் கொடுத்தான்' என்று சொல்லிவிட்டுப் போனான். அதற்காகத்தான் அவன் முன்னே ஓடிவிட்டான் என்பது பிறகு தெரிந்தது. நான் வீட்டிற்குச் சென்றதும் அம்மா என்னைக் கையில் கொம்புடன் வரவேற்றார்கள். ஆயர்பாடிக் கண்ணனை அதட்டுவதுபோல யசோதை கையில் கொம்புடன் நிற்பதாகப் படம் போட்டிருக்கும் 'காலண்டர்'களைப் பின்னால் பார்த்திருக்கிறேன், அதில் கண்ணன் பயப்படுவது போலப் பாசாங்கு செய்கிறார். நானோ உண்மையாகவே பயப்பட்டேன். என்னைப் பற்றி ஈர்த்து, 'மிட்டாய் ஏது?' என்றார்கள். நான் 'எனக்கு மிட்டாயைப் பற்றி ஒன்றும் தெரியாது' என்று பொய் சொல்லி வைத்தேன். ஆனால் அவர்கள் விடுபவர்களல்லர். வெளியார் யாராயிருந்தாலும்கூடப் பன்னிப்

பன்னி மடக்கி மடக்கிக் கேள்விகள் கேட்டு எப்படியும் உண்மையான பதிலை அவர்கள் வரவழைத்து விடுவார்கள்; ஆகவே நான் தப்புவது எப்படி?

'பொய் சொல்லாதே' என்று சொல்லிக் கொம்பால் ஒரு அடி கொடுத்தார்கள் என்றாலும் நான் உண்மையைச் சொல்லவில்லை. அம்மாவின் கோபம் உச்ச நிலைக்குச் சென்றது. அடிமேல் அடி விழுந்தது. அருகிலிருந்த பாட்டியோ 'ஐயோ' ஏனடி குழந்தையைக் கொல்லுகிறாய்?' என்று கூச்சலிட்டுக் கொண்டே இருந்தார்கள். ஆனாலும் தாயார் விடுவதாக இல்லை. கடைசியில் அந்தக் கொடுமைக்கு ஆற்றாது மிட்டாய் வந்த வழியைச் சொல்லி விட்டேன். 'பாவி! அதை ஏன் வாங்கினாய்? விஷமிட்டாளோ என்னமோ' என்று வைது மேலும் இரண்டடி கொடுத்தார்கள். பின் அவர்கள் கோபம் பெரியம்மா பேரில் திரும்பியது. தெருமுன் சென்று பலவாறு பழித்துப் பேசினார்கள். 'ஆடு பகை குட்டி உறவோ' என்றெல்லாம் கூறினார்கள். அந்த எதிர் வீட்டுப் பாட்டி வந்து தானே அழைத்ததாகச் சொல்லிச் சமாதானம் செய்தும் கேட்கவில்லை.

என் தாயார் இந்த வகையில் கண்டிப்பாக இருப்பதற்குக் காரணங்கள் காட்டுவார்கள். இரவு என்னைச் சாப்பிடச் சொன்னார்கள். நான் உடம்பெல்லாம் வலிக்கிறது என்றும் சாப்பாடு வேண்டாம் என்றும் அழுதேன். அடித்த கை அணைத்தது. "எல்லாம் உன் நன்மைக்குத்தானே செய்கிறேன்; எனக்கு வேறு யாராவது இருக்கிறார்களா? 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்.' ஆமாம் மனத்திலே வஞ்சகம் வைத்து மேலுக்கு உறவாடுபவர் யாராயினும் நம்பக்கூடாது. நன்றாகத் தெரிந்துகொள். உள்ளத்தில் பகை வைத்து உறவாடுகிற கொடியவர்களைக் காட்டிலும் நேருக்கு நேர் நிற்கும்

கொலைகார விரோதி எவ்வளவோ மேல். அன்று பங்கிடும் போது உனக்குப் பால் கொடுத்த வெள்ளி மூக்குச்செம்பைப் பையனுக்குத் தனியாகக் கொடுத்துவிடலாம் என்று பஞ்சாயத்துக்காரர் கூறியதை மறுத்து அவள் வாதாடி அதையும் பங்கிடும் பொருளில் வைத்தாளே! அன்றில்லாத கரிசனம் இப்போது எப்படி மிட்டாயில் வந்தது? கண்ணே! அழாதே! யாரிடமும் மனமறியாது பழகக் கூடாது'' என்று சொல்லிக் கொண்டே கையால் அள்ளிச் சோற்றை ஊட்டினார்கள். என் அன்பான பாட்டி தூணில் சாய்ந்து உட்கார்ந்தபடியே இந்தக் காட்சியைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார்.

'தொழுத'கையுள்ளும் படை ஒடுங்கும், ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து' என்ற வள்ளுவர் குறள் எனக்கு அன்று தெரியாது. என்றாலும் மதியாதார் முற்றம் மதித்து மிதிக்கலாகாது என்பதும் ஒரு முறை மாறுபட்டாரோடு மறுபடியும் கூடிக் குலாவுதல் தவறு என்பதும் மட்டும் எனக்கு நன்றாகப் புரிந்துவிட்டன. அவற்றை இன்னும் நான் வாழ்வில் கொண்டுள்ளமையினால் சிற்சில வேளைகளில் பல சங்கடங்களுக்கு உள்ளாக நேரிடுகிறது. என்றாலும் அன்னை சொன்ன சொற்கள் அத்தனையும் உண்மைதானே!

என் பெரியம்மாவை அவ்வாறு பிரித்துப் பார்க்கவும் என் மனம் இடம் தரவில்லை. அம்மாவோடு மாறுபட்டார்களாயினும் என்னிடம் அன்பாகவே இருந்தார்கள். ஊரார் கூறியபடி கடைசியில் அவர்கள் இறக்கும் காலத்திலே எல்லாச் செல்வங்களையும் எனக்கே வைத்துச் சென்றார்கள். அவர்களையும் வாழ்த்தி வணங்காதிருக்க முடியுமோ!

# 10. கன்னம் வீங்கிற்று

அங்கம்பாக்கத்தில் ஐந்தாவது வரை படித்து முடித்து விட்டேன். பின்னர் வாலாஜாபாத்துக்குத்தான் படிக்கச் செல்ல வேண்டும். அங்கு அப்போது இரண்டு மூன்று உயர்தர ஆரம்பப்பள்ளிகள் இருந்தன. கிறித்தவப் பள்ளி ஒன்று இருந்தது. அதில்தான் சேர்தல் வேண்டுமென்று சிலர் சொன்னார்கள். என் தந்தையார் அப்போது வீட்டில் இல்லை. அன்னையாரோடு மாறுபட்டு வேறு எங்கோ சென்று வாழ்ந்திருந்தனர். ஆகவே என்னைப் பள்ளிக்கூடம் அழைத்துச் சென்று சேர்க்கப் பெரியவர்கள் ஒருவருமில்லை. என் பெரியப்பாவும் பெரியம்மாவும் பேசுவதுகூட இல்லை. ஊரில் யாரையோ பிடித்துக்கொண்டு சென்று வாலாஜா பாத்தில் கிறித்தவர் பள்ளியில் பணம் கட்டிச் சேர்ந்து விட்டேன்.

பள்ளியில் சேர்ந்த மறுநாள் நான் தெருவில் மற்ற நண்பர்களுடன் பேசிக்கொண்டு இருந்தேன். மாலை ஆறு மணி இருக்கும். இருட்டும் வேளை. தாடியுடன் ஒரு பெரியவர் தெருவில் வந்தார். கூடவே இரண்டு மூன்று பேர் இருந்தார்கள். என் அருகில் வந்ததும் அப்படியே என்னைச் சேர்த்து அணைத்துக்கொண்டார் அவர். பிறகு 'வா வீட்டுக்குப் போகலாம்' என்றார். எனக்கு ஒன்றும் புரிய வில்லை. என்றாலும் அவருடனும் மற்றவர்களுடனும் வீட்டிற்குச் சென்றேன். அம்மாவும் பாட்டியும் இருந்தார் கள். அவர்களுடன் வந்த பெரியவர் பேசினார். இறுதியில் அவர் பெயர் மாசிலாமணி முதலியார் என்றும், அவர்தான் வாலாஜாபாத்தில் இந்துமத பாடசாலையை நடத்து கின்றவர் என்றும் என்னை அவர் பள்ளிக்கூடத்தில் சேருமாறு அழைக்கவே வந்தார் என்றும், நான் முன்னமே வேறு பள்ளியில் சேர்ந்து விட்டிருந்தாலும் தாங்கள் தம் பள்ளியில் எடுத்துக் கொள்வதாகக் கூறி அன்னையிடம்

இசைவு பெற்றார்கள் என்றும் அதன்படி மறுநாள் நான் அவர்கள் பள்ளிக்கூடத்திற்கே செல்ல வேண்டுமென்பதாக முடிவு செய்யப்பட்டதென்றும் அறிந்தேன். அவர் போகும் போது என்னைக் கட்டி அணைத்து முதுகில் தட்டிக் கொடுத்துச் சென்றார். இன்றும் அந்தக் காட்சி என் கண் முன் நிற்கின்றது. தந்தையின் அன்புப் பரிவை நன்றாக அறியாத எனக்கு அவர் பரிவு நல்ல உணர்வூட்டியது. ஆம்! தொடர்ந்து அவர் 'வாலாஜாபாத் அப்பா'வாகப் பலபேருக்கு வேண்டுவன உதவி அப்பள்ளியை நன்கு நடத்தி வந்தார்.

மறுநாள் முதல் நான் இந்துமத பாடசாலை மாணவன் ஆனேன். அந்தப் பள்ளியில் உயர் வகுப்புகளில் அதிக மாண வர்கள் இல்லை. கிறித்தவப் பள்ளியில்தான் உயர்ந்த வகுப்புகளில் பல மாணவர்கள் படித்து வந்தனர். இந்தப் பள்ளியில் மேல் வகுப்புகள் ஒவ்வொன்றிலும் சுமார் பத்து மாணவர்களே இருந்தார்கள். என்றாலும் இங்குக் கீழ் வகுப்புகளில் நிறைய மாணவர்கள் படித்து வந்தனர். இன்று பள்ளிக்கூடத்தில் இடமில்லை என்று சொல்லி மாணவர்களை வெளியேற்றும் காட்சியை ஆண்டுதோறும் கண்களில் காண் கிறோம். ஆனால் அன்று அந்த நிலை இல்லை. இத்துணைப் பெரும் அளவில் பள்ளிகள் அன்று வளர்ச்சி அடையவில்லை என்றாலும், இருந்த சில பள்ளிக் கூடங்களிலும் போதிய மாணவர் தொகை இல்லாதிருந்தது. எனவே இந்துமத பாட சாலை முதல்வரும் ஆசிரியர்களும் ஆண்டுதோறும் பள்ளித் தொடக்க நாட்களில் சுற்றுப்புறக் கிராமங்களுக்குச் சென்று, பிள்ளைகளைத் தமது பள்ளிக்கு வருமாறு அழைத்து வருவார் களாம். அதே முறையில்தான் நான் அழைத்து வரப்பெற்று அந்த இந்துமத பாடசாலையில் மூன்று ஆண்டுகள் கல்வி பயின்றேன். பயின்ற அந்த ஆண்டுகள் மூன்றில் நான் பெற்ற அனுபவங்கள் பல, ஒரு சில இன்றும் உள்ளத்தைவிட்டு நீங்காமல் இருக்கின்றன. அவற்றுள் ஒன்றைக் காணலாம்.

நான் ஆறாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த நாட்களில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று இன்று நினைவுக்கு வருகிறது. ஆங்கிலத்துக்கு ஒருவர், கணக்குக்கு ஒருவர், பிற பாடங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொருவர் என்று இப்படிப் பல ஆசிரியர்கள் எனக்குப் பாடம் சொல்ல வருவார்கள். ஓவிய ஆசிரியரும் ஒருவர் வருவார். அவர் வயதில் இளையவர். எட்டாம் வகுப்பு வரை படித்துவிட்டு அப்பொழுதுதான் ஓவியம் கற்றுத்தரவும் தேர்ச்சி பெற்று அந்தத் துறைக்கு ஆசிரியராக வந்தவர். அவர் இளமை முடுக்கோடு இருந்தமையால் பிள்ளைகளை அதட்டிக் கொண்டே இருந்தார். அந்தப் பள்ளியில் அக்காலத்தில் ஒரே திறந்த வெளிமண்டபத்தில் மூன்று வகுப்புகள் இருக்கும். இவர் போடும் சத்தத்தால் பக்கத்தில் உள்ள ஆசிரியர்களால்கூடச் சில சமயங்களில் பாடம் நடத்த முடியாமல் போய்விடும். என்றாலும் அவர் புது மிடுக்கோடு படங்கள் போட்டுக் கொண்டே இருந்தார்.

ஒரு நாள் அவரிடம் நான் அகப்பட்டுக் கொண்டேன். எனக்கு 'டிராயிங்' என்றால் தெரியவே தெரியாது. பூனை போடச் சொன்னால் கோடுதான் போடுவேன். பாவம்! அவர் என்ன செய்வார்? சொல்லிச் சொல்லிக் கொடுப்பார்; கரும் பலகையில் போட்டுப் போட்டுக் காண்பிப்பார். என்னிடம் வந்து பலமுறையும் சொன்னார் என்று தான் நினைக்கிறேன். எனினும் எனக்கு அதுபற்றி ஒன்றும் புரியவில்லை. பகல் மூன்றாவது பகுதி வகுப்பு; மணி பதினொன்று ஆகியிருந்தது. அவருக்கு, இளமையின் முடுக்குக் கிடையில் நான் சொன்னபடி செய்யாததும் கோபத்தை கிளரிவிட்டிருக்கும். என்னை அழைத்தார்; நான் நடுங்கிக் கொண்டே அருகில் சென்றேன். என் கையில் இருந்த 'டிராயிங் நோட்டை'ப் பற்றி இழுத்துத் தூர வீசி எறிந்தார். அது அடுத்த வகுப்பில் போய் விழுந்தது. எல்லா வகுப்பு மாணவர்களும் திகைத்தார்கள். திடீரென்று ஒரு சத்தம் கேட்டது. யாவருக்கும்

ஒன்றும் புரியவில்லை. அந்தச் சத்தம் என்னவென்று கேட்கிறீர்களா? வேறொன்றுமில்லை. அவர் ஓங்கி என் கன்னத்தில் அடித்த அடியின் எதிரொலிதான் அது. அனைவரும் திகைக்க, நான் அப்படியே என் கன்னத்தைப் பிடித்துக் கொண்டேன்; அழுகை வந்தது: தேம்பித் தேம்பி அழுதேன். ஆனால் அவர் கோபம் தணிந்தவராகக் காணோம். வகுப்பில் அழவேண்டாம் என எச்சரித்தார். எனக்கு அவர் சொல்வது ஒன்றுமே புரியவில்லை. அழுவதைத் தவிர வேறொன்றும் முடியவில்லை. அந்த வேளையில் அவர் என்னைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினார். நான் அழுது கொண்டே வாயில்படியில் நின்றிருந்தேன். என்றாலும் என் நிலை என்னிடம் இல்லை என உணர்ந்தேன். எத்தனை நேரம் நின்றிருந்தேனோ, எனக்கே இன்றும் புரியவில்லை. மணி ஒலி கேட்டது. வகுப்பு விடும் சமயம். போகும் எல்லா வகுப்பு ஆசிரியர்களும் என்னிடம் இரக்கம் காட்டுவது போன்று பார்த்துக் கொண்டே சென்றார்கள். எப்படியோ அந்த இளமையிலும் அவமானம் என்னை வந்து பற்றிக் கொண்டது. அந்த வெய்யில் வேளையில் வகுப்பறைக்குச் சென்று என் பாடப் புத்தகங்களையும் எடுத்துக் கொள்ளாமல் நேரே வீட்டுக்குப் புறப்பட்டு விட்டேன்.

நல்ல வெய்யில் வேளை. பகல் ஒரு மணி. நான் வீங்கிய கன்னத்தோடு வீடு வந்து சேர்ந்தேன். என்னை அந்த வேளையில் அன்னையும் பாட்டியும் எதிர்பார்க்கவில்லை. என் முகம் கலங்கி இருந்தது. கன்னம் வீங்கி இருந்தது. இருவரும் 'என்ன, என்ன?' என்று கேட்டார்கள். நான் ஒன்றும் சொல்லவில்லை. 'ஓ' என்று கதறினேன். என் தாயார் என்னை நையப்புடைத்து நல்வழியில் திருத்த முயல்பவர்கள் தாம். ஆயினும் மற்றொருவர், ஆசிரியர் ஆயினும் என்னை அடித்தால் பொறுக்கமாட்டார்கள். என் முகத்தைத் துடைத்து, அழைத்துச் சென்று உணவு ஊட்டினார்கள். அப்படியே உண்டு உறங்கிவிட்டேன்.

மாலை ஐந்து மணிக்குக் கண்விழித்தேன். எதிரில் என் வகுப்பில் படிக்கும் தங்கவேலு என்ற எங்கள் ஊர் மாணவன் நின்று கொண்டிருந்தான். பக்கலில் அம்மா பரிவோடு அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். தங்கவேலு பள்ளியில் நடந்த எல்லாக் கதையையும் சொல்லிவிட்டு, நான் எடுத்து வராது விட்டிருந்த நூல்களையும் கொண்டு வந்து கொடுத்தான். எல்லாவற்றையும் கேட்டறிந்த தாயாருக்கு அந்த ஆசிரியர் மீது கோபம் வந்தது. எதிரில் இருந்திருந்தால் இரண்டு அடிகூடக் கொடுத்திருப்பார்கள். அப்போதும் வீங்கி இருந்த என் கன்னத்தைக் கையால் தடவினார்கள். அவர்தம் கண்கள் நீரைச் சொரிந்தன.

'படிப்பு' இல்லாவிட்டாலும் கவலையில்லை. இனி நீ பள்ளிக்கூடம் போய் இப்படி அடிபட வேண்டாம்' என்று சொல்லி, தங்கவேலுவிடம் நாளையிலிருந்து நான் பள்ளிக் கூடம் வரமாட்டேன் என்பதையும் கூறி அனுப்பி விட்டார்கள். நான் செய்வதறியாது திகைத்தேன். என்றாலும் என் அம்மா சொன்னதை யாராலும் மாற்ற முடியாது. ஆதலால் மறுநாளில் இருந்து பள்ளிக்கூடம் கிடையாது என்பதை உறுதி செய்து கொண்டேன்.

நான்கைந்து நாட்கள் ஓடிவிட்டன. ஒருநாள் மாலை அதே தாடிப் பெரியவர், அடித்த ஆசிரியரும் வேறு இரண்டொருவரும் கூடவர என் வீட்டிற்கு வந்தார். வந்து என்னை அழைத்தார். நான் உள்ளே ஒளிந்து கொண்டேன். அவர் அங்கும் வந்து என்னை இழுத்து அணைத்துக் கொண்டார். நான் ஓவென்று அழுதே விட்டேன். அவர் என் கண்ணைத் துடைத்துத் தேற்றினார். அம்மா ஏதோ சொல்ல ஆரம்பித்தார்கள். அருகிலிருந்த பாட்டி அம்மாவைப் பேசவேண்டாம் என்று அமர்த்தினார்கள். அம்மா பேச ஆரம்பித்தால் ஏதாவது அதிகமாகப் பேசி அவர்கள் மனத்தைப் புண்படுத்தி விடுவார்களோ என அஞ்சினார்கள். அதையெல்லாம் அறிந்த

பெரியார் அவர்கள் தாமே பேச ஆரம்பித்தார்கள். 'அம்மா! எல்லாம் எனக்குத் தெரியும். பரமசிவம் நல்ல பிள்ளை. இதோ இந்த வாத்தியார் தான் தெரியாது அடித்து விட்டார். அவரும் இளையவர்; என் தம்பிதான்; ஏதோ எப்படியோ நடந்துவிட்டது. கன்னம் வீங்கியதை அறிந்தேன்' என்றார். அப்போது அவர் கை என் கன்னத்தைத் தடவிக் கொடுத்தது. 'இனிமேல் ஒன்றும் நடக்காது. நான் பார்த்துக் கொள்ளு கிறேன். நாளை பரமசிவத்தை அனுப்புங்கள்' என்றார். ஆம்! அவர் அன்றும் இன்றும் அன்புகுழையப் 'பரமசிவம்' என்று தான் அழைப்பார். நான் அம்மா என்ன சொல்வார்களோ என்று அவர்கள் முகம் நோக்கிக் கொண்டிருந்தேன். அவர்கள் முடிவை மாற்ற முடியாதே! என்றாலும் தன் மகன் படிக்க வேண்டும் என்று ஆசை இராதா? ஆழ்ந்த யோசனையில் இருந்தார்கள். அமைதி நிலவியது. பாட்டி அமைதியைக் கலைத்தார்கள்! 'ஏன், சும்மா இருக்கிறாய். நாளை அனுப்பு வதாகச் சொல்' என்றார்கள். அம்மாவும் 'நாளை அனுப்பு கிறேன்' என்றார்கள். அவர்கள் சென்றுவிட்டார்கள். தொடர்ந்து நானும் பள்ளி சென்றேன். பிறகு அந்த ஆசிரி யரிடமும் முறையாகப் பயின்றேன். அன்று முதலியார் அவர்கள் தாமே வலிய வந்து என்னை அழைத்துப் பள்ளியில் சேர்த்திருக்காவிட்டால் நான் எப்படி இருப்பேனோ! 'தானே வந்தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும், வான்வார் கழல்' என்ற மணி மொழியார் ஆண்டவனை நோக்கிப் பாடிய அடி இதோ என் உள்ளத்தில் ஊசலாடுகிறது. அந்த உணர்ச்சியோடு அன்று நடந்த மாற்றத்தால் இன்று நான் பெற்ற பயனை எண்ணி நிற்கின்றேன்.

# 11. நிலப் போட்டி

'ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண் டாட்டம்' என்பது பழமொழி. 'வீடு இரண்டு பட்டால் ஊரா ருக்குக் கொண்டாட்டம்' என்பது இளமையில் நான் கற்ற புதுமொழி. எங்கள் வீட்டில் என் தாயாரும் பெரியம்மாவும் வேறுபட்டதே ஊரில் சிலருக்குக் கொண்டாட்டமாக அமைந்தது. எங்கள் ஊரின் பக்கத்தில் இருப்பது நெய்க்குப்பம் என்ற சிறிய கிராமம். அது பிராமணர்களுக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன் பிரம்ம தேயமாகக் கொடுத்த ஊர் போலும். எனவே அது 'சுரோத்திரியம்' என்ற பெயரால் வழங்கப்பெற்று வந்தது. சில ஆண்டுகளுக்கு முன் அதில் வாழ்ந்த அந்தணர் பலர் தத்தம் நிலத்தை விற்றுவிட்டார்கள். எங்களூரில் சிலர் அவற்றை வாங்கிக் கொண்டார்கள். என் பாட்டனாரும் அதில் ஒரு பங்கு பெற்றார். நான் இளை யவனாயிருந்த பொழுது அந்நிலத்தை என் தாயாரும் பெரியம் மாவும் பங்கிட்டுக் கொண்டு அனுபவித்து வந்தார்கள். நான் வாலாஜாபாத்தில் படித்துக் கொண்டிருந்தபொழுது அந்த ஊரில் மற்றொரு நிலப்பகுதி விலைக்கு வந்தது. அதில் உண்டான போட்டியை நினைத்தாலும் நெஞ்சம் துண்ணென் கின்றது.

எனது வீட்டில் சற்று மாறுதல் காணப்பட்டது. எங்களை யெல்லாம் விட்டு வேறு எங்கேயோ சென்றிருந்த தந்தையார் அப்போது மறுபடியும் வீட்டில் வந்து இருந்தார். அவர் வீட்டில் இருந்த நாளிலெல்லாம் எனக்கு வேண்டிய பாடங் களைக் கற்றுக் கொடுப்பார். என் தாயாருடன் மாறுபட்டிருந்த பெரியம்மாவும் இப்போது பேசிக் கொண்டி ருந்தார்கள். அவர்கள் எங்கள் வீட்டுக்கு வருவார்கள் என்றாலும் அம்மா அவர்கள் வீட்டுக்குச் செல்வதில்லை என நினைக்கிறேன். இப்படி ஒரு சிறு நல்ல மாறுதல் குடும்பத்தில் ஏற்பட்ட காலத்தில்தான் அந்த நிலப் போட்டிச் சண்டை உண்டாயிற்று.

ஒரு பெரியவர் தம் மகனுக்கு நிரம்பப் பொருள் வருவாய்க்குத் தக்க வழியில் அதிக நிலங்களை வைத்து விட்டுச் சென்றார். எங்கள் ஊரில் அவரே பெரிய பணக் காரர் என்னுமாறு அவர் வாழ்ந்து வந்தார். தந்தை இறக்கும் காலத்தில் அவர் கடன் இல்லாமல் இருந்தார். எனினும் 'தையலார் மையலிலே தாழ்ந்து விழ' நேர்ந்த காரணத்தால் அவர் கடன்காரராக வேண்டி இருந்தது. நிலங்களையும் வீடு முதலியவற்றையும் விற்றார். அந்த நிலத்தில் ஒரு பகுதி நெய்க்குப்பத்தில் இருந்தது. அதை முன்னமே சென்னையில் யாருக்கோ அடைமானமாகப் போட்டிருந்தார். அந்த நிலம் விற்பனையாகப் போகிறது என்று என் அன்னையிடம் வந்து யாரோ சொன்னார்கள். அப்போது அப்பா வீட்டில் இருந்த படியால் எப்படியாவது அதை வாங்கிவிட வேண்டும் என்று முயன்றார். அம்மாவும் அதற்குச் சம்மதித்தார்கள். பாட்டி மட்டும் அதற்கு விரைவில் இடங்கொடுக்கவில்லை. 'உள்ளது போதாதா? ஏன் இப்படி மேலும் மேலும் நிலத்தை வாங்கு கிறீர்கள்? பயிரிடவோ முடியாது. இந்நிலையில் வாங்கித்தான் என்ன செய்யப் போகிறோம்? வேண்டாம்' என்றார்கள். எனினும் அதுபற்றிப் பேச வந்திருந்த பெரியவர் அது நல்ல நிலம் என்றும், எப்படியும் வாங்கிவிட வேண்டும் என்றும் சொன்னார். அப்போது அம்மாவிடம் பணம் ஒன்றும் இல்லை. ஆனால் வந்தவர் சொன்ன சொல் உணர்ச்சி யூட்டியது. நிலம் அடைமானத்தில் உள்ளதென்றும், அந்த அடைமானப் பணத்தை அடுத்த ஆண்டுக் கொடுத்து விடலாம் என்றும், எனவே மேலுள்ள சிறு தொகையும் பத்திரச் செலவும் இருந்தால் போதும் என்றும் சொன்னார் அவர். அம்மாவும் 'சரிதான்' என்றார்கள். விலை ரூபாய் நாலாயிரம் என்று முடிவாயிற்று. இரண்டு நாள் கழித்து வெளியூர் சென்றிருந்த நிலக்காரர் வந்ததும் பத்திரம் எழுத வேண்டும் என்று தீர்மானித்தார்கள். மேல் தருவதற்கும்

செலவுக்கும் குறைந்தது ரூபாய் ஆயிரமாவது வேண்டும். அம்மாவிடம் பணம் இல்லை. என்ன செய்வது என்று சிந்தித்துக் கொண்டே இருந்தார்கள்.

அன்று மாலை பெரியம்மா எங்கள் வீட்டிற்கு வந்திருந் தார். அவர்கள் அம்மாவிடம் ஏதோதோ பேசினார்கள். நானும் அவர்கள் பேசும்போதெல்லாம் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு வேடிக்கை பார்ப்பது வழக்கம். அன்றும் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அம்மா தான் நிலம் முடித்து இருப்பதையும், அதற்குத் தன்னிடம் பணம் இல்லை என்ப தையும் கூறிப் பெரியம்மாவிடம் ஆயிரம் ரூபாய் கடனாகக் கேட்டார்கள். அவர்களும் 'சரி பார்க்கலாம்' என்று சொல்லி விட்டு, வேறு ஏதோதோ பேசிக் கொண்டிருந்து பின்பு சென்று விட்டார்கள்.

இரண்டு நாள் கழித்து நிலம் பேசிய 'தரகர்' வீட்டுக்கு வந்தார். 'நாளை மறுநாளில் நிலம் முடியும்' என்ற எண் ணத்தில் அம்மா 'என்றைக்கு ரிஜிஸ்டர் ஆபீசுக்குப் போக வேண்டும்' என்று கேட்டார்கள். கொஞ்சம் பணம் குறை கிறது என்றும் அதைச் சரிக்கட்ட 'அக்கா' தருவார்கள் என்றும் கூறினர். அவர் நகைத்தார். 'என்ன சிரிக்கிறீர்கள்?' என்று அம்மா கேட்டார்கள். அவர் அமைதியோடு பதில் சொன்னார். 'அக்கா உனக்குப் பணம் கொடுக்கப் போவ தில்லை. பூரா்த் தொகையுமே அவர் கொடுத்து வாங்கிக் கொள்ளப் போகிறார். நேற்று அவர்கள் என்னை அழைத்து அந்த நிலத்தை நாலாயிரத்து இருநூறு ரூபாய்க்கு முடித்து உடனே பத்திரம் எழுதுமாறும் சொன்னார்கள். அதைச் சொல்லவே நான் இப்போது வந்தேன்' என்றார். அப்பா அம்மா அனைவருக்குமே அச் சொற்கள் வியப்பைத் தந்தன என்னலாம். 'என்ன! எனக்கு ரூபாய் வேண்டுமென்றும் நிலம் வாங்கப் போவதாகவும் சொன்னேன். அதற்குள்

இப்படி மாறி விட்டார்களா?' என்று அவர்களுக்கு இயல்பான முறையில் பலப்பல வார்த்தைகளைக் கொட்டிப் பேசினார் கள். உடனே ஆவேசம் வந்தவர் போல் 'அது என்ன வானாலும் சரி, நிலத்தை விடாதீர்கள். நமக்கே முடியுங்கள் நாலாயிரத்து நானூறுக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்றார் என் அன்னையார். ஆனால் அருகிலிருந்த பாட்டியார் மட்டும் பார்த்துக் கொண்டு இருந்து 'வள்ளிம்மா! விட்டுத் தள்ளு! இந்த நிலம் வந்து நமக்கு ஆகப் போவது ஒன்றுமில்லை. மீனாட்சிதான் வாங்கிக் கொள்ளட்டுமே' என்றார்கள். ஆம். முதலிலேயே சொல்ல மறந்து விட்டேன், என் தாயார் பெயர் வள்ளியம்மை, பெரியம்மா பெயர் மீனாட்சி அம்மாள். பாட்டி சொன்னதை அம்மா காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. வந்தவரிடம் நாலாயிரத்து நானூறுக்கு முடியுங்கள் என்று திட்டமாகச் சொல்லி விட்டார். அவரும் சிரித்துக் கொண்டே சென்று விட்டார். அந்த விலை உயர்வில் அவருக்கும் பங்கு உண்டு என்ற உண்மை நெடுநாட் களுக்குப் பிறகுதான் தெரிந்தது. நிலம் கொடுப்பவரும் உடன் பிறந்தவர் போட்டியில் தாம் நிறையப் பொருள் பெறலாம் என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

நான்கு நாட்கள் சென்றன. இதற்கிடையில் என் தாயாருக்கும் பெரியம்மாவுக்கும் இருந்த பேச்சு உறவு மறு படியும் முறிந்தது; வேறுபாடு அதிகமாயிற்று. ஒருவரை ஒருவர் பழித்துரைத்தார்கள். என்றாலும் தெருவில் உள்ள வர்கள் சமாதானம் செய்வதை விடுத்து வேடிக்கைப் பார்த் தார்கள். இருவரிடமும் சென்று என்ன வந்தாலும் நிலத்தை விடவேண்டாம் என்றும் சிலர் உபதேசம் செய்தார்கள். ஒரு சிலர் என் தாயாரிடம் வந்து பேசும் பரிவினைக்கண்டு நான் கூடக் கசிந்ததுண்டு. ஆனால் அடுத்த சில ஆண்டுகளுக் குள்ளேயே அவர்களே பெரியம்மாவிடமும் அதேபோல் பரிவுடன் பேசினார்கள் என்பதை அறிந்த பிறகு, உடன்

பிறந்த பெண்கள் இருவரை இப்படித் தட்டிக்கொடுத்துக் குடும்பத்தை நாசமாக்கும் சதிக்கூட்டம் என்றாவது உருப்படுமா என என் இளமை நெஞ்சம் எண்ணியது உண்டு. ஆம், அந்தப் பகை மூட்டிய குடும்பங்கள் இன்று முன்னை விடத் தாழ்ந்தே நிலை கெட்டு நிற்கின்றன.

நான்காம் நாள் அந்த நிலத்தரகர் மறுபடியும் வந்தார். நிலத்தின் விலை நாலாயிரத்து ஐநூறு ஆக ஏறிவிட்டதென்றும் மறுநாளே என் பெரியம்மா பேருக்குப் பத்திரம் எழுத ஏற்பாடாகிவிட்டதென்றும் கூறினார். அம்மா நாலாயிரத்து அறுநூறு என்றார்கள். இப்படியே இவர்கள் இருவருக்கும் இடையில் சில 'நல்லவர்'கள் தூக்கிவிட நாலாயிரத்துக்கு முடிந்த நிலம், நாலாயிரத்து எழுநூற்று ஐம்பதுக்கு என் அன்னை பேருக்கே விலையும் முடிவு செய்து பதிவும் செய்யப்பெற்றது. ஒரே குடும்பத்தில் பிறந்த இரண்டு சகோதரிகளை வேறுபடுத்தி ஒரு நிலப் போட்டியில் அதிகமாக எழுநூற்று ஐம்பது ரூபாயை இழக்கவைத்த பெருமை ஊரில் ஒரு சிலரைச் சார்ந்ததாகும். இந்த நிலை இன்னும் எல்லாக் கிராமங்களிலும் இருப்பதனால்தான் கிராம மக்கள் வளர்ச்சி அடையாமல் கெடுகின்றனர். எத்தனையோ கிராமங்களில் பல குடும்பங்கள் - ஒன்றி வாழ்ந்த குடும்பங்கள் - இடையில் சிலரால் பிரிக்கப்பட்டு நிலைகெட்டு அழிகின்றன. நீதி மன்றங்கள் ஏறி, வழக்கறிஞர்களுக்கு ஆயிரக்கணக்கில் கொட்டிக்கொடுக்க நினைக்கும் உடன் பிறந்த உள்ளம் தன் தம்பிக்கோ அண்ணனுக்கோ ஐந்தடி நிலத்தை இனாமாக விட்டுக்கொடுக்க மறுக்கிறது. இந்த நிலை இன்றும் வளர்ந்துகொண்டே போகிறது என்பதை எண்ணிக்கையில் வளர்ச்சியுறும் நீதி மன்றங்கள் காட்டவில்லையா?

என் வீட்டு நிலப்போட்டி இந்த அளவோடு முடிந்துவிடவில்லை. ஊரில் யாரோ என் பெரியம்மாவை நன்றாகத்

தூண்டி விட்டார்கள் போலும். 'அந்த நிலத்தை எப்படி யாவது ஒரு வருடமாவது நீங்கள் பயிரிடவேண்டும்' என்றார் கள். அது எப்படி முடியும் என்பதற்கும் அவர்களே வழி சொல்லிக்கொடுத்தார்கள். அந்த நிலம் அடைமானத்துக்கு வைத்தபோது ஐந்து ஆண்டுகளுக்கு என்று வைக்கப்பட்ட தாம். அப்போது நான்கு ஆண்டுகளே முடிந்து இருந்தன. ஓராண்டு எஞ்சி இருந்ததாம். அந்தப் பணத்தைச் சென்னை யிலுள்ள அவர்களுக்குக் கொடுத்து விட்டால் அதே ஆண்டில் நிலத்தை அவர்கள் உழலாமாம். அந்த நிலையில் அவர் களுக்குச் சொந்தமான உழவுத் தொழிலும் கிடையாது. அல்லது அதில் வருகின்ற நெல்லை வைத்துத்தான் சாப்பிட வேண்டும் என்ற நிலையும் இல்லை. எப்படியிருந்த போதிலும் ஓராண்டாவது அந்த நிலம் தம் ஆணையின் கீழ் இருந்ததாகக் காட்டவேண்டும் என விரும்பினார்கள் என் பெரியம்மா. எனவே ஊரில் முக்கியமாக அந்நிலத்தோடு சம்பந்தப்பட்டவரை அழைத்துக்கொண்டு, பெரியப்பா சென்னைக்குப் பயணமானார். இரண்டொரு நாளில் பணம் கட்டிப் பத்திரத்தைத் தம்பேரில் மாற்றிக்கொண்டு வந்து விட்டார்கள். அடுத்த வீட்டுத் திண்ணையில் கம்பீரமாக உட்கார்ந்துகொண்டு தாம் வெற்றிபெற்றதைத் தம் நண்பருடன் பெரியப்பா பேசிக்கொண்டிருந்தார். என் அன்னையும் அவருக்குச் சளைத்தவரல்லர். தங்கள் ஆத்திரத் தையெல்லாம் சொற்கள் மூலம் கொட்டி அளந்துகொண்டி ருந்தார்கள்.

இச்சோகக் கதை இந்த அளவோடு முடிவு பெறவில்லை. கடைசியில் அந்த ஆண்டு பயிரிட்ட நெல் எங்கள் வீட்டுக்கே வந்து சேரும் ஒரு சூழ்நிலை உண்டாகிவிட்டது. இந்த நிலப் போட்டி முடிந்த ஆறு தினங்களில் என் தந்தையார் ஆறே நாள் காய்ச்சலில் படுத்து மறைந்துவிட்டார். மறுபடியும் பிரிந்த சகோதரிகள் ஒன்றாயினர். தந்தை மறைவுக்குப் பின்

பெரிய தந்தையார் ஓரளவுக்கு எங்கள் குடும்பத்தை மேல் பார்த்தார் என்று சொல்லலாம். என்றாலும் அவ்வளவு ஆழ்ந்து பற்றுடன் கவனித்தார் என்று சொல்ல முடியாது. என் அன்னையாரோ கைம்மைக்கோலத்தோடு காட்சி அளித்தார். நான் சிந்தை தடுமாறினேன். அந்த ஆண்டில் போட்டியில் பெற்றுக்கொண்ட நிலத்தில் விளைந்த நெல்லைப் பெரியம்மா எங்கள் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். அதற்குப் பிறகு என் இரு அன்னையர்தம் குடும்பங்களும் பிரியவே இல்லை என்று சொல்லலாம். சுமார் பத்து ஆண்டு களாக மூடப்பட்டிருந்த இடைக்கதவு திறந்துவிடப்பட்டது. அதில் எனக்குத்தான் அதிக மகிழ்ச்சி. இரண்டு வீட்டுக்கு இடையிலும் ஓடி ஆடிப் பழகினேன். இரு வீடுகளிலும் தனித் தனிச் சமையல்தான். என்றாலும் எனக்கு இரண்டு இடத்திலும் பங்கு கிடைக்கும். ஏன்? பிறகு எல்லாவற்றை யும் என் பெரிய அன்னையார் எனக்காகவே அளித்துச் சென்றபோது, ‘இப்படி ஒன்றாகச் சேரவேண்டிய பொருளுக்கு இடையில் வீண் நிலப் போட்டியைக் கிளப்பி யாரோ எழுநூற்று ஐம்பது ரூபாயைச் சாப்பிட்டாரே’ என எண்ணியது நெஞ்சம்.

## 12. ஒரு ரூபாய் நோட்டு

இன்று ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் நோட்டுக்கள் நிறையப் புழக்கத்தில் இருக்கின்றன. ஒரு காலத்தில் - போருக்கு முன் - ஐந்து ரூபாய்க்குக் குறைந்த நோட்டுக்களே கிடையாது. ஐந்து, பத்து, ஐம்பது, நூறு, ஆயிரம் என்று இப்படித்தான் நோட்டுக்கள் இருந்தன. ஆயிர ரூபாய் நோட்டையும் இடையில் இல்லையெனச் செய்தார்கள் அரசாங்கத்தார். அப்படியே ஒருரூபாய் நோட்டும் ஒரு

காலத்தில் இருந்து இடையில் இல்லையென்றாகிப் பிறகுப் போர்க்காலத்தின் இடையில் தோன்றி இன்றளவும் சாகாமல் வாழ்கின்றது. நான் பள்ளியில் படிக்கும் அந்த நாளில் ஒரு ரூபாய் நோட்டு புழக்கத்தில் இருந்தது. அந்த ரூபாய் நோட்டில் ஒன்று கெட்டு விட்டிருப்பதை, அரசாங்கம் திரும்பப் பெறுங் காலத்தில் கணக்கெடுத்திருந்தால் நிச்சயம் கண்டிருக்கும் என நினைக்கிறேன். ஆம். எதிர்பாராதபடி ஒரு ரூபாய் நோட்டு ஒன்றைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துப் பறக்க விட்டேன் நான். ஏன் என்று கேட்கிறீர்களா? எனக்குப் பயித்தியமில்லை - பயந்தான்.

எங்கள் வீட்டுக் கூடத்தில் ஓர் அலமாரி உண்டு. அதில் என் பாட்டி தனது துணிமணிகளையும், சாமான்களையும் வைத்திருப்பார்கள். அம்மாவும் சில சமயங்களில் சில்லறை களை வைப்பது வழக்கம். அதற்கு ஒரு சாவியும் உண்டு. அது பெரும்பாலும் பாட்டியின் இடுப்பில் இருக்கும். சில வேளைகளில் கதவிலும் தொங்கும். என் அப்பா அதை யெல்லாம் தொடமாட்டார். ஒரு நாள் பகல் நான் மட்டும் கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்தேன். பாட்டி தாழ் வாரத்தில் பூவினைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். அம்மா அடுப்படியில் ஏதோ செய்து கொண்டிருந்தார்கள். அன்று விடுமுறையாதலால் நான் வீட்டிலிருக்க ஏதுவாயிற்று. கூடத்து அலமாரியைத் திறந்தேன். பாட்டி பார்த்தார்கள். ஒன்றும் சொல்ல வில்லை. அதில் ஒரு தட்டில் ஒரு மூலையில் சில ஒரு ரூபாய் நோட்டுக்கள் இருந்தன. அவற்றுள் ஒன்றை மட்டும் நான் எடுத்து மடித்து என் நூல் ஒன்றில் மறைத்து வைத்துக் கொண்டேன். கதவைப் பழையபடி சாற்றி விட்டேன். அதன் கதவைத் திறக்கும்போது, அதில் ரூபாய் இருக்கிறது என்றோ, அதை எடுத்து மறைக்க வேண்டும் என்றோ நான் நினைக்கவில்லை. அன்றி எடுக்கும் போதும் இதனால் தாயாரிடம் எவ்வளவு கோபத்துக்கு உள்ளாகித் துன்பம் உற நேரும் என்பதையும் எண்ணவில்லை. ஏதோ

குழந்தை உள்ளத்தால் அதை ஒரு விளையாட்டுப் பொருளாக நினைத்து அப்படியே எடுத்தேன். ஒரு ரூபாய் நோட்டு அது என்று தெரியும். தெரிந்தாலும் அதை மாற்றி ஏதேனும் பொருள் வாங்க வேண்டும் என்ற எண்ணத்தில் நான் அதை எடுக்க வில்லை. ஏனெனில் அது கொண்டு ஏதாவது வாங்கி னால் உடனே அது எப்படியாவது என் தாயார் காதுக்கு எட்டும். உடனே எனக்குப் பெருந்தண்டனை கிடைக்கும். ஆகவே அதற்காகவும் நான் எடுக்கவில்லை. ஏதோ விளையாட்டுப் பொருளாகக் கருதி எடுத்து விட்டேன். அவ்வளவுதான்.

மாலை ஆறு மணி இருக்கும். விளக்கேற்றிவிட்டார்கள். அம்மா அந்த அலமாரியைத் திறந்தார்கள். இருந்த ஒரு ரூபாய் நோட்டுகளை எடுத்து எண்ணினார்கள். ஒன்பது இருந்தது போலும். மற்றொன்றைத் துருவித் துருவி ஆராய்ந்தார்கள். கிடைக்கவில்லை. என்னை அவர்கள் ஒன்றும் கேட்கவில்லை. 'எங்கே போயிருக்கும்? வரட்டும் கேட்கிறேன்' என்று தனக்குள்ளாகவே சற்று உரத்துப் பேசிக் கொண்டார்கள். சிறிது நேரம் கழித்துக் கோயிலுக்கு மலர் மாலை கொடுத்து விட்டுப் பாட்டி வீடு திரும்பினார்கள்; அவர்களைக் கேட்டார்கள். அவர்கள் தான் பார்க்கவில்லை என்று சொல்லிவிட்டார்கள். வேறு ஏதோ சொல்ல வாயெ டுத்தார்கள். என்றாலும் சொல் வெளியில் வராதபடி அடக்கிக் கொண்டார்கள். ஒரு வேளை 'பையன் கதவைத் திறந்தான். அவனைக்கேட்டால் தெரியும்' என்று சொல்ல நினைத்து வாயைத் திறந்திருக்கலாம், ஆயினும் அவ்வாறு சொன்னால் அம்மா என்னை அடித்து அது பற்றி வற்புறுத்திக் கேட்பார்கள் என்று அஞ்சி வந்த சொல்லையும் உள்ளடக்கிக் கொண்டார்கள் என நினைத்தேன். என் அம்மா, அப்பாவின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

அப்பாவுக்கென்று தனி வரவு செலவு கிடையாது. அவர் வீட்டில் இருப்பதே எப்போதோ சிலவேளைகளில்தான். ஆகவே அவசியமான வேளைகளில் கேட்டுப் பணம் வாங்கிக் கொள்வாராம். இல்லாவிட்டால் நண்பர்களிடம் வாங்கிக் கொள்வாராம். அதுவும் இல்லையானால் அம்மா எங்காவது வைத்திருப்பதை எடுத்துக்கொண்டு பிறகு தன் செலவுக்கு எடுத்துக்கொண்டதாக ஒத்துக்கொள்வாராம். அப்படியே அன்றும் அவர்தான் எடுத்துச் சென்றிருப்பார் என அம்மா முடிவுகட்டிவிட்டார்கள். நான் முன்னமே எல்லா நிலபுலன்களும் பிற பொருள்களும் அம்மாவைச் சேர்ந்தன என்பதைக் காட்டி இருக்கிறேன்.

அப்பா எட்டு மணிக்கு வந்தார். உடனே அம்மா அவருக்குச் சோறுகூடப் போடாது இந்த ரூபாயைப்பற்றிக் கேட்க ஆரம்பித்தார்கள். சாதாரணமாக அவர் எடுத்திருந்தால் 'ஆமாம். செலவுக்கு எடுத்துக்கொண்டேன்' என்று சொல்வார்கள். அம்மா சிறிது நேரம் வசைபாடிவிட்டுப் பிறகு அமைந்துவிடுவார்கள். அன்றுதான் உண்மையிலே அவர் தொடவில்லையே! ஆகவே எவ்வளவோ மன்றாடிச் சொன்னார்கள். தாம் ஒன்றையுமே பார்க்கவில்லை எனவும், பார்த்திருந்தால் பத்து ரூபாயுமே தாம் எடுத்துக்கொண்டிருக்க முடியும் எனவும் பலமுறை விளக்கிச் சொன்னார்கள். அம்மா அவற்றைக் கேட்டதாகவே தெரியவில்லை. மேலும் மேலும் வசைமொழிகளை வீசிக்கொண்டே இருந்தார்கள். அப்பாவாலும் பொறுக்கமுடியவில்லை. என்ன செய்வது? அந்நேரவேளையில் நான் உண்மையைச் சொல்லிவிடலாமா என நினைத்தேன். எனது படுக்கையில் கண்ணை மூடிக் கொண்டே படுத்திருந்தேன். இரண்டொருமுறையில் அப்பாவின் பரிதாப நிலையைக் கண்டு, உண்மையைச் சொல்லிவிட்டு, அந்த ரூபாயையும் எடுத்துக் கொடுத்து விடலாம் என நினைத்து எழுந்து உட்கார்ந்தேன். ஆயினும்

அப்படிச் செய்தால் அம்மா என்னை எப்படி அடிப்பார்கள் என்பதை நினைக்கும்போது மறுபடியும் திரும்பப் படுத்துக் கொண்டேன். பிறகு அப்பா அம்மா சாப்பிட்டார்களா இல்லையா என்பதுகூட எனக்குத் தெரியாது. இரவெல்லாம் எத்தனையோ கனவுகள் கண்டதாக நினைவு. பக்கத்தில் பாட்டியார் நான் தூக்கத்தில் திடுக்கிடுவதைக் கண்டு தட்டித்தட்டி உறங்கவைத்தார்கள் என்று எண்ணுகிறேன்.

மறுநாள் பொழுது விடிந்தது. புயல் ஓய்ந்துதான் இருந்தது. அப்பா வெளியே சென்றுவிட்டார். பாட்டியும் பூந்தோட்டத்திற்குப் போய்விட்டார்கள். நான் மெள்ள எழுந்து அம்மாவிடம் சென்றேன். என் உள்ளத்தில் கள்ளம் குடிகொண்டிருந்தது. அப்போதாவது சொல்லி விடலாமா என நினைத்தேன். எப்படிச் சொல்லுவது? எப்படி அடி உதை வாங்கிக்கொள்வது? விரைவில் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு அன்று ஏழு மணிக்கே வாலாஜாபாத் பள்ளிக்கூடம் செல்லப் புறப்பட்டேன். சாதாரணமாக ஏழரை மணிக்குமேல் என் நண்பர் சிலருடன்தான் நான் பள்ளிக்குப் புறப்படுவது வழக்கம். அன்று எனது நூல்களை எடுத்துக்கொண்டு ஏழு மணிக்கே புறப்பட்டேன். அந்த ரூபாய் நோட்டு நான் வைத்த புத்தகத்திலேயே பத்திரமாக இருந்தது. நான் ஆற்றில் இறங்கியதும் ஒரு பக்கமாகச் சென்று உட்கார்ந்துகொண்டேன். திரும்பத் திரும்பப் பார்த்தேன். நோட்டைக் கையில் எடுத்தேன். துண்டு துண்டாகக் கிழித்தேன். மிக மிகச் சிறுசிறு துண்டுகளாயின. அப்படியே எழுந்து நடந்தேன். இருபதடிக்கு ஒருமுறையாக இரண்டொரு துண்டுகளை வீசி எறிந்துகொண்டே சென்றேன். ஆற்றங்கரையில் வாய்க்காலில் நீர் ஓடிக் கொண்டிருந்தது. கைகளையும் முகத்தையும் அதில் நன்றாகக் கழுவிக்கொண்டேன். என்றாலும் உள்ளத்தின் மாசினை எப்படிக் கழுவுவது? என்னால் பாவம் தந்தையார்

மனைவியிடம் வசைகேட்டு வாடவேண்டி இருந்தது. ஆயினும் அந்த நிலையில் நான் ஒன்றும் செய்யமுடியாமல் திகைத்தேன். யாரிடமாவது இதைச் சொன்னால்தான் மனம் நிறைவுபெறும் என்று அன்றுமுதல் நான் நினைத்துக் கொண்டுதான் இருந்தேன். ஆயினும் யாரிடமும் சொல்ல வில்லை. இதோ இன்று இந்த நூல்வழிதான் அன்று நான் செய்த களவினைக் கூறி எனது மாசினைக் கழுவும் கழுவாயினைத் தேடிக்கொள்ளுகிறேன்.

# 13. விழாவும் வேட்டியும்

எங்களூர்க் கோயிலைப்பற்றி முன்னமே சொல்லி இருக்கிறேன் அல்லவா! அதற்கு அறக்காப்பாளர்கள் மூன்றாண்டுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுவர். அந்தத் தேர்தல் காலங்களிலெல்லாம் அடிக்கடி சண்டை நிகழும். வேளாண்குலத்தில் பிறந்தவராகி, ஒரே இனமாக உறவு பற்றி வாழும் அந்தக் கிராமத்தில் கோயில் காரணமாக இவ்வாறு அடிக்கடிச் சண்டை நிகழ்வதுண்டு. கோயிலுக்கு நிலத்தின் வழி நல்ல வருமானம் வந்துகொண்டிருந்தது. மேலும் இந்தக்காலத்தைப்போன்று அன்று மேலே கணக்குக் கேட்க அரசாங்க ஏற்பாடுகள் ஒன்றும் திட்டமாகக் கிடையா. எனவே அந்தப் பதவிக்கு வந்தால் மனம்போலப் பொதுப் பணத்தைச் செலவு செய்ய யாருக்கும் வாய்ப்பு இருந்தது. ஆதலாலே மூன்றாண்டுக்கு ஒருமுறை அந்தப் பதவிக்குப் போட்டியும், அடிதடிகளுடன் தேர்வும் நடைபெற்றுவந்தன. என்றாலும் கோயில் பணிமட்டும் முட்டின்றி நடைபெற்றுக் கொண்டே இருக்கும். இந்தக் கோயிலால் வளர்ந்த கட்சி வேறுபாடே பிறகு ஊரில் பல கொலைகளை விளைக்கும் பெரும் சண்டையாக மாறிவிட்டது என்பதைப் பின்னர் காணலாம்,

அத்திருக்கோயிலுக்கு அம்பலவாணர் கோயில் என்று பெயர். சாதாரணச் சிறு விழாக்களும் ஆண்டு முழுதும் பல பெருவிழாக்களும் அக் கோயிலில் முறையாக நடைபெறும். விழாக்களுக்கு ஊரில் உள்ளவர்கள் கூட்டமாகச் செல்வார்கள். எனினும் அறக்காப்பாளர் தேர்விற்கு எதிர்க்கட்சியாக நின்று தோற்றவரும் அவர் துணையாக இருப்பவர்களும் கோயிலுக்கு வரமாட்டார்கள். நாட்கள் செல்லச் செல்ல ஏதாவது சமாதானம் செய்துகொண்டு பிறகுதான் கோயிலுக்கு வருவார்கள். ஒரு தேர்தலில் எதிருக்கு எதிராக நின்று, பெரும் சண்டைகளுக்கிடையே அத் தேர்தலை நடத்தி அதில் தோல்வியுற்ற ஒருவர், அடுத்த மூன்றாண்டுகளில் வெற்றிபெற்ற 'பெரிய கட்சியோடு' நட்பாளராகி அவர்கள் சார்பில் அடுத்த தேர்தலில் நின்று வெற்றி பெற்றார். இன்று அரசியல் சதுரங்கத்தில் இதுபோன்ற நிகழ்ச்சிகள் சர்வ சாதாரணமாக நடைபெறுகின்றன. சென்ற தேர்தலில் காங்கிரசை எதிர்த்தவர் இந்தத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகராகவும், நேற்றுவரை காங்கிரஸ் அபேட்சகராக வெற்றிபெற்றுச் சட்டசபையில் இருந்தவர் இன்று எதிர்க்கட்சி அபேட்சகராகவும் நிற்பதைக் காண்கின்றேன். என்றாலும் அந்தக் காலத்தில் எனக்கு அந்தக் கட்சி மாற்றமும் அதன் மூலம் அறக்காப்பாளர் பதவி பெற்றதும் வெறும் வேடிக்கைகளாகவே இருந்தன.

அப்படிப் போட்டிகள் நடைபெற்றுப் புதுப்புது அறக்காப்பாளர் வரும்போது, புதிதாக வந்தவர் முன் இருந்தவர் செய்ததைக்காட்டிலும் விழா வேடிக்கைகளை அதிகமாகச் செய்து பெயரெடுக்க வேண்டும் என்று முன்னிற்பார்கள். அப்படியே ஓர் ஆண்டு எங்கள் ஊர் அம்பலவர் கோயிலுக்கு ஆண்டுதோறும் நடைபெறும் பெருவிழா நடைபெற்றது. அவ்விழாவில் சில நாட்கள் மிக முக்கியமானவை. அந்த நாட்களில் ஊரில் உள்ளவருள் பலரும் கோயிலுக்குச் சென்று வருவார்கள்.

ஓராண்டு, ஆண்டுப் பெருவிழாவினை (பிரம்ம உற்சவம்) வெகு சிறப்பாகக் கொண்டாடினர். வெளியூர்களிலிருந் தெல்லாம்கூடப் பலர் அவ்விழாவுக்கு வந்தனர். பெரும் பாலும் இரவு விழாக்களே சிறப்பானவையாக இருக்கும். கோயில் ஆற்றங்கரையில் இருந்தமையால் பலர் ஏழு மணிக்கே சாப்பாட்டினை முடித்துவிட்டு இளநிலாவிலே ஆற்றின் மணல் வெளியில் இருந்து பொழுது போக்குவார்கள். இரவு பத்து மணி அளவில் சுவாமி புறப்படும். அனைவரும் ஒன்றாகச் சென்று இறைவனை வழிபடுவார்கள். பகலில் அத்துணைச் சிறப்பான விழாக்கள் இரா. கொடியேற்றமும், ஐந்தாம் நாள் விழாவும்தாம் பகல் விழாவில் சிறந்தன. அந்த இரண்டு விழாக்களுக்கும் ஊரில் பெரும்பாலும் எல்லாருமே வந்துவிடுவார்கள். அப்படி வரும் போது எல்லா ஊரிலும் எல்லாரும் செய்வது போலவே தம்மை நன்கு அலங்கரித்துக் கொண்டே வருவார்கள். ஆடவர் நல்ல சரிகை வேட்டிகளை அணிந்து கொண்டு, திருநீறும் சந்தனமும் உடலில் பொலிய வருவார்கள். எங்கோ பானைகளில் சுருட்டி மடக்கிப் போட் டிருந்த சரிகைப் புடைவைகளையெல்லாம் எடுத்து அணிந்து கொண்டு பெண்கள் கோயிலுக்கு வருவார்கள். இது எங்கும் காணும் நிகழ்ச்சிதானே! எங்கள் ஊர் மட்டும் இதற்கு எப்படி விதி விலக்காகும்?

என் அன்னையாரும் இளமையில் என்னை அழகு படுத்து வதில் ஆசை கொண்டவர்கள். என் தலையில் மயிர் நீண்டு அடர்ந்து இருக்கும். எனக்குச் சிலவேளைகளில் பெண் வேடம் கூடப் போடுவார்கள். தங்க நகைகளையும் வெள்ளி நகை களையும் பூட்டி, அழகிய பாவாடை ரவிக்கை அணிவித்துப் பெண்ணாக்கி மகிழ்வார்கள். அவர்களுக்குப் பெண் இல்லாக் குறைதான். ஆகவே அவர்கள் கோயில் குளம் செல்லும் போதெல்லாம் அழகாகச் சிங்காரித்தே ஒரு கொலு பொம்மை மாதிரி என்னை அழைத்துக் கொண்டு செல்லுவார்கள்

அவர்கள் செலவு செய்வதிலும் சற்றுத் தாராள மனம் உடையவர்கள். ஆகவே உயர்ந்த பட்டுப் புடைவைதாம் அவர்கள் கட்டுவன. எனக்கும் அது போன்று உயர்ந்த ஆடைகளும், வேட்டி முதலியனவும் வாங்கிவர ஏற்பாடு செய்வார்கள். காஞ்சிபுரம் முதலிய ஊர்களுக்கு விழாக்களுக்குச் செல்லும் போது தாமே பல கடைகளுக்குச் சென்று வேண்டிய பட்டு முதலியவற்றை வாங்குவார்கள்.

அன்று அதிகார நந்தி விழா; அதாவது பெருவிழாவில் ஐந்தாம் நாள் காலை விழா. ஆண்டவனுக்கு அலங்காரம் செய்து தீப ஆராதனை தொடங்குகின்ற நேரம். ஊர் மக்கள் பலரும் கூடியிருந்தனர். சிலர் ஆண்டவனை அன்போடு வணங்கிக் கொண்டிருந்தனர். சிலர் தத்தம் ஆடை அணிகள் பற்றியும், ஊர் வழக்குகள் பற்றியும் அடுத்து வரும் தேர்தல் விளைவுகள் பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர். அக்காலத்தில் கோயிலில் பணியாற்றிய குருக்களுக்கும் ஊரில் ஒரு சாராருக்கும்கூடச் சண்டை. அவர் மண்டபத்தை விட்டுக் கீழே இறங்கித்திருநீறு தரமாட்டேன் என்பார். இவர்கள் இறங்கத் தான் வேண்டும் என்பார்கள். ஆண்டவன் அருட்பிரசாதமாகிய திருநீற்றைப் பெறுவதில் அச்சிறு கிராமத்தில் இத்துணை வேறுபாடு இருந்தது என்றால் அது பற்றி நினைக் காதிருக்கமுடியுமோ? இது பற்றியும் இன்னும் சில பொருள் பற்றியும் வந்தவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். எனினும் தீப ஆராதனை சமயத்தில் அமைதி குடி கொண்டது.

என் அன்னையார் என்னை அன்று நன்கு அலங்கரித்து அழைத்துச் சென்றிருந்தனர். சென்னையில் இருந்த ஓர் உறவினர் மூலம் வாங்கி வைத்திருந்த நல்ல பட்டு ஒன்றை நான் இடையில் அணிந்திருந்தேன். அந்த வேட்டி காண்பார் அனைவர் கண்ணையும் உறுத்திற்று என்னலாம். நான் என்னை மறந்து ஆண்டவனை நோக்கி அழுது கொண் டிருந்தேன். என் வாழ்வு காண்பவர் கண்களுக்கு அன்றைய

பட்டு வேட்டியைப் போல் வெளிக்குப் பகட்டாகத் தெரிந் தாலும், நான் மிக மிக அல்லலுற்ற வாழ்வையே அன்று தொட்டு இன்று வரை அனுபவித்து வருகிறேன் என்னலாம். ஆகவே ஆண்டவனைக் காணும் தோறும் அலறி அழுவது என் வழக்கமாகிவிட்டது. இளமையில் பக்தி ஒழுக்கம் பூண்ட என் பாட்டியுடன் அடிக்கடி கோயிலுக்குச் சென்று வழிபட்டு அழுது காமுற்று அரற்றும் வழக்கம் என் வாழ்வின் வழக்க மாகிவிட்டது. வாழ்வில் உற்றவரை ஒருவர் பின் ஒருவராகப் பிரிந்து கொண்டும், எதிர்பாராது பல்வேறு கொடுமைகளில் பட்டுழன்றும் வாழும் என் வாழ்வு என்றும் சோலை வனமாகக் காட்சியளித்ததில்லை. சிற்சில சமயங்களில் என் மனம் பாலைவனத்தைச் சோலைவனமாக்க முயலும். என்றாலும் அதுவும் முழு வெற்றி பெற்றதில்லை. ஆயினும் சிலர் என் வாழ்வைக் கண்டு பொறாமையும் கொள்ளும் அளவுக்குப் புறத்தோற்றம் அமைந்து விட்டது. அன்றும் அப்படித்தான் நான் ஆண்டவன் முன் அழுது புலம்பிக் கொண்டிருந்த அதே வேளையில் என் புறத்தைக் காட்டும் அந்தப் பட்டு வேட்டியைக் கண்டு பலர் பலவாறு பேசிக் கொண்டனர்.

என் பக்கத்தில என ஒரு சாலை மாணவரும நணபரும நின்று கொண்டிருந்தார். அவர் தற்போது இல்லை. இறந்து நெடுங்காலமாயிற்று. அவர் பெயர்கூடச் சரியாக எனக்குத் தற்போது நினைவில் இல்லை. வெங்கிடகிருட்டினன் என எண்ணுகிறேன், சரியோ தப்போ தெரியாது. அவர் தன் மாமாவுடன் அருகில் நின்றிருந்தார் போலும். நான் என்னை மறந்து இறைவனை நினைத்திருந்த அந்த வேளையில் என் வேட்டியை யாரோ பற்றி இழுப்பது போன்று இருந்தது. நான் யார் என்று திரும்பிப் பார்த்தேன். அவர்தான் - என் நண்பர் - என் வேட்டியைப் பிடித்து அதன் மழமழப்பைக் கைகளால் சுவைத்துக் கொண்டிருந்தார். தீப ஆராதனையும்

முடிந்தது. திரும்பினேன். நண்பர் 'மாமா, எனக்கு இது போல வேட்டி வாங்கிக் கொடுங்கள்' என்று கேட்டார். மாமாவும் - ஆண்டவனைத் தொழுது கொண்டிருந்தவர்— அவர் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. ஆகவே நண்பர் சற்று ஆத்திரமடைந்து அதிகமாகக் கூச்சலிட்டுத் தனக்கு அது போன்ற வேட்டி வேண்டும் என்பதை வலியுறுத்தினார். பாவம் பத்துப் பன்னிரண்டு வயதான அந்த நிலையில் அவர் அக்கோயிலை மறந்து அழகிய வேட்டியில் ஆசை கொண்டது தவறு அல்லவே, என்றாலும் வழிபாட்டுக்கு இடையில் அவர் செய்த தொந்தரவு தாளாமல் அவர் மாமா அவர் முதுகில் இரண்டு அறை அறைந்தார். நண்பர் மேலும் ஓவென்று கூச்சலிட்டு அழுதார். அது அனைவர் கவனத்தையும் கவர்ந்தது. ஐயர் திருநீறு அளித்தார். அனைவரும் பெற்றனர். நண்பர் மட்டும் விசித்து விசித்து அழுது கொண்டே 'அதுபோல் வேட்டி வேண்டும்' என்று முணகிக் கொண்டே இருந்தார். அவர் மாமா அவரைத் தனியாக அழைத்து ஏதேதோ சொன்னார். 'அவர் கள்தாம் பணக்காரர்கள்; அதுபோன்ற உயர்ந்த துணி எல்லாம் வாங்க முடியும். நாம் அதற்கு எங்கே போவது? மேலும் அது எங்கேயோ பட்டினத்தில் இருந்து வாங்கிவந்தது. இந்த ஊரில் எங்கும் கிடைக்காது' என்று சமாதானப் படுத்தினார் என்று பக்கத்தில் உள்ளவர்கள் பேசிக் கொண் டார்கள். ஆகா! அந்தப் பிஞ்சு உள்ளங்களில்தாம் ஏழை பணக்காரர் என்ற வேறுபாட்டை எப்படித்தான் தூவுகிறார் கள் என நினைத்தேன். நாங்கள் எங்கள் ஊரில் அப்படி ஒன்றும் பெரும் செல்வர்கள் அல்லர். என் அன்னையார் சற்றுத் தாராளமாகச் செலவு செய்து சிறக்க வாழ வேண்டும் என நினைக்கிறவர்கள்; அவ்வளவுதான். அது மற்றவர் களுக்கு வேறுவிதமாகப்பட்டது. ஊரில் உள்ளவர்கள் 'வாழவும் பொறுக்கமாட்டார்கள். கெட்டாலும் தாங்கமாட் டார்கள்' என்று பலரும் பேசிக் கொள்ளுகின்ற ஒரு பேச்சு பற்றி அன்றே அம்மா அடிக்கடி சொல்லுவார்கள்,

அன்று முதல் நான் உயர்ந்த ஆடை அணிகளை உடுப்பதை விரும்பவில்லை. இறைவன் திருமுன்பு என் நண்பர் எனக்குக் காட்டிய பாடம் இன்றுவரை மனத்தில் நிலை பெற்றுவிட்டது. கூடியவரையில் எளிய வாழ்வையே மேற்கொள்ள வேண்டும் என நினைத்தேன். என்றாலும் என் தாயார் சொற்படி நடக்கவேண்டி இருந்தமையால் நான் எட்டாவது வகுப்பு வாலாஜாபாத்தில் படிக்கும் வரையில் அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப நகைகளையும் பட்டாடைகளையும் அணிந்து கொண்டேன். பிறகு அன்று தொட்டு இன்றுவரை பட்டாடைகளையும் படாடோப வாழ்வையும் விரும்பாது கூடியவரை எளிய வாழ்விலே வாழ்ந்து வருவதாக எண்ணியே என் நாட்களைக் கழிக்கின்றேன். மக்கள் வாழ்வில் திருப்புமையங்கள் எத்தனையோ உண்டாகின்றன. என் வாழ்வின் திருப்புமையங்களுள் அது ஒன்று என்று அன்றைக்கு என்னால் எண்ண முடியாவிட்டாலும், அறிவறிந்த பிறகு நான் அவ்வாறுதான் எண்ணி அமைந்தேன் என்பது உண்மை.

# 14. மறைந்த தந்தையார்

என் தந்தையாரைப் பற்றி அடிக்கடி மேலே கூறி வந்திருக்கிறேனல்லவா! அவர்கள் நான் எட்டாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்த காலத்தில் மறைந்து விட்டார். என் தாயார் உடன் பிறந்தவரை விட்டுத் தனியாக வாழ்ந்த காலத்திலும் கணவர்தம் செயலால் மாறுபட்டே வாழ்ந்து வந்தார்கள். மணவாழ்வில் பெறக்கூடியதாகிய இன்பங்கள் அத்தனையும் என் அன்னையார் பெற்றார்கள் இல்லை. என்றாலும் அவர்கள் தம் ஒரே மகனாகிய நான் வாழ வேண்டும் என்ற நல்ல அன்புளத்தாலே தன் வாழ்வையே

தியாகம் செய்தார்கள் என்னலாம். ஆம், பல்வேறு கருத்துக் களால் மாறுபட்டு நின்ற அன்னையும் அத்தனும் இறுதியில் சில ஆண்டுகள் ஒன்றியே வாழ்ந்தார்கள் என்னலாம். அந்த ஒன்றிய வாழ்வு நெடுங்காலம் நீடிக்கா வகையில் இறைவன் என் தந்தையாரை இவ்வுலகில் இருந்தே தன்னிடம் அழைத்துக் கொண்டு விட்டான்.

நான் அப்போது எட்டாவது படித்துக்கொண்டிருந்தேன். சிறியவனாக இருந்தபடியால் பெரும்பாலும் வாலாஜா பாத்திலேயே நான் தங்கிவிடுவேன். வாரத்தில் சனி ஞாயிறு களில்தான் நான் வீட்டுக்கு வருவேன். அங்குள்ள தலைமை ஆசிரியர் வீட்டிலேயே எனக்கு உண்டியும் உறையுளும் ஏற்பாடு செய்து இருந்தது. என்றாலும் என் அன்னை பரிவோடு சில பலகாரங்கள் செய்து அடிக்கடி அப்பா மூலம் கொடுத்தனுப்புவார்கள். இந்த நிலையில் நான் சில மாதங்கள் பெற்றோரை விட்டு நீங்கியே இருந்தேன் என்னலாம்.

பொங்கல் வந்தது. பொங்கல் என்றால் எங்கள் ஊரில் பெருங் கொண்டாட்டம். ஊரில் அதுபோன்ற விழா அன்று மட்டுமன்று; இன்றும் வேறொன்றும் கிடையாது. வீடெல்லாம் துப்புரவு செய்து, வெள்ளை அடித்து, மாடுகளை அழகு செய்து, பற்பல வகையில் வண்ணங்கள் பூசி ஊரையே அனைவரும் அழகுபடுத்துவார்கள். நானும் பொங்கலுக்காக ஊரிலேயே சில நாள் தங்கி இருந்தேன். அப்பா அந்த ஆண்டு முயன்று நல்ல வேலை செய்தார்கள். எங்கள் வீட்டில் உழவு இல்லை ஆதலால் மாடுகள் கிடையாது. என்றாலும் பாலும் மோரும் எங்கள் உயிராக நின்றமையின் இரண்டொரு பசுக்கள் இருந்தன. என் தந்தையார் அவற்றை அழகு படுத்தினார்.

மாட்டுப் பொங்கலன்று காலை அவர் உடம்புக்கு ஏதோ தள்ளவில்லை என்று சொல்லிப் படுத்தார். அன்றைக்கு

அவர் ஒன்றுமே உண்ணவில்லை. நானும் அன்றைப் பொழுது வீட்டில் இருந்து மறுநாள் காலை வாலாஜாபாத் பள்ளிக்கூடம் சென்றுவிட்டேன். பிறகு அந்த இளமைப் பருவத்தில் மற்றவர்களோடு விளையாட்டும் வேடிக்கையுமே கூடியதால் அப்பாவின் உடல்நிலையைப் பற்றி அதிகமாக நினைக்கவே இல்லை. நான்கைந்து நாட்கள் கழித்து ஊரில் இருந்து ஆள் வந்தது. அப்பாவுக்கு உடல்நிலை மிகக் கெட்டு விட்டதாகவும் நான் உடனே புறப்பட்டு வரவேண்டும் என்றும் சொன்னார்கள். நான் அப்போதும் அதிகமாகக் கவலையுறவில்லை. ஏதோ புறப்பட்டுச் சென்றேன். வீட்டில் பல உறவினர்கள் சுற்றி உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். சில மணி நேரம் சென்றது. இரவும் வந்தது. நான் உண்டு உறங்கி விட்டேன். விடியற்காலையில் தந்தையார் ஆவி பிரிந்தது. அனைவரும் 'ஓ'வென அலறினர். நானும் நைந்தேன்.

கணவனை இழந்த பெண்களின் கைம்மைக் கோலத்தை நான் அந்த இளமையிலேயே கண்டிருக்கிறேன். எனவே என் அன்னை இனி எந்தக் கோலத்தில் தோற்றமளிப்பார் என்று நினைத்தபோது உள்ளமே தடுமாறிற்று. என்றாலும் நான் அதிகமாக வெளியில் ஒன்றும் புலம்பிக் கொண்டிருக்கவில்லை என் நினைக்கிறேன். இளமையில் அத்தனின் பிரிவு அதிக மாகத் தெரியவில்லைபோலும். சடங்குகள் முறைப்படி நடை பெற்றன. தந்தையின் ஈமச் சடங்கும் பால் தெளியும் நடை பெற்றன. அன்று நான் அதிகமாகத் துன்பமுறவில்லை. ஆனால் நான் என் தந்தைக்கு ஈமக்கடன் செய்த அதே வயதில் - பதின்மூன்றில் - என் மகன் தன் தாய்க்கு...என் மனைவிக்கு - ஈமக் கடன் செய்ய நேர்ந்த அந்த நாளில் நான் மிக மிகக் கசிந்து வாடினேன்; வருந்தினேன்.

தந்தையார் சடங்கு முடிந்ததும் நான் அதிகமாக ஒன்றும் கவலையுறவில்லை. பால் நடந்த அன்றைய பிற்பகல் நான்

என் நண்பர்களுடன் தோட்டத்தின் பின்புறம் விளையாடச் சென்றுவிட்டேன். கோலி விளையாடிக் கொண்டிருந்தேன் என நினைக்கிறேன். வெளியூர்களிலிருந்து பல பணியாளர்கள் வந்திருந்தார்கள். அவர்களுள் சிலர் நாங்கள் விளையாடு வதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். என்னை அறியாத ஒருவர் 'பாவம், இறந்தவருக்குக் கூட இம்மாதிரி ஒரு பிள்ளை இருக்கிறதாமே! அதை விட்டுவிட்டு அவர் போய் விட்டாரே' என்றார். ஆனால் அவர் பக்கத்தில் இருந்த என்னை நன்கு அறிந்த ஒருவர் 'அடடே! இதோ கோலி ஆடுகிறதே, இதுதான் அவர் பிள்ளை; உனக்குத் தெரியாதா?' என்றார். அதுவரையில் என்னை மறந்து விளையாடிக் கொண்டிருந்த நான், அவர்கள் பேச்சைக் கேட்டு அமர்ந்துவிட்டேன். முன்னவர் 'பாவம் தந்தை இறந்த வருத்தம் கூடத் தெரியாது இப்படிப் பால் தெளித்த கையோடு கோலியாடுகிறது. பிள்ளைகளின் நிலையே நிலை; கவலையற்று அவை வாழ்கின்றனவே' என்றார். அச்சொற்கள் என் காதுகளைத் துளைத்தன. அப்போதுதான் நான் செய்த தவறு எனக்குப் புரிந்தது. என்றாலும் நான் விளையாட்டை நிறுத்தவில்லை. அதில்தான் என் விளையாட்டுப் புத்தி விளங்கிற்று. பேசிக் கொண்டிருந்த இருவரும் சிறிது நேரம் பார்த்து எனக்காக இரக்கப்பட்டு அப்பால் சென்று விட்டார்கள். ஆனால் நான் விளையாடிக் கொண்டே இருந்தேன்.

அன்றைக்கு அந்த விளையாட்டைப் பற்றி நான் அதிகமாக நினைக்கவில்லை. எனறாலும் வயது ஆக ஆக அந்தப் பெரியவர் கூறிய சொற்கள் அடிக்கடி என் நினைவில் வந்து கொண்டே இருக்கும். இப்படி உற்ற தந்தையார் செத்துக் கிடக்க, நான் கோலியாடி விளையாடிக் கொண்டிருந்த இழி தகைமையை எண்ணி நைந்தேன். அண்ணல் காந்தி

அடிகளாரது சுய சரிதத்தைப் பயிலும்போது அவர் தந்தையார் இறந்த காலத்தில் தாம் இருந்த நிலையை ஒளி மறைவில்லாது எழுதியுள்ளமை அறிந்தேன். அதுபோன்றே நான் என் தந்தை இறந்த இரண்டாம் நாள்—இளையனாயினும்—சிறிதும் வருத்தமின்றிப் பிறருடன் விளையாடிக் கொண்டிருந்த இழிவை யாரிடமாவது சொல்ல வேண்டும் என நினைத்தேன். இதோ வாய்ப்பு வந்தது. இன்று உங்கள் முன் எழுதி வைத்துவிட்டேன்.

# 15. தேர்தல் விந்தை

**தேர்**தல் இன்று அடிக்கடி நடைபெறுகின்றதைக் காண்கிறோம். கட்சிகள் வெறிக் கொண்டு மாற்றாரைத் தாக்கியும் இழித்தும் செயலாற்றுவது நமக்குப் புதியது அன்று. சில சில தேர்வுகளின் மூலம் கொலை முதலிய கொடுமைகளும் நடக்கின்றதைப் பார்க்கிறோம். இன்று வயது வந்தோருக்கெல்லாம் வாக்குரிமை உண்டு. ஆனால் அன்று நான் வாலாஜாபாத்தில் படித்துக் கொண்டிருந்தபோது—ஏழாவதோ எட்டாவதோ படித்துக் கொண்டிருந்தபோது—அனைவருக்கும் வாக்குரிமை கிடையாது. அரசாங்கத்துக்கு வரி கட்டுபவர்கள் மட்டுமே வாக்காளர்களாக இருந்தார்கள் என நினைக்கிறேன். சட்டசபைகளுக்குப் பத்து ரூபாய்க்கு மேல் வரி கட்டுபவர்களும், மாவட்டம் முதலியவற்றிற்குச் சாதாரண வரி கட்டுபவர்கள் தொடங்கி வரி கட்டுபவர் அனைவரும் வாக்காளராக இருந்தார்கள் என்பது என் எண்ணம். அது சரியா தப்பா என்று நான் இன்று ஆராய நினைக்கவில்லை. இன்றுதான் எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள் என மாறிவிட்டார்களே!

அந்தக் காலத்தில் மாவட்ட உறுப்பினர்களுக்கு அதிக சலுகைகள் உண்டாம். அந்த மாவட்டத்தில் செல்லும்

'பஸ்'ஸிலெல்லாம் 'இனாம்' சலுகை; வேறு பல அரசாங்க உதவிகள்; இப்படிப் பலப்பல. எனவே அதற்கெல்லாம் போட்டி இருந்தது. நான் சிறிய பிள்ளையாக இருந்தமையால் அது பற்றி எல்லாம் அதிகமாகத் தெரியாது. என்றாலும் அந்தத் தேர்தல் வேடிக்கைகளில் நான் கலந்து கொண்டு வேடிக்கை பார்ப்பதுண்டு. 'காந்திக்கு ஜே, காங்கிரசுக்கு ஜே' என்றெல்லாம் அந்தக் காலத்தில் கூப்பாடு கிடையாது ஒவ்வொரு தொகுதிக்கு இருவர் மூவர் நிற்பார்கள். சாமர்த்தியமுள்ளவர்கள் வெற்றி பெறுவார்கள். இரவுக் காலங்களில் உதைகள் பரிமாறிக்கொள்வதும் உண்டு. மிகச் சிறிய வயதிலேயே எங்களூர்க் கோயில் தேர்வில் இக்காட்சி களையெல்லாம் கண்ட எனக்கு இதிலெல்லாம் புதுமை ஒன்றும் தெரியவில்லை.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் நான் படித்துக் கொண்டிருந்தேன். வீரராகவாச்சாரியார் என்பவர் பள்ளி யின் தலைமை ஆசிரியர். அவர்கள் வீட்டுப் பிள்ளையைப் போல் நான் அவர்களிடம் பழகினேன். தலைமை ஆசிரியரின் மனைவியார் குளிக்கப் போகுமுன் என்னை அழைத்துத் தலைவாரிப் பின்னுவார்கள். இரவு பகலெல்லாம் அவர்கள் வீட்டில் குழந்தையாக உண்டு வளர்ந்தேன். அந்த அம்மையாரின் பரிவு என்றென்றும் என் உள்ளம்விட்டு நீங்காது. எங்கு வீட்டில் என் தாயார் பள்ளிக்குச் செல்லு முன் எனது நீண்ட மயிரை வாரிப் பின்னல் இட்டே அனுப்புவது வழக்கம். சில பிள்ளைகள் அந்த நீண்ட பின்னலை ஒட்டி என்னை 'வால்' என்றேகூட அழைப்பார் கள். நான் அதையெல்லாம் பொருட்படுத்துவதில்லை. என் தாயார் வாரிவிட்ட பின்னலுடன் பல நாள் பள்ளி வந்திருப் பதை அந்த அம்மையார் கண்டிருந்தார்கள். அவர்கள் அந்தணராக இருந்தமையால் குளிக்கப் போகுமுன் என்னை அழைத்து உட்காரவைத்து 'வா, உங்கள் வீட்டில் அம்மா

பின்னுவார்களல்லவா! அதையே நானும் செய்கிறேன். அம்மா இல்லையே என்ற குறை வேண்டாம்' என்று கூறி அருகே அழைத்து அழகாகப் பின்னுவார்கள். அத்தலைமை யாசிரியரும் என்னிடம் அன்பாகவே இருப்பார். அவர் நாள்தோறும் நான் படிப்பதில் அக்கறை காட்டுவார். அவருக்கு இடையில் தேர்தல் சம்பந்தமான ஒரு பெருவேலை வந்தது. அவரோடு இராப்பகலாக இருந்து அவற்றை யெல்லாம் கவனித்த எனக்குத் தேர்தல் வேடிக்கையாகவே இருந்தது.

இந்துமத பாடசாலையை நடத்தும் வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் பொதுப் பணியில் ஈடுபட்டவர்கள். இதுபோன்ற தேர்தல்களிலெல்லாம் தலையிட வேண்டாம் என்று அனைவரையும் வற்புறுத்துபவர்கள். (பின்னும்கூடத் தேர்தலில் ஈடுபடுபவர்களைத் தடுத்து நல்ல வழியில் திருப்ப முயல்பவர்கள்.) ஆயினும் அன்று எப்படியோ அவர்கள் தேர்தல் சுழியில் சிக்கிவிட்டார்கள். செங்கற்பட்டு மாவட்டக் கழக உறுப்பினர் தேர்தல் என்று நினைக்கிறேன். அவரை எதிர்த்து நின்றவர் யார் எனத் தற்போது திட்டமாக நினைவில்லை. சிலகாலம் அக்கழகத்தில் உறுப்பினராக இருந்த கோபால் நாயுடுவாக இருக்கலாமோ என எண்ணு கின்றேன். எப்படியாயினும் தேர்தலில் இவர் நின்றது முதலில் எனக்கு விந்தையாகவே இருந்தது. காலை வேளை களில் மூழ்கி எழுந்து நான்கு மணிக்கு இறைவனை வழிபட்டு, பிறகு பள்ளித் தொண்டில் கருத்திருந்தும் இவருக்கு எப்படி இத்தேர்தல் நினைவு வந்தது என்பதை அன்று என்னால் எண்ணிப்பார்க்க இயலவில்லை. ஆனால் பின்பு அவர் பலருக்கு உபதேசம் செய்யும்போது, இப்படிப்பட்ட நல்லவர் அன்று ஏன் அப்படி நின்று அத்தனை அரும்பாடுபட்டார் என்று நினைப்பது வழக்கம். அவர் தேர்தலில் நின்ற வேடிக்கையைக் காட்டிலும் அவர் அச்சிட்ட துண்டுப் பிரசுரங் கள்தாம் அதிக வேடிக்கையாக இருந்தன.

எதிரி வேகமாக வேலை செய்தார் என நினைக்கிறேன். ஆகவே இவர்களும் அதிகமாகச் செய்யவேண்டியதாயிற்று. அத்தேர்தலால் எத்தனையோ நல்லவர் தம் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டியதாயிருந்தது. ஆம்! இந்த அனுபவத்தைச் சுமார் பதினைந்து ஆண்டுகள் கழித்து நானே அந்த மாவட்டக் கழக உறுப்பினர் பதவிக்குப் போட்டியிட்டு வெற்றி கண்டபோது நன்கு உணர்ந்தேன். அன்று வேடிக்கையாகக் கவனித்த தேர்தல் விழா என் வாழ்வில் வினையாகவே வந்து முடிந்தது. நானும் சுமார் பதினைந்து ஆண்டுகள் தொடர்ந்து உறுப்பினராயிருந்த ஒருவரை எதிர்த்துப் போராடவேண்டி இருந்தது. நானும் பலப்பல துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டு ஊர் ஊராகச் சென்று பிரசாரங்கள் செய்தேன். அன்று எனக்கு வியப்பாகத் தெரியவில்லை. ஆனால் இளமையில் வியப்பாகவே தெரிந்தது. எனினும் நான் நின்ற தேர்தலில் வெற்றி பெற்றேன். வாலாஜாபாத் அப்பாவின் அன்றைய தேர்தல் அவருக்குத் தோல்வியையே தேடித் தந்தது.

'அப்பா' அவர்களைப் பற்றிய துண்டுப் பிரசுரங்கள் பலப்பல வகையில் வெளியாயின. அவரை இப்படிக் கைப் பொம்மையாக யார் எப்படி ஆக்கினார்கள் என்பதே எனக்குப் புரியாத புதிராக இருந்தது. அக்காலத்திலிருந்தே திரு. வா. தி. மா. அவர்களைப் பிள்ளைகள் 'அப்பா' வென்றும், பெரியலர்கள் 'வாலாஜாபாத் அண்ணா' என்றும் அழைப்பார்கள். அவர்களைப் பற்றிய துண்டுப் பிரசுரங்களில் அவர்கள் இந்துமத பாடசாலையைத் தோற்றுவித்தமை பற்றியும் விளக்கங்கள் இருந்தன, எதிரிகளும் அவ்வப்போது சில சில இதழ்களையும் துண்டுப் பிரசுரங்களையும் வெளியிட்டனர் என நினைக்கின்றேன். ஏனெனில் அவற்றிற்கு மறுப்பெனும்படி சிற்சில துண்டுப் பிரசுரங்கள் 'அப்பா' சார்பில் வெளியாயின. அவற்றுள் ஒன்றின் தலைப்புத்தான் என் நினைவில் இருந்து இப்பகுதியை எழுத வைத்தது. எதிரி

இவர்களைப் பற்றி ஏதோ எழுதி இருப்பார் என நினைக் கிறேன். அதை மறுக்கும் முகத்தான் பல மறுப்புகளும், மறுப்புக்கு மறுப்புகளும் வெளிவந்தன. அவற்றுள் ஒன்று 'வைர ஆப்பு' என்ற தலைப்பில் வெளிவந்தது. எதிரி கிளப்பிய ஏதோ ஒரு வினாவிற்குத் தக்க பதில் தந்து அவர் வாயடைத்து, ஒன்றும் எழுதாது நிற்கும் நிலையில் அந்த எழுத்தை அமைத்து அதற்கு இப்பெயர் இட்டார்கள் என நினைக்கிறேன். அதற்கும் அவர்கள் மறுப்பு எழுதினார் களோ இல்லையோ என்பது எனக்கு நினைவில் இல்லை. சுமார் இருபதுக்கும் மேற்பட்ட துண்டுப் பிரசுரங்களை ஆயிரக்கணக்கில் அச்சிட்டு ஊர் தோறும் சென்று சென்று கொடுத்துக் கொடுத்து உபதேசம் செய்த போதிலும் இறுதி யாக அப்பா தோல்வியுற்றார்கள்; எதிரி வெற்றி பெற்றார். அப்பா தோல்வியுற்றது சாதாரணம்தான். அத்தோல்வி யைத் தோல்வி எனக் கருதாது சிரித்த முகத்தோடு அதை ஏற்று அன்று முதல் அத்துறைப்பக்கம் நோக்கா நிலையில் உள்ள அவர் உள்ளதைத்தான் நான் அடிக்கடி நினைக் கிறேன். ஒருவேளை அவர்கள் அத்தேர்தலில் வெற்றி பெற்றிருப்பபார்களாயின், தொடர்ந்து அந்தத் துறை யிலேயே அவர்கள் மனம் சென்று பள்ளியைக் கவனியாது விட்டிருக்கலாம். பதவியில் அவர்கள் மேன்மேல் உயர்ந்திருக் கலாம். ஆனால் இந்துமதப்பள்ளி தழைத்து வளர்ச்சியுற்றுச் சிறந்திருக்காதே. இதை நினைக்கும்போது அப்பாவிற்கு அந்தத் தோல்வி தோல்வியே அல்ல; வெற்றிதான் என்று அடிக்கடி நான் சொல்வதுண்டு.

தேர்தல் காலத்தில் அத்தகைய துண்டுப் பிரசுரங்களை யெல்லாம் எழுதியவர் தலைமை ஆசிரியர்தான். அவர் தம் எழுத்தில் விறுவிறுப்பு இருந்ததோ என்னவோ, அப்பா அவர்கள் அவற்றைப் படித்துப் படித்து மகிழ்வார்கள். நான் அவர்கள் வீட்டிலேயே தங்கி இருந்தமையின் அவற்றின் வேலைகளில் நானும் ஈடுபடுவேன். தலைமை ஆசிரியர்

இரவு ஒன்பது மணிக்குக் காஞ்சிபுரத்திலிருந்து அச்சிட்ட வற்றை எடுத்துக்கொண்டு வருவர். ஆசிரியர்களும் பிறரும் அவற்றை இரவோடு இரவாகப் பிரித்து இன்னின்ன ஊருக்கு இவ்வளவு இவ்வளவு என்று தனித்தனி ஏற்பாடு செய்து விடியற்காலை ஐந்துமணிக் கெல்லாம் புறப்படுவார்கள். அதற்குள் அன்றைப் பொழுதில் எதிரி எந்தெந்த ஊரில் எப்படி எப்படி மக்களை மடக்கி வாக்குப்பெற முயல்கின்றார் என்ற செய்திகளைச் சிலர் கொண்டு வருவார்கள். அவர்கள் சொல்லுவது சரியோ பொய்யோ, அந்நேர வேளையில் அது பற்றிச் சிந்திக்க நேரம் இருக்காது. உடனே மறுநாளைக்கு அந்த ஊரிலெல்லாம் நம் ஆட்கள் சென்று இன்னின்ன செய்ய வேண்டும் என்ற திட்டம் உருவாகும். இப்படி ஒரு திங்கள் தேர்தல் கூத்து நடந்தது, முடிவில் வெற்றித்திரு எதிரியை நாடிவிட்டாள். எனினும் 'அப்பா' அவர்கள் அத்தோல்வி யின் அடிப்படையிலேயே என்றென்றும் தம் பெயர் நிலைக்கும் அறப்பணியைச் சிறக்கச் செய்துவிட்டார் எனன லாம். இன்று தமிழ் நாட்டில் வாலாஜாபாத் என்றால் இந்துமத பாடசாலை கூடவே நினைவுக்கு வரும். இன்று சுமார் எழுநூறு பிள்ளைகளுக்கு உணவும் உடையும் உறையுளும் கொடுத்துக் கல்வியைப் புகட்டும் அப்பள்ளியைக் காண்பவர் வியப்புறுவர். நானும் அங்கு செல்லும் போதெல்லாம் அந்தத் தேர்தல் திருப்பு மையமல்லவா, இன்று இத்தனை வேலைகளைச் செய்திருக்கின்றது என்று நினைத்து மகிழ்வேன். தோல்வியால் தொண்டினை வளர்த்த அந்தத் தேர்தல் விந்தை உண்மையிலேயே ஒரு விந்தை அல்லவா!

# 16. சென்னையில் நாடகம்

**நா**ன் வாலாஜாபாத்தில் எட்டாவது படித்துக் கொண்டி ருந்தேன். அப்போது சென்னையில் அகில இந்திய காங்கிரஸ் மகாசபை நடந்தது. 1927 டிசம்பர் என நினைக்கிறேன்.

அதற்குச் சென்று அந்தப் பந்தலில் ஒரு நாடகம் நடிக்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று. நானும் மகிழ்ந்தேன். காங்கிரசைப்பற்றி எல்லாம் அப்போது எனக்கு ஒன்றும் தெரியாது. எனினும் நண்பர்களுடன் கூட்டமாகச் செல்லப் போகும் எண்ணம் சிந்தைக்கு இனிமை தந்தது.. ஏற்பாடுகள் செய்து புறப்பட்டோம்.

நான் அதற்குமுன் இரண்டொரு தடவை சென்னைக்குச் சென்றிருக்கிறேன். என்றாலும் அப்போதெல்லாம் என் தாயாருடன் அடக்க ஒடுக்கமாகவே சென்று வந்திருக்கிறேன். ஆகவே இப்போது மற்றைய மாணவர்களுடன் புறப்பட்டுச் சென்றது ஒரு தனி மகிழ்ச்சிதானே யாகும். வாலாஜாபாத் புகைவண்டி நிலையத்தில் இருந்து சென்னை செல்ல மூன்று மணி நேரங்கள் சென்றன. காங்கிரஸ் மாநாட்டைக் குறித்துப் பல தனி வண்டிகள்கூட இருந்தனவென்று நினைக்கிறேன். எழும்பூர் ஏரிதான் அன்று காங்கிரஸ் நடந்த இடம். இன்று அங்கே ஏரி எண்ணும்படி ஒன்றும் இல்லை. சென்னை நகரமே பல ஏரிகள் சேர்ந்ததுதான் போலும். இன்றும் தியாகராய நகர், நுங்கம்பாக்கம் முதலியன ஏரியில் இருப்பதைக் காணலாம். எழும்பூர் ஏரியும் அப்போது பரந்த நிலப்பரப்பை உடையதாக இருந்தது. இன்று அங்கே எத்தனையோ பெரு மாளிகை களும், சிறு வீடுகளும், குடிசைகளும் உண்டாயிருக்கின்றன. ஆனால் அன்று அந்த நிலையிலில்லை; மின்சார இரெயிலும் கிடையாது. ஏரியின் நடுவில் இருப்புப் பாதை சென்றது. ஒருபக்கம் மாநாட்டுப் பந்தலும், மற்றொரு பக்கம் பலர் தங்க அறைகளும் அமைக்கப் பெற்றிருந்தன. அதற்கெனத் தனி இரெயில்வே நிலையம் முதலியனவும் இருந்தன. நாங்கள் அந்த மாநாட்டுப் பந்தலில் நடிக்க வேண்டும் என்று சொல்லித்தான் 'அப்பா' மாசிலாமணி முதலியார் எங்களைச் சென்னைக்கு அழைத்துச் சென்றார்.

நாங்கள் பத்து மணிக்குச் சென்னை சேர்ந்தோம். எங்கேயோ ஓரிடத்தில் ஒரு சத்திரத்தில் நாங்கள் தங்க ஏற்பாடு செய்திருந்தனர். பகல் உணவுக்குப் பின் நாங்கள் மாநாட்டுப் பந்தலுக்கு அழைத்துச் செல்லப்பெற்றோம். பந்தல் மிகப் பெரியதாகவும் அழகாகவும் இருந்தது. நாங்கள் சென்ற அன்றைக்கு மாநாட்டு நிகழ்ச்சிகள் ஒன்றும் இல்லை. எல்லாம் முதல் நாளே முடிந்துவிட்டன. அப்பா அவர்கள் அந்தப் பந்தலில்தான் எங்களது நாடகத்தை நடிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். ஆனால் நாங்கள் அங்கே சென்றபோது யாரும் எங்களைப்பற்றிக் கவலைப் பட்டதாகக் காணோம். என்றாலும் அப்பாவும் தலைமை ஆசிரியரும் எங்கெங்கோ சென்று வந்தார்கள். அங்குள்ளவர் அனைவரும் மூட்டை முடிச்சுகளுடன் தத்தம் ஊர்களுக்குப் புறப்பட ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். நாங்கள் எல்லோரும் கூட்டமாக அந்த மாநாட்டுப் பந்தலையும் பிறவிடங்களையும் கண்டு கொண்டே அன்றைப் பொழுதைக் கழித்தோம். அன்று அங்கு நாடகம் இல்லை. ஏன்? என்றுமே அந்த இடத்தில் நாடகம் நடக்கவில்லை.

நாடகம் என்று சொன்னேன்; ஆனால் எந்த நாடகம் என்று சொல்லவில்லை அல்லவா! அது ஒரு சீவ காருண்ய நாடகம். மாடும், ஆடும், கோழியும், கொசுவும் கூட்டம் கூடித் தாம் மக்களுக்குச் செய்யும் நன்மைகளை விளக்கி, அத்தனை நன்மை பெறும் மனிதன் அவைகளுக்கு எங்தெந்த வகையில் இன்னல் செய்கிறான் என்பதைக் காட்டும் நிலை ஒரு புறம். உலகில் அரசரும் அமைச்சரும் பிறரும் நாட்டில் மனிதப் பண்பற்று வாழ்கின்ற வாழ்க்கை முறை ஒரு புறம். தவறு செய்கின்றவர்களைத் தண்டனைக் குள்ளாக்கும் இயமன் நாட்டுக் காட்சிகள் ஒரு புறம். இப்படிச் சென்றது அக்கதை என்று நினைக்கின்றேன். முழுதும் நன்றாக நினைவில் இல்லை. மொத்தத்தில் அது ஒரு சீவகாருண்ய நாடகம். நான் பறவை விலங்குகளின் மாநாட்டுக்கு இடப

தேவராகத் தலைமை வகித்தேன். அது மட்டும் நன்கு நினைவிருக்கிறது. என் ஊர்ப் பள்ளியில் கிருட்டினனாக நடித்த பிறகு இந்துமதப் பள்ளியில் அடிக்கடி நடை பெறும் சிறு நாடகங்களில் நான் பங்கு பெறுவது உண்டு. ஆகவே எனக்கு இதிலும் ஒரு முக்கிய பாகமே கொடுத்திருந் தார்கள்.

அன்று நாடகம் இல்லை யாதலால் எங்களில் ஒரு சிலர் இரண்டொரு ஆசிரியர்களுடன் சென்னை நகரைச் சுற்றிப் பார்க்கப் போனோம். என்னென்ன பார்த்தோம் என்பது கூட நினைவில் இல்லை. இரவு தங்கிய இடத்துக்கு வந்து விட்டோம். அப்பா மட்டும் எங்கெங்கோ அலைந்தார். மாநாடு நடத்தியவர்களுள் யாரோ அவருக்கு நாடகம் நடத்த இடம் தருவதாக வாக்களித்தார்கள் போலும். கடைசியில் அப்பா, அவர்களைப் பார்த்தாரோ இல்லையோ எனக்குத் தெரியாது; அந்தப் பந்தலில் மட்டும் நாடகம் நடக்கவில்லை. என்றாலும் சென்னைக்கு வந்து நாடகம் நடக்காமல் திரும்புவதா என அப்பா அவர்கள் திட்டமிட் டார்கள். எப்படியாவது சென்னையில் நாடகத்தை நடத்தத்தான் வேண்டும் என்ற முடிவிலே எங்கெங்கோ சென்றார்கள். இரவு ஒன்பது மணிக்கு மேல் திரும்பி வந்தார்கள். மறு நாளே வேறு எங்கேயோ நாடகம் நடத்த ஏற்பாடு செய்துவிட்டு வந்ததாக மகிழ்ச்சியோடு கூறினார் கள். ஆம்! அப்பா அவர்களுக்கும் அன்றும் சரி இன்றும் சரி, ஒரே ஆசைதான் முக்கியமானது. தமது பள்ளிப் பிள்ளை களை நன்கு பயிற்றி மற்றவர் முன்னிலையில் பேச்சு, நடப்பு, உடற்பயிற்சி ஆகியவற்றில் அவர்கள் பெற்ற திறனைக் காட்டி, அவர்கள் மகிழத் தாம் மகிழ வேண்டும் என்ற ஆசையே அது. ஆகவே இப்படி ஒரு முப்பது பேர் சென்னைக்கு வந்து வீணாகத் திரும்புவதை அவர்கள் விரும்ப வில்லை. எப்படியோ முயன்று யார் யாரையோ பிடித்து ஒரு நாடகத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார்கள்.

மறுநாள் நாடகம் நன்றாக நடைப்பெற்றது. 'கோகலே ஹால்' என்ற இடத்தில் அன்று நாடகம் நடைபெற்றது. அனைவரும் நன்றாக நடித்தனர். நன்றாக நடித்த மூவருக்குப் பரிசுகளும் தந்தனர். எனக்கு இரண்டாவது பரிசு கிடைத்தது. அதற்குரிய நூல்களும் கொடுத்தார்கள். இந்த நாடகத்தை நடத்த ஏற்பாடுகளையெல்லாம் செய்து நல்ல முறையில் உதவியவர் அறிஞர் ஸ்ரீ பால் என்பதை அங்கு அறிந்து கொண்டேன். நான் வளர்ந்து அறிவறிந்த பிறகு அவரோடு நெருங்கிப் பழகினேன். நான் சென்னை சென்ற பிறகு அவர் எங்கள் குடும்ப நண்பராகவே விளங்கினார். உயிர்களின் உறவினராகவே வாழும் அவரை 'ஜீவ பந்து' எனவே அழைத்தனர். அவர் தொண்டு சிறப்பதாக!

எடுத்த பணியை முட்டின்றி முடித்த மகிழ்ச்சியில் அப்பா ஆழ்ந்துவிட்டார்கள். மறுநாளும் நாங்கள் சென்னை யிலேயே தங்கினோம். திருவாளர் ஸ்ரீ பால் அவர்கள் முயற்சியால் எங்களுக்கெல்லாம் நல்ல விருந்துக்கு ஏற்பாடாகி இருந்தது. அன்றோ அல்லது மறு நாளோ வேறொரு இடத்தில் எப்படியாவது மற்றொரு முறை நாடகத்தைச் சென்னையில் நடிக்க வேண்டும் என்று அப்பா முயன்று கொண்டிருந்தார்கள். என்றாலும் முடியவில்லை. எனவே மறுநாள் காலையில் நாங்கள் திரும்பி வாலாஜாபாத்துக்குப் புறப்பட்டோம்.

வரும் வழியில் மாணவர்கள் அனைவரும் ஓரே இடத்தில் உட்கார முடியவில்லை. மாநாட்டுக்கு வந்து அப்படியே சென்னை வேலைகளையும் முடித்துவிட்டுத் திரும்பும் மக்கள் இரெயிலில் அதிகம். எனவே அங்கங்கே நாங்கள் பிரிந்து ஏறிக்கொண்டோம். அத்துடன் வழியில் அப்போதுதான் மின்சார பாதைகளுக்கான வேலைகளும் தொடங்கப் பெற்றிருந்ததென நினைக்கிறேன். அடிக்கடி இரெயில் நின்று நின்று வந்தது. எங்களுடன் வந்த நண்பர் ஒருவர் —என் வகுப்பிலே படித்தவர் என்று நினைக்கிறேன்—

திடீரென வண்டியில் இருந்து இறங்கி வேறு பெட்டிக்கு மாறப்போனார், அதற்குள் இரெயில் புறப்பட்டுவிட்டது. அவர் பாவம்—அந்தச் சிறு வயதில் ஒன்றும் செய்ய முடியாது 'ஓ'வெனக் கதறினார். அனைவரும் எட்டிப் பார்த்தோம். ஆசிரியர்கள் அவர் பெயர் சொல்லி அழைத்தார்கள். அந்த ஆரவாரத்தையும், இளம் பிள்ளை அவ்வாறு அழுவதையும் கண்ட 'கார்டு' வண்டியை மறுபடியும் நிறுத்தினார். வந்த ஆசிரியருள் ஒருவர் இறங்கி அவரை இழுத்து வண்டியில் ஏற்றிக் கையால் முதுகையும் பதம் பார்த்தார் என நினைக் கிறேன். எப்படியோ அவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவர் பெயர் எனக்கு நினைவில்லை. முடிவாக வாலாஜாபாத் வந்து சேர்ந்தோம்.

அன்று மாலை ஐந்து மணிக்குமேல் நான் அனைவ ரிடமும் விடைபெற்றுக்கொண்டு அங்கம்பாக்கம் வீட்டுக்குச் சென்றேன். அன்னையிடம் நசன் பரிசுபெற்ற நூல்களைக் கொடுத்தேன். அவர்கள் அப்படியே என்னைக் கட்டி அணைத்துக் கொண்டார்கள். மறுநாள் ஓர் ஆசிரியர் வந்து நான் நடித்த சிறப்பையும் சென்னையில் பிறர் புகழ்ந்த சிறப்பையும் கூறும்போது அவர்கள் மகிழ்ந்தார்கள். அந்த மகிழ்ச்சி 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்' என்ற குறளுக்கு இலக்கிய மாக இருந்தது என்பதைப் பின்னர் உணர்ந்தேன்.

இவ்வாறு அங்கு இந்து மத பாடசாலையில் கற்ற காலத் தில் பலவாறு நல்ல முறையில் பேசவும் நடிக்கவும் பயிற்றப் பெற்றேன். ஒரு காலத்தில் நான் பேசும் போது தலைமை வகித்த டாக்டர் பி. வரதராசலு நாயுடு அவர்கள் என் பேச்சின் திறம் கண்டு தான் அணிந்திருந்த மாலையை எனக்குச் சூட்டிப் புகழ்ந்தார்கள். நான் அங்குப் பயின்ற காலத்தில் பெற்ற அனுபவமே பிற்காலத்தில் மேடைகளில் பேசும் வழக்கத்தை எனக்கு ஏற்படுத்தியது என்னலாம். இன்றும் அப்பள்ளியை மறவாமல் அடிக்கடி சென்று நிகழ்ச்சி களில் பங்கு கொண்டு மகிழ்கிறேன்.

# 17. இடிந்த கோயில்

எங்கள் ஊர் மிகப் பழமைவாய்ந்த ஊர். ஊர் முழுவதும் வேளாளர்களே வாழ்ந்து வந்தனர். கரிகாலன் காலத்தில் காஞ்சியை அடுத்துள்ள கிராமங்களில் வேளாளர்களைக் குடியேற்றினதாக வரலாறு கூறுகிறது. அக்காலத்தில் குடியேறிய வேளாளர் குடிகளோ இவ்வூரார் என நினைக்கவேண்டியுள்ளது. எங்கள் ஊர் மட்டுமன்று, காஞ்சியைச் சுற்றிலும் இதுபோன்று பல ஊர்கள் வேளாளர் வாழும் ஊர்களாக, இவ்வகையில் இருக்கின்றன என்னலாம். எங்கள் ஊர்க் கோடியில் ஒரு சமணர் சிலையிருப்பதைக் கொண்டு, இவ் வேளாளர்களெல்லாம் ஒரு காலத்தில் சமணராக இருந்து மாறினவர்கள்தாம் என்று கூடச் சிலர் கூறுகிறார்கள். எங்கள் ஊர்ப் பக்கத்தில் உள்ள ஆர்ப்பாக்கம் என்ற ஊரில் ஒரு பெரும் சமணர் கோயிலே இருக்கிறது. அதில் வாழ்கின்ற அத்தனைபேரும் வேளாளர்கள்தாம். அவர்களும் ஒருகால் சமணர்களாக இருந்திருக்கலாம் என்பர். ஏழாம் நூற்றாண்டில் காஞ்சியும் சுற்றுப்புறங்களும் சமணர் வாழிடங்களாக இருந்ததெனப் பல்லவர்தம் வரலாற்றால் அறிகிறோம். பிறகு திருநாவுக்கரசரால் தொண்டை நாடே சைவ சமயத்துக்கு மாற்றப் பட்ட தல்லவா! அந்த நிலையில் இங்கும் சைவம் பரவி இருக்கலாம். கரிகாலன் காலத்தில் சைவர்களாக இருந்து, இடையில் சமணராகிப் பிறகு மீண்டும் சைவர்களான வேளாண் குடிமக்கள் நிரம்ப வாழ்கின்ற ஊர்கள் பல இன்று காஞ்சியைச் சுற்றி இருக்கின்றன என்று கொள்ளல் பொருந்தும்.

இவ்வாறான பழம்பெரும் ஊராக விளங்கும் எங்கள் ஊரில் சமணர் சிலை ஒன்றைத் தவிர வேறு சமணச் சார்புடைய கோயில்கள் ஒன்றும் கிடையா. என்றாலும் எங்கள் ஊருக்குக் கீழ்க்கோடியில் ஊரையெல்லாம் விட்டுத் தள்ளிச் சற்றுத் தூரத்தில் ஒரு பாழான கோயில் ஒன்று உள்ளது. நான் மேலே கூறிய விழாக்கள் நிறைந்த—

போட்டியால் தேர்வு நடைபெறும் கோயில் — ஊர் இடையில் எங்கள் வீட்டுப் பின் பக்கத்தில் இருக்கிறது. அது கட்டப் பெற்று ஒரு சில நூற்றாண்டுகளே கழிந்திருக்க வேண்டும். ஆனால் ஊர் எல்லைக்கு அப்பால் இருக்கும் அந்தப் பழங் கோயிலோ பிற்காலச் சோழர் காலத்தில் கட்டப்பெற்று இருக்கவேண்டும். மிகப் பெரியதாக இருந்து. காலப்போக்கில் அது அழிந்த நிலையில் குறுகி இருக்க வேண்டும் என நினைக்கவேண்டியுள்ளது. பாலாற்றங் கரையில் இருக்கும் அந்தக் கோயிலின் எல்லையை அந்த ஆற்று வெள்ளமே சிறுகச் சிறுகப் பதம் பார்த்து விழுங்கி இருக்க வேண்டும். அக் கோயிலுக்கு ஒரு கல் தொலைவிற்கு உள்ளேயே இருக்கும் திருமுக்கூடலில்தான் பிற்காலச் சோழர் காலத்திய பெருங் கோயில் ஒன்று இருக்கிறது. அதில் உள்ள கல்வெட்டு மூலம் அங்கு பல மருத்துவம் பெற்ற படுக்கை களோடு கூடிய ஒரு மருந்தகமும், ஒரு கல்லூரியும் அச் சோழர் காலத்தில் இருந்ததாக அறிகிறோம். ஒருவேளை இந்தச் சிறிய கோயிலும் அக்காலத்தில் கட்டியதாகவே இருக்கலாம். சுற்றுச் சுவர்கள் ஒன்றும் இன்றேனும், உட்புறச் சுவரில் சிற்சில கல்வெட்டுக்கள் காண்கின்றன. அவற்றையெல்லாம் அரசியல் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் வந்து கண்டு எடுத்துச் சென்றார்கள் என அறிந்தேன். பின்னர் அவற்றைப்பற்றி அந்த அலுவலகத்தில் விசாரித்தபோது யாதொரு தகவலும் கிடைக்கவில்லை. எடுத்த கல்வெட்டுப் படிகள் என்னாயிற்றோ! யார் அறிவார்?

கோயில் அமைப்பு மிகச் சிறியது. ஆற்றங் கரையை ஒட்டி அமைந்த கோயில் அது. ஆற்றில் கரை ஓரமாகக் கோயிலை ஒட்டிச் சில சமயங்களில் சிற்றருவி ஒன்று ஓடிக் கொண்டிருக்கும். கோயிலை மேலும் ஆற்று வெள்ளம் அடித்துப் போகாதபடி கரையில் கற்களை இட்டுச் சிறிது தூரம் கரை கட்டி இருந்தார்கள். இடிந்த கோயில்களி

லிருந்து பலப்பல கற்கள் நாற்புறமும் சிறறிக் கிடந்தன. இப்போதும் பல கற்கள் அங்கே அப்படியே வீழ்ந்து கிடக் கின்றன. அந்த இளமைக் காலத்தில் நானும் என் நண்பர் மற்றொருவரும் அங்கு அடிக்கடி செல்வதுண்டு. மாலையில் பள்ளிக்கூடத்திலிருந்து வந்த பிறகு அங்கே சென்று உட்கார்ந்து கொண்டு எதை எதையோ பேசிக்கொண்டிருப் போம். அந்தக் கற்களும் எங்களுக்கு எத்தனை எத்தனையோ கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கும். சில நாட்களில் பொழுது போவது தெரியாமல் நன்கு இருட்டும் வரையில்கூட இருந்து பேசுவோம்.

அந்தக் கோயிலின் உள்ளே ஒரு சிவலிங்கம் மட்டும் இருந்தது. அதற்கு யாரும் பூசை செய்வது கிடையாது. சில ஆண்டுகளுக்குப் பின் யாரோ அதற்குக் குடமுழுக்கு செய்து ஒருவேளை பூசைக்கு ஏற்பாடு செய்தார்கள் என அறிந்தேன். ஆயினும் தற்போது அதுவும் நடைபெற வில்லை என நினைக்கிறேன். இக் கோயில் மிகப் பழங் காலத்தில் கட்டப்பட்டதாம். எங்கள் ஊர் இரு பிரிவாகத் தனித் தனியாக இருந்து, பிறகு காலப் போக்கில் ஒன்றாக இணைந்த ஊராம். அதில் எங்கள் தெருதான் தனி ஊராம். இந்த ஊரைச் சார்ந்த கோயிலே அது என்பார்கள். எது எப்படியாயினும் எனது இளமையின் உள்ளத்தைப்பற்றி ஈர்த்த ஒரு சில இடங்களில் அக் கோயில் உள்ள இடமும் ஒன்றாகும். அக் கோயிலிலிருந்து பார்த்தால் வடக்கே பரந்த பாலாற்று மணல் தோற்றமளிக்கும். கிழக்கே சற்றுத் தூரத்தே ஒரு கல் எல்லைக்குள் முக்கூடல் என்ற ஊர், பாலாறும், சேயாறும் கூடும் இடமாகும். அதை அடுத்து இருபுறம் சிறு மலைகள்; அவற்றிடையில் நுழைந்து செல்லும் பாலாற்றின் தோற்றம். தெற்கே பரந்த வயல் வெளிகள். மேற்கே நல்ல சோலையும் ஊரும். மாலை வேளைகளில் அச் சோலையில் ஆயர் மாடுகளைக் கொண்டு வந்து மடக்கி வைத்திருந்து, பொழுது சாயச் சாய மெள்ள மெள்ள அவற்றை வீட்டிற்கு ஓட்டிக்

கொண்டு போவார்கள். இப்படிப்பட்ட இயற்கைச் சூழல் நிலையில் அமைந்த அக்கோயில் என் உள்ளத்தில் இடம் பெற்றதில் வியப்பில்லை அல்லவா!

கோயிலில் இலிங்கம் மட்டும்தான் இருந்தது என்றேன். அவ்விலிங்கத்துக்கு வானீஸ்வரர் என்று பெயர். அக்கோயிலுக்கும் 'வானீஸ்வரர் கோயில் என்றே பெயர். நானும் என் நண்பரும் மாலையில் அங்கே சென்று ஒவ்வொரு நாள் ஒவ்வொரு கல் மீது உட்காருவோம். ஒரு நாள் ஒரு பழம் கற்சிலையின் மீதே உட்கார்ந்து விட்டோம். எப்படியோ அவ்விக்கிரகத்தைப் புரட்டிப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று, சிறுவர்களால் என்ன செய்ய முடியும்? தூரத்தே மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஒரு சிலரைக் கூவி அழைத்தோம். அவர்கள் வந்தார்கள். அனைவருமாகச் சேர்ந்து புரட்டினோம்; நன்றாகப் புரட்டிப் பார்த்தோம். முகமும் பிற பகுதிகளும் மண்ணால் மூடப்பட்டிருந்தன, அன்று அதற்குள் இருட்டிவிடவே ஒன்றும் செய்யாது வீடு திரும்பிவிட்டோம்.

மறுநாள் மாலை அங்கு செல்லும் போது கையில் ஒரு குடத்துடன் சென்றோம். பக்கத்திலிருந்த ஓடையில் நீர் முகந்து கொண்டு வந்து மண் மூடியிருந்த அந்தச் சிலையின் மீது ஊற்றினோம். பல நாளாகப் பிடித்து மூடிய அந்த மண் சிறுகச்சிறுக ஊறிக் கொண்டு வந்தது, சிறிது சிறிதாக எல்லா மண்ணையும் கல்லி எடுத்துவிட்டோம். பிறகு நோக்கும் போது அது ஒரு திருமால் உருவாகக் காட்சி அளித்தது. இருபுறமும் சங்கும் சக்கரமும் தோன்ற முகமும் களையோடு பொருந்தியது. உயரம் சுமார் நான்கடி இருக்கலாம். அந்த உருவை நோக்கி நான் இரக்கப்பட்டேன். 'பாவம் எந்தக் காலத்தில் யாரால் செய்யப் பெற்றதோ; எத்துணைபேர் பக்தியோடு போற்றிப் பாடினார்களோ; இன்று இத்தனை ஆண்டுகளாகக் கேட்பாரற்று முகத்தை

மண்ணுள் புதைத்துத் தன்னையே மறந்து வாழவேண்டிய நிலை இச்சிலைக்கு ஏற்பட்டதே' என நினைத்து உண்மையில் வருந்தினேன். மக்களுள்ளும் ஒரு சிலர் சில காலத்தில் உயர்ந்து வாழவும் அவர்களே காலப் போக்கில் இருக்கும் இடம் தெரியாமல் நிலை கெடவும் காண்கின்றோம். கடவுளரும்—அவர் உருவம் தாங்கிய சிலைகளும் கூட இவ்விதிக்கு உட்பட்டனவே போலும் என நினைத்தேன்.

அந்தச் சிலையை அப்படியே விட்டுவைக்க எனக்கு மன மில்லை. அங்கே அந்தக் கோயிலிலோ யாதொரு பூசனையும் கிடையாது. எனவே அதை எப்படியாவது அப்புறப்படுத்தி நல்ல இடத்தில் வைக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டேன். நண்பர் பலருடன் பேசினேன். எங்கள் தெருக் கோடியில் ஒரு மாரியம்மன் கோயில் இருந்தது. அதன் ஒரு பக்கத்தில் தனியாக அதைக் கொண்டு வந்து வைக்க முயன்றேன். பெரியவர்களில் சிலரும் அவ்வுருவத்தை வந்து கண்டபின் அதன் முகத் தோற்றத்தால் கவரப் பெற்றனர். பின்னர் அவர்களே முன்னின்று அதைக் கொண்டுவந்து மாரியம்மன் கோயில் தாழ்வாரத்தில் நிற்க வைத்தனர். அன்று முதல் நானும் என் நண்பர்களும் அதற்கு எண்ணெய் முழுக்கு முதலியன செய்து வந்தோம். விரைவில் அது கோயிலில் உள்ள திருமாலே என்னுமாறு அழகுடன் பொலிந்தது. பிள்ளைகளாகிய நாங்களே அதற்கு மாலைகள் இட்டும், பிற பண்டங்கள் படைத்தும், வேடிக்கை யாக விழாக்கள் நடத்தி வந்தோம். இதே முறையில் வேறு இரண்டொரு கற்சிலைகளும் கூட அந்த இடிந்த கோயிலில் இருந்து கொண்டுவரப்பட்டு, சேர்த்து வைக்கப்பட்டன. என்றாலும் அந்தத் திருமால் சிலைக்குக் கிடைத்த பெருமை பிற சிலைகளுக்குக் கிடைக்கவில்லை என்னலாம். இன்று அந்தத் திருமால் சிலை எங்களூர் அம்பலவாணர் கோயிலின் வடக்குச் சுற்று வழியில் ஒரு முக்கியமான இடத்தில்

பொருத்தப் பெற்று வழிபடுகின்ற அன்பர்களுக்கு வரம் தரும் கடவுளாக, பிற தெய்வங்களோடு தெய்வ உருவாக, சிறப்போடு பூசனை ஏற்று நிமிர்ந்து நிற்கின்றது. கோயிலுக்கு நான் செல்லும்தோறும் அங்குச் சில நிமிடங்கள் என்னை மறந்து நிற்பேன். அந்தச் சிலையை அக்கோயிலில் கொண்டுவைக்கும் போது நான் ஊரில் இல்லை. எப்படியோ யாருடைய முயற்சியாலோ அது உள்ளிடம் பெற்றுவிட்டது. என்றாலும் என்னை அந்தச் சிலை ஈர்த்துக் கொண்டது. அதன் அருகில் செல்லும் போது அப்படியே நிற்பேன். அது வாய்திறந்து பேசுமானால் மண் மூடிக் கிடந்த தன்னை நிமிரச் செய்து இந்த நிலைக்குக் கொணர்ந்த என்னை வாழ்த்தாதிருக்குமா! எனக்கு வேண்டாம் அந்த வாழ்த்தும் போற்றலும். ஆயினும் அவ்வுருவைக் காணும் தோறும் என் உள்ளங் குளிரும். எந்தக் காலத்தில் யாரால் செய்யப்பெற்ற உருவமோ அது. அந்தக் காலத்தில் எத்தனை பேர் அதன் மலரடியில் தவங்கிடந்து வரம் பெற்றார்களோ! இடையில் அதன் நிலைகெட மண்ணுள் மூழ்கி எத்தனை ஆண்டுகள் அது தவம் கிடந்ததோ! இதோ இன்று மறுபடியும் அச்சிலை வரந்தரு தெய்வமாக அம்பலவாணர் திருக்கோயிலில் அழகுற விளங்குகிறது. அதே வேளையில் இன்னும் நிலை இழந்த தெய்வச் சிலைகள் பல அந்த இடிந்த கோயிலைச் சுற்றிக் கிடக்கின்றன; அவற்றை நோக்க இரக்கம்தான் வருகிறது. இப்போது நான் அடிக்கடி ஊருக்குப் போவதில்லை. போகும் போதெல்லாம் அந்த இடிந்த கோயில் பக்கம் செல்ல வேண்டும் என நினைப்பதுண்டு; முடிவதில்லை. என்றாலும் வழியிலே உள்ள சோலைகளையெல்லாம் மக்கள் வெட்டி வீழ்த்திவிட்டமையால் எங்கள் வீட்டு வாயிற்படியிலிருந்தே அந்தக் கோயிலைக் காணமுடியும். நான் தெருவில் சில விநாடி நின்று, அக் கோயிலை வணங்கி உள்ளே செல்வேன். ஆம்! அந்த இடிந்த கோயிலும் அதில் உள்ள கல்வெட்டுகளும், நிலை கெட்ட சிலைகளும் எத்தனை எத்தனை உண்மைகளைத் தம்முள் மூடிவைத்திருக்கின்றனவோ? யார் அறிவார்!

# 18. பயங்கர இரவு

வாலாஜாபாத்தில் எட்டாம் வகுப்புப் படித்து முடித்த வுடன் என் தாயார் என்னை மேல் வகுப்புக்குச் செல்ல வேண்டாம் என்று வற்புறுத்தினார்கள். எனது குடிக்கு நான் ஒரே மகன் ஆனதாலும், வீட்டில் வேலைகளைக் கவனிப்பதற்கு வேறு யாரும் இல்லை ஆதலாலும் என் தந்தையார் இறந்த பிறகும் கூட என் பெரியம்மா தனி யாகவே இருந்தமையாலும், ஊரில் பல்வேறு குழப்பங்கள் இருந்தமையாலும் என்னை அன்னையார் வெளியூருக்கு அனுப்ப விரும்பவில்லை, வெளியூர் செல்வார்களானால் இளம் பிள்ளைகள் கெட்டுவிடுவார்கள் என்ற நம்பிக்கையும் உண்டு. அதுவும் காஞ்சிபுரத்துக்கு எங்கள் ஊரிலிருந்து சென்ற இரண்டொரு பிள்ளைகள், படிக்காது வேறு வகை யாகக் கெட்டுத் திரும்பினார்கள் என்பதை என் அன்னையார் கண்டார்கள். ஆதலால் வெளியூர்களுக்கு அனுப்ப அவர்கள் இசையவில்லை, என்றாலும் நான் எப்படியாவது ஒரு பத்தாவது வரையாவது படித்து விடுகிறேன் என்று மன்றாடி னேன். என் பாட்டியாரும் எனக்குத் துணையாகப் பேசி னார்கள். தான் உடன் வந்து சமைத்துச் சோறிட்டுப் பாது காத்துக் கொள்வதாகவும், காஞ்சிபுரத்துக்கன்றிச் செங்கற் பட்டுக்கு அனுப்பினால் நல்லது என்றும் சொன்னார்கள். அப்போதும் என் அன்னையார் இசையவில்லை. அவர் களுடைய எண்ணமெல்லாம் ஒன்றேதான். எப்போதும் என்னைத் தன் மேல் பார்வையில் வைத்துக்கொண்டு, நல்ல வனாக ஆக்கி வளர்க்கவேண்டும் என்று முடிவு செய்தார்கள். நான் செய்வதறியாது திகைத்தேன். பிறகு வாலாஜாபாத் தில் 'அப்பா' வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்களிடம் முறையிட்டேன். அவர்கள் ஒரு நாள் ஊருக்கு வந்தார்கள். அம்மாவைக் கண்டார்கள். 'தம்பி பரமசிவம் கெட்டிக்காரப் பிள்ளை. மேலே படித்தால், நன்றாக முன்னுக்கு வரும். ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். அப்படி ஒன்றும் கெட்டு

விடமாட்டான்' என்று சொல்லி, நெடுநேரம் பேசிப் பிறகு என் அன்னையாரை இணங்க வைத்தார்கள். 'தன் மகன் நன்றாகச் சிறக்க இருக்கிறான்' என்பதை அறியின் எந்த அன்னைதான் விரும்பமாட்டார்கள்? அம்மாவும் 'சரி' என்றார்கள். என்றாலும் பிறகு என்னை அவர்கள் செங்கற் பட்டு அனுப்பும் போதும் மிகவும் வருந்தினார்கள். எப்படியோ ஒரு நல்ல நாளில் நான் என் பாட்டியாரை உடன் அழைத்துக் கொண்டு செங்கற்பட்டு சென்று, கொலம்பாஸ் உயர்நிலைப் பள்ளியில் நான்காவது படிவத்தில் (ஒன்பதாம் வகுப்பு) சேர்ந்துவிட்டேன்.

செங்கற்பட்டு மாவட்டம் என்ற பெயர் இருப்பினும், செங்கற்பட்டில் மாவட்டத் தலைமை அலுவலகம் ஒன்றும் கிடையாது. அது ஒரு சிறிய பேரூர்; அவ்வளவே. அங்கு அக்காலத்தில் இரண்டு உயர்நிலைப் பள்ளிகள் தாம் இருந்தன. எங்கள் ஊரில் இருந்தே ஒருவர் அங்கே சென்று பயின்று வந்தார். அவர் துணையைப்பற்றிக் கொண்டு நானும் எப்படியோ அங்கு சேர்ந்து படிக்கத் தொடங்கி விட்டேன். செங்கற்பட்டில் ஓர் ஒதுக்குப்புறமாக உள்ளது பெரிய நத்தம் என்ற பகுதி. அதில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டோம். ஒரே அறையில் ஒரு மூலையில் பாட்டியார் சமைப்பார்கள். ஒரு மூலையில் நான் எனது பெட்டியை வைத்துக் கொண்டு படிப்பேன். சில சமயங்களில் வெளித் தாழ்வாரத்திலும், தெருத் திண்ணை யிலும் கூடப் படிப்பதுண்டு. பாடங்கள் எல்லாம் ஆங்கிலத்தி லேயே இருந்தமையின் முதலில் சற்றுக் கடினமாகவே இருந்தன. போகப்போகச் சிறிது சிறிதாகப் புரிந்துகொண் டேன். என் வகுப்பிலே பயிலும் சில மாணவர்கள் என் வீட்டுக்கு அருகிலேயே குடியிருந்தார்கள். அவர்களும் என்னைப்போலக் கிராமங்களிலிருந்து படிக்கும் பொருட்டா கவே அங்கு வந்து குடியிருந்தவர்கள். அவர்களோடெல்லாம்

கலந்து ஓரளவு பயின்று கொண்டே வந்தேன் என்றுதான் சொல்ல வேண்டும்.

குடியிருந்த வீடு ஒரு சிறு அறைதான். இரவில் மற்றொரு பக்கத்தில் இருந்த தாழ்வாரத்தில் படுத்துக் கொள்வேன், பாட்டியார் அந்த அறையிலேயோ, அதற்கடுத்த சிறு தாழ்வாரத்திலேயோ படுத்துக் கொள்வார்கள். பரந்த பெருவீடுகளில் பழக்கப்பட்டு வாழ்ந்த எங்களுக்கு அந்தச் சிறு அறை வாழ்க்கை மிக்க துன்பத்தைத்தான் கொடுத்தது. என்றாலும் அதற்கு மேல் எங்களால் ஒன்றும் செய்ய முடியாதே! இன்று கல்விக்காக ஆயிரக் கணக்கில் செலவிடும் பல மாணவர்களைக் காண்கிறேன். ஆனால் அன்று பொதுவாக அத்துணைச் செலவு செய்தவர் இல்லை என்றே எண்ணுகிறேன். மேலும் என் அன்னையார் திங்களுக்கு இவ்வளவு பணம் என எண்ணி வரையறுத்துத்தான் கொடுப்பார்கள். பெரிய இடமாக வாடகைக்குப் பிடிப்பதென்பது இயலாது போயிற்று. மூன்று ரூபாய் வாடகை கொடுத்தோம். எப்படியோ புதுக்குடித்தனமும் புதுப்படிப்பும் நடந்து கொண்டே வந்தன. எங்கள் ஊரிலிருந்து அடிக்கடி யாராவது வந்து கொண்டே இருப்பார்கள். அவர்கள் வழி அம்மா தின்பண்டங்களையும் பிற தேவையான பொருள்களையும் கொடுத்து அனுப்புவார்கள். நாட்கள் இவ்வாறு கழிந்தன.

ஒரு நாள் இரவு நான் உணவு கொண்டுவிட்டுத் திண்ணையில் என் நண்பர்களுடன் உட்கார்ந்து பேசிக்கொண்டே இருந்தேன்; நேரம் போவதே தெரியவில்லை. இரவு பத்து மணிக்கு மேலாகியிருக்கும். பாட்டி படுத்து ஒரு தூக்கம் தூங்கி எழுந்திருந்திருப்பார்கள். அவர்கள் வந்து என்னையும் மற்றவரையும் படுக்கச்சொன்னார்கள். நான் உள் தாழ்வாரத்தில் வந்து படுத்துக் கொண்டேன். ஏனோ தூக்கம் வரவில்லை. நெடுநேரம் விழித்துக்கொண்டிருந்தேன். சிறிது நேரம் எதை எதையோ எண்ணிக் கொண்டேயிருந்து அப்படியே உறங்கிவிட்டேன் என நினைக்கிறேன்.

நான் அலறிக் கண் விழித்தேன். பக்கத்தில் பாட்டி உட்கார்ந்து கொண்டு என்னைத் தட்டிக்கொண்டிருந்தார்கள். நான் எழுந்து உட்கார்ந்து கொண்டேன். நான் ஏதேதோ சொல்லிக் கூச்சலிட்டதாகவும், என்னை எழுப்பவே பாட்டி அருகில் வந்து உட்கார்ந்து தட்டியதாகவும் கூறினார்கள். என்னை 'என்ன?' என்று கேட்டார்கள். அப்போது விடியும் நேரம் ஆகிவிட்டது என்று அறிந்தேன். வீட்டுக்கார அம்மா வும் அவர்கள் பிழைப்பாகிய இட்டிலி சுட்டு விற்கும் வேலைக்காக எழுந்துவிட்டார்கள். பாட்டியார் நான் ஏன் அலறினேன் என்று கேட்டார்கள். ஏதோ பயங்கரக்கனவுகள் கண்டேன் என்றும் அந்தப் பயத்தில் கூச்சலிட்டேன் என்றும் உண்மையைக் கூறினேன். என்னை எழுந்து கைகால் கழுவிக் கொள்ளச் செய்து, திருநீறு இட்டு மறுபடியும் படுத்துக் கொள்ளச் சொன்னார்கள். நான் முன்னாள் இரவு நெடுநேரம் தெருவில் பேசிக்கொண்டு இருந்தமையால் தெருவில் எதையோ கண்டு பயந்திருப்பேன் என அவர்கள் நினைத்து விட்டார்கள்.

நான் மறுபடியும் படுத்துக் கண்ணை மூடினேன். உறக்கம் வருவதாக இல்லை. ஏதேதோ நினைவுகள் ஒன்றன் பின் ஒன்றாக வந்தன. என் தந்தையார் இறந்த நினைவு வந்தது. வீட்டில் தாயார் தனியாக இருப்பார்களே என்ற எண்ணமும் பிறந்தது. அவர்களைப்பற்றிக் கண்ட கனவே என்னை அப்படி நடுங்க வைத்தது. என் தாயார் அடிக்கடி வீட்டில் சொல்வதுண்டு. ஏதாவது வீட்டிலோ, ஊரிலோ கெடுதல் நேருமாயின் அதை அவர்கள் முன் கூட்டியே கனவினாலோ, பிற வழியாகவோ அறிவார்களாம்! நானும் அன்று கண்ட கனவை அப்படி ஏதாவது நிகழுதற்கு முன் எச்சரிக்கையோ என எண்ணிப் பயந்தேன்.

நாங்கள் செங்கற்பட்டுக்கு வந்துவிட்ட பிறகு வீட்டில் தனியாக என் அன்னையார் இருந்தார்களல்லவா! அவர்கள்

நோய்வாய்ப்பட்டது போலவும் அருகில் இருந்து ஒருவரும் ஆறுதல் சொல்லவில்லை என்ற காரணத்தால் அவர்கள் வருந்தினது போலவும், அந்தத் துயரத் திடையில் நோயும் வருத்த அவர்கள் வாடி வாடி உயிர்விட்டது போலவும் கண்ட கனவினாலேதான் அப்படி அஞ்சி அலறிக் கூச்சலிட்டேன், என்றாலும் இக்கனவைப் பாட்டியிடம் நான் சொல்லவில்லை. சொல்ல நா எழவில்லை. பெற்றெடுத்துப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்த அன்னையின் மறைவை யார்தான் சகிக்க முடியும்? கனவிலே நடந்த நிகழ்ச்சியாயினும் அது நனவிலே நடக்கக்கூடாதே என்ற கவலைதான் எனக்கு அதிகமாகியது. அந்த நிலையில் நான் உறங்குவது எங்கே?

இரண்டு நாட்களுக்கு முன்தான் எங்கள் ஊரிலிருந்து ஒருவர் வந்திருந்தார். அவர் மூலம் அம்மா முறுக்கும் நெய்யும் கொடுத்தனுப்பி இருந்தார்கள். நன்றாக இருந்தார்கள் என்றும் யாதொரு நோயும் அவர்களுக்கு இல்லை என்றும் அவர் சொன்னார். அப்படி இருக்க நான் கனவில் கண்டபடி இரண்டு நாளில் தாயார் எப்படி நோயுற்று இறப்பார்கள் என்று எண்ணினாலும் சிந்தை தளர்ந்தேன். தாயின் பிரிவு நினைக்கமுடியாத ஒன்றாக நெஞ்சை வருத்தியது. பெற்ற மகன் எங்கேயோ இருக்க, தனி வீட்டில் கேட்பார் இல்லாத அனாதையாகவா என் அன்னை இறந்திருப்பார்கள் என்று கேட்டது என் நெஞ்சம். ஐந்தாறு திங்களுக்கு முன்தான் தந்தையை இழந்த நான்—தந்தையாய்த் தாயாய் எல்லாமாய் இருந்த என் அன்னையை இழப்பதென்றால்—என்னால் நம்பவே முடியவில்லை. இந்த எண்ணங்களுக்கு இடையில் நான் மறுபடியும் உறங்கவில்லை. பொழுது புலர்ந்துகொண்டே இருந்தது. மனம் மட்டும் ஏதோ அச்சத்தால் அலறிக் கொண்டிருந்தது. ஒருபுறம் அன்னைக்கு யாதொரு தீங்கும் இருக்காது என்ற உணர்வும் அறிவுறுத்திக்கொண்டே இருந்தது. என்றாலும் ஏதோ ஒரு

பெருந் தீங்கு நடைபெற்றிருக்க வேண்டும் என்று அந்தப் பயங்கர இரவும் அதில் கண்ட கனவும் எனக்குச் சொல்லிக் கொண்டே இருந்தன. நான் அந்த நாள் முழுதும் ஊரிலிருந்து செய்திகளைக் கொண்டு ஆள் வருவானோ என்று பார்த்துக் கொண்டே இருந்தேன். அப்படி ஒன்றும் அன்னையைப் பற்றிய அவலச் செய்தியை யாரும் கொண்டு வரவில்லை, என்றாலும் நான் கனவு கண்ட அதே வேளையில் எங்கள் ஊரில் ஒரு பயங்கரச் சண்டை நடை பெற்றுப் பல கொலைகள் நடந்தன என்ற செய்தியை யாரோ வந்து பாட்டியினிடம் சொல்லிக்கொண்டிருந்தான். என்ன? எப்படி? என்பன திட்டமாகத் தெரியவில்லை. என்றாலும் பயங்கர இரவின் கனவினது பயன் வேறுவகையில் பலித்து விட்டதே என எண்ணினேன். இரண்டொரு நாட்களுக்குள் ஊர் நிகழ்ச்சி முழுதும் வந்துவிட்டது.

# 19. கோயில் சண்டை

எங்களூர்க் கோயில் பற்றியும் அதில் நடந்த விழாக்கள், தேர்தல் பற்றியும் முன்னே பல முறை கூறியுள்ளேன். அந்தக் கோயிலால் தொடங்கிய சிறு சண்டை பெரிதாகி ஊருக்குள் துப்பாக்கிச் சத்தம் கேட்க, அதனால் சிலர் இறக்கப் பலர் காயமுற நேர்ந்ததை நினைத்தாலும் நெஞ்சு நடுங்குகிறது. எல்லாரும் ஒன்றித் தொழவேண்டிய இறைவனின் பொருட்டுத் தமக்குள் தாமே மாறுபட்டுக் கலகம் விளைத்துக் கொலையும் செய்யத் துணிந்த மக்கள் நிலையை என்னென்பது? கோயில் அறக்காப்பாளர்கள் தம் மனம்போன போக்கிலே போக வாய்ப்பும் வழியும் அந்தக் காலத்தில் இருந்தன. எனவே அதற்குப் போட்டியும் பலமாக இருந்தது. இந்தக் காலத்திலும் ஒரு பயனும் இல்லை என்றாலும்கூட, வெறும்

படாடோப வாழ்வுக்காகப் பலர் பஞ்சாயத்துத் தேர்தலில் தொடங்கிப் பாராளுமன்றத் தேர்தல் வரையில் போட்டி யிட்டுப் பணத்தைப் பணமென்று பாராது செலவிடுவதைக் காண்கிறோம். தர்மகர்த்தாவானால் பலவித சௌகரியங் களைத் தங்களுக்கும் தங்களைச் சார்ந்தவர்களுக்கும் செய்து கொள்ளும் வாய்ப்பு இருக்குமானால் ஏன் அவர்கள் போட்டி இட மாட்டார்கள்? அதிலும் ஒரே இனத்தவர் என்று கூறிக் கொண்டு தம் வீட்டு விழாக்களில் ஒன்றிக் கலந்துண்ணும் அவர்கள் இக் கோயிலால் இரண்டு பட்டார்கள் என்றால் அதனிடம் அவர்கள் கொண்டுள்ள மோகத்தை என்னென்பது?

இன்று கோயில்கள் அரசாங்க உடைமையாகிவிட்டன. அதற்கென அலுவலாளர்களை நியமித்துவிட்டு மேற்பார்வை செய்வர். அந்த நாளிலோ அத்தகைய ஏற்பாடுகள் கிடையா. ஊரில் உள்ளவர்கள் தங்களுக்குள்ளாகவே ஒருவரை அதற்குத் தர்மகர்த்தராகும் பதவிக்குத் தேர்ந்து வைத்து, அவர்கள்வழி கோயிலை ஆள வேண்டும். அதனால்தான் அத்துணைப் போட்டியும் போரும் உண்டாயின என்னலாம். என்றாலும் ஒரே இனத்தவராகக் கூறிக் கொண்டு, இப்படிக் கொலை அளவு செல்லும் கோயில் விவகாரத்தை பெருக்கச் செய்து வாழும் நெறி அநாகரிக நெறிதானே.

எப்படியோ எங்கள் ஊரில் இந்தப் போட்டியும் வலுவடைந்துவிட்டது. தெருவில் அடிக்கடி சண்டை நடப்பதும் உண்டு. ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்பார்கள். எங்கள் ஊரில் அந்தப் பழ மொழி மெய்யாகாவிட்டாலும், சேரி வாழும் மக்களுக்கு அது கொண்டாட்டமாகவே இருந்தது என்னலாம். வேளாளர் தம்முள் மாறுபட்டால் மாற்றானை ஏசவும் பேசவும்—ஏன்? —அடிக்கவும் கூட அந்தச் சேரி வாழ்வோரை அழைக்கும் வழக்கத்தில் அவர்கள் ஒருபடி உயர்ந்தவரானார்கள் என்ன லாம். அவர்களை—பாவம்—முன்னிறுத்தி வேளாண் குடி

மக்கள் தத்தம் கட்சிக் காரியத்தைச் சாதித்துக் கொண்டார் கள்- இன்றும் அன்றைய அந்தச் செயலே அவ் வேளாளர் வாழ்வை ஊரில் பாழாக்கிவிட்டது என்னலாம்.

சிறு சிறு சண்டைகளாக வளர்ந்த ஊர்ச் சண்டை -- கோயில் வம்பு—கொதித்துக் கொதித்துப் பெரும் போராக மாறிவிட்டது. சிந்தாக எழுதித் தெருவில் அரையணாவிற்குப் பாட்டுப்பாடி விற்கும் அளவிற்கு ஊரில் போர்மூண்டு விட்டது என்னலாம். நான் ஊரில் என் இளமை தொட்டே வாழ வில்லை. வாலாஜாபாத்தில் படித்தபோது, பெரும்பாலும் அங்கேயே தங்கினேன். பிறகு உயர்நிலைப் பள்ளியில் பயிலு வதற்காக நான் செங்கற்பட்டு சென்றுவிட்டேன். ஊரில் இருந்திருப்பேனானால் எத்தனையோ கொடுமைகளை நான் கண்டிருக்கக்கூடும். அந்த நிலை எனக்கு உண்டாகவில்லை என்றாலும் அவ்வப்போது ஊரில் நடைபெறும் கொடுமை களை நான் கேட்டுக்கொண்டே இருந்தேன். முன் பகுதியில் நான் கண்ட பயங்கரக் கனவின் பலன் மறுநாள் எனக்குக் கிட்டிற்று. அதுவே ஊரில் நடந்த இந்தக் கொலை. நான் எந்நேரத்தில் அக்கனவினைக்கண்டு கண்விழித்தேனோ அதே வேளையில்தான் அங்கு என் சொந்த ஊரில் ஒன்று. இரண்டு, மூன்று என்று துப்பாக்கிக் குண்டுகள் மக்கள் உயிரைப் பருகிக் கொண்டிருந்தன.

இருவேறு கட்சிகளுக்கு இடையில் இருந்த கோயிற் பகைமை ஊர்ப்பகையாக மாறிற்று. சிறிய கட்சி, பெரியகட்சி என்று இரு கட்சிகள் உருவாயின. சிறிய கட்சி முதலியார்கள் தாம் அளவில் சிறியவராக இருந்தமையின் உடன் துணைக்குச் சேரியாரை அழைத்துக் கொண்டார்கள். கட்சிக் காரர்கள் தனிமையில் வெளியூர் செல்லும்போது மற்றவர் அவர்களை நையப்புடைப்பர். பதிலுக்குப் பயன் கிடைக்கும். இந்தப் போராட்டத்தில் சேரியில் வாழ்ந்த பெருவாரியான மக்கள் சிறிய கட்சியின் துணையாட்களானார்கள்.

ஆனாலும் ஊரில் பெரும்பாலான நிலம் பெரிய கட்சியாருக்கே உரிமையாக இருந்தது. ஆகவே அவர்கள் யாரும் நில சம்பந்தமான வேலைகளைச் செய்யச் சேரியாரை வைத்துக் கொள்ளவில்லை. நிலத்தில் உழவும் அவர்களை விடவில்லை. தாங்களே முன்னின்று ஏர் ஓட்டவும் துணிந்துவிட்டனர். இந்த நிலை சேரி வாழ்மக்கள் உள்ளங்களில் புது உணர்ச்சியை அளித்தது. இன்று நாட்டில் நாம் காணும் 'கிசான்' போராட்டங்கள் அன்று கிடையா! உழுபவனும் நிலக்காரனும் பண்பின் வயப்பட்டு ஒன்றிக் கலந்தே வாழ்ந்தார்கள். அவர்களுக்குள் பிணக்கும், சட்டமும், நீதி மன்றமும் பிற வேறுபாடுகளும் கிடையா! எனினும் எங்களூரில் உள்ளூர்க் கலகத்தில் சேரிவாழ் ஏழைமக்கள் சேரத் துணிந்தார்கள்.

ஊரில் உள்ள பெரிய கட்சி முதலிமார்களெல்லாம் ஒரு நாள் தத்தம் வயலில் தாமே ஏர் கட்டி உழத் தொடங்கினார்கள். தூரத்தே சேரியார் நின்று கண்டுகொண்டே இருந்தார்கள். பாவம்; அவர்கள் மேல் பிழை இல்லை. பின்னால் சிறிய கட்சியைச் சேர்ந்த முதலியார் ஒருவர் அவர்களைத் தூண்டினார். அவர்கள் வயலுள் புகுந்து உழுது கொண்டிருந்தவரை அடித்தும் கத்தியால் கீறியும் பலவகைத் துன்பம் செய்து ஏர்களை அவிழ்த்தும் உழாமல் செய்து விட்டார்கள். அன்று காலை நிகழ்ந்த இச் சிறு வினைப் பொறி இரவில் பெருநெருப்பாக மூண்டுவிட்டது.

ஊரில் உள்ள பெருந் தலைகள் ஒன்றுகூடின. தம்மை அவமானப்படுத்தியவரை ஊரிலேயே வாழவிடக் கூடாது என நினைத்தார்களோ என்னவோ, அனைவரும் அன்றிரவே அதற்குக் கழுவாய்த் தேட முயன்றனர். யார் யார் முன்னின்றார்கள்; எவ்வெவ்வாறு சூழ்ச்சி செய்தார்கள் என்பனவெல்லாம் எனக்குத் தெரியாது. எப்படியோ அன்று இரவு ஊரே போர்க்களமாகிவிட்டது என்று சொன்னார்கள். நான் அன்று அங்கு இருந்திருப்பேனாயின் அலறிப் புடைத்து அல்லலுற்றிருப்பேன். அந்தப் பயங்கர இரவில்

யார் யார் என்னென்ன செய்தார்களோ! அந்த அம்பல வாணன்தான் அறிவார். போர் மூண்டுவிட்டது. சேரியார் விரட்டப்பட்டனராயினும், இறுதியில் ஒரு வீட்டில் இருந்து வெளிப்பட்ட துப்பாக்கிக் குண்டு, ஊரில் சிலர் உயிரைக் கொண்டு, பலர் உடலையும் காயப்படுத்திவிட்டது. பிறகு ஒரே அமளி—போலீசு வந்திருக்கும். மேல் ஏதேதோ நடை பெற்றிருக்கும். வழக்கு மன்றம்—விசாரணை—முடிவு—இப்படிப் பலப்பல.

மறு நாள் செங்கற்பட்டில் எங்கள் வீட்டிற்கு ஆள் வந்தது. அதற்குள் ஊர் நிகழ்ச்சியைப்பற்றிப் பலப் பல்வாறு தகவல்கள் வந்துகொண்டே இருந்தன. என் பாட்டியார் எல்லாவற்றையும் கேட்டுக் கேட்டுக் கண்ணீரை ஆறாகப் பெருக்கினார்கள்.—அவர்கள் அந்த ஊரில் நன்றாக வாழ்ந்த வர்கள். அந்த ஊரில் வாழ்ந்த அத்தனைக் குடும்பங்களும் ஒரே குடும்பம் என்னுமாறு பலகாலம் கூடி வாழ்ந்ததை அவர்கள் கண்ணாலேயே கண்டவர்கள். அவர்தம் கண் முன்பே இத்தகைய கொடுமை நடப்பதென்றால் அவர்கள் வருந்தாது என்ன செய்வார்கள்? இரண்டொரு நாளில் எல்லா உண்மைகளும் தெரியலாயின. பத்திரிக்கைகளில் பல செய்திகள் வந்தன. கொன்றவரும், அந்த வழக்கில் சம்பந்தப்பட்டவரும் செங்கற்பட்டிற்குக் கொண்டுவரப் பட்டார்கள். பிறகு வழக்கு நடந்தது. எப்படியோ ஒருவாறு எல்லா—வழக்குகளும் முடிவுற்றன என்றாலும் என் பாட்டியார் இறக்கும்வரையில் இந்தக் கொடுமைகளைப்பற்றி யெல்லாம் வந்தவர்களிடத்தில் சொல்லிச் சொல்லி வருந்து வார்கள். எனக்கும் ஊர் செல்வதற்கே ஒரே பயங்கரமாக இருந்தது. இப்படி ஒரே குலத்தில் பிறந்து, அறம் பேணும் அறிவுக் கோயில் வழியாக, அடங்காப் போர் நடத்தி, ஊரைக் கெடுத்த மக்கள் யாராயினும் சரி அவர்கள் செயல் உலகம் உள்ளளவும் மறையாது. இன்று ஊரில் அந்தப் பெரு வேறுபாடுகளெல்லாம் மறைந்து ஓரளவு அமைதி நிலை கொண்டிருப்பது காண உளம் மகிழ்கின்றது.

# 20. பிரம்படி

மதுரைச் சொக்கநாதர் செய்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களுள் பிரம்படிபட்ட திருவிளையாடலும் ஒன்று. அன்று எப்படி நடந்ததோ நாமறியோம். ஆனாலும் இன்றும் மதுரைவாழ் மக்கள் ஆவணி மூலத்தன்று அத் திருவிழாவினைக் கண்ணாரக் கண்டு களிக்கின்றனர். ஆம்! அனைத்துக்கும் அப்பாற்பட்ட ஒரு பெருந் தெய்வமாம் சொக்கேசன் அடியவர் பொருட்டு உருத்தாங்கி வந்து பிரம்படிபட்ட வரலாறு புராணத்தில் உள்ளது. ஆனால் நான் பிரம்படிபட்ட வரலாறு நாட்டில்—பள்ளியில்—பயிலும் அனைவரும் சாதாரணமாகப் பெறும் வரலாறே யாகும். செங்கற்பட்டு உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் காலத்தில் எனக்குப் பிரம்படி கிடைத்தது. அந்தப் பிரம்படி என் வாழ்வையே மாற்றிவிட்டது என்றுகூடச் சொல்லலாம். அதுவே நான்பெற்ற முதல்—இறுதிப் பிரம்படியாகும். ஆயினும் அந்தப் பிரம்படி எனக்கு ஒழுக்கங் கற்பித்தது என்னலாம்.

நான் மேற்படிப்பிற்கு வெளியூர் சென்றால் ஒருவேளை கெட்டுவிடுவேன் என்ற எண்ணத்தில்தான் என் தாயார் மேல் படிப்பே வேண்டாம் என்று என்னைத் தடுக்க நினைத்தார் கள். நான் யாதொரு கட்டும் காவலும் இல்லாது விடப்படு வேனாயின் ஒருவேளை கூடுவாரோடு கூடிக் கெட வழியுண்டு என நினைத்தார்கள். இன்றும் எத்தனையோ நல்ல பிள்ளைகள் கூடிய நண்பர்தம் கூட்டுறவால் தம்மை மறந்து, தம் நிலை மறந்து தளர்ந்து வாடுவதைக் காண்கிறோம். இந்த நிலையில் தன் ஒரு குலத்துக்கு ஒரு மைந்தன் கூட்டாளி களின் கைப்பொம்மையாகக் கூடாது எனக் கவன்றார்கள் அன்னையார். எனினும் நான் கட்டாயம் படிக்க வேண்டும் என்று கருதிய காரணத்தினாலேயே தனியாகப் பாட்டியுடன் கூட்டிச் செங்கற்பட்டிற்கு அனுப்பினார்கள். காஞ்சிபுரம்

எங்கள் ஊருக்கு அருகில் உள்ளது என்றாலும், அங்கு அடிக்கடி விழாவும் வேடிக்கையும் நடப்பதாலும் சுற்றுப்புறங் களிலிருந்து பலரும் வந்துகொண்டே இருப்பதாலும், அன்னையார் செங்கற்பட்டிற்கு அனுப்பி வைத்தார்கள். அங்கு அத்தகைய ஆரவாரங்கள் இல்லை. என்றாலும் மாணவர் கூட்டத்தில் நல்லவர் கெட்டவர் இருசாராரும் வாழ்ந்துதான் இருந்தார்கள். நான் ஊருக்குப் புதியவன் ஆதலால் யாரோடு பழகுவது என்று தெரியாது அலமந்தேன். மேலும் மேற்பார்வையில் நடத்திச் செல்ல ஆசிரியரோ உற்ற அன்னையோ அருகில் இல்லாதது குறையாகத்தான் இருந்தது. நான் நான்காவது படிவம் பயின்றுகொண்டிருந்த அந்த நாளில் இடைவேளை நேரத்திற்கு வீட்டுக்கு உணவுண்ண வந்துவிடுவது வழக்கம். ஒரு நாள் எவ்வாறோ பள்ளியில் தங்கினேன். அன்றுதான் பிரம்படி பெற்றேன்.

எங்கள் பள்ளியில் முறைப்படி இருக்க வேண்டிய தலைமை ஆசிரியர் நீண்ட விடுமுறையில் இருந்தார். அவருக்குப் பதிலாக வேறொருவர் அப் பதவியில் பணி யாற்றினார். அவர் வயதில் இளையவர். வகுப்புகளுக்கு முடுக்காக வருவார். பிள்ளைகளைப் பல கேள்விகள் கேட்பார். பிள்ளைகள் தவறு செய்வார்களாயின் தட்டாது தண்டனையும் தருவார். யாரிடத்திலும் அவர் தாராளமாக மனம் விட்டுப் பேசி அறியார் என எண்ணுகின்றேன். ஆசிரியர்கள் எல்லாரும் கூட அவருக்கு அஞ்சுவார்கள். பின் மாணவர்களைப் பற்றிக் கேட்பானேன்! இவ்வளவு கொடியவர் என்று பெயரெடுத்தாலும்கூட, அவர் பள்ளிக் கூடச் செயல்முறை வழியில் ஒழுங்காகவே இருந்தார். மாணவர் விருப்பத்தின் வழி ஒழுகி, அவர்களுக்கு வேண்டிய நன்மைகளைச் செய்யவும் அவர் என்றும் பின்வாங்கிய தில்லை. அவர்கள் நலனில் அக்கறை கொண்டே அரும்பாடு பட்டார். எனவே மாணவர்களுக்கு அவர்பால் ஒருபக்கம்

அச்சமும், மற்றொருபால் மதிப்பும் வளர்ந்துவர வாய்ப்பு இருந்தது.

அன்று என்னுடைய வீட்டுப்பக்கத்தில் இருந்து வரும் நண்பர்களெல்லாம் பகல் உணவுக்காக வீடு சென்று விட்டார்கள். நான் மட்டும் ஏனோ பள்ளியிலேயே தங்கி விட்டேன். காரணம் நன்கு புலப்படவில்லை; மறந்தேன். ஒருவேளை என் பாட்டியார் அன்று ஊருக்குச் சென்றிருந் தார்களோ என நினைக்கிறேன். ஊருக்குச் செல்லவேண்டி இருந்தால் பாட்டியார் சாதம் பிசைந்து வைத்துவிட்டு முன்னாள் மாலை சென்று மறு நாள் மாலை வந்து வழக்கம் போல் சமையல் செய்வார்கள்; அன்றும் அப்படித்தான் என நினைக்கிறேன். எனக்குச் சரியாக நினைவு இல்லை. காலையில் தயிர்ச் சோறு உண்டு பள்ளிக்கு வந்துவிட்டேன். பகல் வேளையில் பக்கத்தில் உள்ள கடையில் ஏதேனும் பழம் வாங்கிச் சாப்பிட இருந்தேன். எனவே என் நண்பர்களோடு பகல் உணவுக்கு நான் வீட்டுக்குச் செல்லவில்லை.

பள்ளியில் நான் அறியாமலேயே வேறு சிலருடன் சிநேகம் செய்துகொண்டேன். அவர்கள் வேறு பகுதிகளி லிருந்து வந்தவர்கள். என்னுடன் ஒருசேர வரும் மாணவர்கள் அனைவருமே நல்லவர்கள். அவருள் ஒருவர் மட்டும் அந்த வயதிலேயே பொடி போடக் கற்றுக் கொண்டார். என்றாலும் அவர் மற்றவரை அந்தத் துறைக்கு அழைத்தது கிடையாது. அவரும் மறைவாக அத் துறையில் வல்லவ ராகிச் சிறந்தார், என்றாலும் என் புது நண்பர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்லர். அவர்கள் பீடி முதலிய புகை குடிக்கும் பழக்கம் உடையவர்கள். எப்படியோ அவர்களுடன் நான் நட்பாளனானேன். வேடிக்கையாக என்னையும் அவர்கள் பீடி முதலியன பிடிக்கத் தூண்டினார்கள். ஒருவன் ஒரு நாள் என் வாயிலேயே பீடித் துண்டைத் திணித்துப் பிடிக்குமாறு வற்புறுத்தினான்; நான் திணறினேன்,

அவர்கள் செயல் அப்பொழுது எனக்கு அவ்வளவு கொடுமை யாகப் படவில்லை. அவர்களை என் நல்ல நண்பர்களாக நான் கருதினமையால் அவர்கள் செய்வதை நானும் செய்வதில் தவறில்லை என்றுதான் அன்று நினைத்திருப் பேன். என்றாலும் அதுபோன்ற கெட்ட வழக்கங்களில் செல்ல எனக்கு மனம் வரவில்லை. எப்படியோ அவர் களோடு சில வேளைகளில் தனியாக விளையாடிப் பொழுது போக்குவது உண்டு.

அன்று இடைவேளையில் அப்படித்தான் அவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தேன். அவர்கள் வகுப்பறையிலே கூடப் பீடி பிடித்திருப்பார்கள் என நினைக்கிறேன். நானும் அவர்களுடன் இருந்தேன். தலைமை ஆசிரியருக்கு ஒவ்வொரு பையனைப் பற்றியும் நன்கு தெரியும். அவர் என்னை அவர் களுடன் சேரவேண்டாமென்பதைக் குறிப்பிட்டுள்ளார் என நினைக்கிறேன். அன்று அவர்களோடு நான் சேர்ந்திருப் பதைக் கண்டுவிட்டார். அவர்கள் செய்யும் குற்றங்களெல் லாம் அவருக்குப் புரிந்தனவே. வகுப்பறையில் கூட்டமிட்டுக் கொண்டு இருந்தார்கள்; கூடவே புகை பிடித்திருக்கலாம். எனக்கு இப்போது நினைவு இல்லை. அவர்கள் கூச்சல் தலைமை ஆசிரியர் காதுக்கு எட்டி இருக்க வேண்டும். அவர் நாங்கள் இருக்கும் அறை வாயிற்படியில் வந்து நின்றார். நான்தான் முதற் பலகையில் உட்கார்ந்திருந்தேன். 'வா' என்று அதட்டினார். மற்றவர்களை அவர் கவனித்தாரா, அன்றிக் கவனித்து விட்டுவிட்டாரா என்பது இன்றும் எனக்குப் புரியவில்லை. என்னை அழைத்துக்கொண்டே சென்றார். அதற்குள் பிற்பகல் இடைவேளை முடிந்து வகுப்புத் தொடங்கும் நேரம் வந்துவிட்டது. மாணவர்கள் வரிசை வரிசையாக வந்துகொண்டே இருந்தார்கள். அவர் களுக்கு இடையில் நிறுத்தி ஓங்கி ஒரு பிரம்படி கொடுத்தார். மற்றவர்களைப்பற்றியும் என் உடனிருந்து கூச்சல் எழுப்பிய வரைப் பற்றியும் அவர் கவனிக்கவில்லை. என்னையும் என்ன

வென்று கேட்கவில்லை. என்னைப்பற்றி மற்றவரிடமும் ஒன்றும் கூறவில்லை. நடு இடத்தில் கொண்டு வந்து நிறுத்தி நீண்ட பிரம்பால் ஓங்கி ஓரடி கொடுத்துப் 'போ' என்றார். எனக்கு அப்போது அழுகையும், ஆத்திரமுமாக இருந்தது. என்றாலும் நாளாக ஆக அந்த அடி—ஒரே பிரம்படி—என் வாழ்வை எவ்வளவு தூய்மையாக்கிற்று என்பதை எண்ணும் போது என்னை அறியாமலே என் வாய் அவரை வாழ்த்திற்று. அவர் இன்னும் தஞ்சையில் வாழ்ந்துகொண்டுதான் இருக்கிறார்.

அந்தப் பொல்லாத பிள்ளைகளோடு நான் சேரக்கூடாது என்பது தான் அவர் விருப்பம். என் நடத்தையையும் நான் பள்ளி வந்து செல்லும் விதத்தையும் கண்டுகொண்டே வந்த அவர், நான் எப்படியோ அந்த பொல்லார் குழுவில் அகப் பட்டதை அறிந்தார். அந்தக் கூட்டத்தை முறிக்கவே அன்று அவர் அத்தகைய அடியினைக் கொடுத்தார். உடன் அவர் களையும் அழைத்து வந்து அடித்திருப்பாராயின், எல்லாரும் அடிபட்டோம் என்ற நினைப்பில் மறுபடியும் ஒரு வேளை நான் அவர்களோடு சேர்ந்து இருந்திருப்பேன். அதனாலேயே அவர் என்னை மட்டும் தனியாக அழைத்துத் தண்டனை தந்தார். அவர் குறிப்பை அறிந்தோ அறியாமலோ நான் அன்று முதல் அவர்களோடு சேருவதில்லை. தூர விலகிவிடு வேன். அந்த அடி இல்லையானால் நான் ஒரு வேளை இன்று புகை பிடிப்பவனாகவோ, வேறு கொடுமையாள னாகவோ மாறிவிட்டிருப்பேன். ஆம்! அந்தப் பிரம்படி என்னை வாழ்வித்தது.

பல ஆண்டுகளுக்குப் பின் பல்கலைக் கழகத்தில் அந்த ஆசிரியரைக் கண்டேன். நான் அடியால் நலம் பெற்ற ஆண்டுக்கு மறு ஆண்டே அவர் செங்கற்பட்டைவிட்டுச் சென்றுவிட்டார். பல ஆண்டுகள் கழித்துப் பல்கலைக்

கழகத் தேர்வுச் சம்பந்தமான ஒரு கூட்டத்தின் இடையில் அவர்களைக் கண்டேன். 'நலமா' என்றார்கள். 'தாங்கள் வாழவைத்த நலம் கெடுமா' என்றேன். அவர் சிரித்தார். அருகில் இருந்தவர்கள் ஒன்றும் புரியாது விழித்தார்கள். நான் அனைத்தையும் விளக்கினேன். அவர் என்னைத் தட்டிக் கொடுத்தார். நான் அதைப் பெருமையாக ஏற்றுக் கொண்டேன். இப்படி வாழ்வைத் திருந்தச் செய்த பிரம் படியைப் பற்றி இங்கு நான் காட்டாதிருக்க முடியுமா!

## 21. ஒருத்தியும் மகனும்

அப்போது நான் ஐந்தாவது படிவம் படித்துக் கொண்டிருந்தேன். எங்களுக்குப் பள்ளி இறுதி வகுப்புக்குள்ள தமிழ் ஆங்கிலப் பாடங்களையே வைப்பது வழக்கம். தமிழ்ப்பாடத் தொகுதியில் பலருடைய பாடல்களும், ஆங்கிலப் பாடத்தில் பலருடைய பாடங்களும் இடம் பெறும். எனது தமிழ்ப்பாட நூலில் அந்த ஆண்டு பல நல்ல தமிழ்ப் பாடல்கள் இடம் பெற்றன. 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்' என்று தொடங்கும் திருநாவுக்கரசருடைய திருப்பாதிரிப்புலியூர்ப் பதிகம் முதலில் தோத்திரமாக அமைந்தது. பின் பலப்பல பாடல்கள் இருந்தன. திருக்குறளும் நாலடியும் இடம் பெற்றன. பின்னர்க் கதைப் பகுதி வந்தது. அதில் ஒரு பகுதி திருவிளையாடற் புராணத்திலிருந்து எடுக்கப்பட்டது. மாமனாக வந்து வழக்குரைத்த படலம் என்பது அது. அதில் ஒரு மாதுலன் தனக்கு மகப்பேறு இன்மையால் தன் தமைக்கை மகனைத் தன் மகனாக ஏற்றுக்கொண்டு பொருள் அனைத்தையும் அவனுக்கே வைத்துவிட்டுச் சிலநாள் கழித்து இறக்கவும், அவனுடைய தாயத்தார் அவன் இறந்த உடனே எல்லாச் செல்வங்களையும் தங்களுடையதாகக் கைப்பற்றி

அப்பிள்ளையையும் அவனைப் பெற்ற தாயையும் திண்டாட வைத்ததாகக் கூறப்பெறுகின்றது. பின் அலமந்த அந்த அன்னை தன்னைக் கவனிப்பாரின்மையின் கவன்று, மதுரைக் கோயிலில் உள்ள இறைவனிடம் சென்று முறையிட்டு, அழுது அழுது அப்படியே உறங்கிவிட, அவள் கனவில் இறைவன் தோன்றி அருள் புரிந்ததாகக் கூறப் பெறுகின்றது. அவ்விறைவன் அவளை மறுநாள் நீதிமன்றம் சென்று முறையிடப் பணித்தான். அப்படியே அவள் செய்ய, மறுநாளே இறைவன் தானே மாமனாகச் சென்று வழக்குரைத்துத் தாயத்தாரைத் தலை குனிய வைத்து எல்லாச் செல்வத்தையும் தன் மருமகனுக்கு உரிமையாக்கி மறைந்தான் என முடிகின்றது. இது வெறும் கதை போன்றதுதான். என்றாலும் பலருடைய வாழ்க்கை வரலாறுகள் அதில் பின்னிக் கிடக்கின்றன என்னலாம். அதில் அத்தகைய சொக்கேசர் கோயிலில் சென்று இறைவனைப் மனமுருகப் பாடி நைந்து நைந்து கசிந்து நின்ற பாடல் என் உள்ளத்தைத் தொட்ட ஒன்றாகும். அதுவும் என் அன்னை அதன் உள்ளாழத்தைக் காட்டிய பிறகு என்னை உணர வைத்தது என்னலாம். அது எந்தப் பாடல்!

> ஒருத்திநான் ஒருத்திக்கிந்த ஒருமகன் இவனும்தேரும்
> கருத்திலாச் சிறியன் வேறு களைகணும் காணேன் ஐய!
> அருத்திசால் அறவோர் தேரும் அருட்பெருங்கடலே [எங்கும்
> இருத்தி நீ அறியாய் கொல்லோ என்று பார்படிய [வீழ்ந்தாள்,

என்ற பாடலே அது. ஆம். இந்தப் பாடல் என் தாயின் கண்களை வற்றாக் குளமாக்கின.

பொங்கல் விடுமுறையின்போது நான் எனது சொந்த ஊருக்குச் சென்றிருந்தேன். எனது பல பாடங்களையும் வைத்து நன்முறையாகப் படிப்பது உண்டு. அப்போது சிறு கைவிளக்கு அல்லது லாந்தர் விளக்குத்தான். அந்த நாளில்

சிறிது நேரமாயினும் நான் அந்த விளக்கின் முன் உட்கார்ந்து படித்தால்தான் என்னை அன்னையார் விட்டு விடுவார்கள். இல்லாவிட்டால் அதட்டிக்கொண்டே இருப்பார்கள். ஒரு நாள் அவர்கள் வீட்டுத் தெருவழியில் வாயிற்படியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டே இருந்தார்கள். நான் முறை யாகப் படித்துக்கொண்டே இருந்தேன். தமிழ்ப்பாடப் புத்த கத்தை எடுத்து, அந்த 'ஒருத்தி நான்' என்ற பாடலைப் பதம் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தேன். படுத்திருந்த அன்னையார் எழுந்து வந்து என் பக்கத்தில் அமர்ந்து கொண் டார்கள். ஆமாம்! இங்கு ஒன்று சொல்லவேண்டும். என் அன்னையார் தமிழை நன்கு எழுதப் படிக்கக் கற்றவர்கள். ஆரம்பப் பள்ளியில் படிக்கும் காலத்தில் எல்லாம் என் பாடல் களை முறையாகப் பயில ஆசானாக இருந்து எனக்கு உதவிய வர்கள். சாதாரணப் பாடல்களையெல்லாம் பதம் பிரித்து உரை காணும் அறிவு பெற்றவர்கள். ஆகவே அவர்களுக்கு நான் படித்த பாட்டு நன்கு புரிந்துவிட்டது என்னலாம்.

என் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்ட அன்னை யார் அந்தப் பாட்டை மறுமுறை படிக்கச் சொன்னார்கள். நான் நன்றாக நிறுத்திப் பதம் பிரித்துப் படித்தேன். அவர் கள் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். பாட்டை முடித்துத் தலை நிமிர்ந்தேன். அவர்கள் கண்கள் குளமாகி இருந்தன. அவர்கள் அழுதுகொண்டே இருந்தார்கள். நான் 'அம்மா' என்றே அலறி விட்டேன். வீட்டில் வேறு யாரும் இல்லை. பாட்டி கோயிலுக்குப் போயிருந்தார்கள். அம்மா அழும் காரணம் எனக்குத் தெரியவில்லை. 'ஏன் அம்மா?' என்று கேட்கத்தான் எனக்குத் தெரிந்தது. அவர்கள் அழுகை நிற்க வில்லை. மென்மேலும் அழுதுகொண்டிருந்தார்கள். எனக்குக் காரணம் தெரியவில்லை. பாட்டைக் கேட்டு அம்மா அழுவானேன்? குழந்தை போலானேன். எனது கேள்விக்கு அவர்கள் பதில் கூறாது மேலும் மேலும் அழுது

கொண்டே இருந்தது என்னையும் அழவைத்தது. நானும் அழுதேன். விம்மி விம்மி அழுதேன். பதினைந்து வயதுக்கு மேலான குமரப் பருவமடைந்த பத்தாம் வகுப்பு பயிலும் ஒரு வனாகவே நான் இல்லை. அழ அழ அம்மா அழுகை ஓய்ந்தார் கள். என்னை அப்படியே தழுவிக்கொண்டு, என் கண்ணைத் துடைத்தார்கள். அவர்கள் முகத்தை நோக்கினேன். இன்னும் தெளிவு பெறவில்லை. கண்கள் நீரை உகுத்துக் கொண்டே இருந்தன. விம்மலுக்கு இடையில் 'ஏனம்மா?' என்று கேட்டேன். அவர்கள் ஒரு பெருமூச்சுடன் நீண்ட கண்ணீரையும் நிலத்து உதிர்த்துப் பேசினார்கள்.

'குழந்தாய் நீ படித்த பாட்டைப்பற்றி நினைத்தாயா? அது நம் வாழ்வைப் போன்று அல்லவா இருக்கிறது. இக் கதையை முன்னே புராணிகர் மூலம் கேட்டிருக்கிறேன்; ஆனாலும் இந்தப் பாட்டை நான் கேட்டதில்லையே. குழந்தாய்! உன்னையும் என்னையும் அப்படியே ஒன்றாக அல்லவா இந்தப் பாட்டில் பிணைத்து வைத்திருக்கிறது. என்ன படித்தாய்? மறுபடியும் படி' என்றார்கள். நானும்

'ஒருத்திநான் ஒருத்திக்கு இந்த ஒருமகன் இவனும்
தேரும் கருத்திலாச் சிறியன் வேறு களைகணும்
[காணேன்

ஐய' என்று படித்தேன். அம்மா என் வாயைப் பொத்தி விட்டு அலறியே அழுதுவிட்டார்கள். பிறகு மெள்ளத் தெளிந்து, 'குழந்தாய், இன்று நாம் வாழும் வாழ்க்கையை அல்லவா இந்த இரண்டு அடிகளும் காட்டுகின்றன. நான் ஒருத்தியாக இதோ வாழ்கின்றேன். எனக்கு நீ ஒருவனே தான் மகன். உனக்கு உடன் பிறந்த ஆணோ, பெண்ணோ இல்லையே, நீயும் நல்லது கெட்டது அறியாத சிறுவனாக அல்லவா இருக்கிறாய். மேலும் நமக்குத்தான் வேறு யார் சுற்றத்தார் இருக்கிறார்கள்? பாவம் ஒன்றுக்கும் பற்றாத பாட்டி எங்கோ மூலையில் முடங்கிக் கிடக்கிறாள். நாம்

இன்று துன்புற்றால் வேண்டாம் என்று அழும் கண்ணீரைத் துடைப்பார் யார் இருக்கிறார்கள்? அன்று அந்த மதுரைப் பெண் சொக்கநாதரிடம் அழுதது போல, நான் அன்றாடம் இந்த அம்பலவாணரிடம் முறையிட்டுக் கொண்டுதான் இருக் கிறேன். ஆனாலும் இப்படி அழகாகப் பாட முடியவில்லை. உன்னையும் என்னையும் சேர்த்து இப்படி அன்றைக்கே ஒரு புலவன் பாடி இருப்பான் என்று நினைக்கவில்லையே' என்று சொல்லிக் கண்ணீர் பெருக்கினார்கள். எனக்கும் அப்போது தான் அப்பாட்டு என் வாழ்வை அப்படியே எவ்வாறு படம் பிடித்துக் காட்டுகிறது என்ற உண்மை புலனாயிற்று. நான் உடனே 'அம்மா' என்று அலறி அவர்களை அப்படியே அணைத்துக்கொண்டேன். அவர்கள் கண்ணீர் என் முதுகின் மேல் சொட்டுச் சொட்டாக வீழ்ந்தது; என்றாலும் என்னை அழவேண்டாம் என்று அவர்கள் தேற்றிக்கொண்டே இருந் தார்கள். இறுதியாக அவர்கள் கண்களைத் துடைத்துக் கொண்டார்கள். என்னைத் தலைநிமிர்த்திக் 'குழந்தாய் அழாதே! நாம் என்ன செய்யலாம், இப்படி வாழ்வில் தனிமையாக விடப்பட்டவர்களை ஆண்டவன் காப்பார்' என்றார்கள். ஆம்! அந்த வணிக அன்னையும் அன்றும் சொக்கநாதரிடம்தானே முறையிட்டாள். அவன் எல்லாம் அறிவான் என்பதை,

> 'அருத்திசால் அறவோர் தேரும் அருட்பெருங்கடலே
> எங்கும்
> இருத்திநீ அறியாய் கொல்லோ என்று பார்படிய
> வீழ்ந்தாள்'

என்று பரஞ்சோதியர்தான் எவ்வளவு அழகாகக் கூறுகிறார். ஆம், என் அன்னையும் அந்த வகையிலேயே எங்களை ஆண்டவன் காப்பாற்றுவான் என்ற தளரா நம்பிக்கை வைத்திருந்தார்கள். பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந் திருக்கும் அவ்விறைவன் எங்களை மட்டும் பார்க்காதிருப் பானா! இப்படி அந்த இளம் வயதிலே திருத்துவார்

இன்றியும், சேட்பார் இன்றியும், உதவுவார் இன்றியும் என்னை விட்டுவிட்ட அந்தக் கடவுளை நினைத்தாலும், அனைத்திலும் கைகொடுத்து 'அஞ்சேல்' என ஆதரிக்கும் தன்மையில் என் அன்னையார் எனது துன்பம் துடைக்க நிற்பதை அறிந்து உள்ளம் தேறினேன். ஆனால் என் அன்னையின் துன்பத்தை ஆற்றுவார் யார் என்றே என் உள்ளம் கேட்டுக்கொண்டே இருந்தது. அப்போதுதான் கோயிலுக்குச் சென்று திரும்பி வந்துகொண்டிருந்த பாட்டியார் 'எல்லாம் அவன் செயல், நம்மால் ஒன்றுமில்லை' என்று யாரிடமோ கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தார்கள். ஆம்! என் அன்னையாரும் அந்த எண்ணத்திலேயே யாருடைய உடன் உதவியும் இன்றி என்னைத் தான் வாழும் வரையில் காத்து ஓரளவு வாழ்வில் உயரவழி செய்து வைத்தார்கள். அவர்களை நினைக்கும் போதெல்லாம் அந்தப் பாட்டும் என்னைவிட்டு அகலுமோ!

# 22. விபூதிச் சாமியார்

அன்று பள்ளிக்கூடத்தில் ஏதோ சிறப்புவிழா. எங்கள் பள்ளிக்கூடம் மாலை 3 மணிக்கே மூடப்பெற்றது. மறுபடியும் ஐந்து மணிக்குக் கூட்டம் என்றும் அதற்கு நாங்கள் திரும்பி வரவேண்டு மென்றும் தலைமை ஆசிரியர் சொல்லி இருந்தார். நாங்கள் எங்கள் வீடுகளுக்குப் புறப்பட்டுச் சென்றோம். மாணவர் அனைவரும் மாலைக் கூட்டத்துக்கு வரவேண்டும் என்று கூறி இருந்தபோதிலும் ஒரு சிலர்தான் அக்கூட்டத்திற்கு வரப் புறப்பட்டனர். எங்கள் தெருவிலிருந்து நானும் என் நண்பர் திருவேங்கடமும் மட்டுமே வீட்டிலிருந்து கூட்டத்திற்குப் புறப்பட்டோம். ஆனால் நாங்கள் பள்ளிக்கூடம் சென்று சேரவில்லை. கூட்டத்திலும் பங்கு கொள்ளவில்லை.

வீட்டை விட்டு வெகுதூரம் வந்து விட்டோம். பள்ளிக்கு இன்னும் ஒரு 'பர்லாங்கு' தூரம்தான் இருக்கும். ஒரு திருப்பம். நாங்கள் குறுக்காகப் புகுந்து அத்திருப்பத்தைக் கடந்து செல்லவேண்டும். அவ்வாறு சென்று கொண்டிருந்தபோது எங்கள் எதிரில் ஒரு சாமியார் எதிர்ப்பட்டார். அவர் 'பிள்ளைகளா நில்லுங்கள்' என்றார். எங்கள் முகத்தில் அப்போதுதான் வீட்டில் இட்ட திருநீறு விளங்கிக் கொண்டிருந்தது. அவர் முகத்திலும் உடம்பிலும் நிறையப் பூச்சுக்கள் இருந்தன; இடையில் காவி அணிந்திருந்தார். தோளில் ஒரு பையும் கையில் சிறு தடியும் இருந்தன என நினைக்கின்றேன். எங்களை அவர் என்னவென்று நினைத்தாரோ! சிறுபிள்ளைகள் தாமே என எண்ணி இருப்பார். ஆம், எண்ணித்தான் அழைத்தார் போலும். நாங்கள் உடனே நின்றுவிட்டோம். வேகமாகச் சென்ற எங்கள் நடை தடைப்பட்டது. நிறுத்தப்பட்டோம்.

சாமியார் இரண்டு கைகளையும விரித்துக் காண்பித்தார். கைகள் தூய்மையாகவே இருந்தன. உடனே வலக் கையை மூடினார்; உயர்த்தினார்; திறந்தார். திருநீறு அவர் கையில் இருந்தது. 'இந்தா இந்தப் பிரசாதம்; உங்களுக்காகவே கடவுள் கொடுத்தது; இட்டுக் கொள்ளுங்கள்' என்றார். நாங்கள் இருவரும் உண்மையில் நடுங்கிக் போனோம். ஒரு வேளை பெரிய மந்திரவாதியோ அன்றி வேறு யாரோ இவ்வாறு நம்முன் வந்திருக்கிறார் என்று நான் நினைத்து விட்டேன். பல புராணக் கதைகளில் ஆண்டவன் திடீரென உருக்கொண்டு அடியவர்முன் தோன்றிக் காட்சி அளிப்பதை நான் படித்திருக்கிறேன். அப்படியே என்முன் அந்த ஆண்டவன்தான் வந்துவிட்டானா என எண்ணினேன். அந்த இளைய உள்ளம் அப்படியெல்லாம் நினைக்கச் செய்தது. ஆழ்ந்த சமயப்பற்றுக் கொண்ட குடும்பத்தில் பிறந்ததாலும், அவ்வாறு தெய்வநெறி வழிபோற்றி வளர்க்கப்

பெற்றதாலும், கடவுள் அடியவர் பொருட்டு எதிர்பாராத வேளைகளில் தாமே வந்து ஆட்கொள்ளும் புராணக் கதை களைக் கேட்டிருந்ததாலும் அவ்வாறு நான் நினைக்க ஏது வாயிற்று. என் உடன் இருந்த நண்பரும் அவ்வாறே எண்ணி இருக்கக்கூடும் என்பதை அவர் முகத்தோற்றமும் செயலும் நன்கு விளக்கின. நாங்கள் செயலற்று நின்று விட்டோம் என்று சொல்லிவிடலாம்.

வெறும் கையிலிருந்து விபூதி வந்தது எங்களுக்குப் பெரிய ஆச்சரியமாக இருந்தது. அவரிடம் ஒருவித பயமும் பக்தியும் உண்டாயிற்று. காலில்கூட விழுந்து கும்பிடத் தீர்மானித்துவிட்டோம். என்றாலும் நடுத்தெருவில் அவ் வாறு செய்ய முடியவில்லை. அவர் அந்தக் திருநீற்றை எங்களிடம் கொடுத்தார். நாங்கள் வாங்கி நெற்றியில் அணிந்துகொண்டோம். தலைநிமிர்ந்தோம். மறுகையைக் காட்டி மூடினார். பிறகு திறந்தார்; அதில் குங்குமம் இருந்தது. எங்கள் பயம் அதிகரித்தது. உண்மையிலேயே அவர் கடவுள் அவதாரம் என்றே முடிவுக்கு வந்துவிட்டோம். என்றாலும் அடுத்து அவர் கேட்டது எங்கள் உள்ளத்தில் ஒரு மாற்றத்தை உண்டாக்கிவிட்டது என்னலாம். அவர் குங்குமத்தைக் கொடுத்தார். அதையும் வாங்கி இட்டுக் கொண்டோம். 'பிள்ளைகளே' நீங்கள் என்ன நினைக் கிறீர்கள்?' என்று கேட்டார் அவர். நாங்கள் நினைப்பது என்ன! அவரைத் தானே வந்து நம்மை 'ஆட்கொள்ளும் கடவுளாக' அல்லவா நாங்கள் நினைத்தோம். நினைத்ததை அப்படியே அவரிடமும் சொல்லிவிட்டோம்.

ஆம்! என் நண்பனும் என்னைப் போலவே எண்ணி னான். அவர் அதுதான் சமயமென்று தன் மூட்டையை அவிழ்க்கத் தொடங்கினார். துணி மூட்டையை அல்ல; சொரூப மூட்டையை. 'ஆம் குழந்தைகளே! உங்கள் துன்பத்தை அறிந்து ஆண்டவனே என்னை இங்கு அனுப்பி

உங்களுக்கு இந்தத் திருநீற்றையும், குங்குமத்தையும் கொடுக்கச் சொன்னார். இதை நீங்கள் அணிந்து கொண்டமையால் உங்களுக்கு எல்லாக் குறைகளும் இனி இல்லையாகும்' என்றார். நைந்து நைந்து வாடி வாழும் என் உள்ளத்துக்கு அவர் சொன்ன சொற்கள் நன்கு ஆறுதல் தருவது போன்றே இருந்தன. துன்ப எல்லையில் நின்று ஏதோ அமைந்து வாழும் நான் அதை வேறு எப்படி எடுத்துக் கொள்வேன்? பல புராணங்களில் வருந்தி நைந்து வழிபடுபவருக்கு ஆண்டவன் இந்த வகையில் அருள் புரிந்ததாக நான் பல கதைகள் படித்திருக்கிறேன். நெடுங் காலத்துக்குப் பின்—நல்லறிவு பெற்றபின், அந்தக் கதைகள் அத்தனையும் அப்படியே கொள்ளத்தக்கன அல்ல என்னும் உண்மையை உணர்ந்தேன் என்றாலும் அந்த இளம்வயதில் அந்த உணர்ச்சி இல்லை. ஏதோ அடியார்கள் உண்மையில் அருள் பெற்றவர்தாம் என நினைத்தேன். அதனாலேயே வருந்தும் நிலையில் இருந்த என்னைக் காப்பாற்ற ஆண்டவனே அவரை அனுப்பினார் என்று அவர் தம்மைப் பற்றிக் கூறியதை உண்மையெனக் கருதினேன். என் நண்பனும் அப்படியே கருதினான், ஆயினும் நாங்கள் பேச இயலாது வாயடைத்து நின்றோம்.

இதற்கிடையில் அந்தச்சாமியாரே பேசத்தொடங்கினார். 'நான் ஒன்றும் செய்யமாட்டேன். ஆண்டவன் கட்டளையிட்டபடியே நான் உங்களுக்குத் திருநீறும், குங்குமமும் கொடுத்துவிட்டேன். நான் வெகு தொலைவில் இருந்து இதற்காக வந்தேன். வறிதே இப்போது எப்படி அவ்வளவுதூரம் போவது என நினைக்கிறேன்' என்றார் அவர். நான் அவரை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு சென்று சோறு அளிக்கலாமா என நினைத்தேன். 'இப்படி ஆண்டவனால் அனுப்பப்பட்டவராயின் அவருக்கு எதுதான் சித்திக்காது' என்று நினைக்கத் தெரியவில்லை எனக்கு. 'பாவம்! அவர் பசியோடு வந்திருப்ப

தால் ஏதாவது கொடுக்கவேண்டும் என்று நினைத்தேன். பையில் கையை விட்டேன். ஒரு நான்கணா இருந்தது. என் பாட்டியார் அதிகமாக என்னிடம் பணம் தரமாட்டார்கள். அவர்களுக்குக் குடும்பச்செலவுகளுக்காக அம்மா திட்டமாகவே திங்கள் தோறும் கொடுத்தனுப்பி வந்தார்கள். எனவே ஒரு காலணா கூட நாங்கள் அதிகமாகச் செலவு செய்ய முடியாது. அந்த நாலணாக்கூட ஏதோ கூட்டத்திற்குச் செல்லுவதால் பாட்டி கொடுத்தார்கள். பள்ளிக்கூடம் வகுப்புக்குப் போவதாயிருப்பின் நாங்கள் ஒன்றும் கொண்டு செல்வதில்லை. என் நண்பரும் எட்டணா வைத்திருந்தார். இரண்டையும் சேர்த்து அந்தச் சாமியாரிடம் கொடுத்து 'பாவம், வெகு தொலைவில் இருந்து வந்திருக்கிறீர்கள். இதைக்கொண்டு ஏதாவது உண்டு செல்லுங்கள்' என்று சொன்னேன். அவர் சிரித்தார். ஒருவேளை அதைக் குறைவாகக் கருதினாரோ அன்றி ஒன்றும் வேண்டாம் என்று நினைத்தாரோ என நாங்கள் கருதிக் கொண்டிருக்கும் அதே வேளையில் 'தம்பிகளே! யானைப் பசிக்கு இது எம்மாத்திரம்' என்றார். அப்போதுதான் அவர் அதிகப் பணம் வேண்டுகிறார் என்பது புலப்பட்டது. நாங்கள் என்ன செய்யமுடியும்? படிக்கும் எங்களிடம் பணம் ஏது? உள்ளதை நாங்கள் சொல்லிவிட்டோம். அவர் விடுவதாக இல்லை. 'நீங்கள் வீட்டில் போய்த் தேடிப் பாருங்கள். ஏதாவது கிடைக்கும்' என்று சோசியம் சொல்லுவதுபோல் சொன்னார். எனக்குத் தெரியும் வீட்டில் ஒன்றும் இல்லை என்பது. என்றாலும் என் நண்பன் வீட்டில் ஒரு ரூபாய் வைத்திருந்தானாம். அதைத் தான் சாமியார் கண்டு சொன்னார் என்று அவன் கருதினான், 'ஆம்! வீட்டில் ஒரு ரூபாய் வைத்திருக்கிறேன். அதைக் கொண்டுவருகிறேன்' என்றான் அவன். நாங்கள் இருவரும் உடனே விரைந்து வீட்டுக்குத் திரும்பினோம்,

சிறிது நேரம் கழித்து அந்த நண்பனுடைய ஒரு ரூபா யுடன் நாங்கள் அந்தச் சாமியார் இருந்த இடத்திற்குச் சென்றோம். அரைமணி நேரத்துக்கு மேலாகி இருக்கும். அங்கு நான்கைந்து பேர் பேசிக் கொண்டிருந்தார்கள். ஒருவர் எங்களுக்குத் தெரிந்தவர்தான். நாங்கள் அங்கு சென்று நின்று சுற்றிப் பார்த்தோம். அவர் 'என்ன தம்பி பார்க்கிறீர்கள்? என்று கேட்டார். 'இங்கு ஒரு சாமியார் இருந்தார். அவரைப் பார்க்கிறோம்' என்றேன். உடனே அவர் 'சரிதான், நீங்கள் ஏமாந்துவிட்டீர்களா? எவ்வளவு கொடுத்தீர்கள்' என்றார். அவர் அந்தச் சாமியாரைப் பற்றிப் பல வகையில் பழித் துரைத்தார். நாங்கள் நடந்த கதை அத்தனையும் சொல்லி முக்கால் ரூபாய் கொடுத்ததையும் மேலும் ஒரு ரூபாய் கொடுக்க முன் வந்ததையும் கூறினோம், அவரும் அவருடன் இருந்தவர்களும் சிரித்தார்கள். 'சரி உங்கள் ஒரு ரூபாய் நல்ல ரூபாய்' என்றார்கள். மேலும் அந்தச் சாமியார் கள்ளச் சாமியார் என்றும், விரல் நக இடுக்கில் விபூதி, குங்குமத்தை வைத்திருந்து, எங்கிருந்தோ வரவழைப்பது போலக் காட்டி ஏமாற்றிப் பெண்களையும், குழந்தைகளையும் மிரட்டிப் பொருள் பெறுகிறவர் என்றும் கூறினார்கள். அவர்கள் வரும் போது அந்தச் சாமியார் அங்கிருந்து நழுவி விட்டார் என்றும், அவர் பக்கத்தில் உள்ள ஒரு கள்ளுக் கடைக்குச் சென்றிருக்கலாமென்றும் கூறினார்கள், நான் உடனே அவர் களுடன் கள்ளுக்கடைக்குச் சென்றேன். அந்தச் சாமியாரைத் தேடினோம். கிடைக்கவில்லை. என்றாலும் சிறிது நேரத்துக்கு முன்தான் சாமியார் தோற்றத்தில் வந்து எட்டணாக் கள்ளும் நாலணாக் கறியும் உண்டு ஒருவர் சென்றார் என்பதை அறிந்தோம். எங்களை அழைத்து வந்த அக்கடைக்காரர் தான் சொல்லியதை எங்களுக்கு விளக்கி, அந்த ஆசாமிதான் எங்களை ஏமாற்றியது எனக் காட்டி இனி அந்த வகையில் ஏமாறாது, மிக எச்சரிக்கையாக

வாழ வேண்டுமென்றும் காட்டி வீட்டுக்கு அனுப்பினார். நாங்கள் பிறகு கூட்டத்துக்குப் போவது எங்கே? மணி ஏழாகியிருந்தது. நானும் என் நண்பரும் பேசிக் கொண்டே வீடு வந்து சேர்ந்தோம். இப்படி நாங்கள் ஏமாற்றப் பட்டதை இன்று நினைத்தாலும் அவமானமாக உள்ளது. ஆயினும் இன்றைக்கும் இது போன்று ஏமாற்றும் பாதகர் களும் ஏமாறும் நிலையிலுள்ள அப்பாவிகளும் இருப்பதைப் பத்திரிகைகள் வாயிலாகப் பயிலும்போது 'என்று இந்தக் கொடுமை நீங்கும்' என எண்ணி உளம் நைகிறது. ஏமாற்றும் கொடுமை ஒழிந்து என்று நாடு திருந்துமோ?

# 23. மூக்குத்தி

ஒரு நாள் நானும் என் அன்னையும் வீட்டில் உட்கார்ந் திருந்தோம். அந்த வேளையில் எங்கள் தெருவில் குடியி ருக்கும் ஒருவர் வீட்டில் நுழைந்தார். ஒவ்வொரு ஊரிலும் ஒரு வேலையும் செய்யாது அப்படியே சுற்றிச் சுற்றித் திண்ணையிலும் பலகையிலும் படுத்து உறங்கிக் காலம் கழிக்கும் 'நல்லவர்' ஒரு சிலராவது இருப்பார்கள் என்பது இப்போது எனக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனாலும் அன்று நான் படித்துக்கொண்டிருந்த அந்த நாளில் எங்கள் தெருவில் இப்படி ஒருவர் இருந்ததைக் காண நான் ஆச்சரியப்பட்டேன். ஊரில் உள்ளவர்களெல்லாம் காலையில் எழுந்து வயல் வேலை களுக்குச் சென்று வேலை செய்து கொண்டிருக்க, இப்படி ஒருவர் உட்கார்ந்து கொண்டு, வழியில் போவோர் வருவோரை எல்லாம் வலிய அழைத்து அவர்கள் வேலை யையும் கெடுத்துக் கொண்டு, வீண் பேச்சுப் பேசும் நல்லவர் போல் இருப்பதை நான் விடுமுறையில் ஊருக்குப் போகையில் அறிந்துகொண்டேன். நான் எங்காவது வெளியில் செல்ல

நேர்ந்தாலும் அந்தப் பக்கம் செல்வதில்லை. சென்றால் எப்படியும் அழைத்து உட்கார வைத்து ஊர்க் கதைகளை யெல்லாம் சொல்லி ஒரு நாளைப் போக்கிவிடுவார். அப்படிப் பட்டவர் திடீரென்று வீட்டில் நுழையவே நான் அன்றைக்கு யாரும் பேச்சுக்குக் கிடைக்கவில்லை போலும், வீட்டில் வந்து வீண் வீம்பு அளக்கப் போகிறார் என நினைத்துக் கொண்டேன். நான் நினைத்தது வீண் போகவில்லை. ஏதேதோ அளந்தார். கடைசியாக ஒரு சிறு மூக்குத்தியைக் காட்டி 'இது உன்னுடையது தானா? பார்' என்று அம்மா விடம் நீட்டினார். அம்மாவும் ஆம் என்றார்கள். அவர் அது வந்த வரலாற்றையும் அதுபற்றித் தான் காட்டிய தீரச் செயலையும் பெருமையாகக் கூறி, அந்த மூக்குத்தியைத் தந்ததால் மண்டகப்படிக்கு ஒரு ரூபாய் தர வேண்டும் என்று சொன்னார். அம்மாவும் பிறகு என்று சொல்லாது' அப்போதே கொண்டுவந்து கொடுத்தார்கள். பிறகு அவர் சென்றுவிட்டார். அவர் அந்த மூக்குத்தியைப் பற்றி அளந்த கதை, அதன் முழு விவரத்தையும் அறிய என்னைத் தூண்டி யது. அம்மாவை அது பற்றிக் கேட்டேன். அவர்கள் முன்னமே அந்த வீண் பேச்சாளருடன் பேசிக் கொண்டிருந்த தால் பல வேலைகள் அப்படியே கிடக்கின்றனவென்றும், அவற்றை முடித்து மாலையில் எல்லாவற்றையும் சொல்லுவ தாகவும் சொன்னார்கள். குழந்தைகள் கதை கேட்க ஆவல் கொள்வது போலவே என் உள்ளத்திலும் ஏனோ அக்கதை யைக் கேட்க வேண்டுமென்ற ஆவல் தோன்றிற்று. மாலை எப்போது வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டே இருந்தேன்.

மாலைப்பொழுது வந்தது. அம்மா எல்லா வேலையும் முடித்துக்கொண்டு வந்தார்கள். நானும் உட்கார்ந்தேன். அவர்கள் மூக்குத்திக் கதையைச் சொன்னார்கள். இரண்டு வருடங்களுக்கு முன், என் தந்தையார் வாழ்ந்த காலத்தில்

அவர்கள் போட்டுக் கொண்டிருந்த மூக்குத்தி அது. அந்தக் காலத்தில் அவர்கள் ஆற்றில் மூழ்கும் வழக்கம் உண்டு. இன்றும் எங்கள் ஊரில் பெண்களும் ஆண்களும் பெரும் பாலாராக ஆற்றில் சென்று நாள்தோறும் மூழ்கி, ஆடை துப்புரவு செய்துகொண்டு வருவது வழக்கம். வேலையற்ற வர்களில் சிலர்தான் ஆற்றுக்குக் குளிக்கச் செல்லவும் சோம்பற்பட்டு வீட்டுக் கிணற்று அடிகளிலே குளித்துவிடு வார்கள். அன்றும் பெரும்பாலோர் ஆற்றுக்குச் சென்று குளிப்பது போன்றே என் அன்னையாரும் நாள்தோறும் ஆற்றுக்குச் சென்று குளிப்பார்கள். அப்படிக் குளிக்கும் போது ஒருநாள் அந்த மூக்குத்தி ஆற்று நீரில் கழன்று வீழ்ந்துவிட்டதாம். எங்கள் ஆறு பாலாறு. அதில் எப்போதோ ஒருமுறை வெள்ளம் வரும், மற்றக் காலங்களி லெல்லாம் ஊற்றுப் பெருக்கால்தான் நாங்கள் உய்ந்து வந்தோம். அன்னை ஔவையின் வாக்கு பிற ஆறுகள்வழி மெய்யோ அன்றிப் பொய்யோ என்றாலும்கூட எங்கள் பாலாறு அவர் வாக்கை மெய்யாகவே ஆக்கிவந்தது.

> 'ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாளும் அவ்வாறு
> ஊற்றுப் பெருக்கால் உலகுஊட்டும்'

என்ற ஔவை வாக்கை நாங்கள் மறக்காமல் செய்து வந்தது பாலாறு.

அந்த வரண்ட ஆற்றுச் சிறு ஊற்றுப் பள்ளத்திலே மூழ்கி வந்த என் அன்னையாருடைய மூக்குத்தி கழன்று மேல் பாகம் தண்ணீரில் வீழ்ந்துவிட்டது. வீட்டுக்கு வந்ததும் அடிப்பாகம் மட்டும் கீழே விழுந்ததாம். மேல்கல் வைத்துச் செய்த அந்த மூக்குத்தி காணவில்லையாம். உடனே அவர்கள் இரண்டொருவருடன் ஆற்றுக்குச் சென்று குளித்த இடத்தில் தேடினார்களாம். சிலமணி நேரம் துருவித் துருவித் தேடியும் கிடைக்கவில்லையாம். 'சரி போகட்டும்,

நம்முடையதாக இருந்தால் என்றாவது கிடைக்கும்' என்று விட்டு வந்துவிட்டார்களாம்.

இரண்டு ஆண்டுகளுக்கு மேல் கழிந்துவிட்டன. என் அன்னைக்கும் அது இன்று தேவை இல்லை. கணவனார் மறைந்தபின் அதனால் பலன் என்ன? நிற்க இரண்டு ஆண்டு களுக்கு இடையில் இரண்டு மூன்று முறை பெருவெள்ளம் ஆற்றில் வந்தது. மேடு பள்ளமாயிற்று. பள்ளம் மேடா யிற்று. வாய்க்கால் தூர்ந்தது. புது வாய்க்கால் வெட்டி இருப்பார்கள். அதுவும் தூர்ந்து அடுத்தடுத்து வந்த வெள்ளம் கழித்துப் புதுப் புது வாய்க்கால்கள் தோன்றி இருக்கும். இந்த நிலையில் அன்று தொலைந்த மூக்குத்தி எப்படிக் கிடைக்கும்?

புதிதாக வெள்ளம் வந்து வற்றியபின் கால்வாய் தோண் டினார்கள். கீழ் மண் எல்லாம் மேலாகப் புரள, இடையில் சிறு ஊற்று ஓடிக்கொண்டிருந்தது. அந்த மூக்குத்தி கொண்டு வந்தவரும் இன்னும் அவருடன் பொழுதுபோக்குக்காகச் சுற்றிக் கொண்டிருந்த இரண்டொருவரும் முன்னாள் மாலை அந்த ஊற்றுக் கரையில் உட்கார்ந்து பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார்களாம். பேச்சோடு கையும் சும்மா இராமல் மண்ணைக் கிளறிக்கொண்டிருந்ததாம். ஒருதரம் மண்ணைத் தள்ளும்போது மண்ணுடன் இந்த மூக்குத்தியும் புரண்டு வந்ததாம். மண்ணோடு மண்ணாக நிறம் குன்றி ஏதோ சிறு மண்கட்டி என இருந்ததை அவர்கள் எடுத்துத் துடைத்துப் பார்க்க அது மூக்குத்தியாய்த் தெரிந்ததாம். உடனே அது யாருடையது என்ற கேள்வி எழுந்திருக்கும். அந்தப் பொழுதுபோக்கும் பெரியவருக்கு ஊர்க் கதை எல்லாம் தெரியுமாதலால், யோசித்து அது என் அன்னையுடையதாகத் தான் இருக்கவேண்டும் என்று முடிவு செய்தாராம். மறுநாள் அதை எடுத்துக்கொண்டு வந்து என் அன்னை கையில் கொடுத்துத்தான் கைக்கூலியாக மண்டகப்படியின் பெயரால் ஒரு ரூபாய் வாங்கிச் சென்றார்.

அன்னையார் இந்தக் கதையைச் சொல்லி ஒரு பெரு மூச்சு எறிந்தார். 'ஆம்! நம்முடைய சொத்தானால்—நாம் மெய்வருந்திப் பாடுபட்ட பொருளானால் எத்தனை ஆண்டு கள் கழித்தாலும் அது நம்மைவிட்டுப் பிரிந்தே போய்விட் டாலும் எப்படியும் திரும்ப நம்மிடமே வந்துசேரும் என்று நான் அடிக்கடி சொல்லுவது எவ்வளவு மெய் என்று உனக்குத் தெரிகிறதா?' என்று கேட்டார்கள். நானும் ஆம் என்று தலையாட்டினேன். எத்தனையோ முறை வெள்ளம், மண் மேடுகள், பள்ளங்கள்—இடையிலே கழிந்த எத்தனையோ நாட்கள்—இவற்றையெல்லாம் கடந்து, அந்தச் சிறுபொருள்-மூக்குத்தி கிடைத்ததை என்னவென்று சொல்வது! அது மண்ணோடு மண்ணாக மறைந்து போயிருக்கலாம், அன்றி வேறு தனியாக யாரிடமாவது அகப்பட்டு விற்கப்பெற்றிருக் கலாம். இத்தனை நாள் கழித்தும் ஒரு தனி மனிதனிடம் அகப்பட்டிருந்தால் ஒருவேளை வெளிவராது போனாலும் போயிருக்கும். ஆனால் நான்கைந்து பேருக்கிடையில் அது கண்டுபிடிக்கப் பெற்றமையின் வீடுவந்து சேர்ந்தது. அதன் விலை ஒன்றும் அதிகம் இல்லைதான். அதிகமாக இருந்தால் பதினைந்து—இருபது ரூபாய் இருக்கும். எனினும் அது உரியவரிடம் இத்தனை ஆண்டுகள் கழித்து வந்து சேர்ந்தது என்றால்—அதுவும் வெள்ளத்திற்கும் பள்ளத்திற்கும் ஈடு கொடுத்து வெளிப்பட்டு உரியவரிடம் வந்தது என்றால்—அதை எண்ணி வியவாதிருக்க முடியுமா!

இந்த நிலையில் எனக்கு மற்றொன்றும் நினைவு வருகிறது. ஒருகால் என் அன்னையார் எங்கள் ஊரில் ஒரு துக்கம் விசாரிக்கச் சென்று வந்தார்கள். மாலையில் விசாரித்துவிட்டு அப்படியே ஆற்றில் செல்லும் ஓடையில் மூழ்கி விட்டு வந்தார்கள். எல்லாருமே அப்படித்தான் செய்வது வழக்கம். துக்கம் விசாரிக்கச் செல்லுபவர்கள் அப்படியே வீட்டிற்குள் புகக்கூடாது என்பது பழக்கம்.

மேலும் வீட்டின் கிணற்றடியில் வந்து மூழ்குவதிலும், பரக்க ஓடும் பாலாற்று ஊற்று நீரில் மூழ்குவது சிறப்பல்லவா? என் அன்னையும் அப்படியே அன்று மாலை ஊற்று நீரில் மூழ்கி வீட்டிற்கு வந்தார்கள். அவர்கள் கழுத்தில் ஒரு செம்பவள மாலை ஒன்றுதான் இருந்தது. அதன் நுனியில் பொன் இழைத்த ஒரு பெரும் உத்திராட்சமும் அழகாக அமைக்கப் பட்டிருந்தது. இரவு எட்டு மணிக்கு அந்த உத்திராட்சம் வீழ்ந்து விட்டதை அன்னையார் அறிந்தார்கள். அந்த வேளையில் அதை எங்கு சென்று தேடுவது? நான் வீட்டில் தான் இருந்தேன். என்றாலும் நன்கு இருட்டிய இரவில் எங்கு சென்று தேடுவது? விடியற்காலையில் எழுந்து அவர்கள் குளித்த அந்த ஊற்று நீரில் சென்று தேடுமாறு கூறினார்கள். வேறு எங்கே வீழ்ந்திருந்தாலும் அது வீழ்ந்த ஒலி கேட்டிருக் கும் என்றும், அவ்வாறு கேளாமையின் குளிக்கும் காலத்தில் ஊற்று நீரில்தான் வீழ்ந்திருக்கும் என்றும், ஆயினும் தான் குளித்த பிறகு மாலை ஐந்து மணிக்கு மேல்—எத்தனையோ பேர் வந்து மூழ்கிச் சென்றிருப்பார்கள் என்றும், அது யாரிடத் தில் கிடைத்ததோ—பெற்றவர்கள் கொடுப்பார்களோ, கொடார்களோ என்றும், இறுதியாக 'நம்முடையதானால் எப்படியும் கிடைக்கும், விடியற்காலை சென்று தேடிப்பார்' என்றும் கூறினார்கள். நானும் சரி என்று படுத்துக் கொண் டேன்.

மறுநாள் நன்கு புலருவதன் முன்பே என்னை அன்னை யார் எழுப்பி விட்டார்கள். நேராக அவர்கள் குளித்ததாகக் கூறிய ஊற்றுத் துறைக்குச் சென்றேன். நன்றாகப் புலராத முன் பொழுதாதலின்—இருட்டில் மணலில் ஒன்றும் தெரிய வில்லை, சிறிதுநேரம் உட்கார்ந்திருந்தேன்; நன்கு விடிந்தது. நான் எழுந்து அந்த ஊற்றில் துவைக்கும் கல்லின் பக்கத்தில் உட்கார்ந்து குளிக்கத் தோண்டிய பள்ளத்தின் அருகில் சென்றேன். யாரும் தண்ணீரைக் கலக்கவில்லை. கலக்கி

னாலும் அந்தத் தெளிநீர் கலங்காது. அத்தெள்ளிய நீரில் சுமார் ஒன்றரை அடி ஆழமுள்ள அந்தப் பள்ளத்தின் மத்தியில் அடியில் மின்னிக்கொண்டு அந்த உருத்திராக்கம் காட்சி தந்தது. என் மகிழ்ச்சியை யாரே அளவிட வல்லார். இழந்ததைக் கண்ட மகிழ்ச்சி ஒரு புறம், 'நம்முடையதாயின் எப்படியும் கிடைக்கும்' என்ற அன்னையின் தளரா உறுதி ஒரு புறம் என்னை ஈர்த்தன. ஓடினேன் வீட்டுக்கு. அன்னையிடம் கொடுத்தேன். அவர்கள் மகிழ்ந்தார்கள். கண்ணீர் பெருக்கினார்கள். 'உழைப்பு வீண் போகாது, என்றும் 'உரியவரைச் சேரும்' என்றார்கள். ஆம்! அவர்கள் சொற்படி. அவர்கள் காட்டிய மேலே கண்ட இரு சான்றுகள் வழி நான் இன்றுவரை இயன்ற அளவு உழைத்துத்தான் வருகின்றேன். அன்னை அருளும் உடன் நிற்கின்றது என்ற துணிவில் பணியாற்றுகின்றேன்.

# 24. சோடா புட்டி

வருத்தப்பட்டுச் சம்பாதிக்கிற நம் பொருள் என்றைக் காயினும் எங்கே சென்றாலும் நம் கைக்கு வந்துசேரும் என்று அம்மா அடிக்கடி சொல்வது மேற்கண்டபடி இரு சமயங்களில் மெய்யானதை அறிந்தேன். அப்படியே நமக்கு உரிமை அல்லாததை, விரும்பி ஒருவர் கொண்டு வந்து கொடுப்பதாயினும் சொந்தமல்லாததை எடுத்துக் கொள்ளுதல் நமக்குத் தீமையாகத்தான் முடியும் என்பதையும் கண்டு கொண்டேன். ஏதோ ஒரு சிறு வேலை செய்வதற்காக—நமக்கு உரிமையல்லாத வேலையைச் செய்வதற்காக—பிறர் உபகாரமாக ஏதாவது கொடுத்தாலும் அதை நான் ஏற்றுக் கொள்ளலாகாது என அம்மா அடிக்கடி சொல்லுவார்கள். அதுவும் மெய்யானதை அன்றொரு நாள் கண்டேன்.

எங்கள் ஊரில் நிலத்தை விற்பவரும் வாங்குபவரும் பலர். அடிக்கடி விற்பனைப்பத்திரம் வாங்கி எழுதவேண்டிய வேலை ஊரில் அன்று கணக்கர் கையில் இருந்தது. ஊரில் சிலர் படித் தவர்கள் இருந்தாலும் அந்த வேலையைச் செய்ய யாரும் செல்வதில்லை. ஒரு வேளை அதனால் கணக்கப்பிள்ளையின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுமே என்ற காரணத்தினாலோ, 'நமக்கு ஏன் இந்த வேலை எல்லாம்' என்ற சோம்பல் எண்ணத்தினாலோ அன்று ஏனோ யாரும் அந்த எழுத்து வேலைக்கு வருவதில்லை. கணக்கப்பிள்ளையும் அவற்றையெல்லாம் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, ஒரு பத்திரத்துக்கு இவ்வளவு ரூபாய் என்று முன் பேசிக் கொண்டே எழுதுவார். சில சமயம் பத்திர 'ஸ்டாம்பு'க்குக் கொடுக்க வேண்டிய கணக்கைவிட அதிகமாகப் பணம் கேட்டு வாங்குவார், அப்படிப் பணம் வாங்கி, எங்கள் ஊரில் பெரிய பணக்காரர் என்னுமாறு அவர் வாழ்ந்து வந்தார். ஆனால் இன்று அவர் பிள்ளைகள் அந்த முறைகளிலெல்லாம் இல்லாமல் அமைதியாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஊரிலும் யாரும் அவர்களிடம் பாண்டுப் பத்திரம் எழுதச் சொல்வதில்லை.

நான் பத்தாவது படித்துக் கொண்டிருந்த அந்த நாளிலே ஓர் விடுமுறைக்கு ஊருக்கு வந்திருந்தேன், என் பக்கத்து வீட்டுக்காரர் ஒருவர் பத்திரம் எழுதவேண்டும் என்று சொன்னார், அவர் கணக்கப்பிள்ளையிடம் போனால் அவருக் குப் பத்துப் பதினைந்து ரூபாய்கள் தரவேண்டி இருக்குமென் றும், ஆகவே என்னையே எழுதித்தர வேண்டும் என்றும் சொன்னார். நான் அப்போது வயதில் இளையவனாதலாலும் அவ்வாறெல்லாம் எழுதிப்பழக்கப்பட்டவன் அல்லன் ஆதலா லும் அவ்வாறு எழுத இசையவில்லை. உடனே அவர் என் அம்மாவிடம் சென்று முறையிட்டார். அவருக்குச் சாதகமான முறையில் சில சொன்னார். 'பாருங்கள், உங்கள் பிள்ளை

யைப் பத்தாவது வரையில் படிக்க வைக்கிறீர்களே; என்ன பிரயோஜனம்? ஒரு பத்திரம் எழுதத் தெரியவில்லையாம். படிப்பதைக்காட்டிலும் பேசாமல் வீட்டிலேயே இருக்கலாம்' என்றார். என் அன்னையாருக்கு யாராவது என்னைத் தாழ்த்திப் பேசினால் பிடிக்காது. அவர்கள் உடனே கோபம் கொண்டு என்னை அழைத்து 'அவர் சொல்வது மெய்தானா?' என்றார்கள். நான் 'ஆம்' என்று சொல்லி மேலும் பேசினேன். 'அந்த மாதிரி எழுதுவது கூடாது' என்றேன். நான் சிறியவனாதலால் எழுதுவது முறைப்படி தவறு என்றேன், என்றாலும் அன்னையார் கேட்கவில்லை. 'உன்னைப் படிக்க வைத்தும் எழுதத் தெரியாதவன் என்று சொல்லுகிறார்களே, அதற்காகவாவது நீ எழுதிக்கொடுக்க வேண்டாமா? வெட்கமாக இல்லையா' என்று கேட்டார்கள். 'சரி, அப்படியாயின் எழுதித் தருகிறேன்' என்றேன்.

அவர் குறிப்புக்களைக் கொடுத்தார். நானும் விற்பனை வாங்கவேண்டிய வகையில் பத்திரத்தின் நகல் எழுதிக் காண்பித்தேன். அவரும் மற்றவர்களும் பார்த்துப் பார்த்து மிகவும் நன்றாகவும் ஒழுங்காகவும் அமைந்திருக்கிறது என்றார்கள். உடனே என்னையே பத்திரத் தாளில் எழுதச் சொன்னார்கள். நான் இளையவனாய் இருப்பதால் எழுதலாகாது என்பதை விளக்கிச் சொல்லப் பெரும் தொல்லையாகப் போய்விட்டது. கடைசியில் ஒருவாறு சரி என்றார்கள். வேறொருவர் எழுதினால் குறைந்தது ஐந்து ரூபாயாவது தர வேண்டுமே என்பது அவர் கவலை. நான் அதைக் கண்டேனா? நன்றாகக் கையெழுத்து எழுதும் ஒரு பெரியவரை வைத்துக் கொண்டு நான் சொல்லிக்கொண்டே வந்தேன். அவர் எழுதி முடித்தார். பிறகு அவர்கள் அந்தப் பத்திரத்தை வாலாஜாபாத்திற்கு எடுத்துக்கொண்டு சென்றார்கள். பத்திரம் ஒழுங்காக எழுதப் பெற்றிருந்தமையால் யாதொரு தவறும் தடங்கலும் இல்லாமல் ஆவணக்

களரியில் பதிவு செய்யப் பெற்றது. அன்று மாலை அந்தப் பக்கத்து வீட்டுக்காரர் கையில் ஒரு டஜன் சோடாபுட்டிப் பெட்டியுடன் வந்தார்.

பத்திரம் எழுதி எடுத்துக் கொண்டு உடன் சென்றவரை அவருடன் நான் காணவில்லை. 'அவர் எங்கே'? என்றேன். 'அதைத்தானே சொல்ல வந்தேன்' என்று அவரே சொல்ல விரும்பியவர் போலப் பேச ஆரம்பித்தார். 'நீ சொல்லி யதை அப்படியே எழுதி வந்தான்; கூடவே சாட்சிக்காக அங்கும் வந்தான்; என்னமோ பலகாரம் சாப்பிட்டு வரட்டும் என்று எட்டணா கொடுத்தேன். அவன் குறைந்தது இரண்டு ரூபாய் வேண்டும் என்றான். நான் 'போடா போ' தரமுடியாது என்று சொல்லி விட்டேன். அவன் ஏதேதோ பேசினான். நான் கிடக்கிறது கழுதை என்று வைது விட்டு எட்டணாவை வீசி எறிந்துவிட்டு வந்து விட்டேன். இனி அவன் முகதரிசனம் கூடச் செய்ய மாட்டேன். ஏதோ பெரிய மலையைப் புரட்டியது போல் வாலாட்டுகிறது நாய்' என்று பேசி முடித்தார். எனக்கு உள்ளத்தில் கோபம் பொங்கியது. இவருக்கு உதவியதற்காக அவர் பாவம் நாயாகவும், கழுதை யாகவும் ஆக வேண்டுமா? கணக்குப் பிள்ளை எழுதினால் அவருக்குப் பத்துப் பதினைந்து தரவேண்டும் என்பதற் காகவே என்னிடம் வந்து என் அம்மாவிடம் இல்லாததை எல்லாம் சொல்லி எழுத வைத்தார். நான் ஒன்றும் கேட்க வில்லை. ஆகவே அவருக்கு அந்தப் பத்து ரூபாயும் லாபம் தானே! அதில் அதை எழுதினவருக்கு இரண்டு ரூபாய் கொடுத்தால் என்ன என்று என்னையே கேட்டுக் கொண் டேன். அவரைக் கேட்டால் அவர் இல்லாததையும் பொல்லாத தையும் சேர்த்து அம்மாவிடம் கோள் மூட்டுவார். எனவே நானே நினைத்துக் கொண்டேன். நாங்கள் பேசிக் கொண்டே இருக்கும்போது உள் வேலைகளை முடித்துக் கொண்டு அம்மா வெளி வந்தார்கள். 'என்ன எல்லாம் முடிந்ததா?' என்றார்

கள். அவர் ‘ஆம்’ என்று கூறி அரை ரூபாய் கொடுத்து மற்ற வரை விரட்டிய தன் பெருமையை மறுபடியும் அம்மாவிடம் சொன்னார். சொல்லிப் புறப்பட எழுந்தவர் அந்தச் சோடா புட்டிகளை அம்மா பக்கம் நகர்த்தி ‘உங்களுக்காக வாங்கி வந்தேன். நாளை காலியானதும் நானே எடுத்துக் கொண்டு சென்று கொடுத்து விடுகிறேன்’ என்றார். அம்மாவுக்குக் கோபம் வந்தது. ‘யார் உங்களை இதை வாங்கி வரச் சொன்னது? கைக்கூலியா இது? வேண்டாம் எடுத்துக் கொண்டு போங்கள்’ என்று கோபத்தோடு சொன்னார். அவர் மெள்ள நழுவி விட்டார் என்றே சொல்ல வேண்டும்.

அம்மாவிற்குச் சற்றுத் தளர்ச்சி இருந்தால் அவர்கள் அடிக்கடி பழம், சோடா முதலியவற்றை வாங்கி வைத்துக் கொண்டு உண்டு வருவார்கள். ஆகவே அதைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டார் அவர். அன்றைக்கு வாலாஜா பாத்தில் சோடா இரண்டு பை, கலர் நான்கு பை என்று மிகக் குறைந்த விலையில் விற்றது. ஆகவே அவர் வாங்கி வந்த அனைத்தும் சேர்த்தாலும் மூன்று அணாக்கள்தாம். அவர் கணக்கப்பிள்ளை எழுதாததால் வந்த பத்து ரூபா லாபத்தில் எனக்கு மூன்றணா செலவிட்டால் என்ன என் எண்ணி இருப்பார். ஆனால் அந்த சாட்சிக்காக வந்த வனுக்கு ஒரு ரூபாய்கூடக் கொடுக்க அவர் விரும்பவில்லை. அம்மா அந்தச் சோடா புட்டிகளை அப்படியே எடுத்து வைத்தார்கள். என்றாலும் ஒன்றிரண்டை உடைத்து யாரோ வந்தவருக்குக் கொடுக்கச் சொன்னார்கள். ஆயினும் அம்மா மனத்தில் நிம்மதி இல்லை. ‘இதோ இந்த மூன்றணா சோடாவுக்குப் பதில் நமக்கு இரண்டு மடங்காக ஏதாவது நட்டம் வரும் பார்’ என்று சொல்லிக் கொண்டே இருந்தார் கள். ‘நம் வேலை பத்திரம் எழுதுவது அல்ல. அந்த வேலையே செய்து பிழைக்கும் கணக்கப் பிள்ளையோ மற்றவரோ வேண்டுமானால் கைக்கூலி பெறலாம், நாம்

ஏதோ உதவினோம். அதற்கு இதுவா?' என்று கூறிக் கொண்டே இருந்தார்கள்.

மாலை வந்தது. விளக்கேற்றும் நேரம் ஆயிற்று. கை விளக்கேற்றி வைத்துவிட்டார்கள். நன்கு இருட்டிய பின்பு லாந்தர் விளக்கு ஏற்றவேண்டும். பகலில் விளக்கை நன்கு துடைத்து உலர்த்தி வைத்திருந்தார்கள். விளக்கு ஏற்றப் பட்டது. நன்கு எரிந்துகொண்டிருந்த வேளையில் வீட்டுக்கு வந்த ஒருவர் கை, கால் கழுவிக்கொண்டு வந்து கையை வீசினார். ஒரு துளி லாந்தர் கண்ணாடி மேல் பட்டது. அவ்வளவுதான்; 'படீர்', என்று கண்ணாடி உடைந்தது. உடனே அம்மா என்னைப் பார்த்தார்கள்; பேசினார்கள். 'நான் சொன்னேன் பார்த்தாயா! மூன்றணா சோடா புட்டிக் காக ஐந்தணா கண்ணாடி போயிற்று. போய் அவரை உடனே அழைத்துக் கொண்டு வா. மிகுதியை எடுத்துப் போகச் சொல். அப்போதே எடுத்துப் போகச் சொன்னேன். அவர் சென்று விட்டார். நம் வீட்டில் இருந்ததால் தவறி இரண்டொருவருக்கு உடைத்துக் கொடுத்தோம். அதன் பயன்தான் இது. நமக்கு உரிமை அல்லாததை நாம் விரும்பி னால் ஒற்றைக்கு இரட்டையாக நமக்கு நட்டம்தான் வந்து சேரும். உம். அவரை அழைத்து வா 'என்று கூறினார்கள். நான் ஓடி அவரை அழைத்து வந்தேன். வந்தவரிடம் எல்லா வற்றையும் சொன்னார்கள், அம்மா உடைந்த கண்ணாடி யைக் காட்டி 'உம்மால் எனக்கு எவ்வளவு நட்டம் பார்த்தீர் களா? மூன்றணா சோடாவுக்கு ஐந்தணா கண்ணாடி? அது தான் வேண்டாம் என்றேன். உடனே எடுத்துச் செல்லுங் கள்' என்றார்கள். அவர் தயங்கினார். பக்கத்தில் உள்ள வர் காரணம் சொன்னார்- இதை இவர் வீட்டிற்கு எடுத்துச் சென்றால் வீட்டில் அவர் மனைவி 'அதற்கு ஏன் செலவு செய் தாய்?' என்று ஏசுவார். அதனால்தான் பயப்படுகிறார், சரி நான் எடுத்து வைக்கிறேன். நாளை நீ எடுத்துக்கொண்டுபோ'

என்று சொல்லி, அந்த வீரர் தம் வீட்டுக்குக் கொண்டு செல்வதைக் கூறி அவரைக் காப்பாற்றினார், சோடா புட்டியும் வெளியில் சென்றது. அம்மா ஆறுதல் அடைந்தார்கள். என்னை அழைத்து 'இதைப் பார்த்துக் கொண்டாயல்லவா! உனக்கு உரிமை இல்லாததை நீ விரும்பினால் இம்மாதிரி நட்டங்கள்தான் உண்டாகும். சாக்கிரதையாக நட' என்று அறிவுரை கூறினார்கள். இதுவரை அவர்கள் சொற்படி கூடிய வகையில் எனக்கு உரிமை இல்லாததை நான் பற்றாமல் வாழவே முயல்கின்றேன். அவர்கள் அருள் நலம் என்னைக் காக்கிறது என்னலாம்.

# 25. ஊழியர் சங்கம்

அந்தக் காலத்தில் நாட்டில் கொந்தளிப்பு அதிகமாக இருந்தது. உரிமை வேட்கை மீது மக்கள் ஆங்கில அரசாங்கத்தை எதிர்த்துப் போராட்டங்கள் தொடங்கினர். நாடெங்கும் உப்புச் சத்தியாக்கிரகம் நடைபெற்றது. அண்ணல் காந்தி அடிகளார் தண்டி சென்று உப்புக் காய்ச்ச முன்னின்றார். தமிழ் நாட்டிலும் வேதாரணியக் கடற்கரையில் உப்புக் காய்ச்சி அரசியலை மீறும் போராட்டம் நடைபெற்றது. கல்லூரி மாணவர்களும் உயர்நிலைப் பள்ளி மாணவர்களும் அதில் பங்குகொள்ள வேண்டி இருந்தது. பலர் படிப்பை விட்டனர். சிலர் காந்தி அடிகளை நோக்கிச் சென்றனர். இப்படி நாட்டில் பல வகையில் கொந்தளிப்பு சூழ்ந்து கொண்டிருக்கையில் நான் பள்ளி இறுதி வகுப்பில் காலை வைக்க முன் நின்றேன். பள்ளியிலே என்னுடன் நெருங்கிப் பழகும் நண்பர்கள் மிகச் சிலர். நான் யாருடனும் அதிகமாக நெருங்குவதில்லை. ஏனோ என் நிலை அப்படி அமைந்துவிட்டது. 'அன்றும் சரி இன்றும் சரி' நான்

யாரிடமும் வலியச் சென்று உறவாடும் வழக்கத்தைக் கொள்ளவில்லை. அவ்வாறு செய்வது சரியில்லை என்றும் நாமே வலியச் சென்று பிறருடன் உறவாடுவதுதான் உலகில் முன்னேற வழி என்றும் பல நண்பர்கள் சொல் வார்கள். அது ஓரளவு உண்மை என்பதைக் கண்டேன்; என்றாலும்,ஏனோ அப்படி மேல்விழுந்து பெறும் தற்பெருமை யான ஆடம்பரத்தை நான் மேற்கொள்ள விரும்பவில்லை.

உயர்நிலைப் பள்ளியில் பயிலும் காலத்து எனக்கு நெருங்கிய நண்பர்களாக நான்கைந்து பேர்தாம் இருந் தனர். அவர்களோடு நான் பயிலுவதும், விளையாடுவதும் அரசியல் காரியங்கள் பேசுவதும் உண்டு. உரிமைக் கொந்தளிப்புக்கு இடையிலும் நாங்கள் ஒருசிலர் பங்கு கொள்ள நினைத்தோம். அரசியல் கைதிகளைச் சிறை செய்து நீதிமன்றங்களுக்குக் கொண்டு வரும்போதெல்லாம் நாங்கள் சென்று காண்பதுண்டு. அதனால் எங்கள் ஆசிரியர்கள்—சிறப்பாகக் கணக்கு ஆசிரியர்—அதிகமாகக் கோபிப்பார். இன்று அவர் இல்லை. அன்று உண்மையில் எங்களில் ஒருசிலரின் கல்வி வளர அக்கறை காட்டியவர். ஆகவே நாங்கள் பல சூழல்களுக்கு உட்பட்டுக் கெடலாகாது என்பது அவர் ஆசை. சில சமயம் அவர் என்னை அடித்துக் கூட இருக்கிறார். எப்படி இருந்தும் நாங்கள் அந்த இயக்கத்தில் தீவிரப் பங்கு கொள்ளாவிட்டாலும் ஓய்வு நேரங்களிலெல்லாம் அத் துறையில் பங்கு கொண்டே உழைத்தோம். அவற்றுள் ஒன்றே ஊழியர் சங்கம் என்பது.

நாட்டு மக்கள் நல் உணர்வு பெற்று எழுந்து விடுதலைக்குப் பணிபுரியும் அந்நாளில் நாங்களும் ஏதாவது செய்ய வேண்டுமென விரும்பினோம். அந்த நாளில் எங்கள் ஊரிலிருந்து—எங்கள் உயர்நிலைப் பள்ளியில் முன் படித் திருந்து அப்போது சென்னை சென்று பயின்ற சில உணர்ச்சி

மிக்க கல்லூரி மாணவர்கள் அரசியலில் தீவிரமாய்ப் பங்கு எடுத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் பித்தன் என்ற ஒரு திங்கள் இதழையும் வெளியிட்டு வந்தனர். அவர்களுள் முக்கியமானவர் இந்திய அரசாங்க முன்னைய இரெயில்வே துணை அமைச்சர் ஆவார். அவர் அப்‘பித்தன்’ பத்திரிகையைக் கொணர்ந்து எங்களையெல்லாம் அதற்கு உறுப்பினராக்கிச் சென்றதோடு, எங்களையெல்லாம் அதில் கட்டுரை எழுதுமாறும் வற்புறுத்தினார். அந்தப் பத்திரிகை எழுத்துக்களும், நாட்டு நிலையும் ஒன்று சேர்ந்து ஊழியர் சங்கத்தைத் தோற்றுவித்தன என்னலாம்.

ஊழியர் சங்கத்தில் சேர்ந்தவர் மிகச் சிலரே. பலர் அக்காலத்தில் வெளிப்படையாக அரசியல் எதிர்ப்புக் கழகங்களில் பங்கு கொள்ள அஞ்சுவர். நானும் என் நெருங்கிய நண்பர்கள் சிலருமே அச்சங்கத்தை அமைத்தோம். அவர்களுள்ளும் தலைவராக முன்னின்று அச்சங்கத்தை நடத்த ஒருவரும் முன் வரவில்லை. என்றும் அமைதியாக இருந்த என் உள்ளத்தில் எப்படியோ ஓர் உணர்ச்சி புகுந்தது. ‘நானே தலைவனாக இருந்து நடத்துகிறேன்’ என்று இசைந்து முன் நின்றேன். பள்ளியில் படித்த இரண்டு ஆண்டுகளிலும் அதன் தலைவனாக இருந்து ஒல்லும் வகை பணியாற்றினேன். பல அரசியல் கூட்டங்களில் கலந்துகொண்டேன். இன்று மாணவரை அரசியலில் சேரக்கூடாது என்று கூறும் அதே தலைவர்கள் அன்று அனைவரையும் பள்ளியிலிருந்து வெளியேறச் சொன்னார்கள். நான் அவ்வாறு வந்ததற்காக தண்டனையும் பெற்றிருக்கிறேன். குடும்பத்தில் உள்ள ஆதரவற்ற சூழ்நிலையையும், நானே முயன்று முன்னேற வேண்டிய முயற்சியையும், பிறவற்றையும் மறந்து, நாட்டு விடுதலை ஒன்றையே முன்னிறுத்திப் படிப்பைக்கூட விட நினைத்துவிட்டேன், எனினும் ஓரளவு ஆசிரியர் தந்த தண்டனைகளையேற்று அமைந்து பயின்றேன். தூய

கதராடையே அன்று நான் உடுத்துவது. பின் என் மண நாளிலே கூட அத்தகைய கதர் ஆடைகளையே மணப் பரிசாகப் பெற்றேன். நான் அன்றுதொட்டுக் காங்கிரசில் உறுப்பினனாகவும் இருந்தேன். எனினும் சில ஆண்டுகள் கழித்து - 1938இல் என்று நினைக்கிறேன் - செங்கற்பட்டு மாவட்டக் கழகத்தேர்தலில் நான் நெடுநாளைய காங்கிரஸ் காரன் என்ற காரணத்தால் தள்ளப்பட்டு, அன்று புதிதாகக் காங்கிரஸில் சேர்ந்த ஒருவரைக் காங்கிரஸ் அபேட்சகராக அவர்கள் தேர்ந்தெடுத்த அந்த நாள் வரை நான் காங்கிரஸ் காரனாகத்தான் இருந்தேன். பிறகு என் வாழ்வு நெறி அறிவுத் துறையில் சென்று விட்டது. அத்தேர்தலில் நானே வெற்றி பெற்றேன் என்பதையும் குறிப்பிடுகிறேன்.

ஊழியர் சங்கம் நன்கு பணியாற்றிற்று. பக்கத்திலே உள்ள சேரிகளுக்கெல்லாம் சென்று அங்கு மக்கள் உயர வேண்டிய வகை பற்றியும், தூய்மையாக இருக்க வேண்டிய நிலை பற்றியும் பேசிச் சீர்திருத்தம் செய்து வந்தோம். அன்று கள்ளைக் குடிக்க வேண்டாம் என்று பிரசாரம் செய்ய அரசாங்கம் அனுமதித்து இருந்தது. எனவே நாங்கள் இரண்டிரண்டு மாணவர்களாகப் பல ஊர்களுக்குச் சென்று மதுவிலக்குப் பிரசாரம் செய்தோம். விடுமுறை நாட்களில் தான் இவற்றைச் செய்தோம் என்றாலும் எங்கள் முறையான படிப்பு இவற்றால் சிறிது தடைப்பட்டது என்று சொல்லலாம். ஒரு நாள் ஒரு கூட்டத்திற்குப் போவதற்காக நான் என் கணக்கு ஆசிரியரிடம் உத்தரவு வாங்கிக் கொண்டு வந்தேன். அன்று முக்கியமான பாடம் நடை பெற்றது. பிறகு சில நாட்கள் கழித்தே அந்தப் பாடத்தை நான் புரிந்துகொள்ள முடிந்தது. இவ்வாறு சில பாடங்கள் எனக்குப் புரியா வகையில் சென்றன. எனினும் பள்ளி யிறுதி வகுப்பில் கடைசி ஆறு திங்களில் நான் ஒன்றிலும் பங்கு கொள்ளாது அமைதியாக இருந்து இறுதியில் வெற்றி

பெற்றேன். என்றாலும் அந்த இறுதி நாளிலும் இயற்கை வழி நான் துன்புறுத்தப்பட்டேன். 'மலேரியா' என்னும் கொடிய நோய் சனவரி மாதத்தில் என்னைப் படுக்கையில் வைத்துவிட்டது. பல பாடங்களை விட்டுவிட்டேன். இறுதியில் தேர்வு ஒரு மாதம் இருக்கும்போது முயன்று படித்து வெற்றியும் பெற்றுவிட்டேன்.

இவ்வாறு எனது உயர்நிலைப் பள்ளியில் பயிலும்போதே அரசியல் அலைகளால் ஓரளவு மோதப்பட்டும், சமூக சீர் திருத்தப் பணியில் ஓர் அளவு இறங்கியும் தொண்டாற்றி, அவற்றால் பாடத்துக்குப் பங்கம் நேராதவாறு பார்த்துக் கொண்டும், என் அன்னைக்கும் பாட்டிக்கும் யாதொரு மனத்தாங்கலும் வைக்காது அவர்கள் மொழிப்படி நடந்தும் என் கல்விக்கு-பள்ளியில் பயின்ற கல்விக்கு-இளமையை முடிக்கும் கல்விக்கு முற்றுப்புள்ளி வைத்தேன். 1931இல் பள்ளி இறுதி வகுப்பில் வெற்றியும் பெற்றேன்.

இவ்வாறு எனது கல்லா இளமை வாழ்விடை ஒரு கட்டத்தைக் கடந்து தலைநிமிர்ந்தேன். அந்த நாட்களே எனக்கு வழிகாட்டிய பெருநாட்கள். எனவே அவற்றை எண்ணி எண்ணி வாழ்த்துகின்றேன். வாழ்க கல்லா இளமை! வளர்க குழந்தை உள்ளம்!

# அன்னையைப் பற்றி*

## தாயானாள்—தூநினைவால்

என்றன் சுகங்காண இன்பம் அடைந்திடுவாள்
துன்பம் அகற்றிஎனைச் சோபிப்பாள்—அன்புளத்தில்
ஓர்மகனாய் நின்றஎன்றன் உயர்வேதன் வாழ்வாகச்
சீர்புவியில் வாழ்ந்திடுநற் செல்வமவள்—பேரான

செல்வம் எனக்கெனவே சேர்க்கத்தன் இன்பமெலாம்
ஒல்லாவே என்று ஒதுக்கியவள்—எவ்வாறும்
நான்மகிழ்ந்தால் தான்மகிழ்வாள் நன்மனத்தில் வாழ்வுற்றுத்
தேன்இனிக்கும் தீஞ்சொல்லைச் செப்பிடுவாள்—மாறான

ஒன்னார் தமக்கிளையா உள்ளத்தளாய் நின்று
எந்நாளும் என்னுயிர்க்கு இன்பமளி—பொன்னான
நற்கருணை கொள்வாள் நலஞ்சிறந்து என்னைவளர்த்
துற்றவனாய்ப் போற்ற உறுதிசெய்தாள்—பெற்றவளே
தானாய் இருந்தாலும் தந்தைபோல் கல்விநலம்
வேண அளித்தென்னை வித்தகனாய்—நானிலத்தே
எல்லாரும் போற்ற எழிலுடையனாக்கினாள்
பொல்லாங்கைப் போக்கிக் குருவானாள்—நல்லாளாய்
ஐந்து பெருங்குரவர் ஆனாளே யாய்நின்ற
விஞ்ச நலமளிக்கும் மேதக்காள்—எஞ்சாத
நற்றாய் நல்லம்பலவன் நற்கோயில் பொற்கரைமேல்
உற்று எனைக்காண உன்னுவாள்!

---

* 1939இல் காஞ்சியிலிருந்து பாலாற்று வெள்ளத்தினைப் பாராட்டி எழுதிய 'வெள்ளம் விடுதூதி'ன் சில அடிகள்

# 1. எண்ண அலை

வாழ்க்கைப் பயணம் நீண்டது—எண்பது கோடி நீடு நினைந்து எண்ணுவது—நினைக்க நினைக்க வளர்வது—உற்று நோக்க உணர்வூட்டுவது. என் வாழ்க்கைப் பயணத்தின் ஐம்பத்தைந்தாவது வயதில்—மைல் கல்லில் இன்று நான் நிற்கிறேன். இந்த ஐம்பதைந்தாண்டுகளில், அறியா நிலையில் ஐந்தாண்டுகள் கழிந்தனபோக, அரை நூற்றாண்டு எல்லையை எண்ணிப் பார்க்கிறேன். அது என் எண்ணத்தின் அளவு கடந்து அப்பாலே சென்று கொண்டே இருக்கின்றது. ஒரு பத்து ஆண்டுகளுக்கு முன் என் இளமையின் நினைவுகளை எண்ணி எண்ணி உருகினேன். அதன் விளைவால் எழுந்தது என் 'இளமையின் நினைவுகள்' என்ற பகுதி. இடையில் பத்து ஆண்டுகள் எப்படியோ—என்னென்ன வகையிலோ உருண்டோடி விட்டன. இன்று மீண்டும் என் கடந்த கால வாழ்வைப் பற்றிச் சிந்தித்துத் தீட்டத் தொடங்கிவிட்டேன். ஆயினும் அதற்கு அடிப்படையாகிய எண்ண அலைகள் எல்லையற்று விரிகின்றன. அவற்றின் இடையில் சிக்கி—தள்ளுண்டு—அலைந்து இதோ என் வாழ்வைத் திரும்பி நோக்கி எழுதத் தொடங்குகிறேன்.

வாழ்க்கை முழுக்க முழுக்கச் சுவையுள்ளது அன்று—அல்லது முற்றும் துன்பத் தொடக்குள்ளதுமன்று. இரண்டும் கலந்ததே வாழ்க்கை. அவரவர் மன அமைதியின் வழியே இன்பதுன்ப எல்லை பெருகவும் சிறுகவும் கூடும். சிலர் இல்லாததையெல்லாம் எண்ணி, எல்லாவற்றையும் ஏதோ இடர்ப்பாடு கலந்ததாகக் கருதி, வருந்தி வருந்தி வாழ்நாளைக் கழிப்பர்; சிலர் வள்ளுவர் கூறியாங்கு 'இடுக்கண் வருங்கால் நகுக' எனச் சிரித்து, துன்பத்தை ஏற்று அமைதியுறுவர். இன்னும் சிலர் 'எது வரினும் வருக அலது எது போயினும் போக' என்று எதற்கும் கவலையுறாது 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' எனும் வகையில் தம்மை மறந்து

வாழ்வர். ஆனால் இத்தகையவர் வீழ்ச்சியுற்றாலோ எழுதல், என்றும் இயலாது. அவர்கள் அனைவரும் கடந்த கால வாழ்வை எண்ணிப் பார்ப்பார்களாயின் பற்பல உண்மைகள் அவர்கட்குத் தோன்றாமற் போகாது. அந்த உண்மைகளின் ஊடேதான் அவர்தம் உள்ளம் அமையும். அவ்வாறு அவர்கள் எண்ணும் எண்ணம் அவர் வாழ்வை மட்டுமன்றிச் சமுதாய வாழ்வையே செம்மைப் பாதையில் ஈர்த்துச் செல்லும் ஆயினும் அவ்வாறு எண்ணுகின்றவர் சிலரே! எண்ணினும் எழுத்தில் வடிக்கின்றவர் அவரினும் மிகச் சிலரே!

வாழ்க்கை வெறும் புறத்தோற்றத்தால் மட்டும் முடிவு செய்யப்பெறுவதன்று. அகத்தொடு பொருந்தியதே வாழ்வின் அடித்தளம். அதை உணர்ந்தவரே மனிதர். அதை உணர்ந்து கொள்ளாதவரே பிறர்தம் புறவாழ்வைக் கண்டு பலப் பல வகையில் சிந்திப்பர்—பேசுவர். எனினும் ஒவ்வொருவர் வாழ்விலும் உள்ளே பொதிந்து கிடக்கும் எண்ணற்ற உண்மைகளை உணர்ந்து கொள்ள இயலாது. நானே என்னுடை வாழ்வில் என் அனுபவத்தில் பெற்ற பல உண்மைகளை மறந்துவிட்டேன். தீயவற்றை மறக்க வேண்டியது முறை—ஆனால் நல்லனவும் அல்லவா மறந்து போகின்றன. வாழ்க்கையைப் பற்றி எழுத வேண்டும் என்ற உணர்வு தூண்டத் தூண்ட சிற்சில சம்பவங்களும் அவற்றால் பிணைந்த பயன்களும் அவற்றால் நான் கண்டுகொண்ட உண்மைகளும் புலனாகின்றன. அவற்றுள் ஒருசிலவற்றையே நான் இங்கே தொகுத்துள்ளேன்.

உதகையின் உச்சியில் இருந்துகொண்டு நான் எழுதி முடித்த எனது 'இளமையின் நினைவுகள்' வெளிவந்து பத்து ஆண்டுகள் கழிந்துவிட்டன. அதைப் பயின்ற அன்பர் பலர் அந்த அடிப்படையிலேயே தொடர்ந்து வாழ்வின் பிறபகுதிகளைப் பற்றியும் வடித்துத்தர வேண்டும் என்று விரும்பினர். அந்தத் தொகுதியிலும் நான் என் இளமை வாழ்வு முற்றிலும் காட்டினேன் என்று கொள்ள இயலாது. ஏதோ ஒருசில

பகுதிகளைத் தான் தொட்டுக் காட்டினேன். அடுத்து எழுதும் இப்பகுதியிலும் அப்படியே ஒரு சில நிகழ்ச்சிகளைத்தான் காட்டமுடிகின்றது. முன்னைய பகுதியில் நான் அறிவு வரப் பெற்ற ஐந்தாம் ஆண்டுதொடங்கி, பள்ளியிறுதி வகுப்பில் பயின்ற நாள்வரையில் சில நிகழ்ச்சிகளைக் குறித்துள்ளேன். இப்பகுதியில் என் வாழ்வில் எதுவரை எழுதுவேன் என்பது எனக்கே தெரியவில்லை. தொடங்கிய பணி எதுவரை என்னை ஈர்த்துச்செல்லும் என்பது எனக்கே புரியாத புதிராக உள்ளது. எனினும் எழுதத் தொடங்கி விட்டேன்.

முன்பகுதியில் குறித்தபடியே, என் வாழ்நாள் பூமேற் செல்லும் பொன்னாளாகக் கழியவில்லை. பார்க்கின்றவர் களுக்கு ஏதோ என் வாழ்வு பகட்டாகத் தோன்றினும், என் வாழ்வுப் பாதையில் கரடுமுரடான நெறிகளே அதிகம். என்னிடம் நெருங்கிப் பழகும் நண்பர்களும் அன்பர்களுமே அதை ஓரளவு அறிவர். என் அன்னையால் வளர்க்கப்பெற்ற நான், அவர்கள் பழக்கியபடியே யாரையும் எதையும் அண்டி வேண்டாத நிலையில் வளர்ந்துவிட்டவன். சுந்தரர் பாடிய,

**'திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குன்**
**சீருடைக் கழல்களென் றுன்னி**
**ஒருவரை மதியாது உறாமைகள் செய்தும்**
**ஊடியும் உறைப்பனாய்த் திரிவேன்'**

என்ற வடதிருமுல்லைவாயில் தேவாரமே எனக்கு உறுதுணை யாக நிற்பது. ஆம்! அதைப் பாடி, அச் சுந்தரரைப் போன்றே நான் கடந்த இன்னல்கள் பல. மற்றவர் தம் குறையை மறைத்து, எதிரில் முகத்துதிபாடி, அவர்தம் உதவியைப் பெறும் 'மனித' நிலை நான் அறியாதது. உள்ளதை உள்ள படியே விளக்கிச் சொல்வதால் எத்தனையோ 'பெரிய மனிதர்'களது பகையைச் சம்பாதித்துக் கொண்டவன் நான். எனினும் உறுதியும் ஒருவனான இறையருளும் பொருந்திய காரணத்தால் ஏதோ என்னால் சில நினைத்த காரியங்களைச் செய்ய முடிகின்றது. அவ்வாறு செய்து முடிந்தபின் திரும்பிப்

பார்த்து 'எப்படி முடிந்தது?' என்றுதான் நான் எண்ணுவது வழக்கம். அவ்வப்போது நான் பெற்ற நல்லுணர்வுகள் பலப்பல.

இன்று நான் ஐம்பத்தைந்தை முடிக்கும் நிலையில் நிற்கின்றேன். பள்ளிப் படிப்பைப் பதினேழாம் ஆண்டில் முடித்த நான் கடந்த முப்பத்தெட்டு ஆண்டுகளை எண்ணுகிறேன். இன்று இங்கே ஏர்க்காட்டின் உச்சியில் உட்கார்ந்து கொண்டு கடந்தகால வாழ்வை எண்ணும்போது எத்தனையோ உணர்வுகள் அரும்புகின்றன. ஏர்க்காட்டின் உச்சியை அடையப் பத்தொன்பது குறுவளைவுகளைக் (Hair pin bends) கடக்க வேண்டியுள்ளது. கணக்கில் 20 வளைவுகள் உள்ளன; எனினும் ஒன்று வெறும் திருப்பமே. என் வாழ்நாளில் மூன்று பத்தொன்பது ஆண்டுகளாகிய வளைவுகளை எண்ணும்போது ஒருபுறம் நடுக்கமும் ஒருபுறம் நல்லுணர்வும் அரும்புகின்றன. இந்த அறுபத்துமூன்று ஆண்டுகளில் என் வாழ்வில் குறுக்கிட்டவர் எண்ணற்றவர்—முன் வந்தவர் பலர். பின் நின்றவர் பலர்—தாக்குபவர் பலர்—தாங்கியவர் சிலர். இழந்தவர் பலர்—ஏற்றவர் பலர். மறைந்தார் சிலர்—பிறந்தார் சிலர். இவ்வாறு மக்களினத்தும் பிற உயிர்களிடத்தும் நானும் ஒருவனாக—ஒன்றாகக் கழித்த நாட்களை எண்ண வியப்பு மேலிடுகிறது. வாழ்வின் பிற்பகுதியில் நிற்கும் நான், இதுவரையில் நான் பிறந்த உலகுக்கோ வாழ்ந்த சமுதாயத்துக்கோ என்ன செய்தேன் என்பதை எண்ணிப் பார்க்கும்போது 'ஒன்று மில்லையே' என வருந்த வேண்டியுள்ளது. இப்படி ஒன்றுக்கும் உதவாது வெற்றுடம்பினனாய் வாழ்ந்து கழிவது வருந்தத் தக்கதுதான். 'இருந்தமிழே உன்னால் இருந்தேன்' என்று தமிழ்விடுதூது காட்டுவது போன்று தமிழ் எனக்குச் சோறுபோட்டு வழி காட்டியதன்றி, நான் தமிழுக்கு என்ன செய்தேன்? அப்படியே எனக்கு எண்ணற்ற அறிவுரைகளை வழங்கிய சமுதாயத்துக்கும் உலகுக்கும் நான் செய்த கைமாறு யாது? ஆம்! இந்த எண்ண அலைகளுக்கிடையில் கடந்து சென்ற வாழ்நாள் பற்றி வரையத் தொடங்கிவிட்டேன்.

# 2. திருமணமா? வெறுமணமா?

**நா**ன் என் அன்னையின் ஆதரவிலும் அரவணைப்பிலும் வாழ்ந்துவந்தவன். இளம் வயதிலேயே தந்தையை இழந்து. தாயும் பாட்டியும் பாதுகாக்க வளர்ந்தவன் நான். அன்னையோடு பிறந்த பெரிய அன்னையும் பெரியப்பாவும் பக்கத்து வீட்டிலேயே வாழ்ந்துவந்தாலும் அவர்கள் எங்களோடு நெருங்கிப் பழகாமலேயேதான் இருந்தார்கள். இருவீட்டிற்கும் இடையாயிருந்து மூடிவைக்கப் பெற்றிருந்த கதவு திறக்கப் பெற்றாலும், உள்ளக் கதவுகள் திறக்கப்பெறவில்லை என்றே அந்த நாளிலேயே நான் ஓரளவு அறிந்துகொண்டேன். அவர் தம் 'சொத்து' அனைத்தும் என் பாட்டனார் வழியே பெரியம்மாவுக்குச் சேர்ந்தது என்றாலும், என் பெரிய தந்தையாரும் சிறிது தம் பேருக்கும் வாங்கிவைத்திருந்தார். உள்ள பயிரிடும் நிலத்தையும குத்தகைக்கு விட்டிருந்ததால் அவர் ஓய்வாகவே வீட்டில் இருந்தார். அவர்களுக்குக் குழந்தைகள் கிடையா. எனவே பெரியம்மா என்னிடம் பரிவு காட்டினார்கள். ஆனால் பெரிய தந்தையார் அவருடைய அண்ணலாருக்குப் பிறந்திருந்த ஒரு மகனை அழைத்துவந்து எல்லாச் சொத்துக்கும் உரிமையாக்க விரும்பினர். இதுபற்றி இரண்டொருமுறை அவர்கள் பேசிக்கொண்டது என் காதில் விழுந்தாலும் எனக்கு அது பற்றி எண்ணத் தோன்றவில்லை. ஆயினும் 'இவர்கள் பொருள் நமக்கு எதற்கு?' என்று மட்டும் பிஞ்சு உள்ளத்தில் கேள்வி எழுந்தது. என் அன்னையார் ஆதரவு நிரம்ப இருந்த காரணத்தால் நான் எது பற்றியும் கவலைப்படவில்லை. ஆயினும் இறுதியில் எப்படியோ அவர்கள் 'சொத்து' அனைத்தும் எனக்கே உரிமையாகும் நிலை உண்டாயிற்று. என் பெரிய அன்னையார் மீனாட்சி அம்மாள் அவர்தம் இறுதி நாளில் அவருடைய பொருள் அனைத்தையும் எனக்கும் என் மனைவி சந்திராமணிக்கும் உரிமையாக்கிச் சென்றார்கள். அவர்தம் அன்பினையும் பிரிவினையும் எண்ணி எண்ணி ஏங்கிய என் நெஞ்சம்,

தற்போது அவர்கள் பெயரால் 'மீனாட்சி கவின்கலைக் கல்லூரி' என்ற ஒன்றைத் தொடங்க ஏற்பாடு செய்துள்ளது. இதில் இன்றும் வீணை, நடனம், வாய்ப்பாட்டு முதலிய வகுப்புகள் (வள்ளியம்மாள் பள்ளியின் சார்பில்) நடைபெறுகின்றன.

செங்கற்பட்டில் என்னுடைய பள்ளிப் படிப்பு முடிந்தது. அப்போது எனக்கு வயது பதினேழுதான். எனது பள்ளிப் படிப்பின் முடிவில், என் இளமைமுதல் அதுவரை உற்ற துணையாக இருந்து வந்த என் பாட்டியார் காமாட்சி அம்மையார் அவர்கள் மறைந்தமை எனக்குப் பேரிடியாக அமைந்தது. நான் பள்ளி இறுதித் தேர்வை முடித்துவிட்டு, ஊருக்குச்சென்று அன்னையாருடன் சிலநாட்கள் தங்கி இருந்தேன். அடுத்து இரண்டொரு நாட்களில் செங்கற் பட்டிற்குச் சென்று எல்லாச் சாமான்களையும் எடுத்துக் கொண்டு பாட்டியையும் அழைத்துவர ஏற்பாடு. ஆனால் அதற்குள் செங்கற்பட்டில் பாட்டியார் நலிவுற்றிருப்பதாக ஆள்வந்தது. ஓடினேன்—அவர்கள் உணர்விழக்கா நிலையில் இருந்தாலும் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. அன்னையும் நானும் அவர்களை ஊருக்கு அழைத்துவந்தோம். எனினும் இரண்டொருநாளில்—சித்திரை அமாவாசை நாளில் அவர்கள் எங்களை விட்டுப் பிரிந்தார்கள். என் அன்னையாருக்கும் பிறகு எனக்கும் உறுதுணையாக இருந்து எங்கள் குடிமுழுதும் ஓம்பிய தெய்வமாக விளங்கிய பாட்டியார் மறைவு என்னாலும் என் அன்னையாலும் தாங்கிக்கொள்ள முடியாததாகி விட்டது. என் பாட்டியாருக்கென (அம்மாவுக்கு அத்தை) தனிக் குடும்பமோ மக்களோ வாழ்வில் இல்லையாதலால் எனக்காகவே வாழ்ந்து, என் பள்ளிப் படிப்பு (பிறகு முறை யாகப் பயிலவில்லை) முடியும் வரையில் தம் வாழ்வைத் தியாகம் செய்த அந்தத் தியாகச்சுடரின் மறைவு என்றும் மறக்க முடியாததாகும்.

செங்கற்பட்டில் பள்ளி இறுதிவகுப்பு எழுதியதும் அங்கிருந்த வாடகை வீட்டைக் காலிசெய்ய ஏற்பாடு செய்து விட்டார்கள் என் அன்னையார். ஆம்! தேறினால் அங்கே மேலே பயில வாய்ப்பு இல்லை. தேறாவிட்டாலோ மறுபடி படிக்கக் கூடாது. இது என் அன்னையின் ஆணை. 'நான் எந்த ஆண்டு தேர்வில் தேறவில்லையோ அந்த ஆண்டில் வீட்டில் நின்றுவிடுகிறேன்' என்று வாக்களித்திருந்தேன். எனவே அன்னையார் தன் அன்புளங் காரணமாக ஒவ்வொரு ஆண்டும் நான் வெற்றிபெறக்கூடாது என்றே ஆண்டவனை வணங்குவார்கள். அவர்களுடைய ஆசை எல்லாம் நான் வீட்டிலேயே அவர்களோடு இருக்கவேண்டும் என்பதுதான். எனினும் பள்ளி இறுதிவகுப்பில் தேறினும் தேறாவிடினும் அதுவே எனது கடைசிப் படிப்பு என்ற முடிவில் செங்கற்பட்டு வீட்டைக் காலிசெய்துவிட்டோம்.

படிப்பு முடிந்து பதினேழுவயதான நிலையில் நான் என்ன செய்வது என்று எண்ணிக் கொண்டிருந்தேன். என் பாட்டியும் மறைந்துவிட்டமையின் நானும் அன்னையும் மட்டுமே வீட்டில் தனிமையில் சிலநாட்கள் வாழ்ந்திருந் தோம். ஏதோ ஓரளவு 'சொத்து' உடையவர்கள் என்ற காரணத்தால், எனக்குப் பெண்கொடுக்க நினைத்தார்கள் சிலர். ஒருவர் அதில் தீவிரமாக முயன்றார். பாவம் அவர் பெண்ணின் இளமை நிலையையும்—அதே வேளையில் அவர் தமது உள்ள நெகிழ்வையும் உணராமல் எனக்கு அவர் பெண் ணைக் கொடுக்கத் திட்டமிட்டார். நானும் அப்பெண்ணை அடிக்கடி காணநேர்ந்தமையின் ஓரளவு அவர் திட்டத்துக்கு ஆதரவானேன். எங்கள் எதிர்வீட்டிற்கு இரண்டு வீடு தள்ளி ஒரு வீட்டில் குடியிருந்தவரும் இந்தப் பணியில் ஆர்வங் காட்டினார். என்னை அவர் வீட்டிற்கு அடிக்கடி வந்து அழைத்துப்போவார். என் அன்னையார் மட்டும் அவ்வாறு அடிக்கடி ஒருவர் வீட்டிற்குப்போதல் தவறு எனக் கண்டிப்

பார். ஆயினும் ஏனோ—இளமையில் அறியா நிலையில் தானோ—நான் அவர் வீட்டிற்கு அடிக்கடி சென்றேன். அவர் அந்தப் பெண்ணைப்பற்றி அடிக்கடி என்னிடம் பேசுவார். இரண்டொருமுறை என்னை அங்கேயே அழைத்துச் செல்வார்—இரண்டொருமுறை அவர் வீட்டிற்கே பெண்ணை அழைத்துவருவார். எப்படியோ எங்கள் வீட்டில் யாருக்கும் விருப்பமில்லாத நிலையிலும்—அந்தப் பெண் உள்ளம் வேறிடம் சென்றிருந்த போதிலும்-அவள் பெற்றோரும் எதிர் வீட்டுக்காரரும் எங்கள் இருவருக்கும் முடிச்சுப்போடத் திட்டமிட்டு வெற்றியும் பெற்றுவிட்டனர். என் பெரியப்பாவும் பெரிய அன்னையும் எப்போதும் போல 'அது உங்கள் விஷயம்' என்று சொல்லிவிட்டனர். அன்னையார் செய்வ தறியாது திகைத்தனர். அவள் தந்தையார் அடிக்கடி அம்மா விடம்வந்து ஏதேதோ பேசிய காரணத்தால் இறுதியில் என் பாட்டி இறந்த மறுதிங்களிலேயே எனது மணம் நிறை வேறிற்று. ஆயினும் மணம் முடிந்த உடனேயே அவர்கள் உள்ளம் பொருள்மேல் நாட்டமுற்றிருப்பதைக் காட்டி விட்டது. அதன் விளைவாக மணம் பெயருக்கு அமைந்ததே யன்றி, வாழ்வுக்கு என அமையவில்லை. இன்றும் அதே கொடுமை நீடிப்பதை நினைக்க நெஞ்சம் நடுங்குகின்றது. ஆயினும் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் காலம் கடந்து கொண்டே செல்லுகின்றது. மணம் செய்து கொண்டாலும், நான் மணம்புரிந்து கொள்ளாத ஒருவர் வாழ்வினையே வாழ வேண்டி வந்தது. அந்த இளமை உள்ளத்தில் அவ்வளவாக அது உறுத்தவில்லையாயினும் காலம் செல்லச்செல்ல அந்த வாழ்வின் கொடுமை நன்கு புலனாயிற்று. ஊரில் பலர் 'மணம் செய்தும் சந்நியாசி' என்று என்னைக் கேலிசெய்யவும் தொடங்கிவிட்டனர். ஆம்! அதே வேளையில் என்னைக் காப்பாற்ற ஒரு சந்நியாசிதான் எங்கள் ஊருக்கு வந்து சேர்ந்தார்.

என்னை மேலே படிக்க வேண்டாம் என ஆணையிட்ட அன்னையார் அதில் உறுதியாக இருந்தமையால் என்னால்

ஒன்றும் செய்ய முடியவில்லை. நான் பள்ளி இறுதி அரசாங்கத் தேர்வில் பொதுக்கணக்கில் 100க்கு 100ம் சிறப்புக் கணக்கில் 100க்கு 92ம் எடுத்திருந்தமையின், ஆசிரியர்கள் என்னை மேலே படித்து, பொறியாளராக வருமாறு பணித்தனர். ஒரு சிலர் என் அன்னையிடம் வந்தும் கூறினர். எனினும் அவர்கள் மேலே படிக்க வேண்டியதில்லை என்று திட்டமாகக் கூறிவிட்டனர். நான் அவ்வாறு படிப்பதாயின் பண உதவி தரமுடியாது என்றும் சொல்லிவிட்டனர். எனவே அந்த வயதில் வீட்டிலேயே முடங்கிக் கிடப்பதென்பது என்னால் முடியவில்லை. அதே வேளையில் என் மணம் பற்றிய ஊரார் ஏச்சும் பேச்சும் எனக்கு வேதனை தந்தன. அன்னையாரும் அந்த வேதனையைப் பெற்றார் என்றாலும், நான் அவரைவிட்டுப் பிரியக்கூடாது என்ற கொள்கையில் உறுதியாக இருந்தனர். அப்போதுதான் சிதம்பரத்திலிருந்து 'பிரகாசானந்தா' என்ற துறவி எங்கள் ஊருக்கு வந்து சேர்ந்தார்.

அவர் ஊரில் வந்து சில நாட்கள் தங்கியிருந்தார். அப்போது பலர் அவரிடம் நெருங்கிப் பழகினார்கள். முதியரும் இளையரும் அவருடன் பழகினர். நான் ஏனோ சற்றே விலகியே இருந்தேன். அவர் உண்மையில் துறவியாக இருந்ததோடு நன்கு பயின்றவராகவும் இருந்தார். அவரை ஊரில் ஒவ்வொருவரும் ஒருநாளைக்கு ஒருவேளை தத்தம் வீட்டில் உணவருந்த அழைத்தனர். அப்படியே என் அன்னையும் அவரை என் வீட்டில் உணவுக்கு அழைத்திருந்தனர். அவர் வீட்டில் கால்வைத்த வேளையே என் வாழ்வுப் பாதையின் திருப்பு மைய வேளையாக அமைந்தது என்பதை அப்போது நான் அறியேன்.

என்னிடம் நேராகப் பேசாவிடினும், அவர் மற்றவர்களிடமிருந்து என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். நான் 'பள்ளியிறுதி வகுப்பில்' தேர்ச்சிபெற்று, மேலே படிக்க

விரும்பினாலும் வாய்ப்பின்றி இருப்பதை அறிந்தார். எனவே அவர் வீட்டிற்கு உணவுகொள்ளவந்த காலை, என் அன்னை யாரோடு என்னைப் பற்றிப் பேசினார். என்னிடமும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து என் உள்ள நிலையினையும் புரிந்துகொண்டார். அவருக்கு, நான் பிற்காலத்து உயர்ந்து வாழ்வேன் என்று புலனாயிற்று என்றார். எனவே எனது மேல் படிப்புக்கு என் அன்னையாரிடம் அவரே வாதாடினார். மேலும் வீட்டில் இருந்துகொண்டே—அன்னையார் விருப் பினை நிறைவேற்றிக்கொண்டே—படிக்க வாய்ப்பு உண்டு என்றார். சிதம்பரத்துக்குப் பக்கத்தில் உள்ள கல்லூரியில் தேர்வு எழுதலாம் என்றும், அதற்கு வீட்டில் இருந்து கொண்டே படிக்கலாம் என்றும் சொன்னார். தமிழ் வித்து வான் பட்டம் பெற மேலே படிக்க வாய்ப்பு உண்டு என்றார். அதற்கு முதலாக நுழைவுத் தேர்வுக்கு உரிய நூல் பெற்று அப்போதே படிக்கத் தொடங்கலாம் என்றார். 'மீனாட்சி காலேஜ்' என்று இருந்தது பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகமாக மாறியுள்ளதென்றும் அதற்கு எழுதினால் எல்லாத் தகவல்களும் அனுப்புவார்களென்றும் அவர் சொன்னார். தேவையானால், சிதம்பரத்தில் தங்க வேண்டுமானால், தாம் நிலையாக உள்ள மௌன சுவாமிகள் மடத்தில் தங்கலாம் என்றும் வழி காட்டினார். எதற்கும் இசையாத என் அன்னையார், நான் வீட்டிலேயே இருந்து படிக்க வாய்ப்பு உண்டு என்று சொன்ன காரணத்தால், அந்த வித்துவான் நுழைவுத் தேர்வு எழுத இசைவு தந்தார்கள். நானும் உரிய நூல்களைப் பெற்றுப் படிக்கத் தொடங்கினேன்.

என்னுடைய தமிழ்ப் படிப்பு தொடங்கிவிட்டது. ஆட் கொள்ள வந்த வள்ளலாம் 'பிரகாச ஆனந்தர்' என்னைத் திசைமாறச் செய்தார். ஆம்! அந்த மாற்றமே இன்று என்னை ஓரளவு தமிழ் அறிந்தவனாக உலகுக்குக் காட்டு கிறது. அன்னைத் தமிழுக்கு நான் ஆக்கப்பணி செய்கி

றேனோ இல்லையோ, அத்தமிழ் என் ஆக்க வாழ்வைச் சிறக்கச் செய்கிறது. எனது முந்திய பாதை வழியே சென்றிருந்திருப்பேனாயின் ஒருவேளை நான் தற்போது எங்கேனும் பொறியாளனாகப் பணியாற்றிக் கொண்டிருந் திருப்பேன், அத்துறையில் உயர்வெய்தியிருப்பேனோ—அன்றித் தாழ்நிலையில் இருந்திருப்பேனோ? ஆனால் என் அன்னைத் தமிழ் உலகுக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தது. பிரகாசானந்த அடிகள், அன்னையின் மனம் நோகாவண்ணம், வீட்டிலேயே இருந்து படிக்கலாம் என்று கூறினார். ஆயினும், நுழைவுத் தேர்வுக்குப் பிறகு, நான் கல்லூரியில் சேர்ந்தே படிக்கவேண்டும் என்ற நிலை உண்டாயிற்று.

நூல்களைப் பெற்று உரிய விண்ணப்பங்களையும் அனுப்பிய பிறகுதான் நூல்களைப் படிக்கத் தொடங்கினேன். பள்ளியில் பயிலும்போது கணக்கில் சிறந்தவனாக இருந் தேனேயன்றி, தமிழில் சாதாரண மாணவனாகவே இருந் தேன். எனவே தமிழை நன்கு தெளியக் கற்கமுடியவில்லை. என்றாலும் சில காலம் எங்கள் ஊரிலேயே தங்கிய அடிகள் சில பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார்கள். தேர்வுக்கு முன் சில நாட்கள் சிதம்பரம் சென்றால் அங்கே மடத்தில் தங்கிப் பயிலலாம் என்றார்கள். எப்படியோ அவர் வாய் மொழி கேட்டும் அவர் காட்டிய வழியைப் பின்பற்றியும் அந்த நுழைவுத் தேர்வில் சிறக்க எழுதி வெற்றி பெற்று விட்டேன். எனவே அடுத்த ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பயில வேண்டும். அன்னை அதற்கு முதலில் இணங்கவில்லை என்றாலும் முடிவில் இசைவு தந்து வற்றாத கண்ணீருடன் என்னை வழியனுப்பி னார்கள். நானும் சிதம்பரம் சென்று தமிழ் மாணவனாக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் கால்வைத்துப் பயிலத் தொடங்கினேன்.

# 3. அண்ணாமலை நகரில்

இதுவரை அன்னை, பாட்டி இவர்தம் பாதுகாப்பில் வாழ்ந்த எனக்குப் புற உலகமே 'என்னது?—எப்படிப் பட்டது?' என்பது தெரியாது. எனவே நான் தனியாகப் படிக்கச் செல்லுகிறேன் என்றபோது எனக்கு அச்சமே உண்டாயிற்று. அன்னையாரும் அதனாலேயே அவலமுற்றுக் கண்ணீர் உகுத்தனர். ஆயிரக்கணக்கான மைல்கள் தாண்டி வாழும் மக்கள் இன்று இருப்பினும், இன்றும் பெற்ற பிள்ளை களை விட்டுப் பிரிய மனமில்லாத பெற்றோரும் உள்ளன ரன்றே! அதிலும் வேறுயாருமின்றித் தனியாக அன்னையார் வீட்டில் இருக்க, அவர்தம் ஒரேமகன் எங்கோ படிக்கப் போகிறான் என்றால் உளம் வருந்தாது என் செய்யும்? என் பெரியப்பாவும் பெரியம்மாவும் அம்மாவுக்கு ஆறுதல் கூற, ஒருவாறு மனம்தேறி என்னை அனுப்பி வைத்தார்கள். மாமியார் வீட்டு மக்கள் என்னைப் 'புற' மெனவே கருதிய நிலை, எனக்குப் படிப்பில் ஊக்க, உண்டி, குடும்பவாழ்வு என்ற உணர்வையே அரும்பச் செய்யாது, படிப்பில் கவனம் செலுத்த வழிகாட்டியாக அமைந்தது. எனவே அவர்கட்கு நான் என்றென்றும் நன்றி உடையவனாவேன்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வித்துவான் முதல் நிலை வகுப்பில் (Preliminary) சேர்த்துக் கொள்ளப் பெற்றேன். எனினும் நான் முதலாண்டு முழுவதும் சிதம்பரம் மௌனசுவாமிகள் மடத்திலேயே தங்கியிருந்தேன். கல்லூ ரிக்குச் செல்லும் வழியில் இருந்த 'துரைசாமிப்பிள்ளை கிளப்' பில்தான் நானும் பல மாணவரும் உணவு கொண்டோம். அந்த நாளில் மாதம் ஒன்றுக்கு உணவுக்கு—இருவேளைக்குப் பத்து ரூபாய்—மாணவர்களாகிய எங்களுக்கு எட்டு ரூபாய். காலை ஒன்பதுக்கெல்லாம் நல்ல உணவு பரிமாறப்பெறும். நாங்கள் சாப்பிட்டு 9-15 அல்லது 9-20க்குப் புறப்பட்டு உரிய வேளையில் கல்லூரிக்குச் சென்றுவிடுவோம். பகலுக்கு அங்கிருந்தே இடியப்பம் அல்லது இட்லி மூன்று (அரையணா

—இக்கால மூன்று பைசா) பொட்டலமாக எடுத்துக் கொள் வோம். மாலையில் திரும்பும்போதும் ஏதேனும் ஒரு அணாவுக் குச் சாப்பிட்டால் வயிறு நிரம்பிவிடும். இவ்வாறு பத்து அல்லது பன்னிரண்டு ரூபாய் அளவில் ஒவ்வொரு திங்களும் இனிமையாகக் கழியும்.

பல்கலைக்கழகத்திலும் நல்ல விடுதியுண்டு. இலவச அறையில் தங்கிக்கொண்டால் இதே செலவில் நன்கு இருக்க வாய்ப்பு உண்டு. எனினும் நான் மடத்தில் உள்ள அடி களாரின் மேற்பார்வையிலேயே இருக்க விரும்பியதாலும் நாள்தோறும் தில்லைப் பெருமானைக் கண்டு மகிழ விரும்பிய தாலும் நடையையும் பொருட்படுத்தாது சிதம்பரத்திலேயே தங்கினேன். அப்போது மடத்து அடிகளாரின் இளவல் திரு. முருகேச முதலியார் என்பவர் வித்துவான் இறுதி வகுப்பில் பயின்றுகொண்டிருந்தார். அவருடன் சென்றுவர வசதியாக இருந்தது; மேலும் அவர் எனக்கு வேண்டிய பாடங்களைச் சொல்லிக் கொடுப்பார். நூல்களில் சிலவும் மடத்து அடிகளார் தம் நூல் நிலையத்தில் இருந்து தந்து உதவினார் கள். மடத்து அடிகளாகிய அருட்டிரு சபாபதி சுவாமிகளும், அவருக்கு அண்ணலாரும் மடத்து நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டு வந்தவருமான திரு. கோவிந்தசாமி அவர்களும் என் நலத்தில் அக்கறைகாட்டி ஆதரித்தனர். எனது வளர்ச்சி யில் அவர்களுக்கெல்லாம் பங்கு உண்டு. அவர்கள் எங்கிருப் பினும் என்னால் அவர்கள் வணங்குதற்குரியர்.

அந்த மௌனசுவாமிகள் மடம் நன்கு பயின்ற துறவிகள் வாழும் மடமாக விளங்கிற்று. அடிக்கடி பல துறவியர் வந்து தங்கிச் சென்றனர். அங்கேயே 'வெள்ளை வேட்டிச் சாமி' என்று ஒருவர் இருந்தார். அவர் தமிழ் இலக்கண இலக்கியத் தில் சிறந்த புலமைபெற்று விளங்கினார். நாள் தோறும் மாலைவேளைகளில் என்னை உட்காரவைத்து, நான் படித்த பாடங்களைப் பற்றிக் கேட்பார். குத்துவிளக்கே முன்னே

எரியும். அதில் சிலவற்றைப் படிக்கச் சொல்லுவார். அவர் பல விளக்கங்கள் தருவார். அவற்றுள் அவர்தம் ஆழ்ந்த இலக்கண இலக்கியப் புலமை நன்கு விளங்கும். அவருக்கு வயது எண்பதுக்கு மேல் இருக்கும். எனினும் விடியற்காலை நான்கு மணி அளவில் எழுந்திருந்து நான்கு கல் தூரம் நடந்து, காலை ஆறு மணிக்குள் தம் காலைக்கடன்களையெல்லாம் முடித்துக்கொண்டு பூசையில் கருத்திருத்துவார். என்னிடம் அவர் காட்டிய பரிவும் பாசமும் மறக்கற் பாலன அல்ல. அவரிடம் நான் கற்றன பல. அவரைப்போன்றே வேறு கற்ற சில துறவியரும் மடத்துக்கு வரும் போதெல்லாம் எனக்கு ஊக்கம் அளிப்பர். ஆகவே நான் மடத்தில் ஒருவனாக— அங்குள்ளார் அன்புக்குப் பாத்திரனான - ஏழை மாணவனாக வாழ்ந்து முதலாண்டுக் கல்வியைக் கற்று வந்தேன்.

அப்போது பல்கலைக்கழகத்தே தமிழ் பயிலுவோருக்கு உபகாரச் சம்பளம் தந்துவந்தனர்; முதலாண்டுக்கு 12 (அ) 13 ரூபாய் என நினைக்கிறேன். தமிழை வளர்க்க வேண்டும் என்ற உள்ளத்தாலும் தனித்தமிழ் பயிலுவோர் அக்காலத்தில் அருகிநின்றமையாலும் அண்ணாமலை அரசர் தம் பல்கலைக் கழகத்தில் இந்த ஏற்பாட்டினைச் செய்திருந்தனர். முதல் தேதி ஆனால் ஆசிரியர்கள் சம்பளம் வாங்குவது போன்று நாங்களும் இந்த உதவித்தொகையைப் பெறுவோம். மடத்தில் தங்கிய காலத்தில் இந்த உதவித்தொகை பன்னிரண் டில் மாதச்செலவுபோக மிகுதியாவதை என்ன செய்வதென்று எண்ணிய நாட்களும் உள.

என்னைச் சிதம்பரத்துக்கு அனுப்பிய அன்னையாருக்கு இருப்புக்கொள்ளவில்லை; மனம் மகனிடத்திலேயே சென்று கொண்டிருந்தது போலும். நான் வந்து ஒரு திங்கள் கழிந் திருக்கலாம். நான் கல்லூரிக்குச் சென்று ஒருநாள் மாலை மடத்துக்குத் திரும்பிய காலத்தில் வாயிலில் இருந்த அடிகள் என் அன்னை வந்திருப்பதாகவும் அடுத்த மறுகட்டில் பின்

புறத்தில் தங்கி இருப்பதாகவும் சொன்னார்கள். நான் உடனே ஓடினேன். அவர்கள் என்னைக் கட்டிக்கொண்டு கதறினார்கள். அன்றுதான் நான் முதல்முதலாகப் பல்கலைக் கழகத்திலிருந்து உபகாரச் சம்பளம் பெற்று வந்தேன்—நான் சம்பாதித்ததாக எண்ணிய நிலையில் வந்தது அது. அதை அன்னையார் கையில் வைத்து வணங்கி எழுந்தேன். அன்னையார் கண்கள் குளமாயின. முதல் முதல் பிள்ளை சம்பாதித்ததைத் தன்கையில் பெற்றதை அத்தாய் உள்ளம் எண்ணிற்று போலும். மறுமுறை கட்டி அணைத்தார்கள். அந்தத் தொகையை அப்படியே ஆண்டவனுக்கு உரிமை யாக்கி விட்டார்கள். பிறகு அவர்கள் சிதம்பரத்திலேயே சில நாட்கள் தங்கி இருந்து ஊர் திரும்பினார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் பயின்ற போது பல நல்லாசிரியர்கள்—சிறப்பாகத் தமிழ்ப் பேராசிரியர் கள்—ஆக்கப்பணி புரிந்திருந்தனர். ஒவ்வொரு துறையிலும் வல்லவர் தலைமைதாங்கி நடத்தினர். நான் தமிழ் மாணவ னாக இருந்தமையின் ஒருசிலரைத் தவிர்த்து மற்றவர்களோடு அதிகமாக நெருங்கிப் பழகவில்லை. ஆயினும் தமிழ்ப் பேராசிரியர் அனைவருடனும் நன்கு கலந்து பழகினேன். அவர்களும் எனக்கு வேண்டிய வகையில் எல்லாவகையான உதவிகளையும் செய்தார்கள். இரண்டாண்டுகள் அண்ணா மலையில் நான் பயின்றபோது நான் பெற்ற அனுபவங்கள் பல!

நான் பயிலத்தொடங்கிய முதலாண்டில் விபுலானந்த அடிகளார் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தார். அவருக் குப் பின் இருந்த ஒவ்வொரு பேராசிரியரும் சிறந்த கல்வி அறிவும் தெளிந்த சிந்தையும் செம்மை ஒழுக்கமும் பெற்றவர் களாகவே திகழ்ந்தனர். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் திருக்குறளிலும் கம்பனிலும் எங்களை மூழ்க. வைத்தனர். நான் எப்போதும் போன்று ஒதுங்கி இருந்தபோதிலும், அவர் கேட்ட இரண்டொரு கேள்விக்கு நான் அளித்த விடைகள்

அவருக்கு என்னை உரியவனாக்கின. சிறப்பாக ஒன்று மட்டும் நினைவில் உள்ளது. 'இலன் என்னும் எவ்வம் உரையாமை' என்ற குறளுக்கு உள்ள உரைகளை விளக்கி, அவற்றுள் சிறந்தது எது என்பதைக் காரணத்தோடு விளக்குமாறு கேட்டிருந்தார். அதற்கு நான் எழுதிய பதிலைக்கண்டு, அவர் என்னை அவர் அறைக்கு வரவழைத்து நன்கு விசாரித்து, அவ்விடை பற்றியும் விளக்கினார். பின் அவரோடு நெருங்கிப் பழகிய வாய்ப்புகள் பல. இரண்டாம் ஆண்டு நான் தமிழ்மன்றச் செயலாளனாக இருந்தபோது, 'காக்கா பிடித்தல் கற்றறிந்தோர்க் காகாது' என்ற பொருளைக் கொண்டு நடத்திய சொற்போர்ப் போட்டியில் அவரே அதை முன் மொழிபவராக இருந்தார். என் கல்வியின் வளர்ச்சியில் அக்கறை காட்டி விளக்கினார். அவரோடு பழகிய அன்பு இறுதிக் காலம் வரையில் நீங்காது நிலைத்து நின்றதோடு, அவருடன் நெருங்கிப் பழகிய ஒருவனாக மற்றவர் நினைத்து மதிக்கும் வகையில் உரியவனாக்கிற்று. அவர் சென்னை வந்த பிறகு, நான் காஞ்சிக்கு அழைத்தபோதெல்லாம் தட்டாமல் வருவார், என் அன்னையார் மறைந்த நாளன்று அவர் என் கிராமத்துக்கு வந்து 'தாயும் சேயும்' என்ற தலைப்பில் பேசி ஆறுதல் கூறித் தேற்றினார். இவ்வாறு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அவரோடு கொண்ட தொடர்பு அவர் தம் இறுதிவரை நிலைத்திருந்தது.

அவர்களைத் தவிர்த்து, சர்க்கரைப் புலவர் என்ற முது பெரும் புலவர் சிறந்த இலக்கிய விமரிசகராக இருந்தார். எல்லாத் தமிழ்ப் பாடல்களும் அவர் உள்ளத்திருந்து உதட்டில் உருண்டோடிவரும். புராண இதிகாச இலக்கியங் களைப் பல நுணுக்கங்களோடு அவர் நடத்துவார். அவரிடம் பயின்ற அந்தப் பான்மையே எனக்கு அத்தகைய இலக்கியங் களில் ஈடுபாடு உண்டாக்கிற்று. அவர் தம் முன்னோர்கள் இராமநாதபுர அரசரிடம் புலவர்களாய் இருந்தவர்க

ளென்றும் இலக்கியக் கடல் என்றும் அறிந்தேன். வயதில் மூத்த அந்தப் புலவர்தம் செறிவு இன்னும் என் கண்முன் நிழலாடிக்கொண்டிருக்கிறது.

பொன் ஓதுவார் ஓர் இலக்கணக் கடல். அவர் தோற்றத்தால் எளியர். சாதாரண மல்லில் தைத்த ஒரு 'சொக்கா'யைப் பொத்தானும் இல்லாது போட்டுக்கொண்டு, மேலே ஒரு புது அங்கவத்திரத்தை இட்டுக்கொண்டு, மெல்லிய கீழாடையுடன் உச்சிக் குடுமியுடன் சிதம்பரத்திலிருந்து வந்து கொண்டிருந்தார். தண்டியலங்காரமும் வேறு இலக்கணங் களும் அவர் எங்களுக்குச் சொல்லித்தந்தார். நூலை அவர் பிரித்துப் பார்த்ததே கிடையாது. ஆனால் நூலில் உள்ளதைக் காட்டியதோடு. அதில் இல்லாத பல விளக்கங் களும் வேறுபிற மேற்கோள்களும் வரிசையாக வந்து கொண்டே இருக்கும். அவர்தம் இலக்கண வகுப்பு யாருக்கும் எப்போதும் சலித்தது இல்லை. இலக்கியத்திலேயும் அவர் சிறந்தவர். அவரும் அவரது முன்னோரும் திருவாவடுதுறை யில் பரம்பரை வித்துவான்களாக இருந்த ஒன்றே அவர்தம் ஆற்றலையும் தெளிவையும் தூய சிந்தையும் காட்டும். அவர் ஒழுக்க சீலர்—உயர்ந்த பண்பாளர்.

கந்தசாமியார் மற்றொரு இலக்கணக் கடல். சேனா வரையரும் நச்சினார்க்கினியரும் பிற உரையாசிரியர்களும் அவரிடம் சிறைப்பட்டனர். தூய துறவு வாழ்வை மேற் கொண்ட செந்தண்மையாளராகிய அவர்கள் எங்கட்கு இலக்கண இலக்கியங்களை நடத்தினர். புரியமுடியாத நுண்ணிய பகுதிகளையெல்லாம் மிக எளிய வகையில் புரிய வைக்கும் திறன் அவர்களுடையது. எனினும் அவர்தம் சாதாரண நடையும் பேசும் நடையும் சற்றே வேகம் வாய்ந்தவை. அவர் சற்றே ஒதுங்கியே வாழ்வார். ஆகவே மாணவர் ஏதேனும் அறியாது கேள்வி கேட்பின் உடனே

வெகுள்வார். அவ்வாறு உண்டான ஒரு வெகுளியின் காரணமாகவே நான் இடையில் அண்ணாமலையில் பயில்வதை நிறுத்தி வந்துவிட்டேன். அவர் என்னிடம் அன்பு பொழிந்தார் என்றே சொல்லவேண்டும். அவர்தம் துறவு உண்மைத் துறவாகும்.

இவர்களைத் தவிர சிவப்பிரகாசர், கல்யாணசுந்தரம் பிள்ளை, பலராமையா, பழநியப்பப்பிள்ளை போன்ற நல்ல அறிஞர்கள் அதுகாலை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தே அணிசெய்து விளங்கினர். அப்புலவர் கூட்டத்தை ஆசிரியர் அறையில் ஒருசேரக் காண்பதே கண்கொளாக் காட்சியாக விளங்கிற்று. அத்துணை அறிவாற்றல் மிக்க ஆசிரியர் அனைவரும் எங்கள் தொடக்க வகுப்பிற்கும் பாடம் எடுத்து எங்களுக்கு அறிவு கொளுத்திய தன்மையை எண்ணி எண்ணி வியந்ததுண்டு. விபுலானந்த அடிகளார் தொடங்கிக் கடைசி ஆசிரியர் வரையில் எங்கட்கு வந்து பாடம் நடத்தினர். அவர்கள் தந்த பிச்சைதான் இன்று ஓரளவு நான் 'தமிழாசிரியன்' என்று சொல்லிக்கொள்ளும் தகுதியை எனக்கு உண்டாக்கிற்று என்பதில் ஐயமில்லை! அவர்கள் அனைவரும் என் உள்ளத்து உறையும் தெய்வங்களாவர்.

நான் பயின்ற முதலாண்டில் விபுலானந்த அடிகளார் தலைவர் என்றேன். ஆம்! எப்படியோ நான் அவரோடு நெருங்கிப் பழகினேன். அவர்கள் மேற்கொண்ட சில சமுதாயச் சீர்திருத்தப் பணிகளில் பங்கும் கொண்டேன். அதுகாலை நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி இன்னும் என் நினைவில் உள்ளது. ஒருநாள் அடிகளாரும் மாணவர் சிலரும் அருகில் உள்ள ஒரு சேரிக்கு, அதைத் தூய்மைப்படுத்திக் குழந்தைகளுக்குத் தின்பண்டம் தருவதற்காகச் சென்றோம். வடை, சுண்டல் இவற்றை இரு கூடைகளில் எடுத்துச் சென்றோம். அப்போது திருவேட்களம் திருக்கோயிலின் பக்கத்தில் விளையாடிக்கொண்டிருந்த ஒருசிறுவனும் எங்க

ளுடன் சேரிக்கு வந்துவிட்டான். அவன் அப்பல்கலைக் கழகத்தே பணிசெய்யும் உயர்ந்தார் ஒருவர் மகன் என அறிந்தேன். கடைசிவரையில் இராது சற்று முன்னே திரும்பி விட்டான் அவன். நாங்கள் எங்கள் பணியினை முடித்துத் திரும்பும்போது, அவனுடைய பெற்றோர்கள் அவனைத் தெருக்கம்பத்தில் கட்டிப்போட்டு, தலையில் சாணத்தால் 'அபிஷேகம்' செய்துகொண்டிருந்தனர். சேரியில் சென்றமை யால் அவன் கெட்டுவிட்டான் என்றும், அவனைத் தூய்மைப் படுத்தவே அச்செயல் செய்யப்படுகிறது என்றும் சொன்னார் கள். நாங்கள் நைந்தோம்—அடிகளார் உள்ளம் வெந்தது. அவர்தம் சீர்திருத்தக் கருத்தை வெறுக்கும் வகையிலும் கண்டிக்கும் முறையிலும் அவரை, அவ்வூரில் சிவன் கோயிலில் உள்ள நல்ல குடிதண்ணீரை எடுக்கவிடாது தடுத்தனர். அவர் அதற்கெலாம் கலங்காது—உப்பு நீரையே உண்டு, பயன் படுத்தி, அண்ணாமலை நகரில் வாழ்ந்து வந்தார். அவர்தம் உயர்ந்த தோற்றமும் உயர்ந்த கல்வி அறிவும் தூய காவி உடையும் மெய்ம்மைத் துறவுநிலையும் யாழ்ப்பாண ஒலியிய லுடன் பேசும் தெய்வத்தமிழும் எங்களையும் உயர்த்தின. தற்போது அவர் பிறந்த ஊரில் அவருக்குச் சிலை எடுப்ப தறிந்தேன். அங்கு வெளியிடப்பெறும் மலருக்கு நான் அண்ணாமலையில் அவரடியின் கீழ் இருந்து பெற்ற அனுபவத் தையே தீட்டி அனுப்பினேன்.

அந்த ஆண்டின் இறுதியில் அவர்கள் பல்கலைக் கழகத் திலிருந்து விலகுகிறார் என்ற செய்தி எங்களைத் துன்பத்தில் மூழ்க வைத்தது. தமிழுக்கென அவரை அண்ணாமலை அண்ணல் வருந்தி அழைத்து வந்து ஏற்றுப் போற்றினார் என அறிந்தேன். எனினும் அவர் தொடர்ந்து இராமல் செல்வது வியப்பாகவே இருந்தது. தமிழுக்கென அமைந்த அப் பல்கலைக் கழகத்தில் ஏனோ அன்று தொட்டு இன்றுவரை தமிழ்த்துறைத் தலைமை ஏற்கும் பெரியார்களெல்லாம்

ஏதோ ஒருவகைக் கசப்போடு வெளியேறுகிறார்கள் என்று எண்ணிப் பார்க்கிறேன். விடை கிட்டவில்லை.

அடுத்த ஆண்டு நாவலர் சோமசுந்தர பாரதியார் தமிழ்த் துறைத் தலைமை ஏற்றார். அவரும் உயரத்தில் அடிகளாருக்குச் சளைத்தவரல்லர். இவருடைய போக்கும் நிலையும் அவரினும் மாறுபட்டுத் தோன்றினும் தலைமைக்கு ஏற்றவர் என்றே அனைவரும் கூறினர். இவரும் அண்ணாமலை அரசரால் விரும்பி அழைத்து வரப்பெற்றவர் என அறிந்தேன். இவரைத் தவிர்த்து மற்றவர்களெல்லாம் நான் முன் காட்டிய ஆசிரியப் பெருந்தகைகளே. அவர்கள் வழிகாட்ட நாங்கள் உண்மையில் மாணவர்களாகவே இருந்து கற்றோம்.

என்னுடன் தமிழ் பயின்ற மாணவர்களுள் ஒருசிலர் இன்னும் நினைவில் உள்ளனர். வாழ்விலும் சிலர் கலந்துள்ளனர். சோமசுந்தரம் என்பார் பெருமழைப் புலவராக உள்ளார். மற்றொரு சோமசுந்தரம் தஞ்சை மாவட்டத்தில் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றுகின்றார். வன்மீகநாதன் புதுக்கோட்டைக் கல்லூரியில் முதல்வராக உள்ளார். இவ்வாறே இன்னும் சிலர் உள்ளனர். தமிழ் 'எம்.ஏ.' வகுப்பும் அதுபோது அங்கே சிறந்திருந்தது. திருவாளர்கள் சரவண ஆறுமுக முதலியார், அ. சிதம்பரநாத செட்டியார், ஆலாலசுந்தரனார், சோதிமுத்து, மீனாட்சி சுந்தரம், முத்துசிவம் போன்றார் அதுபோது 'எம்.ஏ' வகுப்பில் பயின்று வந்தனர். முதலாண்டில் அவர்களோடெல்லாம் அதிகமாகப் பழகும் வாய்ப்பினைப் பெறவில்லை என்றாலும் ஓரளவு அவர்களை அறிந்திருந்தேன். அடுத்த இரண்டாம் ஆண்டிலே அவர்களோடெல்லாம் நெருங்கிப் பழக வாய்ப்பும் வசதியும் ஏற்பட்டன.

முதலாண்டு மௌனசுவாமி மடத்தில் தங்கியிருந்த நான் அடுத்த ஆண்டு பல்கலைக்கழகத்தைச் சார்ந்த இலவச விடுதியில் (old block) இடம்பெற்றேன். அவ்விடத்தில் தற்போது இசைக் கல்லூரியும் விருந்தினர் விடுதியும் ஓங்கி நிற்கின்றன.

அங்கே எனக்கு அறிமுகமான நண்பர் பலர். உணவு மட்டும் பொதுவிடுதியிலே ஆதலால் பல அன்பர்கள் அறிமுகமாயினர். பல்கலைக்கழகக் கூட்டங்கள் பலவற்றிலும் பங்குகொண்டேன். பாரதியார் இல்லத்திற்கு அடிக்கடி செல்வது வழக்கம். அவரும் என்னை அவர் மகன் எனவே போற்றிப் புரந்தார். அவர்தம் இளம்பெண்கள் இருவருடனும் விளையாடிப் பொழுதுபோக்குவேன் நான். அதைக்கண்ட பாரதியார், நான் பல்கலைக்கழகத்தை விட்டு வரும்போது அப்பிள்ளைகளின் புகைப்படத்தை எனக்கு அன்பளிப்பாக ஈந்தார். (அந்த இருவரில் ஒருவரே மருத்துவத்துறையில் சிறந்தவராக-உயர்ந்தவராக சென்னை மருத்துவப் பல்கலைக்கழகத் துணை வேந்தராகப் பணிபுரிந்த திருமதி லலிதாகாமேஸ்வரன் என்பவராவர்).

இரண்டாம் ஆண்டில் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரவையின் அமைச்சனாகப் பணியாற்றினேன். திரு. அ. சிதம்பரநாதனார் தலைவர். எங்கள் கூட்டங்களில் பேராசிரியர்கள் பாரதியார், சேதுப் பிள்ளை, வரலாற்றுப்பேராசிரியர் சீனிவாசாச்சாரியார் போன்றவர்களும் பிறதுறைப் பேராசிரியர்களும் பங்குகொண்டு எங்களை ஊக்குவிப்பர். பல அறிஞர்கள் எங்கள் பேரவை நிகழ்ச்சிகளில் பங்குகொண்டனர். முன் காட்டிய 'காக்கா பிடித்தல் கற்றறிந்தார்க் காகாது' என்பன போன்ற பல தலைப்புக்களில் பேராசிரியர்களே பேசுவர். அவ்வாண்டின் தமிழ்ப் பேரவைப்பணி சிறக்கநடைபெற்றது. அப்பேரவையின் ஆண்டு விழாவிற்குத் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் வாழ்த்தியல் விரிவுரையாற்ற வந்தார். நானே சென்னை சென்றபோது நேரில் கண்டு அழைத்து ஏற்பாடு செய்தேன். முந்திய புலவர் வரிசையின் அடுத்த வாரிசாக அவர்வந்து அழகிய சொற்பொழிவாற்றினார். அதுதான் அவர் அண்ணாமலையில் ஆற்றிய முதற்பணி என எண்ணுகிறேன். பிறகு அங்கேயே பேராசிரியராகப் பணி

யாற்றி, அங்கிருந்தே மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தராகும் பேறு பெற்றார். அவரை அன்று முதல் இன்று வரை நான் உற்றவராகவே போற்றுகின்றேன். அவர் துணை வேந்தரான பின் முதல் வெளிவந்த என் 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி'யை அவருக்கே 'முதல் தமிழ்த் துணைவேந்தர்' என்ற பெருமிதத்தில் உரிமை யாக்கினேன். அவர் தொண்டு 'சிறப்பதாக' என வாழ்த்தி மேலே செல்கிறேன்.

இரண்டாம் ஆண்டில் பல வாழ்க்கை அனுபவங்களைப் பெற்றேன். விடுதி வாழ்க்கை எத்தகையதென அறிந்தேன். என்னினும் முதிர்ந்தோரான—அறிவில் சிறந்த ஆறுமுக முதலியார், ஏ. சி. செட்டியார் ஆகியோருடன் நெருங்கிப் பழகி அவர்தம் அறிவுரைகளைப் பெற்றேன். அந்த ஆண்டில் நடைபெற்ற நாள்மங்கலவிழாவில் தமிழகப் புலவர் பெரு மக்கள் அனைவரும் வந்திருந்தனர். இராகவையங்காருடைய 'பாரி காதை' அப்போது அரங்கேறிற்று. அன்று வந்த அத்தனைப் பெரும்புலவரையும் பேரவையின் சார்பில் பாராட்டி, புகைப்படமும் எடுத்துக்கொண்டோம். அது இன்னும் என்முன் தொங்கவிடப் பெற்றிருக்கின்றது.

அந்த ஆண்டில் நான்பெற்ற மற்றொரு அனுபவம் என் தனி வாழ்வைப் பற்றியது. நான் மணம்புரிந்தும் துறவியைப் போல் வாழ்ந்தேன் என மேலேயே கூறினேன், இருதார மணத் தடுப்புச் சட்டம் இல்லாத காலம் அது. எனவே என் அன்னையர் இருவரும் எனக்கு மறுமணம் செய்விக்க நினைத்தனர். நானும் அவ்வாறே நினைத்ததுண்டு என்னை மணந்தாரை, அவர் விரும்பியவரையே மணக்க ஆவன செய்து, நானும் வேறொருவரை மணந்து கொண்டால் என்ன என்று எண்ணுவதுண்டு. அதற்கேற்ற சூழலோ என்னுமாறு ஒரு நிகழ்ச்சி பல்கலைக்கழகத்தில் நிகழ்ந்தது. வேறு துறை யில் பயின்றவர் ஒருவர் அடிக்கடி என்னுடன் பேசி, பரிவு

காட்டிச் சென்றதை நான் தவறாக உணர்ந்துவிட்டேன். போலும். முயன்றால் அவர்களை மணக்கலாம் எனத் திட்ட மிட்டேன். ஆயினும் இம்மணத்தை என் அன்னையாரோ மற்றவர்களோ ஒருசிறிதும் விரும்பமாட்டார்கள் என்பதை அறிவேன். என்றாலும் ஏனோ அந்த வாலிப உள்ளத்தில் அந்த எண்ணம் முகிழ்ந்தது. ஓரளவு முயற்சியும் செய்தேன். அவர்களும் இணங்கும் நெறியில் வந்தார்கள் என நான் கருதினேன். ஆனால் மணம் புரிந்துகொள்ளவேண்டும் என்ற என் கருத்தை எழுத்தில் தீட்டிய நாளிலிருந்து அவர்கள் போக்கு திசைமாறிவிட்டதால் நான் என் எண்ணத்தை அறவே விட்டுவிட்டேன். (பிறகு மூன்று ஆண்டுகள் கழித்து என் அன்னையர் விருப்பப்படியே உறவினர் ஒருவரை மணந்து கொண்டேன்.) எனினும் அவர்தம் பிற்கால வாழ்க்கையை நோக்கும்போது, ஒருவேளை நான் அடுத்த இரண்டொரு ஆண்டில் முயன்றிருந்தால் எண்ணம் நிறைவுற்றிருக்கலாம் என நினைத்ததுண்டு. நான் இடையில் பல்கலைக்கழகப் படிப்பை விட்டுவிட்டமையின் அவர்களைக் காண வாய்ப்பு இல்லை. பல ஆண்டுகள் கழித்து அவர்தம் இருக்கையை யும் வாழ்க்கைமுறையும் அவர்தம் வாழ்வின் இழப்பையும் பிறநிலையையும் நோக்கும்போது என் உள்ளம் என்னை அறியாது அவர்கள்பால் வெறும் உயிர் இரக்கம் காட்டும் வகையில் அமைந்தது; அவ்வளவே!

பல்கலைக் கழகத்தில் பயிலும்கால் அடிக்கடி ஊருக்கு வருவேன். அவ்வாறு ஒருமுறை வந்தபோது சென்னை சென்றேன். அப்போது எனக்குத் தேவையான சில நூல்கள் வாங்குவதற்காக டாக்டர் சாமிநாதையர் வீட்டிற்குச் சென்றேன். நடையில் உட்கார இடம் இருந்தது. உள் வாச லில் பாத்திரங்கள் துலக்கி வைக்கப்பெற்றிருந்தன. ஐயர் அவர்கள் - எழுபத்தைந்துக்கு மேல் வயதிருக்கும்—அவற்றை ஒவ்வொன்றாக எடுத்து உள்ளே வைத்து வந்தார். என்னை

நடையிலேயே உட்காரப் பணித்தார். எல்லாவற்றையும் முடித்துவிட்டு, என்னையும் அழைத்துக்கொண்டு மேலே சென்றனர். என்னை உட்காரவைத்து, 'தம்பி! என்ன நினைக்கிறாய்?' என்றார். நான் எது பற்றி என்று அறியாது திகைத்தேன். என் திகைப்பை உணர்ந்த ஐயரவர்கள் 'நான் பாத்திரங்களை எடுத்து வைத்ததைப்பற்றி என்ன நினைக்கிறாய்?' என்று கேட்டு, என் பதிலுக்குக் காத்திராமல் அவர்களே பேசத் தொடங்கினர். நம் வீட்டு வேலை எதுவாயினும் நாம் செய்யப் பின் வாங்கக்கூடாது எனவும் நாம் பணி செய்வதில் இழிவு இல்லை என்றும் கூறினார். மேலும் பல வகையான அறிவுரைகளை அந்த இளம் வயதில் என் உளங் கொள்ளுமாறு எனக்குக் கூறினர். அதுவரை எதிரில் உட்கார்ந்து, தம்மை மறந்து ஏட்டில் மூழ்கியிருந்த திரு. 'கி.வா.ஜ.' அவர்கள் என்னை யாரென்று கேட்டார். பிறகு என்னைப்பற்றிக் கூறிவிட்டு, வேண்டிய நூல்களைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். பிறகு ஐயர் அவர்கள் வாழ்ந்த வரையில் சென்னைக்குச் சென்ற போதெல்லாம் அவர்களைக் கண்டு அவர்தம் வாழ்த்தைப் பெற்று வந்தேன். பின் அவர் மகனாரும் அவர்தம் பேரப் பிள்ளையாகிய இன்று வாழும் திரு. சுப்பிரமணிய ஐயர் அவர்களும் என்பால் அன்பு காட்டி வருகின்றனர். அவர்தம் அன்பால் ஐயர் அவர்கள் பெயரால் அமைந்த நூல் நிலையத்தில் ஆட்சிப்பொறுப்பின் உறுப்பினராகவும் பல ஆண்டுகளாகப் பணியாற்றி வருகிறேன்.

பல்கலைக் கழகத்துக்குப் படிக்கச் சென்ற நான்—நான்காண்டுகள் படித்து முடிக்காது—இடையிலே இரண்டாண்டில் விட்டுவந்த செயல் விநோதமானது. ஒரு ஆய்வுப் பொருளின் காரணமாக—கொள்கை விளக்க அடிப்படையில் எனக்கும் என் மதிப்புக்குரிய ஆசிரியர் கந்தசாமியார் அவர்களுக்கும் மாறுபாடு ஏற்பட்டது. எங்கள் தர்க்கம் சற்றே மிஞ்சிய நிலையில் துறைத்தலைவர் பாரதியாருக்கு எட்டியது.

அவர்களுக்கு நான் எவ்வளவு வேண்டியவனாயினும் கல்லூரியில் தனிச்சலுகை கிடையாது. எனவே என்னை அழைத்துச் சற்றே வன்மையாகக் கண்டித்தனர். பிப்ரவரி மாத இறுதியில் இந்த நிகழ்ச்சி நடைபெற்றது. அந்தச் சூழ்நிலையில் நான் மேலும் தொடர்ந்து பயில விரும்பவில்லை. எனவே அப்போது துணைவேந்தராக இருந்த சர். எஸ். இ. அரங்கநாதன் அவர்களை நேரில்கண்டு என் கருத்தைக் கூறினேன். பலவகையில் பல்கலைக் கழக நிகழ்ச்சிகளில் தொடர்பு கொண்டவனாதலின் என்னை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். என்னை மறுநாள் வரப்பணித்தார்கள். பிறகு பாரதியாருடன் கலந்து பேசினார்கள். எனக்கு மறுநாள் துணைவேந்தர் அவர்களே சொல்லி அனுப்பி ஆறுதல் கூறினர். மேலும் தேர்வு மிக அண்மையில் இருப்பதால் அப்போது பல்கலைக் கழகத்தை விட்டுச் செல்ல வேண்டாமென அறிவுரை கூறினர். நான் மறுபடியும் மற்ற மாணவருடன் தலைதாழ்த்தி உட்கார முடியாத நிலையினை விளக்கவும் அவர்கள் விலக்கு ஒன்று தந்தனர். அதுமுதல் நான் வகுப்பிற்குச் செல்ல வேண்டா மெனவும் இருந்து தேர்வு மட்டும் எழுதலாம் எனவும் பணிந்தனர். அந்த நல்ல முடிவை ஏற்று அப்படியே அங்கிருந்து தேர்வு எழுதி முடித்து வீடு திரும்பினேன்.

இடையில் இருந்த ஒரு திங்களில் பலமுறை பாரதியார் வீட்டுக்குச் செல்வேன். பலபொருள்களைப் பற்றிப் பேசும் என்னுடன் ஒருமுறையாவது நடந்த நிகழ்ச்சியினையும் வகுப்புக்கு வராததையும் பற்றிக் கேட்டதே இல்லை. அவர்தம் பெருந்தன்மையை எண்ணி மனமாரப் போற்றினேன். பிறகு. தேர்வை முடித்து வீடுதிரும்பும்போது மறுபடியும் நான் பயில வருவதைப்பற்றி அவர்கள் ஒன்றும் கேட்கவில்லை. அவர்தம் இளங்குழந்தைகளின் புகைப்படங்களைத் தந்து அனுப்பினர். எல்லா ஆசிரியர்களிடத்தும் விடை

பெற்றுப் புறப்பட்டேன். கந்தசாமியார் அவர்களும் என் தலைமேல் கரம்வைத்து வாழ்த்தி வழியனுப்பினார்கள். அவர் களிடம் பெற்ற அந்த நல்ல பண்பு என் வாழ்வில் நன்கு எனக்குப் பயன்படுகிறது.

என் வகுப்புப் படிப்பு அத்துடன் முடிவடைந்துவிட்டது. தேர்வின் முடிவில் அந்த வகுப்பில் நானே முதல்வனாகத் தேர்ந்தேன். என அறிந்தேன். எனினும் மேலே படிக்கச் செல்லவில்லை, பாரதியாரையோ மற்ற புலவர்களையோ நான் காணவும் இல்லை. ஊரில் இருந்துகொண்டு மேல் எப்படிப் பயில்வது என்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தேன். அதுகாலை நான் அதிகமாகக் கடிதம் எழுதும் வழக்கமும் கொள்ளவில்லை. பாரதியார் நான் படிக்காது விட்டது பற்றி என்ன சொல்லுவாரோ என்ற பயம் மட்டும் என் மனத்தில் ஊசலாடிக் கிடந்தது. எனினும் நான் கடிதம் எழுதவில்லை.

ஏறக்குறைய இரண்டாண்டுகள் கழித்துத் திருவண்ணா மலையில் சைவசித்தாந்த சமாச ஆண்டுவிழா நடைபெற்றது. அதற்குத் தலைவர் விபுலானந்த அடிகளார். பாரதியார் சொற்பொழிவும் அதில் இருந்தது. நான் இளைஞர் மாநாட்டில் பங்குகொள்ளச் சென்றிருந்தேன். இருபெரும் பேராசிரியர்களையும் ஒருசேரப் பார்க்கப்போகிறோம் என்ற மகிழ்ச்சி ஒருபுறம் இருப்பினும் பாரதியார் என்ன சொல் வாரோ என்ற அதிர்ச்சி ஒருபுறம்என்னைத் தாக்கிற்று. மாநாடு தொடங்கச் சிறிதுநேரம் இருந்தது. இருவரும், இன்னும் சிலரும் உட்கார்ந்திருந்தனர். நான் அஞ்சி அஞ்சி அவர்கள் அருகில் சென்றேன். வணங்கினேன். பாரதியார் அவர்தம் கணீரென்ற குரலில் 'வீரனே வா' என்றார். நான் திகைத்தேன் — நையாண்டி செய்கிறாரா என எண்ணினேன். 'இவனைத் தெரியுமா?' என்று அடிகளாரை அவர் கேட்டார். 'அவர் என் மாணவ ரன்றோ,' என்ற பதில் அடிகளாரிட மிருந்து வந்தது. 'ஆமாம் ஆமாம் மறந்துபோனேன்' என்று

கூறி என்னை 'வீரன்' என்று அழைத்தமைக்குக் காரணம் காட்டினார். 'இவன் அன்று செய்த செயல் சரிதான்; எனினும் ஆசிரியரை விடக்கூடாது என்ற காரணத்தால் இவனைக் கடிந்துகொண்டேன். வகுப்பிற்கு வாராது தேர்வு எழுதி முதல்வனாக வெற்றிபெற்றான். (அவர் சொல்லித் தான் நான் முதலிடம் பெற்ற தறிந்தேன்.) எனினும் எனக்குள் ஓர் அச்சம் இருந்தது. இவனை—இவனொடு பழகியதிலிருந்து—ஒரு வீரனாக நினைத்தேன். எங்கே திரும்பி வந்து மேல் வகுப்பில் சேர்ந்து கோழையாகிவிடுவானோ என அஞ்சினேன். ஆயினும் இவன் என் மதிப்பில் உயர்ந்தே விட்டான். என் எண்ணத்தை நிறைவேற்றி வீரனாகிவிட்டான். இனி அவன் படித்தாலும் படிக்காவிட்டாலும் கவலை இல்லை—கொள்கையின் வீரன் என்பதைக் காட்டிவிட்டான்' என்று விளக்கினார். அடிகளார் புன்சிரிப்பு என்னை ஆட்கொண்டது. நானும் என் அச்சம் நீங்கி அருகில் சென்று பின்பக்கமாக இருவர் இடையிலும் நின்றேன். இருவரும் என் முதுகைத் தைவந்து 'நீடு வாழ்க' என வாழ்த்தினர். அந்த வாழ்த்தின் வலத்தாலேயே இன்றும் ஓரளவு அமைதி பெற்ற உள்ளத்தோடு அன்னைத் தமிழுக்குப் பணிசெய்து கொண்டு வாழ்கின்றேன். அத்தகைய பெரியவர்களின் தெளிவும் அறிவும் திண்மையும் செறிவும் சான்றாண்மையும் தளரா உறுதியும் எனக்கு உற்றுழி உதவி, நான் என் வாழ்நாளைக் கழிக்க உதவியாகின்றன.

இவ்வாறு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நான் வெறும் ஏட்டுப் படிப்பினைப் பயின்றேன் என்று சொல்வதைக் காட்டிலும் வாழ்வின் அடிப்படைக்குத் தேவையான எண்ணற்ற பாடங்களைப் படித்தேன் என்று கூறிக் கொள்வதே அமையும் என எண்ணி மேலே செல்கின்றேன். அத்தகைய ஆக்கநலம் தந்த அந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையும் அதைத் தோற்றுவித்த அண்ணாமலை வள்ளலையும் வாழ்த்துகிறேன்.

# 4. இந்துமத பாடசாலை

## பள்ளிப் பணி

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைவிட்டு வீட்டிலேயே இருப்பது பற்றி என் அன்னை மிகவும் மகிழ்ந் தார்கள். பெரிய அன்னையும் அவர்களோடு சேர்ந்து கொண்டார்கள். ஆனால் பெரிய தந்தையார் மட்டும் எப்படியாவது தொட்டதை முடித்துவிடுதல் நல்லது என்றார் கள். எனினும் அப்போது நான் மேலே படிப்பதைப் பற்றி ஒன்றும் முடிவு செய்யவில்லை. என் மணவாழ்வு அப்போதும் அப்படியே யாதொரு மாறுபாடும் இன்றி 'சந்நியாசி' வாழ்வு போலவே அமைந்திருந்தது. அது என் அன்னையர் இருவர் உள்ளத்தையும் அதிகமாகக் குழப்பிற்று. எப்படியும் எனக்கு மறுமணம் செய்விக்க வேண்டும் என முயன்றனர். அதுபற்றி யெல்லாம் கவலைகொள்ளாது என் மாமியார் வீட்டின் அவர்கள் போக்கில் இருந்தனர். வேண்டுமானால் அவளை, அவள் விரும்பினவன் மணக்க விரும்பினால், மறுமணம் செய்து கொடுக்கப்போவதாக மாமனார் பலரிடம் கூறிக் கொண்டிருந்தார். நான் உண்மையில் ஒருபுறம் வருந்தி னாலும் ஒருபுறம் மகிழ்ந்தேன். பாவம் அவரவர் விரும்பிய வரை மணந்துகொண்டு வாழ வழியற்ற சமுதாயத்தில் இவ்வளவு முன்னேற்றமுடைய ஒருவர் கிராமத்தில் இருக் கிறார் என்றால் போற்ற வேண்டியதுதானே.

இதற்கிடையில் ஒரு நாள் வாலாஜாபாத் சென்றேன். அங்கே நான் பயின்ற இந்துமத பாடசாலை நன்கு வளர்ச்சி யுற்றிருந்தது. அதன் அமைப்பாளர் திரு. வா. தி. மாசிலா மணி முதலியார் அவர்கள் என்னைக் கண்டார்கள். நான் ஏன்ன செய்து கொண்டிருக்கிறேன் எனக் கேட்டறிந்து. 'சும்மா' இருப்பதால் அப்பள்ளியில் வந்து பணியாற்றுமாறு சொன்னார்கள். மாதம் பதினைந்து ரூபாய் சம்பளம் தரு வதாகவும் வீட்டில் இருப்பதற்கு அது பொழுதுபோக்காக

அமையட்டும் என்றும் காலை வந்து மாலையில் வீடு திரும்பு வதால் அன்னையாரும் தடுக்கமாட்டார்கள் என்றும் தேவை யானால் தாமே வந்து அன்னையாரிடமும் சொல்லு வதாகவும் கூறினார்கள். அன்னையார் இசைந்தால் மறு நாளே வந்து பணியை ஏற்குமாறு கூறி, அங்கே உடனிருந்த தலைமை ஆசிரியரிடம் மறுநாள் வந்தால் வேலையில் சேர்த்துக்கொள்ளும்படியும் பணித்துவிட்டார்கள். அதற்கு முன்பே அங்கு திரு. சுவாமிக்கண்ணு என்பார் தமிழாசிரி யராக இருந்தமையின் என்னைத் தமிழும் கணக்கும் சில வகுப்புகளுக்குச் சொல்லித் தருமாறும் தலைமை ஆசிரியர் பணித்தார். நான் அனைத்தும் என் அன்னையார் முடி வறிந்த பிறகே எனக் கூறிவந்துவிட்டேன்.

வீட்டில் என் அன்னையாரிடம் இதுபற்றிக் கூறினேன். அவர்கள் முதலில் சிறிது தயங்கினார்கள். பிறகு உத்தரவு தந்தார்கள். வீட்டிலேயே ஒரு வேலையுமின்றி முடங்கிக் கிடப்பதோடு, அமைதியற்ற அவதியுற்ற மணவாழ்வில் உண்டாகும் வேதனையும் பெருகுவதால், அவை நீங்கவும் பொழுது போக்காகவும் இருக்க இசைந்ததாகக் கூறினர். எனவே மறுநாளே நான் இந்துமத பாடசாலையில் ஆசிரியப் பணியினை மேற்கொண்டேன்.

அதுவரை ஆசிரியர்களின் கீழ் மாணவனாக இருந்த நான் அன்று மாணவருக்கு ஆசிரியனாகின்றேன் என்றால் அச்சமாகவே இருந்தது. எனினும் முன்னரே அங்குள்ள ஆசிரியர்கள் உறுதுணையும் தலைமை ஆசியருடைய அறி வுரையும் என்னைத் துணிவுடையன் ஆக்கின. அன்று தொடங்கிய ஆசிரியப் பணியே என்னை மெல்ல மெல்ல வளர வைத்து, பல்கலைக் கழகப் பேராசிரியனாக்கியும் சிறக்கச் செய்தது. என் வாழ்நாளின் போக்கு அன்றே உறுதி செய்யப்பெற்றது போலும்.

எனக்கு ஏழாம் வகுப்பிற்குத் தமிழும் வேறு சில வகுப்பு களுக்குச் சமயப் பாடமும் ஒரு வகுப்பிற்குக் கணக்கும் தரப் பெற்றன. அப்போது எங்களூர்ச் சேரியிலிருந்தும் சில மாணவர் நான் எடுத்த வகுப்பில் படித்தார்கள். மற்றவர் களைப்போன்று நான் அவர்களையும் ஒத்து நோக்கி, தேவை யானால் முதுகில் தட்டி, பாடங்கள் சொல்லித் தருவேன் இது எங்கள் ஊரிலிருந்து வந்து அதே பள்ளியில் படித்தும். பணியாற்றியும் இருந்த ஒருவருக்குப் பிடிக்கவில்லை. என் அன்னையாரிடம் சொல்லி என்னைக் கண்டிக்குமாறு செய்தார்கள். அன்னையார் கண்டிப்புக்கு அடங்கினேன். ஆயினும் எனது ஒருமை உணர்வு என்றும் விழிப்புடனேயே இருந்தது. எனக்கு அந்த உணர்வைத் தந்ததே இதே இந்து மத பாடசாலை தானே. இதில் இளமையில் சாதிபேத மற்றுப் பழகிய காரணந்தான், பின் சமுதாய ஏற்றத் தாழ்வைக் கண்டு நான் கலங்க வேண்டிய நிலையில் என்னைச் செலுத்தி, ஓரளவு சீர்திருத்தக்காரனாக மாற்றிற்று. எனவே அதே பள்ளியில் வேறுபாட்டைக் கற்பித்துக்கொண்டு என்னால் எப்படி வாழ முடியும்?மேலும் சேர்ந்தஆண்டிலேயே அதே பள்ளியில் வேறுபாட்டைக் கற்பித்துக் கொண்டு என்னால் எப்படி வாழ முடியும்? மேலும் சேர்ந்த ஆண்டிலேயே அதே பள்ளியில் ஆசிரியர்களாகச் சேர்ந்த திருவாளர்கள் நா. ப. தணிகை அரசு, இராசவேலு முதலியார் போன்றோர் என் கொள்கைக்கு ஆதரவாக இருந்தார்கள்.

இந்துமத பாடசாலையில் நான் ஆசிரியனாக இருந்தேன் என்பதைக் காட்டிலும், நான் பல பாடங்களைக் கற்றுக் கொண்டதால், மாணவனாக இருந்தேன் என்பதே பொருந்துவதாகும். புதிதாகப் பாடம் சொல்லத் தொடங்கிய காரணத்தால் முன்னரே அனுபவம் பெற்ற நல்லாசிரியர் களை அடுத்து, நான் வகுப்பினை நடத்த வேண்டிய வழித் துறைகளை அறிந்து கொண்டேன். மாணவர்களாகிய இளஞ்செல்வங்களை அடிக்காதும் மிரட்டாதும் இனிய சாந்த

முறையிலே அழைத்துச் சென்றேன். பள்ளிக்கூடப் பாடங்கள் தவிர்த்து அவ்வப்போது வரும் பெரியார்கள் முன் நடிப்பதற்கும் பாடுவதற்கும் பேசுவதற்குமாகச் சிற்சில நிகழ்ச்சிகளைத் தயார் செய்தலும் வேண்டும். அவற்றிற்கெனச் சில கவிதைகள், சொற்போர்கள், கட்டுரைகள் எழுதித் தருவேன். அந்தப் பழக்கமே பின்னால் என்னை ஓரளவு எழுத்தாளனாக வளர்க்க உதவி செய்தது. அந்தக் காலத்தில் அந்த இளஞ்செல்வங்களோடு கலந்து, பழகி, விளையாடி, அவற்றுக்கிடையில் பாடம் சொல்லிக் கொடுத்த பண்பு நலன் சிறந்ததாகும். வீட்டிற்கு மாலையில் திரும்பிவிடுவேன். சில சமயங்களில் இரவிலும் பள்ளியிலேயே தங்கிவிடுவேன். எனினும் என் அன்னையார் இரவு எந்நேரமாயினும், யாராவது துணையை அழைத்துக்கொண்டு வீட்டிற்கு வந்து விடுமாறு வற்புறுத்துவார்கள். எனவே பெரும்பாலும் ஊர் திரும்பிவிடுவேன்.

இந்துமத பாடசாலையில் பணியாற்றும்போது எனக்கு அறிமுகமான அன்பர் பலராவர். உடன் இருந்த ஆசிரியர் அனைவரும் எனக்கு உற்ற தோழர்களாக இருந்து வேண்டுவன செய்தனர். அந்தப் பள்ளியில் நான் ஓர் ஆண்டுதான் பணி ஆற்றினேன் என்றாலும் எனக்கும் அதற்கும் உண்டாகிய தொடர்பு 'அப்பா வா. தி. மா.' அவர்கள் வாழ்ந்த வரையில் வளர்ந்துகொண்டே இருந்தது. திரு. வா. தி. மாசிலாமணி முதலியாரின் தமையனார் திரு. வா. தி. பஞ்சாட்சர முதலியார் அவர்கள் பொறுப்பில்தான் அப்போது பள்ளி நடைபெற்று வந்தது. உயிர் ஒப்பந்தநிதி முகவராக அவர் பதிவு செய்துகொண்டு, தம்பியையும் அத்துறையில் ஈர்த்து, அதன் வழியே பள்ளி நடத்தப் பெரும் பொருள் திரட்டினர். அவர்கட்கும் என்னிடம் நீங்காத பரிவும் பாசமும் உண்டாயிற்று. அவர்கள் அப்போது காஞ்சிபுரத்தில் குடியிருந்தார்கள். அவர்தம் மக்கள்

இருவரும் உயர்நிலைப் பள்ளியில் படித்துக்கொண்டிருந்தனர். அவருள் மூத்தவர் கலியாணசுந்தரம் பச்சையப்பரில் படித் திருந்தார். தமிழ்ப் பாடம் அவருக்கு விலக்கு, இளையவர் சம்பந்தம் ஆண்டர்சன் பள்ளியில் படித்துக்கொண் டிருந்தார். அவருக்கு நான் தமிழ் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். சனி ஞாயிற்றுக் கிழமைகளில் காஞ்சிபுரம் வந்து அவர்கள் வீட்டிலேயே இருந்து பாடம் சொல்லித்தர வேண்டும் என்பது ஏற்பாடு. அவர்தம் வீட்டரசியார் தெய்வ நலம் சான்றவர்கள். அவர் வீட்டு மூத்த மகனாகவே என்னை வளர்த்தார்கள் எனலாம். அன்று பழகிய பழக்கம் அவர்கள் சென்னையில் வந்து வாழ்ந்து இறக்கும் வரையில் பற்றியிருந்தது. அவர்தம் செல்வங்கள் இருவரும் இன்றும் சென்னையில் சிறக்க வாழ் கின்றார்கள். என்னை 'அப்பா' என்று அன்போடே அழைத்து மகிழ்வார்கள். ஏறக்குறைய ஐம்பது ஆண்டு களுக்கு முன் காஞ்சியில் தொடங்கிய அப்பழக்கம் குடும்பப் பழக்கமாய் இன்றுவரை இறுகி வளர்ந்துவருவது எனக்கு இன்ப உணர்வை ஊட்டுகின்றது.

திரு. பஞ்சாட்சர முதலியார் அவர்கள் வெளியே எங்கு சென்றாலும் விடுமுறை நாட்களில் என்னை அழைத்துக் கொண்டே செல்வர். அப்படியே வா.தி. மா. அவர்களும். அதுகாலை எனக்கு அறிமுகமானவர் பலர். யாருமற்று இறையருள் ஒன்றையே பற்றுக்கோடாகக் கொண்டு வாழும் எனக்கு இத்துணை நல்லவர்தம் உறுதுணை மிகவும் பயன் அளித்தது. அவ்வாறு அறிமுகமானவருள் ஒருவர் காஞ்சி புரம் குமரன் அச்சக உரிமையார் தவசி. குப்புசாமிமுதலியார் அவர்களாவார்கள். அவர்கள் என்னை அவர் தம்பி எனவே போற்றிப் பலவகையில் உதவினார்கள். அவர்தம் 'காலண் டர்கள்' பல எனக்குக் கிடைக்கும். அவர்கள் வீட்டுச் சிறப்பு எதுவும் நான் இன்றி நடவாது. ஒருமுறை அவர்தம் புதிய கட்டடத்திற்கு அச்சகத்தை மாற்றும் விழாவில்

எனக்கு முக்கியப்பணி கொடுத்திருந்தார்கள். அந்தநாள் முக்கிய நாளாகவே கருதுகிறேன். ஆம்! அன்றுதான் நான் தமிழ் முனிவர் திரு.வி.க. அவர்களை நேரில் கண்டு மகிழ்ந்தேன். அதற்குமுன் ஒருதடவை சென்னையில் கூட்டங்களில் கண்டிருக்கிறேனாயினும் அவரொடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு அப்போதுதான் ஏற்பட்டது. பிறகு ஓரிரு முறை அவர்கள் எங்கள் கிராமத்துக்கு வந்து என்னுடன் உறைந்துள்ளார்கள்.

குமரன் அச்சகம் புதுமனை புதுவிழாவில் நான் கட்டாயம் இருக்கவேண்டும் என்பது அன்புக்கட்டளை. ஆனால் அன்றுதான் என் பாட்டனார் ஆண்டுக் கடன். என் அன்னையாரும் மற்றவரும் அத்தகைய கடன்களை ஒழுங்காகச் செய்யவேண்டும் என்று நம்புபவர்கள். தற்போது நான் அச்சடங்குகளையெல்லாம் விட்டு வெறும் 'படையல்' மட்டும் மேற்கொள்ளுகின்றேனாயினும், அப்போது அவர் தம் சமய உள்ளத்துக்கு ஊறுசெய்யக்கூடாது என்று கருதிய காரணத்தால்—அதுவும் அவர்தம் பெற்றோருக்குச் செய்யும் கடன்கள் தவறலாகா என்ற உணர்வினால் அக்கடன்கள் கழிக்கும் சடங்கிற்கு மாறுபாடு சொல்வதில்லை. என் பாட்டன், பாட்டி இருவருக்கும் ஆண்பிள்ளைகள் இல்லையாதலாலும் நான் ஒருவனே பேரப்பிள்ளையாதலாலும் நானே அக்கடமைகளைச் செய்யக் கட்டுப்பட்டவனானேன்.

எனவே அன்று குமரன் அச்சக விழாவிற்குப் போவதா—பாட்டனார் சடங்கைச் செய்வதா என்ற கேள்விகளுக்கு இடையில் திண்டாடினேன். என் அன்னையார் அத்திண்டாட்டத்தைப் போக்கிவிட்டார்கள். காஞ்சிபுரம் செல்வதற்கு வாலாஜாபாத்தில் 6-45க்கு ரயில்; காஞ்சி நிகழ்ச்சி 9 மணிக்கு. எனவே அதில் சென்றால் போதும். அதற்கு ஊரில் 5-30க்குப் புறப்படல் போதுமானதாகும். ஆகவே அதற்குள் ஆண்டுக்கடன் சடங்குகளை முடிக்க ஏற்பாடு

செய்துவிட்டனர். மூன்று ஐயர்கள் விடியற்காலை மூன்று மணிக்கே வந்துவிட்டனர். நான்கு மணிக்குச் சடங்குகள் முடிந்தன; ஐந்துக்குப் படையல் இட்டு, உண்டு 5-30க்குப் புறப்பட்டுவிட்டேன். பிறகு புதுமனைப்புகுவிழாவில் கலந்து கொண்டேன். இதை அறிந்த குப்புசாமி முதலியார் அவர் கள் என் அன்பைப் பாராட்டிப் போற்றினர். அன்று பக லெல்லாம் திரு.வி.க.வுடனும் பிற அன்பர்களுடனும் பொழுதைக் கழித்தேன். திரு.வி.க. அவர்கள் படிப்பை விடாது தொடரவேண்டும் எனவும் மேன்மேலும் வளரும் வாய்ப்பு உண்டு எனவும் எனக்கு அறிவுரைகூறி வாழ்த்தி னார்கள். பச்சையப்பர் கல்லூரியில் பணி ஏற்று வாழ்ந்த காலை, அவர்களை அடிக்கடி காணும்போதெல்லாம், பல ஆண்டுகளுக்குமுன் அவர்கள் வாழ்த்திய அந்தப் பெருநிலை என் நினைவுக்கு வரும்.

இந்துமத பாடசாலையில் பணியாற்றிய காலத்தில் பல விடங்களில் சொற்பொழிவு செய்யச் செல்வது வழக்கம். சைவசித்தாந்த சமாசத்தில் நிலைபெற்ற தொடர்பு உண்டா யிற்று. அந்த ஆண்டு சமாச ஆண்டு விழா திருவதிகையில் நடைபெற்றது. அப்பரை ஆட்கொண்ட அருட்பெருந் தலத் தில்—திலகவதியாரின் தெய்வத்தொண்டு நடந்த சிறந்த தலத்தில்—நடைபெற்ற அந்த விழாவில் நானும் கலந்து கொண்டேன். எங்கள் பள்ளியிலிருந்து சில மாணவர்களை யும் உடன் அழைத்துச் சென்றோம். சமாசச் செயலாள ராகச் செம்மைப்பணி ஆற்றிய திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் எழுதிய 'அப்பர் நாடகத்'தை அங்கே மாணவர் வழியே நடித்துக் காட்டினோம். கண்டவர் மகிழ்ந்தனர். அம் மாநாட்டில் பலர் எனக்கு அறிமுக மாயினர். நாடகத்தின் சிறப்பினைக் கண்டு அப்பா வா.தி. மா. அவர்கள் அதற்கு முதலாக நின்ற என்னைப் பாராட்டினர். அந்த ஆண்டு விழாவில் தலைமை ஏற்ற திரு. வி. க. அவர்கள் பாராட்டினையும் பெற்றேன்.

எனது மணவாழ்வு மங்கியது என்று கூறினேன். அது பற்றிய தொடர்பு நீண்டுகொண்டே வந்தது. என்னுடன் பணியாற்றிய பல ஆசிரியர்கள் அதுபற்றிக் கேட்டுக் கொண்டே இருந்தனர். நான் சொல்வதறியாது திகைத் தேன்—சிலவேளைகளில் தனிமையில் கண்ணீர்விட்டுத் கதறி அழுதேன். எனினும் அவர்கள் அதுபற்றியெல்லாம் அறிந்து, என்னை அறியாமலே ஒருசெயலை மேற்கொண்டனர். அவருள் ஒருசிலர்—நான்கைந்துபேர் என நினைக்கிறேன்—அவர்கள் வீட்டிற்குச்சென்று பேசினர். நெடுநேரம் பலப் பலவற்றைப் பேசினார்கள் போலும். என்றாலும் முடிவு ஒன்றும் பயன்தரத்தக்கதாக இல்லை. பின் அவர்களுள் ஓரிருவர் என்னிடம் நடந்ததையெல்லாம் சொல்லி, வருந்தினர். வந்த அவர்களுள் யாருடன் வேண்டுமானாலும் எங்குவேண்டுமானாலும் தம் மகளை அனுப்பத் தயாராக இருப்பதாகவும் அல்லது அவர்கள் வீட்டு வேலைக்காரருடனும் அனுப்பத் தயாராக இருப்பதாகவும், என்னுடன் வாழ அனுப்பமுடியாது என்றும் என் மாமனார்கூற, மாமியார் ஆமோதிக்க அவர் வீட்டு ஒரே மூதாட்டியாக இருந்த பாட்டிக்கிழவியும் சரி என்று சொல்ல, சென்ற வருத்தத்தோடு திரும்பினார்கள் என அறிந்தேன். இதை நேரில் கேட்டறிந்த என் உடன் ஆசிரியர்கள் என் பொருட்டு மிகவும் வருந்தினர். நான், அப்படியாவது யாருடனாவது சென்று வாழவிரும்பின் அப்பெண் வாழட்டும் என்று எண்ணினேன். ஆனால் அதுவும் நடைபெறவில்லை. மாமியார் வீட்டு வசவு மட்டும் எனக்கு அதிகமாகக் கிடைத்தது. பார்ப்பவர்கள் ‘எல்லாருக்கும் நல்லபிள்ளையாக இருக்கும் நீ எப்படி மாமியார் வீட்டுக்கு மட்டும் பொல்லாதவனாகிவிட்டாய்?’ என்று இரக்கப்படுவார்கள். ஆயினும் இந்தக் கொடுமைக் கெல்லாம் காரணம், அவர்கள் என்னைக்காட்டிலும் எங்கள் ‘சொத்தி’ன் பேரிலேயே கண்வைத்தமையும் அதை அவர்கள் விருப்பம்போல் தராமல் அன்னையார் கட்டிக் காத்தமையும்

அனைவரும் அறிவார்கள். நான் அனைவருடைய இரக்கப் பொருளாகக் காலம்கழித்து வந்தேன். அதற்கிடையில் இளஞ்சிறாருடன் பழகும் வாய்ப்பும் அன்பர்தம் ஆதரவான சொற்களும் என்னைத் தாங்கி வந்தன. பள்ளிப் பணியும் செம்மையாக நடைபெற்றது.

இதற்கிடையில் என் அன்னையும் பெரிய அன்னையும் எனக்கு மறுமணம் செய்துவைக்க முயன்றனர். நான் திண்டாடினேன். என் நண்பர் சிலரை அவர்கள் அழைத்து எனக்குப் புத்தி கூறுமாறு சொன்னார்கள். ஒருசில நண்பர் கள் மாமியார் வீட்டுக் கொடுமைக்கு அவ்வாறு செய்து கொண்டாலும் தவறு இல்லை என்ற அளவுக்குப் பேசினர். எனினும் என் உள்ளம் அவ்வாறு செய்துகொள்ளத் தயங் கியது. ஆயினும் அவர்கள்—மாமியார் வீட்டார் உண்மையில் நான் மறுமணம் செய்துகொள்வதை விரும்புகிறார்களா என அறிய விரும்பியது. அதுபற்றி என் நண்பர்களிடம் கலந்து பேசினேன். சிலருடைய உதவியினால் ஓர் ஏற்பாட்டினை மேற்கொண்டேன்.

என்னுடன் அண்ணாமலையிற் பயின்ற ஆறுமுகப்பெரு மாள் என்பார் தற்போது நெல்லையில் பணியாற்றுகின்றார். அவர் மூலமாக ஐம்பது 'மணஇதழ்' அச்சிட்டு அனுப்ப ஏற்பாடு செய்தேன். பேருக்குக் குணமங்கலம் என்ற ஊரில் எனக்கும் ஒரு பெண்ணிற்கும் திருமணம் நடப்பதாக அவள் அண்ணன் அழைப்பதாகப் பத்திரிகை அச்சிட்டு அனுப்பச் சொன்னேன். எல்லாம் கற்பனையே. குணமங்கலம் என்ற ஊரும் கற்பனைப் பெயர் என்றே எண்ணினேன். ஆனால் அது தஞ்சையில் உள்ள ஓர் ஊரின் பெயராகிப் பெற்றவர்களுக்குப் பெருந்தொல்லை கொடுத்ததைப் பின்னர் அறியப் பெரிதும் வருந்தினேன்.

பள்ளிக்கூட நாள் ஒன்றில்—அன்று வா.தி.மா. அவர் களோ பெரியவரோ இல்லை—அந்த இதழ் வந்து சேர்ந்தது,

ஆசிரியர் அனைவருக்கும் அதை அளித்தேன். ஓர் இதழை உறையிலிட்டு என் அன்னையாருக்கு அனுப்ப ஏற்பாடு செய்தேன். என்னுடன் எங்கள் ஊரிலிருந்து வந்து பணியாற்றிய அன்பர் ஒருவர்வழி அதைக் கொடுத்தனுப்பி, அன்று மாலையே புறப்படுவதாகச் சொல்லி (மணம் மூன்றாம்நாள்) அன்பர்கள் தந்த பண உதவியோடு மாலை 4-30க்குப் புகை வண்டியில் செங்கற்பட்டை நோக்கிப் புறப்பட்டேன். அங்கே சென்று தெற்குநோக்கிச் செல்லும் வண்டியில் எது முந்தியது எனக்கண்டு அது பொழுது விடியும்போது எங்கே செல்லும் என்று அறிந்தேன். திருவனந்தபுரம் விரைவு வண்டிக்குத் திண்டுக்கல்லுக்கு ஒரு 'டிக்கெட்' எடுத்தேன். இரவெல்லாம் அந்த ரெயிலில் சென்றேன். அந்தக்காலத்திலெல்லாம் இப்படி வழியும் கூட்டம் ரெயிலில் கிடையாது. எனவே நன்கு உறங்கித்தான் சென்றதாக நினைப்பு. திண்டுக்கல் சென்றதும் இறங்கினேன். எனக்கு அந்த ஊர் புதியது. இரெயிலடியிலேயே பல்லைத் துலக்கிக்கொண்டு பக்கத்தில் இருந்த விடுதியில் சிற்றுண்டி கொண்டேன். பிறகு ஒரு அனாதைப் பிள்ளையைப் போன்று, கையில் வைத்திருந்த சிறு பையுடன் மேற்குநோக்கி வெகுநேரம் நடந்தேன். ஏன் போகிறேன்? எங்கே போகிறேன்? என எனக்கே தெரியவில்லை. சுமார் 10 மணிவரை நடந்திருப்பேன். பின் சாலையின் ஓர் ஓரத்தில் தங்கிவிட்டேன். ஒருவேளை என் பெற்றோர் என்னைத் தேடிக்கொண்டு வந்தாலும் அவர்கள் கண்களில் படாதிருக்கவேண்டியே இந்த ஏற்பாட்டினைச் செய்தேன். பிறகு அன்றைப்பொழுதை எப்படிக் கழித்தேன் என்பது எனக்கு இன்று திட்டமாக நினைவில் இல்லை. எப்படியோ அன்றைப்பொழுதை அறியாத திண்டுக்கல்லில் கழித்து, இரவு 9 மணியளவில் திருச்சிக்குத் திரும்பும் ஒரு ரெயிலில் திருச்சி வந்து சேர்ந்தேன். அங்கேயும் ரெயிலடியிலேயே படுத்து உறங்கினேன். மறுநாட் காலை எழுந்து காவிரியில் சென்று மூழ்கிப் பையில் இருந்த மாற்றுடையைத் தரித்துக்கொண்டு,

சிராப்பள்ளிக் குன்றுடையானையும், திருவரங்கத்துப் பள்ளி கொண்டானையும் ஆனைக்கா அண்ணலையும் கண்டு வணங்கினேன். பிறகு நண்பகல் உணவுக்குப் பின் ஒரு சத்திரத்தில் இடம்கேட்டுத் தங்கினேன். அன்றும் மறு நாளும் எப்படியோ பொழுதினைக் கழித்தேன். திரும்பும் போது ஒருநாள் தில்லைக்கு வந்ததாக நினைவு. எப்படியோ நான்கைந்து நாட்கள் சுற்றித் திரிந்துவிட்டு, பிறகு வாலாஜாபாத் வந்து சேர்ந்தேன். சேர்ந்த அன்று முறை யாகப் பள்ளிக்குச் சென்றேன். ஆனால் அதற்கு முன்பே என் வீட்டிலும் 'அவர்கள்' வீட்டிலும் என்ன நடை பெற்றிருக்கும் என்று அறிய அவாவிற்று என் உள்ளம். நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கேட்கக் கேட்க என் உள்ளம் நைந்தது.

எனது மண இதழைக் கொண்டுசென்று என் அன்னை யிடம் நண்பர் தந்து விளக்கியதும் அன்னையார் 'ஓ'வெனக் கதறி அழுதனர். வீடே 'பிண' வீடாக மாறிய நிலையில் இருந்தது. யாவரும் வந்து விசாரித்தனர். என் பெரிய அன்னையும் பெரிய தந்தையும் எவ்வளவோ கூறியும் மற்ற வர்கள் தேற்றியும் என் அன்னையார் அமைதியுறவில்லை. பலர் 'சிவானந்தம்' (அப்படித்தான் என்னை ஊரில் உள்ளவர் கள் அழைப்பார்கள்) அவ்வளவு துணிச்சலாகச் செய்ய மாட்டான். ஏதோ இருக்கும் என்று கூறித் தேற்றியும் அன்னையார் கேட்கவில்லை. உடனே 'குணமங்கலத்'துக்குப் புறப்பட்டுச் சென்று மணத்தைத் தடுக்கவேண்டும் என்று வாதாடினர். என்னை மறுமணம் செய்துகொள்ள வற்புறுத்தி னாலும், அவர்கள் தம் குலத்திலேயே—மரபிலேயே எனக்குப் பெண்தேடவே நினைத்தனர். நான் வேற்றுச் சாதியிலே வேறுபெண்ணை மணப்பது என்பது அவர்களோ மற்றுள்ள ஊரார்களோ விரும்பாதது. அவ்வளவு வைதீக எல்லை மீறாத மக்கள் வாழ்ந்தது என் ஊர். எனவே எல்லாரும்

இதுபற்றிக் கலந்து ஆலோசித்தனர். நான் கற்பனையில் குறித்த அந்த ஊர் எங்குள்ளது எனத் தேட முயன்றனர். இருவர் வாலாஜாபாத் புறப்பட்டுவந்து, ரெயிலடியில் வந்து, அந்நிலையத்துள்ளாரை அவ்வூரைப் பற்றிக் கேட்டனர், அவர்கள் எல்லாவற்றையும் துருவித் துருவி ஆராய்ந்து அது போன்ற ஊர் எதுவும் ரெயில் எல்லையில் நிலையமாகக் கிடையாது என்று கூறிவிட்டனர். வேறு சிலர் அஞ்சல் நிலையம் சென்று ஆராய்ந்தனர் போலும். அங்கே உள்ள எல்லா ஊர்களையும் ஆராய்ந்து, குணமங்கலம் என்ற சிற்றூர் தஞ்சை மாவட்டத்தில் எங்கோ ஒரு மூலையில் இருப்பதாகக் கண்டனர். உடனே ஊருக்கு வந்து அன்னையாருக்கு அத் தகவலைச் சொன்னதுதான் தாமதம், உடனே அந்த ஊருக்குப் புறப்படவேண்டுமென்று கிளம்பி விட்டனர். யார் தடுத்தும் கேளாமல் தானே நேரில் வந்தாலன்றி நான் மனம் மாறமாட்டேன் என்றும் மணம் முடிந்துவிடுமென்றும் அதை எப்படியும் தடுக்கவேண்டும் என்றும் புறப்பட்டு விட்டார்கள். அவர்களுக்குத் துணையாக என் பெரிய தந்தையும் புறப் பட்டனர். எப்படியோ அஞ்சல், ரெயில் நிலைய அதிகாரி களைக் கொண்டு அந்த ஊரையும் வழியையும் அறிந்து மறுநாட்காலை அந்த ஊருக்குச் சென்று இருவரும் சேர்ந்தனர்.

குணமங்கலம் அழகான சோலை சூழ்ந்த சிற்றூராம். அதில் அனைவரும் வேளாளரே வாழ்கின்றார்களாம். இவர் கள் சென்று அங்குள்ளவர்களை அப்பத்திரிகையைக் காட்டி, அத்தகைய திருமணம் ஏதாவது நடைபெறுகின்றதா எனக் கேட்டார்கள். அங்கேயும் என் அன்னையார் அழுத வண்ணமே இருந்திருக்கிறார்கள். அவர்களை அழைத்துச் சென்று ஆறுதல் சொல்லி மோரும் பழமும் பிறவும்கொடுத்து உண்ணச்செய்து பிறகு எல்லாத் தகவல்களையும் கேட்டறிந் தார்களாம். அங்குள்ளவர்களும் எங்களைப் போன்றே

வேளாளர்கள்தாம். எனினும் சிறுவேறுபாடு இருக்கும் போலும், அவர்களும் வைதிக நெறிபற்றியவர்கள் போலும். ஆனால் பின் இருவரும் ஒரே இனத்தவர்தாம் என உணர்ந்தனர். அத்தகைய திருமணம் செய்ய அந்த ஊரில் யாருமே நினைக்கமாட்டார்கள் என்றும் ஊரில் அவ்வளவு கட்டுப்பாடு உண்டு என்றும் பத்திரிகையில் உள்ளமை போன்று பெண்ணோ அவள் அண்ணனோ கிடையாது என்றும் கூறியதோடு, ஒரு வேளை அடுத்து அத்தகைய மணம் ஏதேனும் நடந்தாலும் தாங்கள் நடக்க ஒட்டாத கொள்கை யுடையவர்களென்றும் கூறி, அன்னையாரைக் கவலை கொள்ளாது செல்லுமாறு வழியனுப்பிவைத்தார்களாம். அவர்கள் அன்பில் திளைத்த அன்னையாரும் வேற்றுடம்பு திரும்புவது போன்று, என்னைக் காணாமையால் வந்தவழி திரும்பினார்கள்.

இவற்றையெல்லாம் என் அன்பர் கூறக்கேட்டு நான் கதறி அழுதேன். அன்னையை இத்தனை அல்லலுக்கு இச் செயல் உள்ளாக்கும் என அறிந்திருந்தால் அதை மேற் கொண்டே இருக்க மாட்டேன். எனினும் இதனால் பயன் விளையும் என்று எதிர்பார்த்த இடத்தில் பயன் விளைய வில்லை என அறிய மேலும் நடுங்கினேன். இச்செய்தியைக் கேட்ட என் மாமனார் வீட்டில் உள்ள அனைவரும் 'ஒரு சனியன் விட்டது' என்று கூறியதோடு. மகிழ்ச்சியோடு வேறு பல பேசினார்கள். அவர்கள் கவலை கொண்டதாகவே தெரியவில்லை. ஆம்! அவர்கள் அனைவருக்கும்—அந்த மனைவி உட்பட அனைவருக்கும் நான் 'ஒரு சனியனா'கவே இருந்தேன். இன்று அவருள் வாழ்வார்க்கும் அப்படியே இருக்கிறேன்.

குணமங்கலத்தை—எனது கற்பனை ஊர் உண்மையாக நின்ற நல்லூரை—அன்று முதல் காணவேண்டும் என்று எண்ணுவேன் : ஆயினும் பல ஊர்களைச் சுற்றித் திரிந்த எனக்கு அந்த ஊருக்குச் செல்ல வாய்ப்பு இல்லை. இன்னும்

அந்த எண்ணம் விடவில்லை. மேலும் நான் கனவு கண்ட அந்த நல்ல ஊரிலுள்ள பெண் ஒருத்தியை அந்த வேளாண் குலத்தில் மணக்காவிட்டாலும், அதே மாவட்டத்தில் அத்த கைய வேளாளர் நிறைந்த ஊரில் பிறந்த பெண் ஒருத்தியை எனக்கு மருமகளாக்கிக்கொண்ட நிலையினை—என் மகன் மெய்கண்டானுக்கு மனைவியாக ஏற்ற நிலையினை—இன்று எண்ணி மகிழ்கின்றேன். விரைவில் அந்த ஊரைச் சென்று காண்பேன் என எண்ணுகின்றேன்.

ஊரே கொந்தளிக்கும் இந்த நிகழ்ச்சி அவர்களுக்கு எந் துணையும் மாற்றத்தை உண்டாக்காததோடு, நான் மறு மணம் புரிந்துகொள்வதில் மகிழ்ச்சிகொண்ட அவர்கள் நிலை கண்ட அனைவரும் என்னை உடனே மறுமணம் புரிந்து கொள்ளுமாறு வற்புறுத்தினர். நான் அந்த எண்ணத்தைத் தள்ளி வைத்துக்கொண்டே வந்தேன்.

ஊரிலிருந்து வாலாஜாபாத் திரும்பி இரண்டொரு நாட்கள் நான் என் ஊர்சென்று அன்னையாரைக் காண வில்லை. எனக்கு அச்சம் ஒருபுறமும் கண்டு மன்னிப்புப் பெறவேண்டும் என்ற ஆசை ஒருபுறமும் எழுந்தன. அதற்குள் ஊரிலிருந்து பலர் என் புது மனைவியைக் காணச் சாரி சாரியாக வாலாஜாபாத் வந்தனர். அவர்கள் வழி எல்லாம் என் அன்னையாரின் அவலநிலை உணர்ந்தேன். உடனே என் ஆசிரிய நண்பர்கள் இருவரை உடன் அழைத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்றேன். சென்று தாழ்வாரத்தில் இருந்த பலகையில் உட்கார்ந்தேன். சோகமே உருவாக உட்கார்ந்திருந்த அன்னையார் அப்படியே வந்து கட்டிக் கொண்டு அழுதார்கள். ஊரே திரண்டுவிட்டது. நான் மணம் செய்துகொள்ளவில்லை என்று எவ்வளவோ சொல்லியும் அவர்கள் ஆறுதல் பெறவில்லை. அந்த நாளையும் அவர்கள் நிலையையும் இன்று நினைத்தாலும் நடுக்கம் உண்டாகின்றது. பிறகு ஒருவாறு தேற அனைவரும்

விடை பெற்றுச் சென்றனர். அன்னையார் அன்று இர வெல்லாம் என்னை மணம் பற்றிப் பலமுறை கேட்டு 'இல்லை' என்பதை ஒருவாறு தெளிந்து அமைதியுற்றனர்.

வருந்தவேண்டியவர் வருந்தா நிலை கண்ட ஊராரும் உற்றாரும் எனக்கு மறுமணம் செய்துவைக்க வேண்டியதே முறை என்ற முடிவிற்கு வந்தனர். நண்பர் பலரும் என்னை வற்புறுத்தினர். என் அன்னையார் விரைவில் பெண்தேட முயன்றனர். நான் மறுபடி எங்கே உண்மையில் வேறு யாரையேனும் மணம் செய்துவிடுவேனோ என்று அச்சம். ஆனால் நான் 'சற்றே பொறுங்கள்' என்று சொல்லி, வேண்டாம் என்னாது, அவர்கள் விழைவைப் பின் சிறிது காலத்தில் நிறைவேற்றலாம் என ஆறுதல் கூறினேன். அவர்களும் ஒருவாறு அமைந்தார்கள்.

இந்துமத பாடசாலையில் ஆசிரியராக இருந்தபோது நடைபெற்ற நிகழ்ச்சிகள் இன்னும் பலப்பல உள்ளத்தே உருண்டோடி வருகின்றன. அப்போது ஊரின் நடுவில் ஒரு சிறு அளவில் 'வள்ளலார் இல்லம்' என்ற விடுதி இருந்தது. சுமார் 15 அல்லது 20 பிள்ளைகளே அதில் தங்கியிருந்தனர். அவருள்ளும் பெரும்பாலோர் இலவசமாகச் சேர்க்கப் பெற்ற வரே. அந்த நாளில்தான் 'பெரியப்பா' பஞ்சாட்சர முதலியாருடைய முயற்சியால் ஊருக்கு மேற்கேயுள்ள தோட்டங்கள் விலைக்கு வாங்கப்பெற்றன. அப்போது அங்கே ஒரே ஒரு பழைய ஓட்டுக் கட்டடம் இருந்தது. சிறு மாற்றத்துடன் இன்னும் அது இருக்கிறது என எண்ணு கிறேன். அப்பாவும் பெரியப்பாவும் விடுதியைத் தனியான அந்த இடத்துக்கு மாற்றத் திட்டமிட்டனர். விடுதி காப் பாளனாக இருக்குமாறு என்னைக் கேட்டனர். நான் என் நிலைத்த வாழ்வு எது என்று திட்டமிடாத அந்த நாளில் ஒத்துக்கொள்ளவில்லை. எனினும் அந்த ஆண்டே ஆசிரியப் பயிற்சியில் தேர்ச்சியுற்று அங்கேயே நிலைத்த பணியாற்றி

வந்த திரு. தணிகைராயன் (இன்றைய அண்ணா தணிகை அரசு) அவர்கள் அப்பொறுப்பில் ஓரளவு பங்குகொண்டார். நான் ஊருக்குப் போகாத நாட்களில் விடுதியில் தங்கி வேண்டிய உதவிகளைச் செய்து வந்தேன்.

விடுதியைப் புது இடத்துக்கு மாற்றத் திட்டமிட்டார்களே ஒழிய, என்று மாற்றுவது என அவர்கள் முடிவு செய்யவில்லை. நான் ஒரு நல்ல நாள் பார்த்து, அன்று விடுதிக் காப்பாளராகிய 'தனிகைராயரு'டன் சென்று அந்தப் புதிய இடத்தைச் சுத்தம் செய்து, 'ஸ்டவ்' மூட்டி உப்புமாவு கிண்டி, பால் காய்ச்சி வந்திருந்த அனைவருக்கும் கொடுத்தேன். அந்த நாளே இன்றைய பரந்த இடத்தின் பள்ளியின் கால் கோள் விழா ஆற்றிய நாளாகும். செய்துவிட்டேனே ஒழிய, அப்பாவும் மற்றவரும் என்ன சொல்வாரோ என்ற அச்சம் என் உள்ளத்தில் இருந்தது. அன்றோ மறுநாளோ அவர்கள் வந்தபோது, மெல்ல புது வீட்டிற்குச் சென்று பால் காய்ச்சிப் பலகாரம் செய்து சாப்பிட்டு நல்ல நாள் கொண்டதைக் குறித்தேன். இருவரும் மிகவும் மகிழ்ந்தார்கள். அன்றே அந்த இடத்தை முழுதும் பார்வையிட்டு, மறுநாளே எல்லா மாணவர்களையும் அப்புது இடத்துக்குப் புகுமாறு பணித்தார்கள். அவர்தம் அன்பின் திறனை அப்போது என்னால் உணர முடிந்தது.

ஓராண்டு இந்துமத பாடசாலையில் வேலை செய்த போது பல அறிஞர்கள் எனக்கு அறிமுகமானார்கள் என்றேன். அவருள் இன்று ஐதராபாத்தில் இருக்கும் திரு. மணி. கோடீஸ்வர முதலியார் ஒருவர். அவர் அதுகாலை சென்னை கோவிந்த நாயகர் இடைநிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தார். செயலாற்றலும் பேச்சுத் திறனும் பெற்றவராக விளங்கினார். அவர் அடிக்கடி பள்ளிக்கு வருவார்—அப்பாவின் உறவினரும் ஆவர். அவர் வரும்போதெல்லாம் என்னை மேலே பயிலுமாறு ஊக்குவார்.

எனக்கு நல்ல எதிர்காலம் இருக்கின்றது என்றும் படியாமல் வீணே காலங் கழிக்கக் கூடாது என்றும் சென்னையில் பல்கலைக்கழகத்துக்குத் தனியாகப் படித்துச் செல்லலாம் என்றும் கூறி அவ்வாறு படிப்பதற்கு வேண்டிய வழித்துறைகளில் எனக்கு உதவுவதாகவும் வாக்களித்தார். அவர் சொற்படி நான் படித்து உயர்ந்தபோது என் வளர்ச்சியைப் பாராட்டினார். ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக்கழகப் பேராசிரியனாகத் தமிழக அரசாங்கம் என்னை அனுப்பிய போது, அங்கே என்னை வரவேற்று விருந்தளித்துப் பல பெரியவர்களை எனக்கு அறிமுகம் செய்துவைத்தார். என் வளர்ச்சியை விரும்பும் நல்லவர்களில் ஒருவராக அவர் உள்ளார்.

இவ்வாறே எனக்கு அறிமுகமான பலரும் எனக்கு அறிவுரைகூறி, மேலே படிக்கவேண்டும் என்று வற்புறுத்தினர். என் அன்னையாருக்கும் நான் வீட்டிலேயே இருந்து படித்துப் பட்டம் பெறுவதில் கருத்துவேறுபாடு இல்லை. எனவே என் ஓய்வுநேரங்களில் சென்னைப் பல்கலைக்கழகப் பாடத் திட்ட அடிப்படையில் அமைந்த சில இலக்கிய இலக்கண நூல்களைப் பயிலத் தொடங்கினேன். தமிழ்த்துறையில் வல்லவர்களாய் எனக்கு வழிகாட்டிகளாய் நிற்க அங்கே யாரும் இல்லையேனும் நானே பல நூல்களை வாங்கி வைத்துக்கொண்டு மெல்லமெல்லச் இரு ஆண்டுகள் படித்துக் கொண்டே வந்தேன். ஓராண்டு பள்ளியில் பணி செய்த பிறகு வீட்டிலேயே தங்கி, அதிகமாகப் பயில வாய்ப்பினை ஏற்படுத்திக் கொண்டேன். அங்கங்கே நடக்கும் அறிஞர்கள் கூட்டங்களுக்குச் சென்று கலந்துகொண்டு அறிவுரைகளைப் பெற்று வருவேன்.

ஆண்டுகள் ஒன்றன்பின் ஒன்றாகச் கழிந்தாலும் என் இல்வாழ்வில் எத்தகைய மாற்றமும் எற்படவில்லை. மணம் நடைபெற்று ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தபோதிலும் ஒருதர

மாவது ஐந்தாறு நாட்கள் சேர நாங்கள் வாழ்ந்த தில்லை. எனவே என் பெற்றோரும் மற்றோரும் என்னை மறுமணம் செய்துகொள்ளுமாறு தூண்டினர். சில பெண்களைப் பெற்றோரும் தாமே வலியவந்து பெண் கொடுக்கவும் முன் வந்தனர். எனக்கும் பெரிய சங்கடமாகி விட்டது. என் அன்னையோ நாள்தோறும் கண்ணீரைப் பெருக்கிக் கொண்டிருந்தனர். தந்தையார் ஏக, பாட்டியும் அகல, நானும் சுற்றிக்கொண்டிருக்க அவர்கள்தான் எத்தனை நாட்கள்—எத்தனை ஆண்டுகள் தனியாக வீட்டைக் காவல் காத்துக் கொண்டிருப்பார்கள். பக்கத்து வீட்டிலேயே பெரியப்பாவும் பெரியம்மாவும் இருந்தபோதிலும் அவர்களும் தனியாக இருந்தமையின் இரண்டு வீடுமே களையற்றிருந்தன. எனவே வீட்டில் 'நடமாடும் இலக்குமி' யாக மருமகள் வர வேண்டும் என அவர்கள் விழைந்ததில் தவறு இல்லையே. அந்த எண்ணத்திலேதான் என் இளவயதையும் கருதாது அப்போதே எனக்குத் திருமணம் செய்து வைத்தனர். ஆனால் அதுவோ பயனற்றுக் கழிந்துவிட்டது. எனவே அவர்கள் எனக்கு மறுமணம் செய்து வைப்பதில் தீவிர மானார்கள். நான் ஒருமுறை அவர்களோடு வாதாடி மறுத்தேன். அதன் காரணமாக என்னை அவர்கள் வைதார்கள். எனவே எனக்கு உலக வாழ்வே துச்சம் என்கின்ற நிலை உண்டாயிற்று. அனைத்தையும் துறந்து எங்காவது சென்றுவிடலாம் என்ற முடிவுக்கு வந்துவிட்டேன்.

ஒரு நாள் விடியலில் எழுந்து நாவிதன் வீட்டிற்குச் சென்றேன். குடுமி எனக்கு நிறைய இருக்கும், அனைத்தை யும் நீக்கி மொட்டை அடித்துக்கொண்டேன். ஆற்றில் மூழ்கி வீட்டிற்கு வந்து உணவு உண்டேன். பிறகு என் கையில் உள்ள சிறு தொகையை எடுத்துக்கொண்டு, வாலாஜாபாத் சென்று மறுநாள் வருவதாக அன்னையிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். மேலே ஒரு துண்டு, இடுப்பில் ஒரு வேட்டி,

மடியில் சிறு தொகை, சில தாள் ஒரு எழுதுகோல்; இவற்றோடு புறப்பட்ட நான் நேரே திருத்தணிகைக்குச் சென்று எங்கள் குலதெய்வமாகிய முருகனை வழிபட்டு அவனிடம் வரம் வாங்கிக்கொண்டு பிறகு அவன் காட்டிய திசையில் செல்ல முடிவு செய்தேன். தணிகை முருகன் எங்கள் குடும்பத்தின் தோன்றாத் துணையாய் நின்று எல்லாக் காலத்திலும் அருள் செய்யும் நிலையினை நினைந்தேன்; வாய் அவன் புகழ் பாடிற்று.

ரெயிலில் டிக்கெட் எடுத்து உட்கார்ந்தேன். வண்டி நகரத் தொடங்கிற்று. என் உள்ளமும் எண்ணாததெல்லாம் எண்ணிற்று. 'இந்தத் துறவு நிலைக்குமா?' என்ற கேள்வி பிறந்தது. ரெயிலில் என் முன்பலகையில் ஒரு குடும்பம் திருப்பதிக்குப் புறப்பட்டுச் சென்றுகொண்டிருந்தது; இளந் தம்பதிகள்—இரு குழந்தைகள்—உடன் வந்த மூதாட்டி. இவர்கள் குடும்பம் நல்ல சமயப்பற்றுடையதாகத் தெரிந்தது. என்னைச் சிறிதுநேரம் உற்று நோக்கிய அவர்கள் என்னிடம் பேசத்தொடங்கினர். நான் பெரும்பாலும் கண்மூடிக் கொண்டு—முருகன் புகழ் பாடிக்கொண்டு—இடையிடையே கண்ணீர்விட்டுக்கொண்டு கசிந்து சென்றேன். என்னைப் பற்றி என்ன நினைத்தார்களோ தெரியவில்லை. பேசினர்—யார் பேசினர் என்பது நினைவில்லை. என்னை உண்மைத் துறவி என்றே நம்பினர். நானும் துறவிதான் என்றும் தணிகைக்கு வழிபடச் செல்லுகிறேன் என்றும் அடுத்து எங்கே செல்வேன் என்பது எனக்கே தெரியாது என்றும் எனக்கு 'யாதும் ஊரே யாவரும் கேளிரே' என்றும் சொன்னேன். அவர்கள் இந்த இளம் வயதில் மொட்டை அடித்துத் துறவி என நின்ற என் கோலத்தில் ஏதேனும் தெய்வஒளி கண்டார்களோ என்னவோ நானறியேன். குழந்தைகளை என் காலில் கிடத்தி வாழ்த்த வேண்டினர். அவர்கள் குழந்தைகளுக்கு மொட்டை அடித்துக் காது குத்து

வதற்காகத் திருப்பதிக்குச் செல்வதாகக் கூறினர். என்னையும் அவர்களுடனேயே வருமாறு கேட்டுக்கொண்டனர். எனினும் நான் முருகனை முதலில் கண்டபிறகுதான் பிற இடங்களுக்கு வரமுடியும் என்று சொல்லிவிட்டேன். எனவே அவர்கள் மேலும் வற்புறுத்தாமல் அவர் ஊர் முகவரி முதலியவற்றைச் சொல்லி, அங்கேயே வந்து தங்கி மடம் அமைத்துக்கொண்டு இருக்குமாறு கேட்டுக்கொண்டனர். (என் பிற்கால வாழ்விலும் எங்கள் மரபுடன் தொடர்பு கொண்ட ஒரு மடத்துக்குத் தலைவனாக இருக்குமாறு என் நண்பர்கள் வற்புறுத்தினார்கள். எனினும் அப்போதும் நான் அந்த வாழ்வினை மேற்கொள்ளவில்லை). என் உள்ளத்தில் உண்மையில் போராட்டம் நிகழ்ந்தது. கையில் வைத்திருந்த தாளில் எழுது கோலால் அவர் தம் முகவரியை வாங்கிக் கொண்டேன். இறைவன் வழிகாட்டினால் அப்படியே வருவதாகவும் வாக்களித்தேன். நான் இறங்குமுன் அவர்கள் சிற்றுண்டி உண்டனர். எனக்கும் பக்தியோடு அதில் ஒருபகுதி தந்தனர். நானும் மறுக்காமல் ஏற்று உண்டேன். அவர்கள் என்ன நினைத்தார்களோ! நான் தணிகையில் இறங்குமுன் என்னிடம் ஒரு ரூபாய் காசைத் தயக்கத்தொடு நீட்டி வழிச் செலவுக்கு வைத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டனர். நான் புன்சிரிப்போடு 'வேண்டாம்' என்று சொல்லி, 'இறைவன் தேவையைத் தருவான்' என்று அவன் மலையைக் காட்டினேன். அந்நேர வேளையில் இரெயில் அவன் சன்னதிக்கு நேராகக் கிழக்குத்திக்கில்—தெற்கில் இருந்து வடக்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தது. நான் காட்டிய திசையில் திரும்பிய அவர்கள், கோயில் காட்சியை நேரே கண்டதும் திகைத்தனர். என்னிடம் கொண்ட அவர்கள் பக்தி அதிகமாயிற்று. நான் ஊர் பேர் அற்றவனாதலால் அவர்களால் தேட முடியாது என்ற காரணத்தால் அவர்கள் விலாசத்தை நினைவூட்டிக் கட்டாயம் அவர்கள் ஊருக்கு வந்து மடம் அமைக்குமாறு

வேண்டிக் கொண்டனர். அவர்கள் யாரோ? பிறகு அவர்களை நான் காணவே இல்லை. ஆயினும் அவர்கள் காட்டிய பரிவும் பாசமும் பக்தியும் பண்பும் இன்றும் என்முன் நிழலிடுகின்றன. அந்தத் துறவு நிலையிலே நான் நிலைத் திருப்பேனாயின் தற்போது எவ்வாறு இருப்பேன் என்று நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. எங்கோ இமயமலைச் சாரலில் சிவானந்தர் ஆசிரமத்தில் நானும் ஒரு சிவானந்த மாகத் தங்கி இருந்திருப்பேனோ அன்றி வேறு எங்கிருந் திருப்பேனோ?

தணிகையில் இறங்கினேன். மாலை 3 மணி இருக்கும். மலைக்குப் போகும் வழியில் அஞ்சல் நிலையம் இருந்தது. அங்கேயே உட்கார்ந்துகொண்டு எடுத்துச்சென்ற தாளில் எழுதுகோலால் நான்கைந்து பக்கங்கள் என் உள்ளக் கிடக்கைகளை யெல்லாம் கொட்டி எழுதி, நான் துறவியாக முடிவுசெய்துவிட்டேன் என்பதையும் விளக்கி, என்னைத் தடுக்க முயற்சி செய்ய வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டு அழுத நிலையில் ஒரு உறைவாங்கி அதில் இட்டு அன்னை யாரின் முகவரியையும் எழுதிப் பெட்டியில் இட்டுவிட்டேன்.

தணிகை முருகன் என் நினைவு தொடங்கப்பெற்ற நாளிலிருந்து நெஞ்சில் இருப்பவன். இன்பம் துன்பம் இரண்டும் அவன் அளிப்பவை. எனவேதான் அங்கே முதலில் சென்று அவன் அருள்பெற முனைந்தேன். குளத்தங் கரையில் வந்ததும் என் நிலை தளர்வுற்றது. படியில் சிறிது நேரம் உட்கார்ந்தேன். பிறகு மேல் எழுத்து கால் கழுவித் தூய்மை செய்துகொண்டு மெல்ல மலைமேல் ஏறினேன். வழிநெடுக உள்ள குரங்குகளும் பறவைகளும் ஒலி எழுப்பிக்கொண் டிருந்தன. மாலை வேளை பூசைக்குரிய ஏற்பாடுகள் நடைப் பெற்றுக் கொண்டிருந்தன. நல்ல அந்த வேளையில், அவனை யன்றி வேறொன்றும் அறியா நிலையில் நான் உச்சியை அடைந்து கோயிலை வலம்வந்து உள் சென்றேன்.

அப்போது தீபாராதனை நடந்துகொண்டிருந்த நேரம் என நினைக்கிறேன். தீபாராதனை முடியும் வரை நின்றிருந்தேன். கூட்டம் கலைந்தது. முருகன் அருகில் சென்று அழுதேன்—அலறினேன். அருகில் இருந்த ஐயர் கூடத் தவறாக எண்ணி இருப்பர். நான் என்ன செய்வது? அடுத்துச் செய்ய வேண்டியது அறியா நிலையில் நான் வேறு என்ன செய்ய முடியும். வாய் பாடிற்று; கண் அவனைக் கண்டு நின்றது. கருத்து ஒரு வழிபட்டது என எண்ணுகிறேன். யாரும் பக்கத்தில் இல்லை. ஏதோ ஓர் அசைவினை உளத்தில் பெற்றேன். எங்கோ பேசுவது கேட்டது. 'வீட்டிற்குத் திரும்பிப்போ' என்ற ஒலியாக அது என் காதில் விழுந்தது. தலைதூக்கி நிமிர்ந்தேன். முருகன் முன்னே சிரித்துக்கொண்டிருப்பது போன்ற நிலை உணர்ந்தேன். 'திரும்பிச் செல்ல வேண்டுமோ?' என்று உள்ளம் கேட்டது. 'ஆம்' என்று உள்ளத்திலிருந்து ஒலி கிளம்பிற்று. அப்படியே நெடுநேரம் நின்றிருப்பேன். பலர் வந்து சென்றிருக்கக் கூடும். அடுத்த பூசைக்கு நேரமானதால் என்னை வெளியே செல்லச் சொன்னார்கள். நான் அன்னையார் இருவரையும் வணங்கி, மறுமுறை அத்தனுக்கு வணக்கம் செலுத்தி மும்முறை வலம் வந்து வெளி மண்டபத்தில் உட்கார்ந்தேன். அப்போது தான் சுய உணர்வு வரப்பெற்றேன். உடன் எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக உருண்டன. 'திரும்பிப் போகவா?' என்ற கேள்விக்கு விடையும் பெற்றேன்.

தணிகை முருகன் முன் மண்டபத்தில் நான் உட்கார்ந்திருந்த நிலையில் உள்ளம் என் அங்கம்பாக்கம் சென்றது. என் கடிதத்தைக் காண்பார்களாயின் அன்னையின் உள்ளம் எவ்வளவு கொந்தளிக்கும்—கொதிக்கும்—வாடும்—வருந்தும் என எண்ணினேன். முருகன் எதையோ நினைந்துதானே—வருங்காலத்தை அறிந்த காரணத்தால்தானே—திரும்பச் சொல்லியுளான் என எண்ணினேன். உடனே திரும்ப

வேண்டும் என முடிவு செய்தேன். நல்லவேளை அன்னை யாரிடம் 'மறுநாள் காலையில்தான் வருவேன்' என்று சொல்லி வந்தது பொருத்தமாயிற்று. உடனே இரெயிலைப் பிடித்து மறுநாள் காலை வாலாஜாபாத் அஞ்சல் நிலையத்தே அந்தக் கடிதத்தை நானே வாங்கிக் கிழித்துப்போட வேண்டு மென முடிவு செய்தேன். ஒன்றும் சாப்பிடவில்லை; சாப்பிட மனமும் செல்லவில்லை. விடியற் காலை 3-30க்கு இரெயில் என்றனர். எனவே இரெயிலடியில் வந்து படுத்துக் கொண்டேன். உறக்கம் வரவில்லை. 'பம்பாய் மெயில்' 3-30க்கு வந்தது. அரக்கோணத்தில் சிறிது நேரம் தங்கி, செங்கற்பட்டு வண்டியைப் பிடித்து வாலாஜாபாத்திற்கு காலை எட்டு மணிக்கு வந்து சேர்ந்தேன். நான் எழுதிய தபாலும் அதே வண்டியில்தான் வந்துகொண்டிருக்கும். பள்ளியில் சிறிது நேரம் நண்பர்களோடு பேசிக்கொண்டிருந்து பிறகு அஞ்சலகம் சென்றேன். எங்களூருக்கு ஒரு வயதான ஐயர் அக்காலத்தில் தபால் கொண்டுவருவது வழக்கம். அவரிடம் சென்று 'என் அம்மாவின் பெயருக்குத் தபால் வந்திருக்கிறதா?' என்று கேட்டேன். அவர் உடனே அந்த உறையை எடுத்து என்னிடம் கொடுத்தார். உடனே ஒரு பெரு மூச்சு வந்தது. இன்னும் சில மணி நேரத்தில் அது அன்னை யின் கையில் சேர்ந்திருந்தால் என்னவாயிருக்கும் என எண்ணியபோது நடுக்கமே உண்டாயிற்று. அக்கடிதத்துடன் விரைந்து ஊருக்குப் புறப்பட்டேன். வழியில் சாலை ஓரத்தி லுள்ள மரநிழலில் உட்கார்ந்து அக்கடிதத்தை இரண்டு மூன்று முறை படித்தேன். முன்னாள் இருந்த மனநிலைக்கும் அப்போ தைய மனநிலைக்கும் பெரிய வேறுபாடு தெரிந்தது. அதை உடனே கிழித்துவிட எண்ணினேன். எனினும் சிறிது காலமாவது அது இருக்கட்டும் என்ற தெளிவோடு அதை எடுத்துக்கொண்டு அமைதியாக வீடு சென்றேன்.

மறுநாட்காலையில் வந்துவிட்டதால் அன்னையும் என் னிடம் ஒன்றும் பேசிக்கொள்ளவில்லை. நான் தணிகை

சென்றதோ, கடிதம் எழுதியதோ ஒன்றும் அவர்கட்குத் தெரியாது. அக்கடிதத்தை மிகப் பாதுகாவலாக ஒரு உள் அறையில் வைத்துப் பூட்டினேன். எனினும் ஓரிரு ஆண்டுகள் கழித்து நானே அதுபற்றி மறந்திருந்தவேளையில், வேறு எதையோ தேடிய அன்னையார் கையில் அக்கடிதம் சிக்கியது. நான் அப்போது ஊரில் இல்லை. என் கையெழுத்தோடு கூடிய அவர்கள் பெயரொடு உறையிட்ட—தபால் முத்திரையும் பெற்ற அக்கடிதம் அவர்களுக்குப் படிக்கவேண்டும் என்ற அவாவைத் தூண்டிற்று. ஒரு சில வரிகள் படித்ததும் கண்ணீர் வடித்தார்கள் போலும். அந்த வேளையில் மாணிக்கம் என்ற நண்பர் என் வீட்டிற்குவர அவரிடம் கொடுத்து அதைப் படிக்கச் சொன்னார்கள். அவர் படிக்கப் படிக்க அன்னையார் அலறல் அதிகமாயிற்று. அதை முடித்த அவர் மேலுள்ள தேதியைப் பார்த்து—தபால் முத்திரைத் தேதியைப் பார்த்து, அது எப்பொழுதோ எழுதப்பெற்றது என்பதையும் அப்போது அதுபற்றிக் கவலைப்படத் தேவையில்லை என்பதையும் விளக்கியும் அன்னையார் ஆறுதல் பெறவில்லை. நான் வீடு திரும்பிய பிறகு அதை என்னிடம் கொடுத்து அதன் காரணம் என்னவென்று கேட்டார்கள். நான் ஊமையானேன். பதிலுக்குக் கண்ணீரைப் பெருக்கினேன். எனவே மேலும் ஒன்றும் கேட்க வேண்டாம் என்ற நிலையில் என்னை விட்டுச் சென்றனர். நான் அக்கடிதம் மேலும் அங்கிருந்தால் இன்னும் தொல்லைகள் விளையலாம் என்ற எண்ணத்தில் அதைக் கிழித்தெறிந்தேன். அக்கடிதத்தைப் படித்த மாணிக்கம் என் மாமியார் வீட்டுக்காரர். இந்த நிகழ்ச்சியை அவர்களிடம் அங்கேசென்று சொன்னபோதும். அவர்கள் எப்போதும் போலக் கேலியும் கிண்டலும் செய்து மகிழ்ந்தார்கள் என அறிந்தேன். 'இதுவோ எனை ஆளுமாறு' என இறைவனை எண்ணி அமைந்தேன். நாளும் மெல்லக் கழிந்து கொண்டே இருந்தது.

வீட்டில் ஓய்வாக இருந்துகொண்டு பாடங்களை முறை யாகப் படித்துக்கொண்டிருந்த நாளில் என் பெரிய தந்தையார் அம்பலவாணர் திருக்கோயிலுக்கென ஊரின் மேற்கே ஓர் அழகிய மண்டபம் அமைத்தார்கள். என் 'இளமை நினைவுகளின்' தொடக்கத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் கார்த்திகை ஞாயிறு விழாவினைப் பற்றியும் இறைவன் அம்மேலைத் தோப்பிற்கு எழுந்தருளுவது பற்றியும் குறித்திருந்தேன். அத்திருவிழாவுக்கெனவே இந்த மண்டபம் அமைக்கப்பெற்றது. அவர்கள் தம் முழு ஊக்கத்தையும் கொண்டு கட்டி, அடுத்த கார்த்திகையில் அங்கே விழாவை நடத்தவேண்டும் என்று பெருமுயற்சி செய்தனர். எனினும் இறைவன் திருவுள்ளம் வேறாக இருந்தது. வேலை நடந்து கொண்டிருக்கும்போதே அவர்கள் 'வாந்தி பேதி'யால் பீடிக்கப்பட்டு ஒரே நாளில் மறைந்துவிட்டார்கள். அவர்கள் மறைவு எங்கள் குடும்பத்துக்கு மேலும் பேரிடியாக அமைந்தது. என் தந்தையார் இறந்த பிறகு தனித்து நின்ற எங்கள் குடும்பத்துக்கு இருந்த ஒரே ஆண்துணையும் மறைந்தது. என் பெரிய அன்னையாரும் துயரே வடிவமாக நின்றார்கள். இந்நிலையில் எங்களை ஏய்க்கும் சிலருக்கு இது கொண்டாட்டமாகவும் அமைந்தது. எனினும் என் அன்னை யாரும், பெரியன்னையாரும் செயலாற்றிய திறத்தினால் நாங்கள் ஒருவாறு உயர்ந்தோம். நான் அதுபோது தக்க தொரு வயதைத் தொட்டுக்கொண்டிருந்தேன். என்றாலும் பெற்றோரின் கீழ் அடங்கிய பிள்ளையாதலின் அதிகமாக உலக விவரங்களை அறிந்துகொள்ளவில்லை. நல்ல வேளை எங்கள் இருவருடைய நிலங்களும் குத்தகைக்கு விடப் பட்டிருந்தன. குத்தகைக்காரர்களும் நல்லவர்களாகவே அமைந்த காரணத்தால் எங்கள் வாழ்க்கை ஓரளவு அமைதி யாகக் கழிந்தது. நானும் தேர்விற்குப் படிக்க முடிந்தது.

பெரிய தந்தையார் தொட்ட பணியினை நான் முடிக்க வேண்டும் என்பது என் பெரிய அன்னையார் அன்புக் கட்டளை. எனவே அத்துறையில் நான் வல்லவன் அல்லன் ஆயினும் எப்படியோ முயன்று ஓரிரு திங்களில் மண்டபப் பணியை நிறைவு செய்தேன். அந்த இறைபணி பற்றிய கட்டடத் தொடக்கமே பின் பல கட்டடங்களைக் கட்ட எனக்கு உறுதுணையாயிற்று. ஆயினும் அந்த ஆண்டு கார்த்திகை ஞாயிறு வருவதற்குள் அப்பணி முடியவில்லை. எனவே அவ்விழாவைத் தை மாதத்தில் வைத்துக் கொண்டோம். மண்டபத் திறப்பு விழாவை வைதீக முறையில் நடத்த வேண்டும் என்று பலர் சொன்னாலும் என் அன்னையார் நான் சொன்னதற்கே செவிசாய்த்தனர். காஞ்சி குமரன் அச்சகத்தில் திரு.வி.க. அவர்களைக் கண்டபின் எப்படியாவது அவர்களை 'நம் ஊருக்கு அழைத்து வர வேண்டும்' என்ற எண்ணத்தில் இருந்த எனக்கு அவ்விழா உதவி செய்தது. மண்டபத்தை அவர்களே திறக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்டேன். அவர்களும் இசைந்தார்கள். விழாவுக்கான ஏற்பாடுகளும் சிறப்பாக நடைபெற்றன.

திரு.வி.க. முன்னாள் மாலையே ஊருக்கு வந்து விட்டார்கள். அன்று மாலை பாலாற்று மணலில் அவர்கள் இருந்துகொண்டு நாற்புறமும் நோக்கி, இயற்கையில் தம்மை மறந்து மகிழ்ந்தார்கள். பல நாட்கள் அங்கேயே தங்கவும் விரும்பினார்கள். தூரத்தே தெரிந்த 'திருமுக்கூடலுக்கு' மறுநாள் காலை குளியலுக்குச் செல்ல வேண்டும் என்றார்கள். பாலாறும் சேயாறும் இணைந்து கலக்கும் கூடல் அது. அங்குள்ள பெருமாள் கோயில் பழையது; சோழர் காலத்தியது. அங்கே எடுத்த கல்வெட்டுப் படியால் அங்கே ஒரு பெரிய மருந்தகமும் மருத்துவக் கல்லூரி, வடமொழிக் கல்லூரி போன்றவையும் இருந்தனவென அறிகிறோம். அத்தகைய இயற்கைக் சூழலும் வரலாற்று முக்கியமும் கொண்டதுமான முக்கூடல் திரு.வி.க.வை ஆட்கொண்டது அதிசய மல்லவே!

விழா அன்று ஊரே அலங்கரிக்கப்பெற்றது. அந்த நாட்களில் ஊரில் ஒருவர் வீட்டில் சிறப்பு என்றால் ஊரார் அனைவரும் தத்தம் சிறப்பெனவே கருதி எல்லாப் பணிகளை யும் விரும்பிச் செய்வர். அப்படியே அவர்கள் அனைவரும் சிறப்பாளர் வீட்டில் வேறுபாடில்லாது கலந்து உண்பர். இன்று முன்வீடும் பின்வீடும் பிணங்கும் நாகரிகத்தில் வாழும் நமக்கு இவையெல்லாம் புரியாதன. மண்டபத் திறப்பு விழா விற்கு வெளியிலிருந்தெல்லாம் பல பெருமக்கள் வந்திருந்தனர். 'திரு.வி.க.' வருகிறார் என அறிந்து பல அன்பரும் அறிஞரும் கூடினர். அன்று ஒரு மணவிழாவினை ஒத்த சிறப்பு ஊரில் நடைபெற்றது. வாலாஜாபாத் பள்ளியிலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட சிறுவர்கள் சாரணர் உடையுடன் வந்து சிறக்கத் தொண்டாற்றினர். பின் இறைவன் திருவுலாவின் போது சாலை இருமருங்கிலும் வரிசையாக அணிவகுத்து அவர்கள் சென்ற காட்சி சிறந்தது. இவ்வாறு அம்மண்டப விழா சனவரி இறுதியில்—தையில் இனிது நிறைவேறிற்று.

அடுத்த மார்ச் அல்லது ஏப்ரலில் நான் வித்துவான் தேர்வு எழுத என்னை ஆயத்தம் செய்துகொண்டிருந்தேன். குடும்பச் சூழலின் காரணத்தாலும் மேலே காட்டிய பல மாறுபாடுகளாலும் பெரிய தந்தையார் பிரிவாலும் மண்டபப் பணியாலும் நான் நன்கு படிக்கவே இல்லை எனலாம். எனினும் தேர்வு நாற்பது ஐம்பது நாட்களில் உள்ளமையின் எப்படியும் படித்து வெற்றிபெற வேண்டுமென்று விரும்பி னேன். என் அன்னையர் இருவரும் அவ்வாறு செய்யலாம் என்றும் ஆனால் பிறகு எங்கும் வேலைக்குச் செல்லக்கூடாது என்றும் விரும்பினர். நானும் எப்படியாவது முடித்தால் போதும் என்ற உணர்வில் இசைந்தேன். உடனே ஒரு திங்கள் தில்லை அண்ணாமலை நகரில் தங்கினால் என் பழைய ஆசிரியர்களிடமும் பழகிய நண்பர்களிடமும் சில புரியாத பாடங்களைக் கேட்டுக்கொள்ள முடியும் என்று நம்பி அதையும் அன்னையாருடன் கலந்தேன். இருவரும் முதலில்

மறுத்த போதிலும் ஒரு திங்கள் தானே என இசைந்தனர். நான் அங்கே சென்று அந்த ஒரு திங்களிலும் மௌன சுவாமிகள் மடத்தில் தங்கி, நாள்தோறும் அண்ணாமலை நகர் சென்று அறியாதனவற்றைக் கேட்டு வந்தேன். அதுபோது ஒருநாள் நாவலர் சோமசுந்தர பாரதியார் கவி அரசர் சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிப் பேசிய பேச்சைக்கேட்டு, அதே மயக்கத்தில் அருகில் இருந்த ஒரு அறையில் தங்கி, பாரதியின் வாழ்க்கையைப் பாட்டாக, 'பாரதி வாழ்வு' என்று ஐம்பது பாட்டில் எழுதி முடித்தேன். அதுவே எனது முதல் நூலாகவும் வெளிவந்தது.

அண்ணாமலையில் பல ஐயங்களைப் போக்கிக்கொண்ட நான் சென்னையில் தேர்வு எழுத வந்தேன். எனக்குச் சென்னையில் பத்து நாட்கள் தங்க உதவுபவர் யார் எனச் சிந்தித்தேன். அப்போது வா. தி. பஞ்சாட்சர முதலியார் அவர்கள் மாம்பலத்தில் தம் மக்கள் படிப்பின்பொருட்டு வந்திருந்தார். என்னை அவர் வீட்டிலேயே இருக்கப் பணித்தார். என்னொடு மற்றொரு நண்பரும் இருந்தார். அந்த அன்னையார் இருவரையும் தம் மக்களே போன்று ஏந்தி' வேண்டுங்கால் வேண்டும் உணவளித்துத் தேர்வு எழுத நாள் தோறும் வாழ்த்தியனுப்புவர். நான் படித்த வலத்தினைக் காட்டிலும் அந்த அன்னையார் உண்பித்த உணவு வலத்தாலும் வாழ்த்தின் திறத்தாலுமே தேர்வில் சிறக்க வெற்றி பெற்றேன் என்பது உறுதி. அவர்தம் கான்முளைகளும் இன்றும் என்னொடு இயைந்து அன்புடையவர்களாகவே உள்ளனர். இவ்வாறு எப்படியோ பல இன்னல்களுக்கும் கொடுஞ் சூழல்களுக்கும் இடையில் பயின்று வித்துவான் தேர்வில் வெற்றிபெற்றேன். இச்செய்தி என் அன்னையர் இருவருக்கும் மகிழ்ச்சியை அளித்தது. இந்த இன்பத்தில் நாங்கள் பிற அனைத்தையும் மறந்து அமைதியில் வாழ்ந்தோம்.

# 5. காஞ்சி வாழ்க்கைத் தொடக்கம்

தேர்வில் வெற்றிபெற்றபின் என் செய்வது என எண்ண மிட்டேன். அன்னையாரோ உடன் இருக்க வேண்டும் என வற்புறுத்துகின்றார். வீட்டில் வேறு யாரும் ஆண்கள் இல்லா மையால் இருபத்தைந்தாண்டு தொடும் ஓர் இளைஞன் வீட்டுப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றுதான் பலர் சொல்லுவர். எனக்கு அத்தகைய அறவுரை கூறியவர் பலர். என்றாலும் எனக்குமட்டும் 'ஏதாவது ஆசிரியப் பணி செய்தால் என்ன?' என்று எண்ணம் தோன்றிற்று. மண வாழ்வில் வெறுப்புற்று, சொந்தமான பயிர் வேலையும் இல்லாது, நாள் முழுதும் இப்படிச் சோம்பலாக வீட்டில் முடங்கிக் கிடப்பது எனக்கு வேதனையாக இருந்தது. மேலும் நான் தேர்விற்குப் பயிலும்போதுதான், படிக்கவேண்டிய பகுதிகள் இன்னும் எத்தனை எத்தனையோ மடங்குகள் உள்ளன என அறிந்தேன்; 'அறிதோ றறியாமை கண்டற் றால்' என்ற குறளின் பொருளை உணர்ந்தேன். எனவே எங்காவது நகரங்களில் பணியாற்றினால், என் அறிவைத் தக்கார் வழி வளர்த்துக்கொள்ள இயலும் என எண்ணினேன். ஆகவே ஊருக்கு அருகிலேயே காஞ்சிபுரத்திலோ செங்கற் பட்டிலோ உள்ள பள்ளி ஒன்றில் தமிழாசிரியராகப் பணியாற்ற நினைத்தேன். அதுபோது என்னுடன் வாலாஜாபாத் இந்தமத பாடசாலையில் பணியாற்றிய அன்பர் ஒருவர் காஞ்சிபுரம் சென்று தாம் பயின்ற ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியரிடம் பேசிக்கொண்டிருந்தபோது, அங்கே ஒரு தமிழாசிரியர் தேவை என அறிந்துவந்தார். அவர் தலைமை ஆசிரியரிடம் என்னைப் பற்றிக் கூறியதாகவும் என்னை உடன் அழைத்து வரும்படி அவர் சொன்னதாகவும் சொன்னார். எனினும் அன்னையின் உத்தரவு வாங்காது நான் எப்படிச் செல்ல முடியும்?

காஞ்சிபுரம் 'கற்றார் வாழ் காஞ்சி' எனப் போற்றப் பெறினும் மற்றாரும் அதில் மலிந்திருந்தனர்—இருக்கின்றனர். அங்கே நடந்த—நடக்கும் பல கொடுமைகளை அன்றும் பாடினர். இன்றும் பார்க்கின்றனர். அதே வேளையில் பெரும் பாணாற்றுப்படையும் மணிமேகலையும் பிற பிற்கால இலக்கியங்களும் காஞ்சியின் புகழ்பாடுவதைக் கேட்டுள்ளோம். எனினும் என் அன்னையாருக்குக் காஞ்சிபுரம் என்றாலே நடுக்கம், 'பதியிலாக் குலத்துவந்த பான்மையார் பலர்' அக்காலத்து, காஞ்சியில் இருந்தமை முக்கிய காரணம். மேலும் எங்கள் உறவினர் பலர் காஞ்சியில் வாழ்ந்து கெட்டனர் எனக் காட்டினர் அன்னையார் இந்த நிலையில் அவர்கள் என்னைக் காஞ்சிபுரம் செல்ல விடுவார்களா என்பது ஐயத்துக் குரியதேயாகும். அதிலும் தனியாகச் சென்று 'ஓட்டலில்' உண்டுகொண்டு இருக்கச் சம்மதிக்க மாட்டார்கள். அவர்களோ பிறந்த மண்ணைவிட்டு வர மாட்டார்கள். பெரிய அன்னையாரோ, பெரிய தந்தையார் இறந்து ஓராண்டு கழியுமுன் வெளிவரல் இயலாது. எனவே பெரும்பாலும் இசைவு கிடைக்காது என்றே எண்ணினேன். என் அன்னையாரிடம் இதுபற்றிச் சொன்னபோது, அவர்கள் ஊரிலேயே பயிர்த் தொழிலைச் செய்யலாம் என்றார்கள். ஆனால் அதே வேளையில் நான் பிறந்த மூன்றாம் நாளில் எனது 'சாதகத்தை'க் கணித்த ஊர் வள்ளுவர் 'இவர் உத்தியோகத்தில்தான் இருப்பாரே யன்றி உழவுத் தொழில் செய்ய மாட்டார்' என்று கூறியதையும் நினைவூட்டினார்கள். எங்கள் குடும்பத்தில் நான்கைந்து தலைமுறையில் யாரும் படித்து உத்தியோகத்துக்குப் போகவில்லை. எனவே அந்தச் சோதிடன் சொன்னது பலிக்கும் என யாரும் நம்பவில்லை. ஆயினும் பிறகு நடந்த பல நிகழ்ச்சிகளையும் அவர் அந்தப் பிறந்த மூன்றாம் நாளில் எழுதியதையும் ஒத்து நோக்கும் போது அவர் எழுதிய அனைத்தும் சரியாக உள்ளமை அறிந்தோம். எனக்குச் சோதிடத்தில் நம்பிக்கை உண்டோ

இல்லையோ—பற்றுமட்டும் கிடையாது. எனவேதான் என் மக்களில் ஒருவருக்கும் பிறந்த நாள் குறிப்பினைக்கூட நான் வைத்துக்கொள்ளவில்லை. ஆயினும் எனது சோதிடக் குறிப்பில்—'கல்லா வள்ளுவன்' கால்படி அரிசியும் பழந்துணி யும் பெற்று எழுதித் தந்த அந்தக் குறிப்பில்—உள்ள அத்தனையும் கால வேறுபாடும் இன்றி, அப்படியே என் வாழ்நாளில் இன்றுவரை ஒன்றுகூடத் தவறாமல் நடப்பதை எண்ணத் திகைப்பும் வியப்பும் கொள்வேன். என் அன்னையார் அதைக் கண்டு, அதில் அந்தக் காலத்தில் 'இடமாற்றம்' குறித்திருப்பதால் நான் எப்படியும் வெளியூர் செல்வேன் என்று கூறினார்கள். அதே வேளையில் என் நண்பர்கள் பலரும்—சிறப்பாக என்னைக் காஞ்சிபுரம் அழைத்துச் செல்ல இருந்த நண்பரும் அன்னைக்கு ஆறுதல் சொல்லினர். காஞ்சிபுரம் பக்கத்தில் உள்ளதால் நாள் தோறும் சென்று கூடத் திரும்பலாம் எனக்காட்டினர். (பிறகு அவ்வாறே ஒரு திங்கள் இரெயில் வழி காலை சென்று மாலை திரும்பினேன். பின் என் சோர்வு கண்டு காஞ்சியிலேயே இருக்கப் பணித்தனர் அன்னையர்). எனவே அன்னையர் இருவரும் ஒருவாறு இசைவுதந்தனர். உடனே காஞ்சிபுரம் சென்றேன்.

அக்காலத்தில் காஞ்சிபுரம், செங்கற்பட்டு, அரக்கோணம் ஆகிய மூன்றிடத்தில் உள்ள பள்ளிகளும் ஒரே அமைப்பின் கீழ் (Church of Scotland Mission) இருந்தன. U.F.C.M. உயர்நிலைப்பள்ளி என்றே அவற்றிற்குப் பெயர். பின்னரே அவை தனித்தனியாகப் பிரிந்து காஞ்சிப் பாடசாலை 'ஆண்டர்சன் உயர்நிலைப்பள்ளி' எனப் பெயர் பெற்றது. அப்பள்ளியின் தலைமை ஆசிரியரை ஒருநாள் காலை அவர் வீட்டில் என் நண்பருடன் சென்றுகண்டேன். என்னைக் கண்டதும் அவர் பலநாள் பழகியவர் போன்று அன்புடன் ஏற்று இன்சொற் கூறினர். அவர்தம் அன்பும் ஆதரவும் அப் பள்ளியில் பணியாற்றிய கடைசி நாள்வரை எனக்கு இருந்தன.

அவர் உடனே என்னைப் பணியை ஏற்றுக்கொள்ளச் சொன்னார். பள்ளி திறந்த நாளிலேயே சேர்ந்து விடுமாறும் கூறினார். அதற்கென விண்ணப்பமோ உத்தரவோ தேவை இல்லை என்றார்.

எனினும் எனது நியமனத்தில் சிறிது சிக்கல் ஏற்பட்டது எனப் பின்னால் அறிந்தேன். அந்த ஆண்டிலேயே நான் பயின்ற செங்கற்பட்டுக் கிறித்தவப் பாட சாலையிலும் ஒரு தமிழாசிரியர் பதவி காலியாகி இருந்தது. அதன் தலைமை ஆசிரியர் திரு 'ஜோப்' என்பவர்[3] ஆண்டர்சன் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. 'ஞானாதிக்கம்' அவர்கள். இப்பள்ளி களுக்கெல்லாம் நியமனங்கள் ஒரே குழுவினாலேயே நடை பெறும். சில ஆங்கிலேயரும் மூன்று பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களும் அதில் உறுப்பினர்போலும். எனது நியமனம் பற்றிய பேச்சுத் தொடங்கியதும் 'ஜோப்' என்பார், 'அவன் என் மாணவன், ஆகவே அவனை நானே எடுத்துக் கொள்வேன்' என வாதிட்டாராம். ஆனால் ஞானாதிக்கம் அவர்கள் 'அவன் என் வட்டத்தைச் (காஞ்சிபுரம்) சேர்ந் தவன்; மேலும் நான்தான் அவனை வரவழைத்து எல்லா ஏற்பாடும் செய்தவன், எனவே நான் விடமாட்டேன்' என்றாராம். இருவரும் சுமார் பதினைந்து நிமிடம் வாக்கு வாதம் செய்தார்களாம். பிறகு ஆங்கிலேயர் தலையீட்டால் முன்னரே முயன்ற ஞானாதிக்கத்தின் சொல் வென்றதாம். இதை இருவரும் பிறகு என்னிடம் சொல்லித் தட்டிக் கொடுத்து வாழ்த்தினர். இருவரும் வயதானவர்கள்—எனவே அவர்களுடைய மகனைப் போன்று இருந்தமையின் இருவரும் என்னை வாழ்த்தினர். காஞ்சியில் உள்ள கிறிஸ்தவப் பள்ளி யில் இவ்வாறு முதலாவதாக என் முறையான தமிழ்ப்பணி தொடங்க ஏற்பாடாயிற்று.

நான் அதுவரையில் கிராமத்தில் சாதாரண நிலையில் இருந்தவன். இந்துமத பாடசாலையில் பணியாற்றியபோதும்

அது என் வீடெனவே நின்றது. எனவே அதுவரை உத்தி யோகத்துக்கெனத் தனி உடையோ பிற ஆடம்பரங்களோ தேவை இல்லாதிருந்தன. சாதாரண 'ஜிப்பா' அணிந்தே வாழ்ந்து வந்தேன். அக்காலத்தில் ஜிப்பா, கூலி உட்பட எட்டணாவில் அடங்கும். பாடி மூன்றணா, ஒரு வேட்டியும் துண்டும் எட்டணா. எனவே மிக எளிய நிலையிலேயே பலருடைய வாழ்க்கையும் அமைந்தது; என்னுடையதும் அப்படியே. எப்போதும் உடையிலோ பிறவற்றிலோ நான் எளிமையைக் கையாள அன்றே பழகிக்கொண்டேன். எனினும் உயர்நிலைப் பள்ளிக்குச் செல்வதால் 'கோட்டும் சூட்டும்' அணிந்து, கிராப் வாரி விட்டுக்கொண்டு செல்ல வேண்டும் என்றனர் அன்பர்கள். அதுவரை குடுமியாண்டி யாகவும், ஒட்டவெட்டிய மொட்டையனாயும் இருந்த நான் சில நாட்களில் 'கிராப்பு' சீவி சிங்காரிக்கும் நிலைபெற்றேன். இரண்டு சூட் தைக்க ஏற்பாடு செய்தேன். நல்ல துணியில் ஒரு சூட் முழுவதும் தையல் கூலியுடன் ஐந்து ரூபாய்தான்.

எனவே பள்ளிக்கூட முதல் நாளில் டை கட்டிக் கொண்டு சூட் அணிந்துகொண்டு வாலாஜாபாத்திலிருந்து இரெயில் வழி காஞ்சிக்குப் புறப்பட்டேன். வாலாஜாபாத்தில் உள்ள அனைவரும் என் புதுத் தோற்றத்தைக் கண்டு வியந் தனர். காஞ்சிபுரம் பள்ளியில் காலெடுத்து வைத்து முதலில் தலைமை யாசிரியரைக் கண்டேன். அவர் என் தோற்றத் தைக் கண்டு வியந்தார்; போற்றினார். அக்காலத்தில் தமி ழாசிரியர் 'சூட்' அணிவதென்றால் அது ஆச்சரியப்படத்தக்க ஒன்று. எனவே என்னை மாணவரும் பிற ஆசிரியர்களும் ஏதோ காட்சிப் பொருளைப் போன்று கண்டு கண்டு சென் றனர். தலைமை யாசிரியர் மட்டும் 'அவ்வாறு வருதல்தான் நல்லது' என அறிவுரை கூறினார்; முன்னரே அங்கிருந்த வயதான தமிழாசிரியரை எனக்கு அறிமுகப்படுத்தி, அவ ருடன் செல்லுமாறு பணித்தார். அவரும் என்னை ஆசிரியர்

அறைக்கு அழைத்துச் சென்று பிற ஆசிரியர்களுக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். நான் நடத்த வேண்டிய பாடங்களைப் பற்றிக் கூறினார். ஓரிருநாள் கழித்து வகுப்பிற்குச் செல்லலாம் என்றார். இவ்வாறு எனது வாழ்க்கைப் பணி—தமிழ்ப் பணி தொடங்கியது.

காஞ்சிவாழ்க்கை ஒருசில ஆண்டுகளே அமைந்தன என்றாலும் பல நூற்றாண்டுகளில் பெறத்தக்க அனுபவங்களை நான் அங்கே பெற்றுவிட்டேன். பின் என் சென்னை வாழ்வுக்கு அங்கே பெற்ற அனுபவங்கள் எனக்குக் கைகொடுத்து உதவின. என் உடன் இருந்த ஆசிரியர் பலரும் என்னிடம் நன்கு கலந்து பழகினர். அப்படியே என்னிடம் பயின்ற உயர்வகுப்பு மாணவர்களுள் பலரும், நான் வயதில் இளைஞனாக இருந்த காரணத்தால், நெருங்கிப் பழகினர். ஊரில் உள்ள அன்பர் பலரும் என்னிடம் அன்பொடு பழகினர். எனவே நான் காஞ்சியில் பல நல்ல அன்பர்களிடையே வாழ்ந்து வந்தேன். ஓரிரு திங்கள் ஊரிலிருந்தே நாள்தோறும் ரெயிலில் வந்தபோது சோர்வும் பல தடங்கல்களும் உண்டான காரணத்தால் என் அன்னையர் என்னைக் காஞ்சியிலேயே இருக்குமாறு பணித்தார்கள். அதே வேளையில் விரைவில் மறுமணம் செய்துகொண்டு குடும்பத்துடன் அங்கே இருக்கவேண்டும் எனவும் வற்புறுத்தினர். என் இத்துணை மாற்றங்களுக்கு இடையிலும் என் மாமியார் வீட்டில் மாற்றமொன்றுமில்லாத வாழ்வினைக் கண்டேன். இரண்டொரு திங்கள் கழித்து, பள்ளிக்கு அருகிலேயே முதலில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டேன். பிறகு என் மாணவ நண்பர் ஒருவர் வழியே வேறு நல்ல இடமாக அவர்கண்ட ஓரிடத்துக்கு மாற்றிக்கொண்டேன். அங்கே அந்த ஆண்டு எல்லைவரை—சுமார் ஐந்தாறு திங்கள் இருந்தேன். அதற்குள் மறுமண ஏற்பாடுகள் நடைபெற்றன.

பள்ளியில் பல நல்லாசிரியர்கள் இருந்தனர். உயர் வகுப்புக்களை எடுத்த திருவாளர்கள் பாக்கியநாதன், பால்

ஜோசப், எட்வட் சாமுவேல், அதிசயம் போன்றோர் அனுபவ மிக்க நல்லாசிரியர்களாய் இருந்தனர். அப்படியே இடைநிலை வகுப்புக்களில் மத்தேயு, சாலமன், ராஜமணி செல்லையா போன்ற பலரும் எனக்கு நன்கு அறிமுகமாயினர். அவர்களுள் சிலர் தமிழ் பயிலவேண்டும் என்ற ஆர்வத்தோடு இருந்தனர். அந்த நாட்கள் தமிழுக்கு மலர்ச்சி உண்டாகத் தொடங்கிய காலம். எனவே பலர் பள்ளியிலும் வெளியிலும் தமிழ் பயில வேண்டுமென ஆர்வத் தோடு வந்தனர். ஏழெட்டு அன்பர்கள்—பிள்ளை பாளை யத்திலிருந்தும் பிறவிடங்களிலிருந்தும் நான் தங்கியிருந்த இடத்துக்கு வந்து தமிழ் பயின்றனர். பள்ளியிலும் பல ஆசிரியர்கள் தனியாகத் தமிழ் பயின்றனர். மாணவருள் சிலரும் திருக்குறள் போன்றவற்றைத் தனியாக மாலை வேளையில் என்னிடம் பயின்றனர். நானும் மற்றவர்களுக்கு விளக்கிச் சொல்லும் பேராற்றல் பெற்றவன் அல்லனாயினும், பல நூல்களைப் பயின்று, பொருள் கண்டு, கூடியவரை அவர் கள் வெறுக்கா அளவில் பாடல்களைச் சொல்லிக்கொண்டு வந்தேன்.

அதுபோது காஞ்சியில் என் உள்ளம் கலந்த சில பெரியவர்களைப்பற்றி எண்ணவேண்டியுள்ளது. அவருள் பெரும்பாலோர் இன்னும் வாழ்கின்றனர். அவர்களுள் ஒரு சிலர் என் உள்ளத்தில் நிலைத்த இடத்தைப் பெற்றுள்ளனர். இரட்டை மண்டபத்தை அடுத்துள்ள மாளிகையில் காலை 6 மணிக்கே மூழ்கி, நீறு அணிந்து, ஒளி பொருந்திய முகப் பொலிவுடன் தம் ஆசனத்தில் உட்கார்ந்து வருவார்க் கெல்லாம் வழிகாட்டியாக நிற்கும் விசுவநாத ஐயர் அவர்தம் வாழ்வும் போக்கும் என்னைக் கவர்ந்தன. கோடையிலும் குளிரிலும் எந்த நாளிலும் நேரந் தவறாது அன்று நான் கண்டமைபோன்றே இன்றும் ஆங்கே உட்கார்ந்து வரு வார்க்கு வழிகாட்டுகின்றனர். அவர் வழக்கறிஞர்—எனினும்

நேரிய பண்பாளர். உண்மையாக நேரிய வழக்குகளுக்கே வாதிடுவர். கூடியவரை இருவரையும் ஒற்றுமைப் படுத்தவே அவர் உள்ளம் விரும்பும். அவர் மாலை வேளைகளிலும் குறித்த நேரம் தவறாது, 'டென்னிஸ்' ஆடச் செல்வதைக் காண்பதும் சிறந்ததாகும். அவருடைய பிள்ளைகளில் சிலர் என்னிடம் பயின்றனர்.

கச்சபேச்சுரர் ஆலயத்துக்கு அடுத்து, அரிய மருத்துவத் தொண்டு செய்துவரும் ஆத்மானந்த அடிகளார் என் உள்ளங்கலந்த பெரியராவர். ஏழைகளுக்கெல்லாம் இலவச மருத்துவம் செய்தும், பலவகையில் மக்களுக்கு உதவியும் நின்ற உண்மைத் துறவியார் அவர். என்றும் கடுத்த முகமே காட்டி அறியாது அமைதியாகப் பேசும் அறிவும் பொலிவும் கூடிய முகத் தோற்றத்துடன் அவர் விளங்குவர். இன்று தளர்ந்த நிலையிலும் அவர் தோற்றத்தில் அந்த ஆக்கப் பொலிவைக் காணமுடியும். இவர்களையன்றி இன்னும் எண்ணற்ற அன்பர்கள் என் கண்முன் நிழலிடுகிறார்கள். அவர்களைப்பற்றியெல்லாம் ஈண்டு எழுதின் காலமும் எல்லையும் கணக்கிடாது நீளும். அவ்வப்போது பின்வரும் நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப சிற்சிலரை ஆங்காங்கே காட்டி அமையலாம் என எண்ணுகிறேன். ஓராண்டில் பல பொதுக்கூட்டங்களிலும் பேசினேன். ஆக, காஞ்சியில் என் முதலாண்டு பலனுள்ளதாக, நல்லவர் பலரை உற்றாராகப் பெறும் வகையில் அமைந்து என் வாழ்வுக்கு வழிகோலியது என்பது பொருந்தும்.

காலம் நமக்கென நிற்காது ஓடிக்கொண்டிருக்கிறது; அப்படியேதான் கடிமணமும் போலும். நான் வேண்டாம் என்று தள்ளிக்கொண்டே வந்த மறுமணம் முடியும் நாளும் வந்துவிட்டது. எந்த வகையிலும் என் மாமியார் வீட்டார் என் வாழ்வை மலரவைக்க விரும்பவில்லை என அறிந்ததாலும் வேறு பிற சூழல்களாலும் நான் மறுமணத்துக்கு

இசைய வேண்டிய நிலை உண்டாயிற்று. முன்னைய நிகழ்ச்சிகளால் நான் மறுமணம் செய்துகொள்வதிலும் துறவியாவதிலும் அவர்கள் வருந்தவில்லை என்பதை அறிந்த பிறகும், அன்னையும் பிறரும் வேண்டிய நிலையிலும் நான் வேறு என்ன செய்ய முடியும்? மேலும் ஓரிரு சூழ்நிலைகளும் அதற்குக் காரணமாக அமைந்தன.

நான் இருபத்தைந்து வயது நிரம்பிய வாலிபன். எனினும் பலர் என்னிடம் தனியாகவும் வீட்டிற்கு வந்தும் பாடம் பயின்றார்கள் என்றேன். அவருள் உயர் வகுப்பில் பயிலும் இரண்டொரு மாணவியரும் இருந்தனர். அவர்கள் அவ்வாறு வந்து பயிலும்போது, எங்கள் ஊரில் எங்கள் தெருவில் இருந்து ஒருவர் என்னைக் காணவந்தார். அவர் அந்தப் பெண்களைப் பார்த்ததும் என்ன எண்ணினாரோ? நேரே ஊருக்குச் சென்று 'நான் கெட்டுவிட்டேன்' என்று என் அன்னையிடமே கூறிவிட்டார். அவர் தனக்கென இருக்கும் மனைவியைவிட்டு, பிறர் மனைவியர் மேல் மனம் வைத்துச் சுற்றித் திரிபவர். வயது ஐம்பதுக்கு மேலாகியும் அந்த வாழ்வில் இன்பம் கண்டவர், என் அன்னையார் அவர் சொல்லை அப்படியே நம்பாவிடினும் நான் போனபோது கண்டித்தார்கள். நான் 'அவரவர் புத்தி அவமவருக்கு' என்று கோள் சொல்லியவரைப் பற்றிக் குறிப்பாகக் காட்டினேன். என் அன்னையாரும் உடனே அவரிடம் நான் சொல்லியதைச் சொல்லிவிட்டார்கள். அது முதல் அவர் இறக்கும் வரையில் என்னிடம் மரியாதையாகவே நடந்து கொண்டார் என்பதை இங்கே குறிப்பிட வேண்டும்.

நிற்க, இந்த நிகழ்ச்சியும் செயலும் என் அன்னையார் உள்ளத்தில் புது வேகத்தை உண்டாக்கிவிட்டது. நான் ஒருவேளை மறுபடியும் உண்மையிலேயே வேறு யாராவது பெண்ணை மணம் செய்துகொள்வேனோ என அஞ்சினார்கள். முன்னமே 'காஞ்சி'க்கு அனுப்ப அஞ்சிய அன்னையார் இதற்

குப்பின் வெகு வேகமாக எனக்கு மணம் செய்து வைப்பதில் முயன்றார்.

அதற்கேற்ப, காஞ்சியிலும் என் மாணவநண்பர் ஒருவர் போக்கு என்னைத் திகைக்க வைத்தது. அவர் தற்போது இல்லை. படிப்பு முடியும் முன்பே மறைந்துவிட்டார். ஒன் பதாம் வகுப்பில் பயிலும்போதே அவருக்கு இருபதுக்குமேல் வயது இருக்கும். அவருக்கு ஏற்ப நான் தங்கியிருந்த வீட்டில் ஒருவர் அவருக்கு உறவானார் போலும். என்னோடு எனக்குத் துணையாக இருந்த அந்த மாணவர், அவருக்கும் துணை யானார் போலும். அதை ஓரளவு மறைமுகமாக கண்டிக்கும் போது, அவர் என்னையும் அவருக்கு உறவாக்க முயல்வாரோ என்ற ஐயம் பிறந்தது. தனிமையில் வாழ்வதில் இத்தனைச் சங்கடங்கள் இருக்கின்றன என்பதை அப்போதுதான் நான் அறிந்தேன். எனவே அன்னையார் ஏற்பாடு செய்த மண முயற்சிக்கு இணங்கினேன். மேலும் ஊரில் இருந்த என் அன்னையாரும் பெரிய அன்னையாரும் தனித்தனியாகச் சமையல் செய்துகொண்டு, தனித்தனியாகப் பக்கத்தில் பக்கத்தில் வாழ்ந்தநிலை எனக்கு வருத்தத்தைத் தந்தது. இருவரும் உடன்பிறந்தவர்களாக இருந்தும், ஏன் ஒன்றாகவே சமைத்து உண்ணக்கூடாது என்று பலமுறை கேட்பதுண்டு. அவரவர் போக்கு அப்படி என்று ஆறுதல் பெறுவதும் உண்டு. மணம் செய்துகொண்டு, காஞ்சியில் வாழ்க்கை தொடங்கினால் பெரும்பாலும் பெரியம்மா அவர்கள் என்னொடு காஞ்சிபுரம் வந்துவிடுவார்கள் என்ற நிலை யிருந்ததால் அதன்பிறகு அத்தகைய குழப்பம் உண்டாகாது என்று எண்ணியும் இசைந்தேன். நான் இரு குடிக்கும் ஒருமகனாக நின்றமையின் அக்குடிவளர மணம் செய்து கொண்டு இல்லறம் ஏற்கவேண்டுமென்றனர் பலர்; அதனாலும் இசைந்தேன். என் இசைவினை அறிந்தபின் அன்னையார் இருவரும் ஏற்பாட்டிற்கு முனைந்தனர்,

உறவினர் ஒருவரின் மகளையே மணம் பேசினர். அவர் களையே முன்னரே எனக்கு மணம் முடிக்க இருந்தார் களென்றும் என் விருப்பப்படி தான் வேறுஇடத்தில் முந்திய மணம் முடிந்ததென்றும் பிறகு அறிந்தேன். இந்த மண ஏற்பாட்டிலும் 'அவர்கள்' சிறிதும் மனம் வருந்தியதாகவோ மாறுபட்டதாகவோ காணவில்லை. எனவே என் அன்னையார் முடிவே சரியென அனைவரும் கூறினர். அவர்கள் அனைவரும் முன்னின்று மணத்தை ஏற்பாடு செய்தனர். என் சாதகக் குறிப்பிலும் அதுபற்றிக் குறித் திருந்தது. எனவே அனைவர் விருப்பினை ஏற்றும், குடிநலம் புரக்கக் கருதியும் மணத்துக்கு இசைந்தேன். ஆம்! அந்த மணமும் நல்ல வேளையில் நடைபெற்றது.

மணம் நடந்த அதேவேளையில் அந்த ஊரில் ஒருவீட்டில் ஓர் ஆண்மகவு பிறந்தது. அதன் தந்தை என்னிடம் ஈடுபாடு கொண்டமையாலோ ஏனோ அக்குழந்தைக்கு என் பெயரையே இட்டார். இது நெடுநாட்களுக்குப் பிறகே எனக்கு தெரிந்தது. அவரோ மற்றவரோ அப்பெயர் பற்றி எனக்குக் கூறவில்லை. ஆயினும் சில ஆண்டுகள் கழித்து என் பெயரைப் பற்றிய ஆராய்ச்சி உக்கலில் வேடிக்கையாக நடைபெற்றபோது, அந்த உண்மை வெளியாயிற்று. என் பெயர் எங்கும் வேறுயாருக்கும் கிடையாது என வாதிட்டேன் நான். 'பரமசிவம்' 'சிவானந்தம்' 'பரமானந்தம்' 'ஆனந்தம்' போன்று பலபெயர்கள் இருக்கலாம் என்றாலும், 'பரமசிவானந்தம்' என்ற முழுப்பெயர் யாருக்கும் கிடையாது என்றேன். அந்தப் பிள்ளையினுடைய தந்தையாரும் உடன் உட்கார்ந்திருந்தார். அவர் அமைதியாகத் தம்மகனுக்கும் அப்பெயரிட்டிருப்பதையும் காரணத்தையும் காட்டினார். என் மணம் நடந்த அதேவேளையில் பிறந்தமையாலும் இளமையிலேயே தன் முயற்சியால் நான் முன்னுக்கு வந்துள்ளதாக அவர் கருதியமையாலும் அப்பெயரை

இட்டமையைக் கூறினார். நான் என்னை இவ்வளவு பின் பற்றக் கூடியவர்களும் உளரா என வியந்தேன். மேலும் அவர் அப்போதே என்னை அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்று, அப்பிள்ளையைக் காட்டி என்னை வாழ்த்துமாறு பணித்தார். நானும் உளமார வாழ்த்தினேன். அவர்—அந்தப் பரமசிவானந்தம்—தற்போது வடஆற்காடு மாவட்டத்தில் ஆசிரியப் பயிற்சிபெற்று ஒருபள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார் என அறிகிறேன்.

பழங்கால மணமுறைப்படி என் திருமணம் நடந்தது. மணம் நடைபெற்ற மறுநாள் வேடிக்கையாகப் பிள்ளை பெண்ணுக்கும் பெண் பிள்ளைக்கும் 'நலங்கு' வைத்தல் மரபு. அப்படியே எனக்கும் நடைபெற்றது. ஆனால் எதிர் பாராத வகையில் சடங்குகளில் ஒன்றாகிய 'அப்பளம் தட்டும்' நிகழ்ச்சியில் நான் அதிர்ந்துபோனேன். அப்பளத்தை வெறுங்கையில் தட்டுவதற்குப் பதில், அதை என் கன்னத்தில் ஓங்கித்தட்டி அறைய அதிர்ந்தேன். உடனே எழுந்து அப்படியே ஓடிவிடலாமா என்று எண்ணினேன். நான் முன்னரே மணமானவன் ஆனமையின் அந்தப் பெண் என் மேல் காட்டிய வெறுப்போ அந்த அடியென நினைத்தேன். அன்றி முன்னவர்போன்று இவளும் வேறு யாரையாவது மணக்க நினைத்து நான் குறுக்கிட்டமையால் கொண்ட கோபத்தின் பயனோ அது என எண்ணினேன். பிற சடங்குகள் எப்படியோ நடைபெற்றது. எனக்கு மட்டும் அதன் காரணத்தை அறிந்துகொள்ள அவா உண்டாயிற்று. அக்காலத்தில் மணமான உடனே கைகோத்துப் பேசும் வழக்கம் இல்லை—இருந்தால் கேட்டிருப்பேன். பிறகு நேரில் கேட்கவேண்டிய காலத்தில்—நேரம் நேர்ந்த நாளில் அது பற்றி விளக்கம் கேட்டேன். முன்னரே எனக்கு அந்தப் பெண்ணைக் கொடுக்க அவர்தம் பெற்றோர் இசைந்த தாகவும் அவளும் மனமுவந்ததாகவும் என் பெற்றோருக்கும்

அது ஏற்றதாக இருந்ததாகவும், அவ்வளவு இருந்தும் நான் வேறு திசையில் சென்றதால் அது தடைப்பட்டு, நான் முன், வேறுமணம் செய்ய நேர்ந்ததாகவும் கூறி, அக்கோபமே அந்தச் செயலாக உருவெடுத்ததெனக் காட்டி, மன்னிப்பு வேண்டிய நிலையில் உண்மை உணர்ந்து உளம் தேறினேன். அடுத்த ஆண்டு வாழ்வு—காஞ்சியில் இரண்டாம் ஆண்டு வாழ்வு— என் இல்லற வாழ்வாகத் தொடங்கியது. என் பெரிய அன்னையாரும் உடன்வந்து எங்கட்கு உதவியாக இருந்தார்.

என் இல்லறவாழ்வு காஞ்சி அரசவீதியில் ஒரு வீட்டில் தொடங்கியது. நான் குடிசென்ற பிறகுதான் அந்த வீட்டின் சிறப்பை உணர்ந்தேன். 'கச்சி உலா'வில் அதன் ஆசிரியர், இறைவன் உலாவரும் தன்மையைக் கூறிக்கொண்டு வருகின்றபோது, இறைவனாம் ஏகம்பன் மாடவீதிகள் மூன்றைக் கடந்து பின், கச்சபாலயம் கடந்து, கம்பன் வீடு தாண்டி, குமரகோட்டம் தாண்டிச் சென்றதாகக் குறிக்கின்றார். ஆகவே கம்பன் வாழ்ந்த வீடு காஞ்சிபுரம் அரச வீதியில் கச்சபாலயத்துக்கும் குமர கோட்டத்துக்கும் இடையில் இருந்தது என்பது தேற்றம். அக் "கம்பன்" என்ற பெயரே 'ஏகம்பன்' என்ற காஞ்சியிற் கடவுள் பெயரின் முதற் குறை என்றுதானே அறிஞர் காட்டுவர். எனவே கம்பர் காஞ்சியில் வாழ்ந்தார் என்று கொள்வதில் தவறு இல்லை. 'கற்றார் வாழ் காஞ்சி' கம்பர் வாழ்ந்ததால் பெருமையுற்றிருக்குமன்றோ! ஆம்! ஆனால் அவர் எந்த வீட்டில் வாழ்ந்தார்? அதைத்தான் உலா உணர்த்துகின்றது. அவர் வழிபாடாற்றிய கலைமகளும் இன்னும் அங்கேயே இருக்கிறாள். தெருவின் மேலண்டை வாடையில் உயர்ந்து வளர்ந்த வேப்பமரத்தின் அடியில் அக்கலைமகள் வீற்றிருக்கிறாள். இன்றும் பலர் அவருக்கு வழிபாடாற்றுகின்றனர்.

கம்பர் அக்கலைமகளை வழிபட்டுக்கொண்டு அந்த வீட்டிலேயே குடி இருந்தார் என்று அறிஞர் கூறினர். அது எந்த வீடு? ஆம்! நான் குடியிருந்த வீடே அது. அந்த வீட்டின் வாயிலிலேயே அக்கலைமகள் வேம்பின் அடியில் காட்சி தருகிறாள். இன்றும் எப்போதாவது அந்தப்பக்கம் செல்வேனாயின் என்னையுமறியாது என் கரங்கள் அத் தெய்வத்துக்கு அஞ்சலிசெய்யும்—மனம் வழிபாடாற்றும். அன்றுதொட்டு நான் எங்கே குடிபோனாலும் சொந்த வீடு கட்டினாலும் வீட்டின் புறத்தே வேம்பினை நட்டு வளர்த்து வருகிறேன். அதன்கீழ் உள்ள கலைமகள் எனக்குத் தோன்றாத் துணையாய் அமைகிறாள் என நம்புகிறேன்.

நான் அரச வீதியில் தங்கிய ஞான்று எனக்குப் பல புதிய அன்பர்கள் நண்பராயினர். பச்சையப்பர் உயர் நிலைப் பள்ளியில் பணியாற்றிய திரு. துரைசாமி ஐயர் என்பார் அவருள் ஒருவர். அவர்தம் காலங்கடவாக் கடப்பாடும், பழகும் முறையும் பண்பும் என் உள்ளங்கவர்ந்தன. காஞ்சியில் நெடுங்காலம் பொதுப்பணி செய்து சிறந்த பரமசிவ முதலியாரும், அவர் மகனார் கலியாண சுந்தரனாரும் எனக்கு அறிமுகமாயினர். முன்னரே வாலாஜாபாத் வா.தி.மா. அவர்களால் அறிமுக மான கச்சபாலயமுதலியார் நெருங்கிய அன்பரானார். அவரே நான் முதல் முதல் உபயோகப்படுத்த சிறு நாற்காலியும் மேஜையும் செய்து தந்தார். அம்மேசையை நான் இன்னும் சென்னையில் பயன்படுத்தி வருகிறேன். நான் பணியாற்றிய ஆண்டர்சன் பள்ளித் தலைமை எழுத்தர் திரு. தேவராச முதலியார் என்பவர் அந்தப்பக்கத்தில் வாழ்ந்தவர்தாம். அவர் அடிக்கடி வீட்டிற்குவந்து வேண்டிய உதவிகளைச் செய்வார். அவருடன் பள்ளியிலும் நல்ல பயனுள்ள பல பணிகளைச் செய்ய முடிந்தது. ஆண்டு தோறும் பள்ளி ஆண்டுவிழாவில் அவரது முயற்சியால்

நாடகங்கள் நடைபெறும். அடுத்த வீட்டிலிருந்த 'இராசம் செட்டிசன்ஸ்' உடன் பிறந்தார் எனக்கு உற்றுழி உதவினர். இன்னும் உதவிய அன்பரும் மாணவரும் பிறரும் பலர். அத்துணை நல்லவர்களோடு நான் காஞ்சியில் ஒருசில ஆண்டுகளே பணியாற்றினேன் என்றாலும் அக் காஞ்சி வாழ்வு என் நாட்களில் என்றும் ஒளிவிடும் தொடக்க நல்வாழ்வாக அமைந்துவிட்டது.

# 6. அரசியல் அலைகள் : தேர்தலும் தெளிதலும்

நான் காஞ்சியில் வாழ்ந்திருந்த காலம் ஓர் அரசியல் மாற்ற காலம். ஆங்கிலேயர் மக்களுக்கு ஓரளவு சுயஆட்சி நல்கி ஆங்காங்கே தேர்தல் நடத்தி, சட்டசபைகளை அமைத்து, அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்த காலம். இந்தியா முழுவதிலும் அந்தக் கொந்தளிப்பும் தேர்தல் ஆரவாரமும் நிறைந்திருந்தன. நான் செங்கற்பட்டுப் பள்ளியில் பயின்றிருந்த காலத்தில் என் 'இளமையின் நினைவில்' குறித்தபடி, ஒருபுடை அரசியலிலும் மேல்போக்காகப் பங்கு கொண்டிருந்தேனாயினும் பிறகு அதில் தலையிடவில்லை. எனினும் காஞ்சி வாழ்க்கை என்னைத் தலையிட வைத்துவிட்டது.

தமிழகத்தில் எங்கும் தேர்தல் முழக்கம். காங்கிரஸ் நாடெங்கும் பெருவெற்றி பெற்றமை போன்றே இங்கும் பெற்றது. அதன்பயனாக திரு. ச. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் 'சென்னை மாநிலத்தின்' முதலமைச்சரானார். பல ஆந்திரர்களும் கன்னட மலையாள நண்பர்களும் அந்த அமைச்சரவையில் பங்குகொண்டிருந்தனர். மொழி வழி மாநிலம் பிரியாத அந்தக் காலத்தில் எல்லா மொழியினரும் ஆட்சியில் பங்குகொண்டிருந்தனர். அந்தக் காலத்தில்

தமிழைப் பற்றி அதிகமாகப் பேசுவோரும் எழுதுவோரும் சிலரே. ஆங்கிலத்தில் பேசினால் சிறப்பு—இந்தி பயின்றால் ஏற்றம் சமஸ்கிருதம் கற்றால் சிறப்பு என்றெல்லாம் சிலர் எண்ணிக்கொண்டு செயலாற்றிய காலம் அது. எனவே முதலமைச்சர் பதவி ஏற்ற ஆச்சாரியார் தமிழ்நாட்டிலும் பிற சென்னை மாநிலப் பகுதிகளிலும் இந்தியைக் கட்டாயப் பாட மாக்கினர். ஒவ்வொருவரும் இந்தி படித்தாலன்றி வாழ் வில்லை என்ற நிலையை உண்டாக்கிவிட்டார் அவர். இன்று அவர் பேசுவதையும் எழுதுவதையும் அறிபவர் அன்றைய அவர் செயலைக் கேட்டால் கொதிப்பர். நாடு முழுவதும் கிளர்ந்து எழுந்தது. 'இந்தி எதிர்ப்புப் போர்' தமிழ்நாட்டில் வீறுகொண்டு நடைபெற்றது. பெரியார் அதில் முன்னணியில் இருந்தார். இன்றைய அமைச்சர் பலர் பிறவாத அந்த நாளில்—தமிழ் முழக்கம் செய்யும் நல்லவர் காணாத அந்த நாளில், ஆச்சாரியார் செயலுக்கு உள்ளாகி அல்லலுற்றார் பலர். காஞ்சியிலும் அத்தகைய கிளர்ச்சி எழுந்தது. பல கூட்டங்கள் நடைபெற்றன. நானும் பலவற்றில் பேசினேன். சிலவற்றில் தலைமை வகித்தேன். அதுபோது காஞ்சி நகர சபை, காங்கிரஸ் ஆதிக்கத்தில்—திரு. டாக்டர் சீனிவாசன் அவர்கள் தலைமையில் இயங்கிற்று என எண்ணுகிறேன். நான் இந்தி எதிர்ப்புக் கூட்டத்திற்குத் தலைமை வகித்ததை அவர் பெருங்குற்றமாகக் கருதினார். படிக்கும் காலத்தில் நான் காங்கிரஸ் சார்பில் இருந்து, காந்தி அடிகள் தண்டி உப்புச் சத்தியாக்கிரகத்தின்போது செங்கற்பட்டில் பல கூட்டங்கள் நடத்தினேன். எனினும் பிறகு நான் அரசியலில் அதிகமான பங்குகொள்ளவில்லையானாலும் காங்கிரஸ் சார்பிலேயே இருந்தேன். அக்காலத்தில் நன்கு தெளிந்த, பொதுமக்களோடு தொடர்பு கொண்ட வேறு கட்சிகள் இல்லையாதலால் நான் மட்டுமின்றிப் பலரும் அவ்வண்ணமே இருந்தனர், எனினும் எதிலும் தீவிரமாகப்

பங்கு கொள்ளவில்லை. இந்தி நுழையத் தொடங்கிய காரணத்தால, அந்த அடிப்படையில் அதைப் புகுத்திய கட்சிக்கு எதிராக நான் பல கூட்டங்களிலும் மாநாடுகளிலும் கலந்துகொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. ஆனால் அந்தப் பங்குகொள்ளும் நிலை காஞ்சியில் வாழ்ந்த காங்கிரஸ் தலைவர்களுக்கு—சிறப்பாக டாக்டர் சீனிவாசன் அவர் களுக்கு என்பேரில் வெறுப்புகொள்ளக் காரணமாயிற்று. அக் காலத்தில் அவர் சிறந்த மருத்துவராக இருந்ததோடு, நகர சபைத் தலைவராகவும், நிறைந்த செல்வாக்கு உடையவராக வும் இருந்தார். மேலும் அவர் அத்தொகுதி எம். எல். ஏ. வாகவும் இருந்தார் என எண்ணுகிறேன். எனவே அவரது சொல்லை மேலுள்ள இராசகோபாலாச்சாரி முதல் யாவரும் கேட்டனர். எனினும் நான் தனியார் பள்ளியில் பணி யாற்றியமையால் என்னை அவர்கள் ஒன்றும் செய்ய இயல வில்லை.

ஒருநாள் ஒரு கூட்டத்தில் (வைகுண்ட பெருமாள்கோயில் அருகில் என எண்ணுகிறேன்) நான் தலைமை வகித்துப் பேசினேன். என் நண்பர் மாகறல் திருநாவுக்கரசு என்பவர் என்னைத் தேடிக்கொண்டுவந்து, வீட்டில் நான் கூட்டத் துக்குப் போயிருந்ததைக் கூற, அங்கே வந்து வெளியே நின்று கொண்டிருந்தார். அவர் காஞ்சி நகராட்சியில் ஆசிரியப் பணிபுரிந்து வந்தார். கூட்டம் முடிந்ததும் அவரும் நானும் பேசிக்கொண்டே போனோம். அதற்குப் பிறகு ஒருசில நாட்களில் நகராட்சி ஆணையர்களிடமிருந்து அவர் 'இந்தி எதிர்ப்பு'க் கூட்டத்தில் கலந்துகொண்டது தவறு என்றும் அவர்மேல் நடவடிக்கை எடுக்கப்பெறும் என்றும் கடிதம் வந்தது. அவர் சற்றும் அஞ்சவில்லை. எனினும் உத்தியோகம் அல்லவா! மேல் உள்ளவரிடம் வாதாடினார்—எழுதிக் காட்டினார். மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம் செய்தார். முடிவில் அவருக்கு ஓராண்டு உயர்வு ஊதியம் நிறுத்தப்பட்டே

விட்டது. கூட்டம் பற்றி எண்ணமே இல்லாது என்னைத் தேடிவந்த அவருக்கு—வெளியில் நின்றிருந்தவருக்கு இந்தத் தண்டனை—ஆனால் அந்த அதிகாரிகளால் என்னை ஒன்றும் செய்யமுடியவில்லை, காரணம் என் நிலை அன்று அப்படி.

திருநாவுக்கரசு அவர்களை நினைத்தபோது மற்றொன்றும் நினைவுக்கு வருகின்றது. அவரும் நானும் எப்போதும் இணைந்தே இருப்போம். எங்கள் இருவருக்கும் உரிய நண்பர் ஒருவர் ஒருநாள் எங்கள் வீட்டிற்கு இவரை அழைத்துக் கொண்டு வந்தார். அப்போது அவர் பஞ்சாயத்துப் பார்வையாளராக இருந்தார். அங்கம்பாக்கம் பஞ்சாயத்தைப் பார்வையிட வேண்டும் என்றும் நாங்களும் உடன்வர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். நானும் ஊர் செல்வதற்கு மகிழ்ந்தேன். இரவில் எல்லாவற்றையும் முடித்துவிட்டு மறுநாள் காலை பள்ளிக்குத் திரும்பிவிடலாம் என்று எண்ணிப் புறப்பட்டோம். பெரிய அன்னையாரிடம் சொல்லிவிட்டு ஊருக்குச் சென்றோம். ஊரில் என் அன்னை யார் எங்களுக்கு உணவு ஆக்கிப் படைத்தார்கள். ஊர்க் கோயிலில் பஞ்சாயத்துக் கணக்கெல்லாம் பார்த்துவிட்டு, அப்படியே கோயிலில் இறைவனை வணங்கிவிட்டு, இரவு வீட்டிற்கு வந்து உணவுண்டு படுத்துக்கொண்டோம்.

எங்கள் பேச்சு பலவகையில் சென்றது. பஞ்சாயத்துப் பணிசெய்யும் நண்பர் அத்துறையில் வளர்ச்சிக்கு வழிஇல்லை எனவும் கல்வித்துறையில் சென்றால் முன்னேறலாம் எனவும், ஆனால் அந்த ஆண்டு ஆசிரியப் பயிற்சிக்கு விண்ணப்பம் செய்யவில்லை எனவும் அடுத்த ஆண்டு விண்ணப்பம் செய்து சேர்வதற்குள் எத்தனையோ மாற்றங்கள் வந்து தன் முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாகலாம் எனவும் கூறினார். எனக்கு அப்போது ஒருவர் நினைவில் தோன்றி னார். எங்கள் ஊரை அடுத்த நெய்க்குப்பத்தில் பிறந்து நிலநூல் பேராசிரியராகி, ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணி

யாற்றிய திரு. சுப்பிரம்மணிய ஐயர் என்னை நன்கு அறிவார். எங்களுக்கும் அந்த ஊரில் நிலம் இருந்தமையின் பலவகையில் எங்களுக்குள் கொடுக்கல் வாங்கல் முதல் நல்ல வகையில் உறவு இருந்தது. அப்போது சூலை இறுதி அல்லது ஆகஸ்டு முதல் என எண்ணுகிறேன். அவரால் ஏதாவது செய்யக் கூடுமானால் நான் நண்பரை அழைத்துச் செல்வதாகக் கூறினேன். ஆயினும் நண்பர் பாடம் வேறுபட்டது என்றும் நிலநூல் தரமாட்டார்கள் என்றும் தயங்கினார். நான், ஐயர் அவர்கள் எல்லாம் வல்லவர் என்றும் என்பொருட்டு எதையும் செய்வார் என்றும் முயற்சி யில் கெடுதல் இல்லை என்றும் மறுநாட்காலையிலேயே செல்லலாம் என்றும் சொன்னேன். வற்றிய வரண்ட காட் டில் முற்றிய மழை பெய்ததென அவர் மகிழ்ந்தார். காலை யில் என் பள்ளிக்கூடத்துக்கு விடுமுறைக் கடிதம் எழுதித் திருநாவுக்கரசு அவர்கள் வழியே அனுப்பிவிட்டு நான் இரெயிலில் நண்பருடன் சைதாப்பேட்டைப் பயிற்சிக் கல்லூ ரிக்கு வந்து சேர்ந்தேன்.

அப்போது மணி 10க்கு மேலாகி இருந்தது. திரு. ஐயர் அவர்கள் பாடம் எடுத்துக்கொண்டிருந்தார். நாங்கள் அவர் அறையில் காத்துக்கொண்டிருந்தோம். வகுப்பு முடிந்ததும் வந்தார். அன்று உலகம் சுற்றிப் புகழ்பெற்ற ஐயர் அவர்கள் என்னிடம் காட்டிய பரிவு மறக்கற் பால தன்று. 'எங்கே வந்தாய்?' என்று கேட்டார். நான் எல்லாவற்றையும் கூறி அவர் விண்ணப்பம் செய்யாததையும் விளக்கினேன். அவர் அதை யெல்லாம் பொருட்படுத்தாது, 'நீ ஏன் இதற்காக இவ்வளவு தூரம் வந்தாய்? இவரிடமே கடிதம் அனுப்பி யிருந்தால் போதாதா? நான் இவனை நிலநூல் பிரிவில் சேர்த்துக்கொள்கிறேன்' என்று என்னிடம் கூறி, 'உனக்குச் சம்மதமா?' என்று அவரைக் கேட்டார். அவரும் 'சரி' எனத் தலையாட்டினார். 'உடனே ஐயர் அவர்கள் 'இவன்

இங்கேயே இருக்கட்டும். நான் அடுத்த வகுப்பை முடித்து வந்து ஏற்பாடு செய்துகொள்ளுகிறேன். நீ போகலாம்' என்று கூறிவிட்டு அடுத்த வகுப்பிற்குச் சென்றுவிட்டார். நான் நண்பரை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டுப் புறப் பட்டேன். வழி நெடுக அந்த அந்தணாளர்தம் அன்பையும் பண்பையும் பரிவையும் தெளிவையும் எண்ணி எண்ணி வியந்தபடியே நின்றேன். நண்பரும் பிறகு நிலநூற்பிரிவில் இடம் பெற்று அந்த ஆண்டிலேயே ஆசிரியப் பயிற்சியை முடித்து வெற்றி பெற்று அரசாங்கக் கல்வித்துறையில் பணி ஏற்றார். பிறகு அவர்தம் உழைப்பாலும் முயற்சியாலும் தமிழகக் கல்வித்துறையில் மிக உயர்ந்ததாகிய பதவியினை யும் அடைந்தார். அவர் உயர்வை எண்ணி எண்ணி நான் மகிழ்ந்த காலமெல்லாம் பலப்பல. ஆயினும் அவர் உயர்ந்த பதவியில் இருந்தகாலை என்னிடம் மாறுபட்டு எனக்கு ஓர் தீங்கிழைத்தார் எனப் பிறர் எண்ணுமாறு ஒரு காரியம் செய் தார். ஆனால் என் வரையில் அவர் செய்த அந்தச் செயல் எனக்கு நன்மையாகவே முடிந்தது. அவர் மட்டும் அன்று அதைச் செய்யாதிருந்திருப்பாரானால் இன்று என் மக்கள் வாழும் நல்வாழ்வினை எல்லாம் நான் காணமுடியாது. அவர்கள் எந்தெந்த நிலையிலோ சென்றிருப்பார்கள்— நானும் எப்படி இருந்திருப்பேன் என்று சொல்லமுடியாது. ஆகவே அவரிடம் நான் மாறுபட்டது இல்லை. மாறாக அதற்குப் பிறகு அவரைப் பாராட்டிப் போற்றியே வருகி றேன். இவை பற்றிப் பின் சென்னை வாழ்வைப் பற்றி எழுதும் போது விளக்கமாக எழுதுவேன்.

அரசியல் அலை வீசுவது பற்றியன்றோ பார்த்துக் கொண்டு வந்தோம். இடையில் திருநாவுக்கரசர் நம்மை வேறு எங்கோ ஈர்த்துச் சென்றார். சென்னை சட்டசபைத் தேர்தல்கள் நடைபெற்று அமைச்சர் அவை அமைந்த பிறகு நாட்டின் மாவட்டக் கழகங்கள், நகராட்சி மன்றங்களின்

தேர்தல்களை நடத்தத் தொடங்கினர். அந்த அரசியல் சூழ லில் சிக்கிய நானும் செங்கற்பட்டு மாவட்டத் தேர்தலில் போட்டியிட நினைத்தேன். எனினும் அவ்வளவு தீவிரமாக வேலைசெய்ய வில்லை. என் பள்ளியின் தலைவரோ, அர சாங்கம் தடுத்தாலும் நான் நிற்பதற்கு இசைவு தருவதாதக் கூறினார். அவருக்கு மேலுள்ள ஆங்கில நாட்டுச் செய லாளரும் இசைவும் வாழ்த்தும் தந்தார். என்னிடம் பயின்ற என் மாணவர் கூட்டம் அப்படியே ஊர் ஊராகப் படை எடுக்கத் தயாராகக் காத்துநின்றது. இத்தனைக்கும் இடை யில் நான் தேர்தலில் நிற்க முடிவு செய்தாலும். நான் அது வரை சார்பு பற்றி இருந்த காங்கிரஸ் அடிப்படையிலேயே நிற்க நினைத்தேன். எனவே அதற்கென விண்ணப்பம் செய்தேன்; ஆனால் நான் இந்தி எதிர்ப்பில் பங்கு கொண்ட காரணத்தால் மறுக்கப்பெற்றது. எனவே நான் தனியாக நிற்க முடிவு கொண்டேன். இடையில் மற்றொரு சிக்கலும் இருந்தது.

செங்கற்பட்டு மாவட்டக் கழகத்துக்கு அத்தொகுதியின் சார்பில் பதினைந்து ஆண்டுகளாக உறுப்பினராக இருந்த ஒருவர் மறுபடியும் போட்டியிட நினைத்தார். காங்கிரஸ் சார்பில் ஒருவர், இவர். இவர்களுக்கிடையில் நாம் ஏன் தலை யிட வேண்டும்; ஒதுங்கிவிடலாம் என்று நான் எண்ணிய வேளையில் என் அன்னையர் இருவரும் ஒருசேர நான் நின்றே ஆகவேண்டும் என வற்புறுத்தியதோடு பல ஊர்களிலிருந்து முக்கியமானவர்களை வரச்சொல்லி நான் நிற்கப் போவதை யும் கூறிப் பறைசாற்றி விட்டார்கள், எவ்வளவு செலவானா லும் நின்று வெற்றிபெற வேண்டும் என அவர்கள் தீவிரமாக இருந்தார்கள். அதற்குக் காரணம் இல்லாமல் இல்லை.

தொடர்ந்து உறுப்பினராக இருந்து மேலும் நிற்க விரும்பியவரும் அவரைச் சேர்ந்தவர்களும் என்னையும் என் குடும்பத்தையும் இழிவாகப் பேசினர். வீட்டில் ஆண் துணை

இன்மையாலும் நானும் இளையவனாய் எங்கோ பள்ளியில் ஆசிரியனாய் அதிலும் 'தமிழாசிரியனாய்' இருந்தமையாலும், நாங்கள் பெருஞ்செல்வர்கள் அல்லர் ஆதலாலும் ஊர் தொறும் அவர்கள் ஏளனப் பேச்சு அதிகமாயிற்று. அவற்றுள் ஒன்று—எங்கட்குத் தேர்தலுக்குச் செலவு செய்யப் பணம் கிடையாதென்றும் என் அன்னையர் கழுத்தில் இட்டிருக்கும் நகைகளை (செயின்) விற்றுத் தான் செலவிட வேண்டு மென்றும் கூறியது. இக் கூற்றே என் அன்னையரை வெகுண் டெழச் செய்தது. சில ஊர்களுக்கு அவர்களே வந்து கூட எனக் கென வாக்குகள் கேட்டனர். மும்முனைப் போட்டியில் அந்த இருவரும் ஒருசேரப் பெற்ற வாக்குகளைக் காட்டிலும் நான் அதிகமான வாக்குகள் பெற்று வெற்றியுற்றேன். ஆனால் இந்த வெற்றிக்கு உதவியவர் எத்துணையர்—பெற்ற அனுபவம் எத்தகையது! பல காட்சிகள் இன்னும் என் உள்ளத்தில் நிலைத்துள்ளன. ஊருக்கு உதவ என்று நூற்றுக் கணக்கில் பணம் வாங்கி 'ஏப்பம்' விட்டவர்கள் இன்னும் உள்ளனர், ஐம்பத்தாறு ஊர்கள் கொண்ட அந்தத் தொகுதி யில் எத்தனை எத்தனை வகையான மக்களைக் காண நேர்ந்தது. எனக்கு வேலை செய்வதாகப் பணம் வாங்கிக் கொண்டு, எதிரிக்கு வேலைசெய்ய நினைத்த துரோகிகளும் இன்னும் வாழ்கின்றனர்.

நாங்களும் ஒவ்வொரு ஊரிலும் கூட்டமிட்டு, எங்கள் கொள்கைகளைத் திட்டமாக விளக்கினோம். மற்ற இருவேட் பாளர்களைக் காட்டிலும் நானே மேடை ஏறி மக்கள் உள்ளங் கொள்ளப் பேசிய தன்மை அனைவரையும் கவர்ந்தது. என் மாணவ நண்பர்கள் ஊருக்கு இருவராக இராப்பகலாகத் தங்கி, அவ்வூர் வாக்காளர்களிடம் பரிந்து பேசி வாக்குகளைப் பெறமுயன்றனர். அவர்கட்கெல்லாம் அவ்வவ் ஊரார் மகிழ் வோடு உணவு அளித்துக் காத்தனர். என் உக்கல் மாமனார் திரு. கோபால முதலியார் அவர்களும் அவர்தம் குடும்பமும்

முழுக்க முழுக்கப் பத்துப் பதினைந்து நாட்கள் தேர்தல் களத்திலேயே மூழ்கி இருந்தனர். இவர்களையன்றி உதவிய பல பெரியவர்களை இன்னும் என்னால் மறக்க முடியாது. அவருள் முக்கிய மானவர் திரு. காளப்பர் அவர்கள். அவர்தம் தேர்தல் உறவே பின் நான் காஞ்சியில் அச்சகத் தொழில் தொடங்க உதவியாக நின்றது. அவர் அதே தமிழ்க்கலை அச்சகத்தை 'முத்தமிழ் அச்சகம்' என்ற பெயரில் நடத்தி வந்தார். அவரை யன்றிக் காவாம்பயர் திரு. இராசகோபால் முதலியார், மாகறல் திருமாகறல் முதலியார், இளையனார் வேலூர் சின்னசாமி முதலியார், நடேச முதலியார், காவாந்தண்டலம் பச்சையப்ப முதலியார், வாடாதவூர் மலைக் கொழுந்து முதலியார், அவளூர் துரைசாமி நாயகர் போன்ற பல அன்பர்கள் என் தேர்தலில் வெற்றி பெற உதவினர். என் கிராமத்தில் எனக்கு உற்றவர் என்பவரே எனக்கு மாறுபட்டு நிற்க, அவருக்கு வாய்ப்பூச்சாகச் சில வெண்பொற்காசுகள் வழங்க நேர்ந்தது. இத்தேர்தல்களத்தில் நேராகவே பேரறிஞர் அண்ணா அவர்களும் சட்டமன்றத் தலைவராக இருந்த புலவர் கோவிந்தன் அவர்களும் எங்களுடன் கலந்து கொண்டு ஊர் ஊராக வந்து 'ஓட்டு' கேட்ட காட்சி இன்றும் என்முன் நிற்கின்றது. அக்காலத்தில் (1935) காங்கிரஸ் 'கட்சிக்கு எதிராக' வேறு நல்ல அரசியல் கட்சிகள் இல்லையாதலாலும், ஒரு தமிழாசிரியர் அரசியலில் போட்டி இடுவது அதுவே முதல் தடவை ஆனதாலும், பேரறிஞர் அண்ணா அவர்கள் மகிழ்வோடு கலந்து எனக்கு வழிகாட்டியாக உதவினர். இவ்வாறு எத்தனையோ வகையில் அனைவர்தம் உதவியையும் பெற்றுத் தேர்தலிலே வெற்றி பெற்றேன். காஞ்சிபுரத்தில் தாசில்தார் அலுவலகத்தில் தேர்தல் முடிவை அறிவித்ததும் முதல் முதல் என்னைப் பாராட்டிக் கைகுலுக்கிப் பெருமைப்படுத்தியவர் டாக்டர் சீனிவாசன் அவர்கள்தாம். ஆம்! அதனால் அவர் தம்

அரசியல் அறிவையும் தன்மையையும் நன்கு புலப்படுத்திக் கொண்டார். அந்தத் தேர்தலில் வெற்றி பெற்றதோடு நான் கற்றுக் கொண்ட பாடங்கள் பல.

அன்று நான் ஒரு திட்டமான முடிவினை மேற்கொண் டேன். 'வருங்காலத்தில் இனி எக்காரணம் கொண்டும் எந்த வகையான தேர்தலிலும் என் ஆயுளில் போட்டி இடமாட் டேன்' என்ற உறுதியே அது. அந்த உறுதியை இன்று வரையில் தளராது மேற்கொண்டு வருவதாகவே நான் எண்ணியுள்ளேன். பிற்காலத்தில் பல நிலையங்களில் பல வகையான இடங்களுக்குப் போட்டி இடவேண்டிய தேவை களும் இன்றியமையா நிலைகளும் உண்டான போதிலும் அவற்றையெல்லாம் தள்ளியே விலகி வருகிறேன். கல்வித் துறையிலும் கல்லூரிச் சார்பில் பல்கலைக் கழகப் பணிக்குச் செல்லும் நெறியிலும்கூட மிக எளிதாக—போட்டி இல்லா மலும்கூட வரக்கூடிய வாய்ப்புகள் எங்கள் கல்லூரியிலும் பிற இடங்களிலும் இருந்தும் நான் அவற்றில் தலையிடுவதே யில்லை. பல்கலைக் கழக அறிஞர்குழு (Academic Council) விற்குக் கல்லூரிச் சார்பில் போட்டி இடுமாறு அன்பர் பலர் வற்புறுத்தினர்; நான் மறுத்தேன். எனினும் அரசாங்கமே- கவர்னர் நியமனத்தால் அக்குழுவிற்கு மூன்றுமுறை (ஒன்பது ஆண்டுக்கு) என்னை நியமித்தது. அவர்களுக்கு நன்றி யுடையேன். உரிமை பெற்ற பின்பு முன்னைய ஆட்சியாளர் களும் இன்றைய ஆட்சியாளர்களும் சட்டசபைக்கு என்னைப் பலமுறை பல இடங்களுக்குப் போட்டி இடச் சொன்ன போதெல்லாம் இதே காரணம் காட்டியே விலகினேன். இதற்காக என் அன்பர்—உடனிருந்த ஆசிரியர் திரு. க. அன்பழகன் அவர்கள்கூட என்னை ஒருமுறை கடிந்து கொண்டார்கள். அவர் ஒருமுறை (1957 என எண்ணு கிறேன்) சட்டசபைக்கு நின்ற போது என்னையும் உத்திரன் மேரூர்த் தொகுதியில் நிற்கக் கேட்டார்கள். நான்

மறுத்துவிட்டேன். திரு. V. K. இராமசாமி முதலியார் போன்ற பெரியவர்களெல்லாம், பின் பல இடங்களுக்குச் சுலபமாக வரும் வகையில் என்னைப் போட்டி இடச் சொன்னார்கள். ஆயினும் அவர்கள் வேண்டுகோளையெல்லாம் மிகத் தாழ்மையோடு மறுத்துவிட்டேன் நான். இவ்வாறு இத்தேர்தல் விழா—வெற்றி - என் வாழ்நாளிலேயே ஒரு நிலைத்த கொள்கையை நான் மேற்கொள்ள உதவி செய்தது. அதைப் போற்றுவதன்றி வேறு என்செய வல்லேன்?

நான்கைந்து ஆண்டுகள் நான் மாவட்டக் கழக உறுப்பினனாக இருந்தேன். அதுபோது திருவாளர் முத்துரங்க முதலியார் அவர்களும் எங்களோடு அதே சபையில் உறுப்பினராக இருந்தார். ஆதம்பாக்கம் திரு. துரைசாமி ரெட்டியார் அவர்கள் தலைவராக இருந்தார். நாங்கள் எதிர்க்கட்சிக்காரர். எங்கள் தலைவர் திருவொற்றியூர் சண்முகம்பிள்ளை அவர்கள். எங்களால் முடிந்த அளவு நாங்கள் கூட்டங்களில் ஈடு கொடுத்தோம். திரு. துரைசாமி ரெட்டியார் நல்லவராதலின் எங்கள் வேண்டுகோள்களையும் ஏற்று அவ்வப்போது வேண்டிய உதவிகளை எங்களுக்கும் செய்து வந்தார். எனவே எங்கள் பணி செவ்வையாக நடைபெற்றது. எனினும் சில தலைவர்கள் எங்களை வேற்றுக்கண்ணோடே நோக்கிய நிலை வருந்தத் தக்கதாக இருந்தது.

நான் தேர்தலில் வெற்றி பெற்றதும் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி என் நினைவுக்கு வருகிறது. என்னொடு முதலில் கைகுலுக்கி என்னை வாழ்த்திய அன்பர் அத்துடன் நிற்கவில்லை. அன்றைய அரசாங்கத்தில் அவர் செல்வாக்கு மிக்கவராக இருந்தமையின் அரசாங்க வழியே தொல்லை கொடுக்க முயன்றார். நான் பணியாற்றிய பள்ளி அரசாங்க மானியம் பெறுகின்ற பள்ளி ஆனமையின் நான் அதில் பணி செய்துகொண்டே, மாவட்டக்கழகத்தில் உறுப்பினராக இருக்க முடியாதென்றும், இரண்டில் ஒன்றை விட்டுவிட

வேண்டுமென்றும் ஓலை அனுப்ப ஏற்பாடு செய்தார். ஆயினும் என் தலைமை ஆசிரியர் அதற்கெல்லாம் சளைக்க வில்லை. பல ஆண்டுகளாகத் தலைமை ஆசிரியராக இருந்து எல்லா நுணுக்கங்களையும் அவர் அறிந்திருந்தவராதலின் அவர்கள் அதுபற்றிக் கலங்கவில்லை. பதிலுக்கு இரண்டை யும் வைத்துக் கொண்டிருந்தால் என்ன நடக்கும் என்று பதில் ஓலை விடுத்தார், ஆனால் அதற்கு நேரடியாகப் பதில் எழுத முடியாத அரசாங்கம், கல்வித்துறையிலுள்ள ஒரு மேலதிகாரியை அனுப்பி நான் தொடர்ந்து இரண்டையும் வைத்திருந்தால் அரசாங்கம் பள்ளிக்குத் தரும் மானியத் தொகை நிறுத்தப்படும் என்று சொல்லவைத்தது. தலைமை ஆசிரியர் விதிகளை யெல்லாம் நன்கு அறிந்தவராதலின் சற்றும் தயங்காது 'அவ்வாறு சட்டம் இருப்பின் செய்து கொள்ளட்டுமே' என்று திட்டமாகச் சொல்லிவிட்டார். ஆனால் அவற்குமேல் அவர்களால் ஒன்றும் செய்ய இயல வில்லை. அத்துடன் அவர்கள் அந்தப் 'பணி'யை விட்டு விட்டார்கள். நானும் வெளிப்படையாகவே அரசியலில் கலந்து கொண்டு தொண்டாற்றினேன். பின் நடை பெற்ற பல இந்தி எதிர்ப்பு மாநாடுகளில் பங்கு கொண்டேன்; அதே வேளையில் பள்ளிப் பணிக்கு யாதொரு இடையூறுமில்லாமல் பார்த்துக் கொண்டேன். இவ்வாறு பள்ளிப்பணி அமைதி யாகச் சென்றது.

# 7. தமிழ்க் கலையின் தோற்றம்

அரசியலும் மொழியியலும் வாழ்வியலில் சிக்கிய பிறகு ஓய்வுகொள்ள இயலுமா? அவற்றுடன் சமய இயலும் என் வாழ்வில் இடம் பெற்றது. சைவசித்தாந்த மகாசபைக் கூட் டங்களுக்குத் தவறாது சென்று வந்தேன். அத்துடன்

வெளியூர் திருக்கோயில் விழாக்களில் நடைபெறும் சொற் பொழிவுகளிலும் பங்கு கொண்டேன். ஒருமுறை திருச்செந் தூர்ச் சென்று இரண்டு மூன்று சொற்பொழிவுகள் ஆற்றி வந்தேன். அப்படியே கோவை முதலிய இடங்களுக்கும் சமய மாநாடுகளுக்குச் சென்று வந்தேன். இவற்றுக்கிடையில் பள்ளிப்பணிக்கு மட்டும் நான் சோர்ந்ததே இல்லை. பள்ளியில் விடுமுறை எடுத்துக் கொண்டு வேறு பணிக்குச் செல்லவில்லை. மாவட்டக்கழகக் கூட்டங்கள் பெரும்பாலும் பள்ளி நாட்களில் வரும். அதற்கென மட்டும் திங்களுக்கு ஒருமுறை மாலை வேளைகளில் நான் விடுமுறை பெற்றுச் செல்வது வழக்கம்.

தேர்தலுக்குப் பிறகு பல நண்பர்கள் எனக்கு அறிமுக மாயினர். அவருள் ஒருவர் காளப்பர். அவர் காஞ்சிபுரம் 'பேருந்து' நிலையத்தில் கட்டணம் வசூலிக்கும் பணியில் ஊதியம் பெற்றுக் கொண்டிருந்தார். அவருடைய தமிழ்ப் பற்றும் தேவாரப் பாடல்களை இனிமையாகப்பாடும் திறனும் என் உள்ளத்தில் பதிந்தன. அவரை உயர்த்த வேண்டுமெனத் திட்டமிட்டேன். அப்படியே என்னிடம் பயின்ற இராச கோபால் என்பவர் படித்தபின் வேலையற்று இருந்தார். (அவர் இன்று இல்லை, இளமையிலேயே மறைந்து விட் டார்.) எனவே நாங்கள் மூவரும் சேர்ந்து அச்சகம் ஒன்றினை நிறுவலாம் என நினைத்தோம். அதற்கு முன்னரே, தேர்தல் முடிந்த உடனேயே நான் என் சொந்தப் பொறுப்பில் என் மைத்துனர் உக்கல் வடிவேலு அவர்களைப் பதிப்பாளராக்கி நான் ஆசிரியராக இருந்துகொண்டு, 'தமிழ்க் கலை' என்ற திங்கள் இதழைத் தொடங்கி நடத்தி வந்தேன். அக்காலத் தில் அதிக இதழ்கள் இல்லாமையும் இந்தி எதிர்ப்பு இயக்கத் தின் வலுவும் சேர்ந்து என் இதழுக்கு ஏற்றம் தந்தன. இத் தமிழ்க்கலை இதழினைப் பற்றிப் பேரறிஞர் அண்ணா அவர்கள், 'நாட்டில் நம் கொள்கையைப் பரப்ப நல்ல

இதழ்கள் இல்லை' என்று நைந்து கடிதம் எழுதிய கலைஞர் T. K. சண்முகம் அவர்களுக்குப் பதில் எழுதிய வகையில் குறிப் பிட்டார். (அது பற்றி T. K. சண்முகம் அவர்தம் மணி விழா மலரைப் பார்த்த பிறகே நான் அறிந்து கொண்டேன்.)

நான்கைந்து திங்கள் நடத்திய பிறகுதான் பிற அச்சகங் களில் அச்சிடுவதால் உண்டான சில தவிர்க்க முடியாத தொல்லைகள் புலனாயின. எனவே நமக்கெனவே ஓர் அச்சகம் நிறுவ நினைத்தேன். அதே வேளையில்தான் காளப்பரும் இராசகோபாலரும் நினைவில் வந்தனர். அவர்களோடு என் மைத்துனரையும் இணைத்துக்கொண்டேன். வேறு ஒரு 'காங்கிரஸ் பிரமுகர்' தாமே வலிய வந்து அச்சகத்தில் பங்கு பெறுவதாகக் கேட்டார். மறுத்தால் தொல்லை விளையுமே என்று அஞ்சிச் சேர்த்துக்கொண்டோம். அவரால் சில சமயங்களில் தொல்லை அடைவோம். நல்லவேளை 'தமிழ்க் கலை'யைத் தனியாகவே வைத்திருந்தமையால், அவரால் அதைப்பற்றி ஒன்றும் கேட்க முடியவில்லை. சில இதழ் களில் இந்தி எதிர்ப்பின் வலு நன்கு காட்டப்பெற்றிருக்கும். அது கண்டு அவர் அலறுவார். அதற்கு நான் என் செயக் கூடும்? சில ஆண்டுகள் கழியுமுன்பே அவரே விலகிக் கொண்டார். எங்கள் எல்லாரைக் காட்டிலும் அவர் சற்றே செல்வத்தில் உயர்ந்தவராக இருந்தமையால் நாங்களும் தூர விலகுவதே நல்லதென்ற முடிவில் அவரை அனுப்பி வைத் தோம். அதனாலேயே இன்றளவும் அவர் எங்கள் நண்ப ராகவே இருந்து வருகிறார்.

தமிழ்க்கலை நாட்டிற்கும் மொழிக்கும் நல்ல சேவை செய்தது. அப்படியே 'தமிழ்க்கலை அச்சகமும்' நன்கு பொது மக்களுக்கு உதவிற்று. அதைத் தொடங்கும்போது குமரன் அச்சக உரிமையாளர் திரு. தவசி. குப்புசாமி முதலியார் அவர் களை அணுகினேன். அவர்கள் அதைத் தொடங்குவதற்கு வேண்டிய எல்லாத்துறைகளையும் விளக்கி, வேண்டிய உதவி

யையும் செய்து, அவரிடம் முன்னரே பணிபுரிந்திருந்த நல்ல சிலரை எனக்கு உதவுமாறும் அனுப்பி வைத்ததோடு, தொடங்கிய வேளையில் உடன்இருந்து வாழ்த்தியருளினார். நல்லவர் வாழ்த்த அச்சகம் நன்கு வளர்ந்து வந்தது. பொருளாதார முட்டுப்பாடு தொடர்ந்து வந்திருந்த போதிலும் அச்சகம் நன்கு வளர்ந்தே வந்தது. திங்கள் இதழும் சிறக்க ஓங்கிற்று. காஞ்சியில் இருந்த பல அன்பர்கள் விளம்பரம் தந்தும் உதவினர். நான் கடைசியில் சென்னைப் பச்சையப்பரில் பணி ஏற்க வரும் வரையில் அச்சகம் கூட்டா கவே இயங்க, நான் வரும்போது அதைத் திரு. காளப்பருக்கு உரிமையாக்கி, பெயரை மட்டும் நான் ஏற்று வந்தேன். பிறகு சென்னையிலேயே அதே பெயருடன் 'தமிழ்க்கலை' இதழ் நான்கு ஆண்டுகள் நடைபெற்றது. இடையில் உண்டான போரின் காரணமாகக் காஞ்சியில் நடைபெற்று வந்த இதழ் நான்காண்டுகள் கழித்து நிறுத்தப்பெற்றது. பிறகு அச்சகம் மட்டும் தொழிற்பட்டு வந்தது. போரின் காரணமாகத் தாள் விலை ஏறிய காலத்தில் ஒருசிறு தொகையை மூலதன மாக வைத்து, தாள்களை வாங்கி வைத்திருந்தாலும் நாங்கள் பெருஞ்செல்வர்களாயிருப்போம். ஆயினும் எங்களில் ஒருவரும் பெருஞ்செல்வர் அல்லராகிய காரணமும் அத்தகைய வாணிப நுணுக்கம் அறியா நிலையும் எங்கள் வாழ்வை அன்று உயர விடவில்லை. எப்படியோ அச்சகம் நன்கு நடை பெற்று வந்தது.

அச்சகப்பணி செம்மையாக நடைபெற்ற காலத்தில் நானும் காளப்பரும் நன்கு பழகினோம். இருவரும் உடன் பிறந்தவர்களோ எனப் பலரும் வியந்தனர்—சிலர் எண்ணினர். எங்கள் இருவர் குடும்பமும் ஒன்றி வாழ்ந்ததெனலாம். இருவர் வீட்டு உறவினர் பலரும் இருவரையும் ஒத்து நோக்கியே போற்றினர். எங்கள் வீட்டுச் சிறப்பு அவரின்றி நடைபெறாது—அவர் வீட்டுச் சிறப்பும் அப்படியே. பிற்

காலத்தில் நான் சென்னை வந்த பிறகும் அதே நிலை நீடித்தது. என் பெண்கள் மண இதழில் அவர் பெயர் வரவேற்பாளர் வரியில் இடம் பெற்றிருந்தமையை அவனவரும் அறிவர். அவர் திருமகனார் திருமணத்துக்குச் சீகாழிவரையில் சென்று வாழ்த்தியும் வந்தேன். ஆயினும் ஏதோ காரணத்தால் என் மகன் திருமணத்துக்கு அவர் வராது நின்றார். பிறகு எங்கள் நட்பு எங்கேனும் கண்டால் பேசுவது என்ற அளவில் நின்றது.

அச்சகத்தில் பணியாற்றிய காலத்தில் நடந்த சில நிகழ்ச்சிகள் என்முன் நிழலிடுகின்றன. என் மைத்துனியின் வாழ்வில் ஒரு நீக்கமுடியாத களங்கம் ஏற்பட்டது. என் மாமனாரும் மற்றவர்களும் அதே சோக நிலையில் செய்வதறியாது மூழ்கினர். அந்த வட்டாரத்தில் அவர்கள் குடும்பம் சிறக்க வாழ்ந்த குடும்பம். அதில் சிறு குறை கண்டாலும் பெரிதாகுமே என வருந்தினர். அந்த வேளையில் நான் என் நண்பர்கள் துணைகொண்டு அந்தக் களங்கத்தை நீக்கப் பாடுபட்டு வெற்றியும் கண்டேன். அவரை எனக்கு முன்னமே உறவு வழியில் அறிமுகமான ஒருவருக்கு—அவரே விரும்பிக் கேட்க—மணம் முடித்து வைத்தேன். அவர்கள் இன்றும் இனிமையாக வாழ்கிறார்கள். அந்த முயற்சியில் நானும் அன்பர் காளப்பரும் அடைந்த தொல்லைகள் பலப்பல. சிலவிடங்களில் பெரும் அச்சமும் கொள்ளவேண்டி இருந்தது. எப்படியோ எங்கள் முயற்சி வெற்றிபெற்றது. என் அன்னையர் இருவரும் அதுபோது காஞ்சியிலேயே இருந்தனர் அவர்கள் என் செயல்கண்டு மகிழ்ந்தனர்—போற்றினர். என் மாமனார் வீட்டார் என் தேர்தல் காலத்தில் செய்த அத்துணைப் பேருதவிகளுக்கும் மாற்றாக இந்த உதவி அமைந்துவிட்டதென்று அவர்கள் கூறினர். ஆம்! யாருக்கும் அவர்கள் உதவி செய்த கடனை வைத்துக்கொள்ளக் கூடாது என்பதும் அது எப்படியும் எவ்வகையும் திருப்பித்தரப் பெற

வேண்டும் என்பதும் அன்னையாருடைய அசைக்க முடியாத நம்பிக்கை—அப்படியே வாழ்ந்தும் வந்தனர்.

மற்றொரு நிகழ்ச்சியும் நிழலிடுகின்றது. என் நண்பர்கள்—காளப்பர் உட்பட என் மைத்துனரை இளையனார் வேலூர் கோயிலுக்கு அறக் காப்பாளராக்க வேண்டுமென முயன்றனர்—முயன்று வெற்றியும் பெற்றனர். முதலில் அது பற்றி என்னிடம் சொன்னால் நான் ஒருவேளை மறுத்து விடுவேனோ என்ற அச்சத்தால் யாரும் என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் எல்லாம் முடிந்து அவரும் பதவி ஏற்ற பிறகே காளப்பர் என்னிடம் கூறினார்—நான் சீறினேன். என் மைத்துனர் பதவி ஏற்கக் கூடாது என்பதல்ல என் வாதம். பொதுவாகச் சிவன்கோயில் அறக்காப்பாளர் வேலைக்கே நம்மவர்—நல்லவர் யாவரும் செல்லக் கூடாது என்பது என் கொள்கை. நான் காஞ்சியில் வாழ்ந்திருந்த போது, அறநிலையப் பொறுப்பாளராகப் பணியாற்றிய திரு. C. M இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் என்னை வற்புறுத்தி ஏகாம்பரநாதர்கோயில் அறக்காப்பாளராக்க முயன்றார். என் தீவிர எதிர்ப்பினாலேயே அது நின்றது. அப்படியே நான் சென்னை வந்த பிறகும் அமைந்தகரை ஏகாம்பரநாதர் கோயிலுக்குத் திரு. சண்முக முதலியாரின் முயற்சியால் என்னை அறக்காப்பாளராக நியமித்து ஆணையும் வந்தது. வந்த மறுநாளே நான் அதை மறுத்து எழுதி விட்டேன். எங்களூர்க் கோயிலைச் செம்மைப்படுத்த வேண்டுமென ஒவ்வொரு இந்து சமய அறநிலைய ஆணையாளரை வேண்டும் போதும், அவர்கள் நான் ஏன் அறக் காப்பாளராக இருக்கக்கூடாது என்றே கேட்பார். நான் அதற்குத்தக்க பதில் அளித்துத் தப்பித்துக்கொள்வேன். இவ்வாறு என்றும் சிவன்கோயில் அறக்காப்பாளர் பதவி வேண்டாம் என்பது என் எண்ணம். இந்த எண்ணத்தை ஊட்டியவர் என் அன்னையும் பாட்டனாரும் ஆவார். நம்

கோயிலுக்குக் கொடுக்கப் பிறந்தோமே ஒழிய எடுக்கப் பிறக்க வில்லை என்பது அவர்கள் வாதம். (கோயில் பொருளைப் பாதுகாப்பது பற்றி என் பாட்டனார் கொண்ட கொள்கை யினை முன்னமே எழுதியுள்ளேன்) அதுமட்டுமின்றி அன்று தொட்டு இன்றுவரை எங்களூர்க் கோயில் அறக்காப்பாளராக இருந்தவர்கள் நிலையில் தாழ்ந்தார்களே அன்றி உயரவும் இல்லை—முன் உற்ற வாழ்வையும் பெறவில்லை. இவற்றை யெல்லாம் விளக்கியே என் மைத்துனர் ஏற்ற பதவியை உடன் 'ராஜினாமா' செய்யச் சொன்னேன். ஆனால் அவரோ அவர் தந்தையோ மற்றவரோ அதைப் பொருட்படுத்த வில்லை. அதுபோது எனக்கு மங்கையர்க்கரசியும் மெய் கண்டானும் பிள்ளைகள். மெய்கண்டான் மூன்று திங்கட் குழந்தை. எனினும் நான் அவர்கள் தொடர்பையே விட்டு விட்டேன். என் மனைவி சந்திராவும் என் சொல்லை மாறாது தாய் வீடு செல்லவில்லை. நாங்கள் தனியாக இருந்து பெற்ற அல்லல் பல. எனினும் கொள்கை அளவில் நிலைத்தே நின்றேன். இரண்டொரு திங்களில் என் மாமனார் மற்ற வருடன் வந்து சமாதானம் செய்து அழைத்துச் சென்றார். எனினும் அவர் கோயில் பணியை விடவில்லை. நானும் அதற்குமுன் பலமுறை அக்கோயிலுக்குச் சென்றேன் என்றாலும் அன்று தொட்டு இன்றுவரை அக்கோயிலுக்குச் செல்லவில்லை. என் மைத்துனர் வாழ்வும் அதனால் ஓரளவு சரிந்ததே யன்றி நிமிர்ந்தது என்று சொல்ல முடியாது. என்றாலும் அன்று நான் சொல்லிய அனைத்தும் அவர்கட்கு வேம்பாகக் கசந்தது. காளப்பர் போன்றாரும் என்னொடு மாறுபட அதுவும் காரணமாயது. இவ்வாறு பல நிகழ்ச்சி களுக்கு இடையில் காஞ்சியில் எனது வாழ்க்கை மெள்ளக் கழிந்து கொண்டு வந்தது. இதற்கிடையில் முன்னவள் வந்து சென்ற நாடகத்தையும் இங்கே காட்ட வேண்டும் என எண்ணுகிறேன்.

காஞ்சியிலே எங்கள் வாழ்க்கை அமைதியாகச் சென்று கொண்டிருந்தது. ஓர் முறை என் அன்னையார் எங்களைக் காணவந்து எங்களோடு தங்கி இருந்தார்கள். எதிர்பாராதபடி அவர்கட்கு உடல் நோய் உண்டாயிற்று. நோயின் வெம்மை மிக, ஓர் எல்லையில் அவர்கள் உயிர் பிரியும் நிலையும் வந்துற்றது. பிறகு சற்றே தெளிவும் பெற்றனர். அந்த வேளையில் அவர்கள் பேசினார்கள். எப்படியும் தன் முதல் மருமகளைக் காணவேண்டும் எனவும் தனது கடைசி விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுவது எனது கடமை எனவும் கூறினார்கள். நான் செய்வதறியாது திகைத்தேன். எத்தனையோ ஆண்டுகள் கழித்து, மறுபடி எப்படி அவர்கள் வீட்டிற்குச் சென்று அழைப்பது என எண்ணமிட்டேன். இதிலெல்லாம் காளப்பர் முன்னின்று செயலாற்றவல்லவர். பிரிந்தாரைக் கூட்டிவைப்பதிலும் மாற்றாரை மாற்றுவதிலும் வல்லவர். அவர் உடனே என்னை அழைத்துக்கொண்டு அங்கம்பாக்கம் புறப்பட்டார். நாங்கள் இருவரும் அவர்கள் வீட்டில் போய் மூன்று மணிநேரம் வாதாடினோம். அவர்கள் என்னையும் என் குடும்பத்தாரையும் வைதனை இன்று நினைத்தாலும் குலைநடுங்குகிறது. அவர்களை வணங்கி வேண்டினேன். என் அன்னையார் இறுதி ஆசையை நிறைவேற்றிவைக்க வேண்டுமென முறையிட்டேன். எத்தனையோ கட்டுப்பாடுகள் விதித்து என்னுடன் என் மனைவி என்பாரை அனுப்பிவைத்தனர். காஞ்சிபுரம் வந்து சேர்ந்து, என் அன்னைமுன் நிறுத்தினேன். அன்னையார் கண்ணீர் வடித்தார்கள், பிறகு இரு மருமக்களையும் ஒரு சேரக் கண்ட மகிழ்ச்சியோ என்னமோ அவர்கள் நன்கு தெளிவு பெற்றார்கள். பிறகு இரண்டு ஆண்டுகள் வாழ்ந்து, எனக்கு மேலும் வழிகாட்டியாக இருந்த பிறகே அவர்கள் காஞ்சியிலேயே மறைந்தார்கள்.

வந்தவளை இருந்தவள் நன்கு வரவேற்றாள். இருவருக்கும் எங்கே பூசல் கிளம்புமோ என அஞ்சிய எனக்கு அவர்கள் பழகிய பழக்கம் மன ஆறுதலாக இருந்தது. எனினும் அது என்றும் அப்படியே இருக்குமோ என்று எண்ண, அச்சந்தான் உண்டாயிற்று. பின்னவள் பலவகையால் விட்டுக் கொடுத்தமையினாலேயே அவர்கள் உறவும் அவர்கள் இருவரிடையில் என் உறவும் இனிமையாகக் கழிந்தது. நானும் எல்லாம் இனிமேல் சரியாகிவிடும் என்ற எண்ணத்தில் இருவரோடும் யாதொரு வேறுபாடும் இல்லாமல் பழகினேன். அவர்கள் இருவரும் சிலவேளைகளில் எனக்குச் சோதனை காட்டுவார்கள். பெரும்பாலும் நான் அவற்றில் வெற்றி பெறுவதுண்டு. ஒன்றே தற்போது நினைவில் உள்ளது. ஒரு பொருளை......என்ன வென்பது நினைவில் இல்லை—அவர்களுக்கு எட்டாத உயரிடத்தில் வைத்துவிட்டு இருவரும் என்னை அழைத்தனர். ஒருவர் அதை எடுத்துத் தம் கையில் தரவேண்டும் என்றனர். மற்றவர் அவ்வாறு செய்யக்கூடாது என்றனர். எதை மேற்கொள்வது என்று தடுமாறினேன். கடையில் அந்தப் பொருளை அங்கிருந்து எடுத்துச் சற்றே தாழ்வான இடத்தில் வைத்து விலகிவிட்டேன். இருவர் சொன்னதையும் செய்தும் விட்டேன்—செய்யவும் இல்லை என்று இருவரும் திருப்தியுற்றதாக என்னிடம் கூறி நான் சோதனையில் வெற்றி பெற்றதாகப் பாராட்டினர். ஆம்! அந்த நல்ல மகிழ்ச்சிக்கிடையிலே இருவரும் கருவுற்றனர். அது என் அன்னையர் இருவருக்கும் பெருமகிழ்ச்சி தந்தது. எட்டாவது மாதம் செயயும் சிறப்பு இருவருக்கும் நடைபெற்றது. அடுத்தடுத்த நாட்களில் எங்கள் ஊரில் என் இல்லத்தில் தொடர்ந்து நடைபெற்ற அந்த விழாக்களில் ஒருவர் மாற்றி ஒருவர் எல்லாப் பொறுப்பினையும் ஏற்றுச் சிறக்கச் செய்தனர் இருவரும். வந்தவர்கள் அனைவரும் மகிழ்ந்தனர். ஒருநாள் மாலை நடைபெற்ற சொற்பொழிவில்

புரிசை சு. முருகேச முதலியார் அவர்கள் அவர்களைப் பாராட்டி அப்படியே என்றும் இருக்க வேண்டும் என வாழ்த்தினர். ஆனால் அந்த நிலை தொடர்ந்து இல்லை.

இருவரும் மகப்பேற்றிற்காக அவரவர் தாய் வீடு சென்றனர். முன்னவள் பிறகு திரும்பவே இல்லை. பிள்ளை பிறந்ததையும் கூட அவர்கள் எனக்குச் சொல்லி அனுப்பவில்லை. கருவளர் சிறப்பு நடைபெற்றபடியே, மக்களும் இன்று ஒருவர் நாளை ஒருவராகப் பிறந்தார். பின்னவளுக்கு பெண்மகவு பிறந்த செய்தியைச் சொல்லி அனுப்ப என் முதல் மகளைக் காண விரைந்து உக்கலுக்குச் சென்றேன். இளங் குழந்தையைக் கண்டேன். என் பெரிய அன்னையார் அங்கேயே இருந்தனர். நான் அங்கே சென்ற அதே நாளில் முதல் குழந்தை பிறந்த மறுநாளில் முன்னவளுக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் அதை அவர்கள் வீட்டார் சொல்லி அனுப்பவே இல்லை. உடனே ஊரில் இருந்த என் அன்னையார் எனக்கு ஆள் அனுப்பினர். அவர்கள் எவ்வளவு வெறுத்தும் தாம் சென்று பேரனைக் கண்டுவந்தனர். அனுப்பிய ஆள் வந்து செய்தியைச் சொன்னபோது நான் எண்ணெய்த் தேய்த்துக் கொண்டிருந்தேன். அந்த வேளையில் நல்ல செய்தி கேட்டால் பயன் விளைவதில்லை என்று எப்படியோ ஓர் எண்ணம் என் உளத்தில் முளைத்தது. எனவே நான் அஞ்சினேன். (அப்படியே இரண்டு ஆண்டுகளுக்குள் அவன் மறைந்தான்). இருவரும் முன்னரே தத்தம் குழந்தைகளுக்கு என்ன பெயர் வைக்கவேண்டும் என்று முடிவு செய்திருந்ததை நான் அறிவேன். அவர்கள் விருப்பில் நான் குறுக்கிடவில்லை. மகள் மங்கையர்க்கரசி எனவும் மகன் மயில்வாகனன் எனவும் பெயர் பெற்றனர். மங்கையர்க்கரசியும் தாயும் சில திங்கள் கழித்துக் காஞ்சிபுரம் வந்து குடும்பத்தில் ஒன்றிவிட்டனர். ஆனால் மயில்வாகனனோ அவன் தாயாரோ திரும்பி வீட்டுக்கு வரவே இல்லை.

ஊரில் இருந்த என் அன்னையார் மட்டும் பேரனைக் காணவேண்டும் என்ற அவாவினால் யாரிடமாவது சொல்லி அனுப்பி எடுத்துவரச் சொல்லிக் கண்டு மகிழ்வர். ஆனால் அதுவும் நெடுநாள் நிலைக்கவில்லை. சில திங்கள் கழித்து, பிள்ளையைக் கொடுத்தனுப்ப முடியாது என மறுத்து விட்டனர். என் அன்னையாரும் அக்கொடுமையைத் தாங்க மாட்டாது எங்களோடு காஞ்சிபுரம் வந்து சேர்ந்து விட்டார்கள்.

அடுத்த ஆண்டிலே அன்னையர் இருவரையும் மைந்தனையும் ஒரு சேரப் பிரிய வேண்டிய சோகநிலை உருவாயிற்று. இறைவன் ஏனோ எனக்கு உறுதுணையாயிருந்த அன்னையர் இருவரையும் ஒருசேர எடுத்துக் கொண்டார். அவர்கள் இருவரும் இருந்த காரணத்தால் நான் குடும்பப் பொறுப்பையோ வேறு விளை நிலங்கள் கொடுக்கல் வாங்கல் ஆகிய பிற பொறுப்புக்களையோ எண்ணிக்கூடப் பார்ப்பதில்லை. இறைவன் நானே முயன்று என் காலிலேயே நிற்க வேண்டிய பொறுப்பை உணர்த்தத் தானோ அவ்வாறு செய்தான் என எண்ணவேண்டியிருந்தது. என் அன்னையாருக்குக் காலில் கட்டிகண்டது. ஊரில் வைத்தியம் செய்து பயனடையாமல் போகவே, காஞ்சிபுரம் வந்து வீட்டிலிருந்து கொண்டே நல்ல மருத்துவமும் அறுவை சிகிச்சையும் செய்தோம். எனினும் ஒன்றும் குணமாக வில்லை. தை மாதத்தில் ஓர் வெள்ளிக்கிழமையில் அவர்கள் மறைந்தார்கள். அவர்கள் மறையுமுன் அவர்கள் கூறிய சொல் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. தூரத்தே நின்றிருந்த என்னை அருகழைத்து 'நான் வருகிறேன், தேங்காய் உடை; கற்பூரம் கொளுத்து' என்றனர். அவர்கள் சொல்லியதைச் செய்து முடிப்பதற்குள் அவர்கள் தலை சாய்ந்தது. மலை என வளர்ந்த என் வாழ்வும் மங்கியது; வாடினேன். பெரிய அன்னையாரும் பிறரும் தேற்றினர். ஏனோ தெளிவு பிறக்கவில்லை. பிறகு அந்த ஆண்டு

முழுதும் நான் பள்ளிக்கூடம் செல்லவில்லை. உலகமே திரண்டு வந்துவாடிய அந்த நாளிலும் முன்னவளும் பேரனாகிய மயில்வாகனனும் அருகில் கூட வரவில்லை.

அன்னையாரின் இறுதிச் சடங்குகள் விழாவென நடைபெற்றன. திரு.வி.க; தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், C.M. இராமச்சந்திரன் செட்டியார், ரா.பி. சேதுப்பிள்ளை, சுந்தர ஓதுவா மூர்த்திகள், சச்சிதானந்தம் பிள்ளை, புரிசையார் இன்னும் பல பெரியவர்கள் அந்த இறுதிநாள் சடங்கில் பங்குகொண்டு அதை ஒரு விழாவாக எங்களூரில் கொண்டாடினர். எனது ஆற்ற முடியாத துன்பத்தை அத்தகைய பெரியவர்தம் வருகையாலும் வாழ்த்தாலும் ஓரளவு பொறுத்துக்கொண்டேன். என் பள்ளியின் தலைமை ஆசிரியர் என் துன்பத்தைக் கண்டு நான் அந்த ஆண்டு முழுவதும் பள்ளிக்கு வரவேண்டாம் என்று சம்பளத்துடன் விடுமுறை அளித்தார். அன்னையின் மறைவுக்குப் பின் நான் எங்கும் அதிகமாக வெளியில் செல்லுவதில்லை. எந்த விழாவிலும் பங்குகொள்வதில்லை. வீட்டிலேயே முடங்கிக் கிடப்பேன். அடிக்கடி என் பெரிய அன்னையார் கூறிய ஆறுதல் மொழிகள் ஓரளவு தேற்றும்.

இதற்கிடையில் ஊரில் மகன் வாழ்வு மங்கி வருவதை அறிந்தேன். அவர்கள் வறுமையுற்ற காரணத்தால் சரியான உணவைத் தாராததோடு தக்க வைத்தியமும் செய்யவில்லை என அறிந்தேன். ஒருமுறை நான் பார்க்க அவர்கள் வீட்டிற்கு வருவதாகச் சொல்லி அனுப்பினேன். அவர்கள் வரக் கூடாது எனத் தடுத்தனர். சென்றால் வேறு கொடுமைகள் நிகழுமென அஞ்சித் திரும்பினேன், மற்றொரு முறை நான் தெரு வழியாகச் சென்றபோது அவன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தான். நான் எங்கே கண்டு கொண்டுவந்து விடுவேனோ என்று கருதி அவன் பாட்டனார் என்னைத் தூரத்தே கண்டதும் எடுத்து உள்ளே ஓடிவிட்டார். இப்படி என் மகனை நானே பார்க்க முடியா நிலையில்

இருந்தேன். கடைசியாகக் கண்ட இடம்? அவனைப் பிணமாகத்தான் என்னால் காண முடிந்தது.

மைந்தன் பிறந்ததை எப்படிச்சொல்லி அனுப்ப வில்லையோ அப்படியே இறந்ததையும் அவர்கள் சொல்லி அனுப்பவில்லை. எனினும் ஊரில் எங்கள் நிலங்களைப் பார்த் திருந்த பெரியவர் உடனே ஆளை அனுப்பினார். நானும் பெரிய அன்னையாரும் சென்று, அவனைப் பொசுக்கி விட்டுத் திரும்பினோம். அவர்கள் வீட்டிற்குச் சென்று பிள்ளையின் பிணத்தைக் கண்டு கலங்கிய போதும் அவர்கள் வாய் திறக்க வில்லை. நாங்கள் திரும்பக் காஞ்சிபுரம் வந்துவிட்டோம்.

காஞ்சிபுரம் வந்த ஒரு திங்களில் என் பெரிய அன்னை யாருக்கும் கட்டி கண்டது. அவர்களும் அதிலிருந்து தப்ப முடியவில்லை. அவர்கள் உயிர் பிரியச் சிறிது நேரமே இருந்தது. என்னை அருகழைத்து 'நான் சிறிது பொழுதில் மறைந்துவிடுவேன். நீ மட்டும் அழுதுகொண்டிருக்காதே. இனி உன்னைத் தேற்றுவார் யாரும் இல்லை. நீயாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு முன்னுக்கு வர வேண்டும்' என்றார்கள். சிறிது நேரத்தில் அவர்கள் உயிர் பிரிந்தது. அவர்கட்கும் காஞ்சியிலேயே முறைப்படி செய்ய வேண்டிய சடங்குகளை யெல்லாம் செய்துமுடித்தேன். என் துன்ப மிகுதியைக் கண்ட என் தலைமை ஆசிரியர் அந்த ஆண்டின் பிற்பகுதியையும் சம்பளத்தோடு விடுமுறையாக அளித்தார். இந்தக் கொடுமைகளை யெல்லாம் தாங்கிக் கொண்டு காஞ்சியில் கடைசி சில ஆண்டுகளை நடைப் பிணமாகக் கழித்தேன் என்னலாம். இதற்கிடையில் அச்சகப் பணியும் காளப்பர் போன்ற நல்லவர் உறவும் உக்கலில் வாழ்ந்த பெரியவர்தம் ஆறுதலும் என்னை மனிதனாக வாழ வைத்தன. காஞ்சி வாழ்க்கையில் நடைபெற்ற இன்னும் சில நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து காணலாம் என எண்ணி இப்பகுதியை இம்மட்டோடு முடிக்கின்றேன்.

# 8. போரும் வாழ்வும்

உலகம் என்றும் அமைதியில் வாழ்ந்ததில்லை—இனி வாழவும் போவதில்லை என அறிகிறோம். மனிதன் தோன்றிய நாள்தொட்டு—ஏன்?—உயிரினம் தோன்றிய நாள் தொட்டு ஒன்றை ஒன்று விழுங்கப் பார்க்கும் போராட்டம் நடை பெற்றுக் கொண்டேதான் இருக்கின்றது. ஆயினும் வென்றவர் யார்? தோற்றவர் யார்? விடை காண முடியாது. ஏதோ மேல் போக்காக வெற்றி தோல்வி என்று கூறப் பெறினும் உலக சமுதாயக் கண்ணோடு பார்ப்பின் அவை வெற்றியுமன்று தோல்வியுமன்று என்பது விளங்கும். இந்த உண்மையை உணர்ந்து கொண்டேதான் மனிதன் ஒரு தலை முறையிலேயே பல போர்களை உண்டாக்கிச் செத்து மடி கிறான். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் உண்டான உலகப் போரின் ஓய்வு ஓர் இடைக்கால ஓய்வாகவே அமைந்து விட்டது. 1939ஆம் ஆண்டு மறுபடியும் உலகப்போர் மூண்டு விட்டது. அப்போது தொடங்கப்பெற்ற தமிழ்க் கலையில் நான் அப்போர் மூள வேண்டிய சூழ்நிலை, காலம், இயற்கைநிலை, நினைத்தால் தடுத்திருக்கக்கூடிய வாய்ப்பு எல்லாவற்றையும் விளக்கி எழுதி இருந்தேன்.

அப்படியே நம்நாட்டில் பிற்காலத்தில் நடைபெற்ற எல்லைப் போராட்டத்தில் (தமிழ்நாடு—ஆந்திரம் பிரிந்த காலை) மேற்கொள்ள வேண்டிய முறை—எல்லை—காரணம் ஆகியவற்றை ஆராய்ந்து புள்ளி விவரங்களோடு வெளி யிட்டேன். ஒருசில ஆண்டுகள் கழித்துத் தமிழக ஆந்திர எல்லைகள் இறுதியாக வரையறை செய்யப்பெற்றபோதும், நான் சில ஆண்டுகளுக்குமுன் குறிப்பிட்ட அதே எல்லையில் தான் அவை அமைந்தன. அறிந்த அன்பர்கள் பலர் பாராட்டினர். அப்படியே போர் பற்றி அக்காலத்தில் நான் எழுதிய கட்டுரையைப் படித்த பல அறிஞர்கள் அதைப் பாராட்டிக் கடிதம் எழுதினர். சென்னையில் வெளிவந்த

ஒரு தினசரியில் அதுபற்றி தெளிந்த விமரிசனம் தீட்டி யிருக்கக்கண்டேன். இவ்வாறு அக்காலத்திய போர் நிலையை நாம் ஆய்ந்துகொண்டிருந்த வேளையில் மேலை நாட்டில் ஜெர்மனி நாடு ஒவ்வொரு நாடாக விழுங்கி ஏப்பம் விட்டுக் கொண்டே இறுதியாக ஆங்கில நாட்டின் மேலும் போர்க் கொடி உயர்த்திவிட்டது.

எனவே ஆங்கிலேயர் கீழ் இருந்த நம் நாடும் நேரடியாகப் போரில் கலக்க வேண்டிய தேவை உண்டாயிற்று. அந்த நிலையில் கிழக்கே ஜப்பான் நாடும் ஜர்மனியோடு சேர்ந்து போரிட உலகப் போரே உருவாகிவிட்டது. பிறகு ரஷியாவையும் ஜர்மனி, ஜப்பான் ஆகிய இரு நாடுகளும் இருபுறமும் போருக்கு ஈர்த்தன. இந்நிலையில் நாட்டிலும் உலகிலும் போர்க் குழப்பங்கள் மிகுந்த வேளையில் என் மனத்திலும் பல்வேறு குழப்பங்கள் புகுந்துகொண்டன.

என் அன்னையார் இருவரும் மறைந்த பிறகு என் செலவெலாம் ஓய்ந்துவிட்டன. பள்ளிப் பணிக்கு ஓராண்டு விடுமுறை மேற்கொண்டேன். வெளியே அரசியல் கூட்டங் களுக்காயினும் சரி—சமயக் கூட்டங்களுக்காயினும் சரி—வேறு எதற்காயினும் சரி எங்கும் செல்வதில்லை. மாவட்டக் கழகக் கூட்டங்களுக்கும் சரியாகச் செல்வதில்லை, மூன்று கூட்டங்களுக்கும் வாராவிட்டால் உறுப்பினர்ப் பதவி நீங்கப் பெறும் நிலையும் உண்டாகி, மறுபடியும் சேர்த்துக்கொள்ளப் பெற்றேன். என் ஊரில் உள்ள நிலபுலன்களைக் கண் காணிக்க வேண்டியிருந்தது. என் பெரிய அன்னையாரும் அவருடைய நிலபுலன்களையெல்லாம் என் பெயரிலும் என் மனைவி சந்தரமணியின் பேரிலும் எழுதிவைத்துச் சென்றனர். எனவே அவற்றையும் கண்காணிக்க வேண்டி யிருந்தது. ஊரில் ஓரிரு மாதங்கள் தங்கி எல்லா நிலங் களையும் அளந்தோம். அப்போது பல உண்மைகள் வெளி யாயின.

எங்கள் நிலங்களைப் பல ஆண்டுகளாக மற்றவர் குத்தகைக்குப் பயிரிட்டுப் கொண்டிருந்தமையின், பக்கத்தில் இருந்த நிலச் சொந்தக்காரர்கள் மெல்லமெல்ல வெட்டி வெட்டித் தம் நிலத்தொடு சில பகுதிகளைச் சேர்த்துக் கொண்டிருந்தனர். ஒருவர் ஒரு பெரும் வயலையே தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டிருந்தார். நான் அளந்து இந்த உண்மைகளையெல்லாம் கண்ட பிறகு அவர்கள் அனைவரும் உரியவற்றை ஒதுக்கி விட்டுவிட்டார்கள். ஒருவர் மட்டும் வாதாட நினைத்தோ ஏனோ காஞ்சிபுரம் சென்று வழக் கறிஞர்களைக் கலந்துகொண்டுவந்து பிறகே ஒப்படைத்தார். ஊரில் வெற்றிடமாயிருந்த சிலவற்றை மாற்றித் தென்னங் கன்றுகள் மாங்கன்றுகள் இட்டு வளர்த்தேன். அம்மா, பெரியம்மா பிரிவால் பிரிந்திருந்த பல நிலகககளை ஒன்று படுத்திப் பயிரில் சில மாற்றங்களைச் செய்ய நினைத்தேன். ஊரிலேயே நல்ல முறையில் ஒற்றுமையை உண்டாக்கி, நல்ல வகையில் பயிர்த்தொழிலை மேற்கொண்டு மக்களை ஒன்று படுத்த முயன்றேன்.

பல கூட்டங்களை ஊரில் கூட்டினேன். எனினும் அவை ஒன்றும் பயன்படவில்லை. மாறாக ஊரில் பயிரிடும் பண்பு குறைந்து வந்தது. பிற்காலத்தில் நானும் என் நிலத்தின் பல பகுதிகளை விற்று, சென்னையில் ஒவ்வொரு பிள்ளைக்கும் ஒவ்வொரு வீடுவாங்கித் தந்துவிட்டேன். தற்போதும் எல்லா வசதிகளும் இருந்தும் ஊரில் பயிர்த் தொழில் சரியாக நடைபெறவில்லை. பள்ளியில் எனக்கு விடுமுறை கிடைத்ததால் ஊரில் சில நாட்கள் தங்க வாய்ப்பு உண்டாயிற்று. எனினும் விரைவில் நான் காஞ்சிபுரம் வந்து விட்டேன். அப்போது நமது நாடும் தீவிரமாகப் போரில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. ஆகவே அக்காலத்தில் சென்னை மாநிலமும் தன் பங்கைத் தந்துக்கொண்டிருந்தது. மாவட்டக் குழுக்கள்—வட்டக்குழுக்கள் இவ்வாறு பல்வேறு

குழுக்கள் அமைக்கப்பெற்றிருந்தன. என்னைக் கேட்காமலே அதிகாரிகள் அந்தக் குழுக்களில் உறுப்பினராக்கி இருந்தார்கள். நான் குடும்பச் சூழ்நிலையில் அமைதியாக இருக்க நினைக்கிறேன் என்று கூறி வேண்டியும் அவர்கள் விடவில்லை. அவர்தம் விருப்பப்படி அவற்றின் உறுப்பினனாக இருந்து செயலாற்றினேன்.

செங்கற்பட்டு மாவட்டம் முழுதும்—சிறப்பாகக் காஞ்சி வட்ட ஊர்கள் அனைத்திலும் நான் சென்று சொற்பொழிவாற்றினேன். உலகப்போரின் நிலை பற்றியும் அதில் நம்நாடு கலந்துகொள்ள வேண்டிய தேவை நேர்ந்தமை பற்றியும் நம் நாட்டு மக்கள் பொன்னாலும் பொருளாலும் மக்களாலும் பிற தியாகங்களாலும் எவ்வெவ்வாறு உதவ வேண்டும் என்பது பற்றியும் விளக்கமாகப் பேசினேன். ஒவ்வொரு ஊரிலும் எண்ணற்ற மக்கள் அப்பேச்சுக்களைக் கேட்டு உதவ முன்வந்தனர். அக்காலத்தில் காஞ்சியில் துவாரகா நாத ஐயர் என்பவர் தாசில்தாராக இருந்தார் என எண்ணுகிறேன். இன்னும் பல அதிகாரிகளும் நல்ல தொண்டு ஆற்றினர். எப்போதும் என்னை அவர்கள் தங்கள் காரிலேயே எல்லா இடங்களுக்கும் அழைத்துச் செல்வார்கள். நானும் இந்த ஈடுபாடுகளினால் ஓரளவு குடும்பச் சூழ்நிலையை எண்ணி எண்ணி ஏங்க நேரமில்லா வகையில் அமைதியாக வாழ்ந்து வந்தேன்.

ஒரு காலத்தில் 'சென்னை மாநிலத்தின்' போர் உதவிக் குழுவின் கூட்டம் ஒன்று சென்னையில் நடைபெற்றது. கூட்டம் பெரும் அளவில் கிண்டிக் குதிரைப் பந்தய மைதானத்தில் நடைபெற்றது. மாநில ஆட்சித் தலைவர் கவர்னர் தலைமை வகித்தார். பலர் பங்குகொண்டனர். நானும் அதில் பேச வேண்டி இருந்தது. காஞ்சிபுரம் தாசில்தார் உட்பட பல அதிகாரிகளும் நானும் இன்னும் சில முக்கிய

மானவர்களும் அந்த கூட்டத்திற்காகச் சென்னை வந்தோம். குதிரைப் பந்தயத்தின் கொடுமையைப் பல முறையில் கேட்டிருக்கிறேன். நானே என் தமிழ்க் கலையில் அது பற்றி எல்லாம்—அதனால் மக்கள் நைந்துபோகும் நிலைபற்றி எல்லாம் எழுதி இருக்கிறேன். காங்கிரஸ்காரர்களும் தாங்கள் பதவிக்கு வந்தால் அதையே முதலில் ஒழிக்கப்போவதாகச் சொன்னார்கள். ஆனால் அவர்கள் இருபது ஆண்டுகள் பதவியில் இருந்த காலத்து அதை வளர்த்து வந்தார்களே யன்றி வேறு ஒன்றும் செய்யவில்லை. இன்றைய அரசாங்கமும் அதை வளர்க்கவே துணை நிற்கின்றது. அதை நடத்துகின்றவர் நாட்டிலுள்ள பெருஞ் செல்வர்கள் என்றும் அவர் தம் தயவை நாடியே எந்த அமைச்சரவையும் செயலாற்றுகிற தென்றும் ஆகவே யார் வந்தாலும் அதை ஒன்றும் செய்ய முடியாது என்றும் பலர் காரணம் கூறக் கேட்டறிந்தேன். அந்தக் காலத்திலெல்லாம் அதன் கொடுமையை மட்டும் ஓரளவு உணர்ந்திருந்தமையின் அங்கே நடைபெற்ற கூட்டத்துக்குச் செல்ல அஞ்சினேன். எனினும் மற்றவர்களோடு சென்று கூட்டத்திலும் கலந்துகொண்டேன். கவர்னருக்கும் அறிமுகம் செய்துவைக்கப் பெற்றேன். அக்காலத்திலெல்லாம் கவர்னர்களைக் காணுவதோ பேசுவதோ அவ்வளவு எளி தன்று. எனவே எனக்கு அது பெருமை என்று பலர் கூறிக் கொண்டனர். ஊரில் உள்ள உறவினர் பலர் பாராட்டினர். எனினும் நான் அவற்றைப் பொருட்படுத்தவில்லை.

அதுகாலை செங்கற்பட்டு மாவட்ட ஆட்சியாளர் (Collector) திரு. செட்டூர் என எண்ணுகிறேன். என் கூட்டங்கள் பலவற்றிற்கு அவர் தலைமை வகித்துள்ளார். அவர்கள் எனது பணிகளையெல்லாம் கண்டு என்ன நினைத்தார்களோ அறியேன். ஒருநாள் தாசில்தார் துவாரகாநாதஐயர் அவர்கள் திடீரென என் வீட்டிற்கு வந்தார்கள். காலையில் ஏதோ பணியில் ஈடுபட்டிருந்தேன். என்னைப் பெயரிட்டு

உரிமையோடு அவர்கள் அழைப்பார்கள். அவர்தம் அழைப்பைக் கேட்டு வெளியில் வந்தேன். நாற்காலியில் உட்கார்ந்தோம். அவர் என்பெயர் 'இராவ்சாகிப்' பட்டத் துக்கு சிபார்சு செய்யப்பெற்றுள்ளது என்றும் காஞ்சிபுரம் வட்டத்துக்கு இவ்வொரு பெயர்தான் என்றும் கூறிவிட்டு என்னை வாழ்த்திச் சென்றார். என் பதிலைக்கூட அவர் எதிர்பார்க்கவில்லை. அவர், நான் மறுப்பேன் என்று எண்ணியிருக்கக்கூடும். அக்காலத்தில் உண்டான பல போர் பற்றிய அரசாங்கப் பதவிகளை நான் வேண்டாம் என ஒதுக்கியதை அவர் அறிவார். எனவே அவர் விரைந்து சென்றுவிட்டார். நான் அன்றுமட்டுமன்று—இன்றுவரை எனக்குப் பலர் பட்டம் பதவி அளிக்க வருவதை வேண்டாம் என ஒதுக்கியே வந்துள்ளேன். அப்படியும் இரண்டொரு நண்பர்கள்--தட்டமுடியாத நிலைமையில் எனக்கு அளித்த பட்டங்களை நான் சூட்டிக்கொள்வதுமில்லை. அதே பட்டங் களைச் சிலர் தம் பெயர்த்தாளில் (Lettet head) பொறித்து வைத்துப் பாராட்டுவதைக் காட்டி, அன்பர்கள் என்னையும் அதுபோல் செய்யச் சொல்வர். எனினும் எனது படிப்பு, பணி பற்றி அமைந்த பட்டங்களைத் தவிர்த்து நான் வேறு எதையும் இட்டுக்கொள்வதில்லை, பிற்காலத்தில் அவற்றை யும் விட்டுவிட்டுப் பெயரளவிலேயே நிற்கிறேன்.

இந்த நிலையில் அன்று நான் எப்படி 'இராவ் சாகிப், பட்டத்தை ஏற்றுக்கொள்வேன்? நாட்டுக்குப் பணியாற்றும் கடமைக்காக—உலக அமைதிக்குப் பாடுபடும் கடமைக்காக நான் அன்று பணிபுரிந்தேனே யன்றிப் பட்டம் பதவிக்காக அன்று. நான் விரும்பி இருந்தால் அன்று அரசாங்கத்தில் உயர்ந்த பதவிபெற்றிருப்பேன். இன்று தலைமைச் செயலகத் திலோ வேறு அரசாங்க இடத்திலோ உயர்ந்த பதவியில் இருந்திருப்பேன். ஆயினும் என் மனம் அவற்றிலெல்லாம் நாட்டம் கொள்ளவில்லை, அமைதியையே நாடிற்று. ஆகவே

அப்பட்டத்தை வேண்டாம் என்று கூற விழைந்தேன். தாசில் தார் அவர்களிடம் கூறினால் அவர் என் சொல்லை என்னிடம் கொண்ட அன்பின் காரணமாக ஏற்றுக்கொள்ள மாட்டார் என அறிவேன். எனவே, மறுநாளே சென்னைக்கு வந்தேன். மாவட்டக் கலெக்டர் திரு. செட்டூர் அவர்களைக் கண்டேன். என்னைக் கண்டதும் வரவேற்று அவர்களும் அச்செய்தியைச் சொன்னார்கள். நான் அதுபற்றிப் பேசவே வந்திருக்கிறேன் என்றும் எனக்கு அப்பட்டம் எவ்வாற்றானும் தேவை இல்லை என்றும் கூறினேன். அவர்கள் ஏற்குமாறு வற்புறுத்தினர். நான் வேண்டாமென்றும் மீறித் தரப்பெறுமாயின் ஏற்றுக் கொள்ளாமல் மறுக்கப்பெறும் என்றும் மேலும் எக் கூட்டத் துக்கும் தொடர்ந்து வரமாட்டேன் என்றும் சொன்னேன். அவ்வாறு அப்பட்டத்தைத் திருப்பித்தரின் அதைக் கவுரவக் குறைவாக அன்றைய ஆங்கில அரசாங்கம் எண்ணிற்று. பிற்காலத்தில் பலர் அப்பட்டங்களை உதறித் தள்ளினர். சிலர் இன்றும் அந்த அடிமைச் சின்னங்களை அணிந்து கொண்டு பெருமைப்படுகின்றனர். நான் அன்று மறுப்பேன் என்று கூறிய ஒன்றை நன்கு உணர்ந்த செட்டூர் அவர்கள் என் பெயரை அரசாங்கத்துக்கு அனுப்பவில்லை என்று உறுதி அளித்தார். மிக்க மகிழ்ச்சியோடு நான் காஞ்சிபுரம் திரும்பி நேரே தாசில்தார் வீட்டிற்குச் சென்று நடந்ததைக் கூறினேன். அவர் உரிமையோடு என்னைக் கடிந்து கொண்டார். எனினும் அதுபற்றி மேலே அவர் ஒன்றும் பேசவில்லை. இதை அறிந்த என் நண்பர்கள் பலர் பின்னால் என்னைக் கடிந்து கொண் டார்கள். நான் எதற்கும் செவிகொடாது எப்போதும் போல அன்னைத் தமிழுக்கும் நாட்டுக்கும் சமுதாயத்துக்கும் என்னால் ஆன பணிகளைச் செய்து கொண்டு காலம் கழித்து வந்தேன்.

போருக்கு இடையில் நாட்டில் கொந்தளிப்பு அதிகமாக இருந்தது. அண்ணல் காந்தி அடிகளார் இந்திய நாட்டை

நேரடியாகப் போரில் ஈர்ப்பது ஆங்கில ஆட்சிக்குப் பொருந் தியது ஆகாது என விளக்கினர். அவர்கள் இவர் தம் பேச் சினைக் கேட்கவே இல்லை. காங்கிரஸ் மகாசபை பல வகை யில் மாற்றுச் செயலாற்ற முற்பட்டது. அதனால் சில தலை வர்கள் சிறையில் தள்ளப்பெற்றனர். நாடு முழுவதும் கொந் தளிப்பு ஏற்பட்டது. மாநில மத்திய அரசாங்கச் சட்டசபை உறுப்பினர்களும் அமைச்சர்களும் மாவட்ட நகர் மன்றக் கழகங்களும் எதிர்ப்புக் காட்டும் முகத்தால் உடனே 'இராஜி நாமா' செய்து வெளியேற வேண்டுமென்றும் திட்டம் தீட் டினர். அதன் விளைவால் நாடெங்கும் காங்கிரஸ் ஆட்சியினர் பதவியினை இராஜிநாமா செய்து வெளியேறினர். வெளி யேறு முன் கண்டனக் கூட்டங்களில் தீர்மானம் இட்டு, ஆங்கிலேயர் தம் அடாத செயலைக் கண்டித்து வெளியேற வேண்டும் என்ற முடிவும் குறித்தனர். நாட்டுத் தலைவர்களும் அவையாளரும் அவ்வாறே செய்தனர். எனது செங்கற்பட்டு மாவட்டக் கழகமும் அவ்வாறே செயல்படத் திட்டமிட்டு, கூட்ட நாளும் குறித்தது. நாங்கள் எதிர்க் கட்சியில் இருந்ததை முன்னரே குறித்துள்ளேன். எங்கள் தலைவர் திரு. சண்முகம் பிள்ளை அவர்கள் என்னை அந்தக் கூட்டத் தில் காங்கிரஸ்காரரர் 'வெள்ளையனை வெளியேறு' என்று தீர்மானம் இட்டுத் தாங்கள் இராஜிநாமா செய்ய இருப்ப தையும் எதிர்க்கட்சிக்காரர்களாகிய நாங்கள் அதை எதிர்க்க வேண்டுமெனவும் அவ்வாறு எதிர்த்தால் தொடர்ந்து நியமனம் செய்யப்பெறும் அவையில் நாங்களெல்லாம் இடம் பெறுவோம் எனவும் அதற்காக அரசாங்கம் சட்டம் தீட்டி யுள்ளதெனவும் எழுதியிருந்தார். எனினும் அவ்வாறு செய்ய என் உள்ளம் இடம் தரவில்லை. அண்ணல் காந்தி அடிகளார் போன்ற பெருந்தலைவர்களெல்லாம் அல்லல்பட்டு ஆற்றாது நாட்டுக்காகப் பாடுபடும் வேளையில் நமக்குப் பதவி எதற்கு? எனவே ஒதுங்கி நின்றேன்.

எனவே அந்தக் குறிப்பிட்ட கூட்டத்துக்கு நான் செல்ல வில்லை. அவருக்கும் பதில் எழுதவில்லை. கூட்டம் முன் ஏற்பாட்டின்படி தீர்மானத்தை நிறைவேற்றிக் கலைந்து விட்டது. மாவட்டக் கழக ஆட்சி கலெக்டர் கையில் வந்தது. உடன்—ஒருவாரத்துக்குள் என எண்ணுகிறேன். மாற்றுக் கழகம் பொறுப்பேற்குமெனவும் அதில் உறுப்பினர் யார் யார் என்றும் பத்திரிகைச்செய்தி வரக்கண்டேன். நல்லவேளை அதில் என்பெயர் இல்லை. பின்பு ஒரு கூட்டத்தில் என்னைக் கண்ட 'கலெக்டர்' அக்கூட்டத்துக்கு வந்திருந்தால் நானும் தொடர்ந்து உறுப்பினனாக இருந்திருக்கலாமே என்று சொன்னார். நான், அதனாலேயே அக்கூட்டத்துக்கு வர வில்லை என விளக்கினேன். என் உள்ளம் அவர் நன்கு அறிந்த ஒன்றாதலால் அவர் புன்சிரிப்போடு அமைந்துவிட்டார்.

அதே காலத்திற்குச் சற்றுமுன் நடைபெற்ற மற்றொன் றும் நிழலிடுகின்றது; அவ்வாறு கழகம் கலைக்கச் சில தினங் களுக்குமுன் என எண்ணுகிறேன். தாம்பரம் நகர் அமைப்பு எங்கள் கழகச் சார்பில் அமையத் தொடங்கிற்று. பல ஏக்கர் நிலங்களை வாழ் மனையாக்கிப் பலருக்குப் பகிர்ந்து கொடுத்து, புதுப்புதுத் தெருக்கள் அமைத்தனர். அத் தெருக் களுக்கெல்லாம் அக்காலத்தில் கழக உறுப்பினர்களாகிய எங்கள் பெயர்களை இடவேண்டுமெனவும் முடிவு செய்தனர். ஆயினும் நான் தனியாக எங்கள் கழகத் தலைவர் திரு. துரை சாமி ரெட்டியார் அவர்களை, ஆலந்தூரில் அவர்கள் வீட்டில் கண்டு என் பெயரை எந்தத் தெருவிற்கும் வைக்க வேண்டாம் எனக் கேட்டுக்கொண்டேன். அவர்கள் முதலில் மறுத்த போதிலும் பிறகு இசைந்தார். அதனாலேயே தாம்பரம் பெரியார் நகரில் என்னுடன் இருந்த உறுப்பினர் பெயர்களி லெல்லாம் தெருக்கள் இருக்க என் பெயரில் மட்டும் தெரு இல்லா நிலை தோன்றிற்று, பின் கேட்ட பல அன்பர்களுக்கு

போர் வரவர அதிகமாகிக் கொண்டே வந்தது. உலக மக்கள் அனைவரும் அஞ்சினர். மக்களுக்கு வாழ்க்கைப் பொருள்கள் கிடைக்கா நிலை உண்டாயிற்று. பொருளாதார நெருக்கடி காரணமாகப் போருக்குமுன் மக்கள் குறைந்த விலையில் எல்லாப் பொருள்களையும் பெற்றுவந்த நிலை மாறி, அனைத்தும் விலை ஏறியும் கிடைக்கா நிலைமை உண்டானமையால் மக்கள் வருந்தினர். அரசாங்கத்தார் எவ்வளவோ முயற்சிகள் செய்து கூடிய வரையில் மக்கள் வாழ்வின் இன்றியமையாத் தேவைகளைத் (உடை, உணவு) தந்து உதவினர். எனினும் உலகிலும் ஊரிலும் வீட்டிலும், உள்ளத்திலும், உணர்விலும் எங்கும் அமைதியற்ற பெரு நிலையேகாணப்பெற்றது நானும் அவற்றினிடையே பள்ளிப் பணியையும் போர் மாற்ற அமைதிப் பணிகளையும் ஆற்றி வந்தேன்.

இந்த நிலையில் எனக்கு ஓய்வு அதிகமே கிடைத்தது. வீட்டில் குழந்தை மங்கையர்க்கரசியோடு விளையாடிப் பொழுது போக்குவேன். நேரம் அதிகமாக வீணாவதைக் குறித்துப் பலநாள் எண்ணியதுண்டு. அச்சகத்திலும் பொறுப் பாளர் இருவர் இருந்தமையின் எனக்கு அச்சகப் பணிகள் இல்லை. போரின் காரணமாகத் தாள் தட்டுப்பாடு உண்டாக, தமிழ்க்கலை வெளியீடும் நிறுத்தப்பெற்றது. எனினும் நேரத்தை வீணாக்க நான் விரும்பவில்லை. அந்த நிலையில்— தான் மேலே படித்தால் என்ன என்ற எண்ணம் உண்டா யிற்று, 1942இல் மேலே படிக்கத் திட்டமிட்டேன். எனினும், இடையில் சில ஆண்டுகள் வேறு துறைகளில் கழிந்துவிட்டமை யின் படிப்பில் கருத்துச் செல்லுமோ என அஞ்சினேன். அதிலும் ஆங்கிலப் பாடங்கள் அதிகமாகப் பயிலவேண்டியதை நினைந்தேன். ஆரம்பத்தில் கிராமப் பள்ளிகளிலேயே படித்த காரணத்தால் எனக்கு ஆங்கில அடிப்படை இல்லை. எனவே பயிலத் தயங்கினேன். எனினும் சிறிய காஞ்சிபுரத்தில் இருந்த ஓர் ஐயங்கார்—அவர் தனிப்பாடம் சொல்லியே வாழ்பவர்—

எனக்குத் தந்த உணர்வே படிக்கலாம் என்று தோன்றிற்று. முதலில் இடை நிலை (Inter) வகுப்பு ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறவேண்டும். அவர் வீட்டிற்கு வந்து அந்தப் பாடங்களை யெல்லாம் நன்கு சொல்லிக் கொடுத்தார். நானும் ஒரு மாணவனாகவே இருந்து பயின்றேன். எனவே ஒருமுறை தவறினாலும் அடுத்த முறையில் (செப்டம்பர்) வெற்றி பெற்றேன்.

நான் தேர்வு எழுதிய அந்த நாட்களில்தான் கிழக்கே ஜப்பானியர் பேயாட்டம் தலைவிரித்தாடிற்று. சிங்கப்பூர், மலேயா. பர்மா அனைத்தையும் அவர்கள் விழுங்க, நம் நாட்டு மக்கள் நைந்து வாடி வந்த வகைகளை யெல்லாம் கேட்டுக் கேட்டுக் கண்ணீர் வடித்தேன். சென்னையிலும் அவன் குண்டுவரும் என்று பயந்துதான் அந்த ஆண்டு சென்னையில் எழுத இருந்த மாணவர்களை, அவர்தம் தேர்வு களை வெளியூர்களில் எழுதப் பல்கலைக் கழகத்தார் ஏற்பாடு செய்துவிட்டனர். அந்த இடமாற்றம் நாட்டுக்குழப்பம் முதலியன என்னை முதலில் தேர்வு பெறாமல் செய்து விட்டது. பிறகு செப்டம்பரில் வேலூரில் சென்று தேர்வு எழுதி வெற்றி பெற்றேன்.

பிறகு 'பி. ஓ.எ ல்' படிக்க விரும்பினேன். அதற்குரிய ஆங்கிலப் பாடங்களை மினர்வா கல்லூரியில் பயின்றேன். அப்போதுதான் அறிஞர் திரு. பரசுராமன் எனக்கு அறிமுக மானார்கள். அவர்தம் பன்மொழிப் புலமையையும் ஆழ்ந்த அறிவையும் தெளிந்த சிந்தையையும் விளக்கப் பேச்சையும் எண்ணி எண்ணி வியந்தேன். அவர்களும் நான் ஆசிரியனாக இருந்து பயில வந்தமையின் எனக்குத் தனிச் சலுகைதந்து காத்தனர். அவருடன் இருந்த சர்வோத்தமராவ் என்பாரு டைய ஆங்கில வகுப்பு மிகச் சிறந்தது. அவர்களிடம் பயின்ற நான் தேர்வில் வெற்றிபெற்றேன் என்று சொல்ல வேண்டுவ தில்லை, மூன்றாவது பிரிவையம் தனிமையாகப் பயின்றேன்.

இதற்கிடையில் காஞ்சி ஆண்டர்சன் பள்ளியில் தலைமை ஆசிரியர் மாறி வேறு ஒருவர் அப்பதவியைப் பெற்றார். தமிழாசிரியர் ஒருவர்—எனக்கு ஆசிரியராக இருந்தவர்—என் கீழே பணிசெய்ய வந்தார். எனவே அங்கே தொடர்ந்து பணியாற்றுவதில் சில சிக்கல்கள் முளைத்தன போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது. நானும் என்பணிகளுக் கிடையில் போர் அமைதிப் பணிக்கும் ஆவன செய்து கொண்டே வந்தேன்.

# 9. தோயாவாம் தீவினையே

காஞ்சி வாழ்வில் சமய ஈடுபாடு அதிகம் பெற்றேன். சமயநெறி போற்றும் கிறித்துவப் பள்ளியில் பணியாற்றியதும் அதற்கு ஒரு காரணமாகலாம். நான் என் உயர்நிலைப் பள்ளிப் படிப்பினைச் செங்கற்பட்டுக் கிறித்துவப் பள்ளியில் படித்து முடித்தேன். அப்பொழுதே கிறித்துவ நூல்களைப் படிக்கும் வாய்ப்பு எனக்கு உண்டாயிற்று. எனினும் அதில் அதிகமாக நான் ஆழ்ந்து பயின்றது கிடையாது. அங்கிருந்த ஆசிரியர்கள் அப்பாடங்களைக் கட்டாயமாக்கியமை அதற் கொரு காரணமாகலாம். ஆயினும் காஞ்சியில் பணி ஏற்றபின் அவர்தம் சமய நூல்களை விரும்பிப் படித்தேன். பல கருத்துக் கள் என்னை ஈர்த்தன. சிலவற்றைப் பற்றிக் கிறித்துவ ஆசிரியர்களிடமும் வாதிடுவேன். நம் சமயத்தில் சொல் லாதனவற்றை அதில் சொல்லி இருக்கிறது என்ற எண்ணம் எனக்குக் கிடையாது. அந்த நாளிலேயே ஓரளவு சைவ வைணவ இலக்கியங்களையும் சமய சாத்திரங்களையும் பயின்றவனாதலின் அவற்றில் சொல்லாதவனற்றை விவிலிய நூல் கூறுகிறது என்று நான் கொள்ளவில்லை. ஆனால் அவர்கள் அந்நூலைப் போற்றும்முறை, பயிலும் முறை

முதலியவற்றைப் பாராட்டினேன். இயேசு பெருமான் பல உண்மைகளைச் சில தெளிந்த உதாரணங்களால் எடுத்துக் காட்டும் சிறப்பினைப் போற்றினேன். என்றாலும் எனக்கு உள்ளத்தில் ஓர் எண்ணம் உண்டு. எந்தச் சமயத்தவனும் அவ்வச்சமய உண்மைகளை உணர்ந்து பின்பற்றவில்லை என்பதுதான் அது. ஒருபுறம் கிறித்துவ நெறிபற்றிய நூல்களில் நான் ஈடுபாடு கொண்டேன் என்றாலும் மறுபடியும் சில கிறித்தவர் தம் வாழ்க்கை நெறியைக் கண்டு—அதுவும் வழிகாட்ட வேண்டியவரே வழுக்கிவிழும் வழியைக் கண்டு – வெறுக்கவே செய்தேன். இந்தநிலை எல்லாச் சமயங்களிலும் இருப்பதறிந்து 'நீக்க வழியில்லையா?" என நெடிது நினைந்து நைந்த நாட்கள் பல.

நான் காஞ்சியில் சேர்ந்தபோது பள்ளிப் பொறுப்போடு கிறித்து பெருமான் அன்புச் சமயப் பணிகளையும் ஏற்று இருந்தவர் 'மக்ளின்' என்னும் துரைமகனார் ஆவர். அவரும் அவர்தம் துணைவியாரும் - மக்கள் இல்லை என நினைப்பு— இராப்பகல் அற்ற நிலையில் தம் சமயம் வளர்க்கப் பாடுபட்டனர். காஞ்சி விழவறாக் காஞ்சி அல்லவா! ஆகவே எப்போதும் ஏதேனும் திருவிழாக்கள் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். சில வேளைகளில் இலட்சக்கணக்கான மக்கள் கூடுவர். பல வேளைகளில் ஆயிரக்கணக்கான மக்கள் வருவர். அனைவரும் சைவ வைணவ சமயத்தவர்களே. அவர்களுக்கு இடையில் இந்த 'மக்ளின்' தம்பதிகள் தம் சமயப் பிரசாரத்தைச் செய்வர்; துண்டுப் பிரசுரங்கள் வழங்குவர்; விவிலிய நூல்களைத் தருவர்.

எளிய முறையில் நடுத்தெருவில் நின்று அவர்கள் சமயப் பணியைச் செய்துகொண்டிருப்பர். அவர்தம் பொறுமைக்கு எல்லைகாண முயன்ற சில நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. ஆயினும் அவர்கள் உளம் கலங்காது 'கர்த்தர்' தொண்டினைச் செம்மையாகச் செய்துவந்தனர். சிலமுறை

அவர் தரும் தாள்களையும் நூல்களையும் கிழித்து அவர் தலையிலேயே போடுவார்கள். அவர் புன்சிரிப்போடு அதை ஏற்றுக்கொள்வார். சில வேளைகளில் தண்ணீரைக் குடம் குடமாக அவர் தலையில் ஊற்றுவர்; அதனால் அவர் பணியில் தளர்ச்சி அடைந்தது கிடையாது. ஒருமுறை 'சாணி'யைக் கரைத்து அவர் தலையில் ஊற்றினர்; அவர் வாய் 'இயேசுவே, அவர்கள் அறியாது செய்யும் பிழைகளை மன்னியும்' என்று வேண்டிற்று. இவ்வாறு அவர்தம் அன்புப் பணி இனிது நடைபெற்றது. நான் அவருடன் சில நாட்கள் பேசுவதுண்டு. ஒருசிலவற்றில் மாறுபட்டாலும் எல்லாச் சமய அடிப்படை உண்மைகளும் ஒனறே என்பதை அவர் ஏற்றுக்கொள்வார். அவர் அன்பளிப்பாகத் தந்த மரப் பெட்டியை (பீரோ) காஞ்சியில் இருந்தவரை வைத்துக் கொண்டிருந்தேன். பிறகு சென்னைக்கு எடுத்துவர இயலாத நிலையில் நண்பருக்குத் தந்து வந்தேன்.

அவர் வயதானவர்; எனவே தாய்நாடு திரும்பிச் சென் றார். பின் அவருக்குப் பதிலாக இளம் தம்பதிகள் அந்தப் பணியினைச் செய்யக் காஞ்சிபுரம் வந்தனர். 'நியுபிகின்' என்ற பெயருடைய அவர் வருகை காஞ்சிக் கிறித்தவ உலகுக்குப் புதுத் தொடக்கமாகவே இருந்தது. அந்த 'நியுபிகின்' அவர்கள் பிறகு சென்னைச் திருச்சபையின் தலைவராக ஆனார். அவர்வந்த போது தமிழ் அறியாத வராக இருந்தார். என்னிடம் தமிழ் பயில வேண்டும் என விரும்பினார். வாரத்தில் மூன்று நாட்கள் அவர் என் வீட்டிற்கு வருவார். மொழிபெயர்க்கும் வகையிலும் தமிழ் எழுத்தினைப் பயிலும் வகையிலும் அவர் வாதிடுவார். விரைவில் நன்கு தமிழைக் கற்றுக் கொண்டார். அவர்தம் துணைவியாரும் தமிழ் பயில விரும்பினர்; ஆயினும் விரைந்து கற்றுக் கொள்ளவில்லை. 'நியுபிகின்' மெல்ல மெல்லத் தமிழ்க் கூட்டங்களில் பேச ஆரம்பித்தார். அவர் உணர்ச்சியும் வேகமும் அவருக்குக் கைகொடுத்து உதவின.

ஒருமுறை அவர் நண்பர் எழுதிய இயேசுவின் வரலாற்றைத் திருத்தித்தருமாறு எனக்குப் பணித்தார். அது பாவால் ஆயது; நடையும் நன்கு அமைந்திருந்தது; அதைக் கண்டு திருத்தித் தந்தேன். அவர் பயிலுவதற்கும் இத்தகைய பணிகளைச் செய்வதற்கும் அவ்வப்போது நான் மறுத்தாலும் கேட்காது ஊதியம் தந்துவிடுவார். நானும் அதனால் எனக்குத் தேவையான நூல்களைப் பெற்றுக் கொள்வேன்.

அவர்களோடு பழகிய காரணத்தால் நானும் அடிக்கடி கிறித்தவக்கோயிலுக்குச் செல்லுதல் வழக்கமாயிற்று. அங்கு அவர்களோடு நானும் வணங்குவேன். ஆயினும் அங்கேயும் என் ஆறுமுகனே காட்சி தருவான். இயேசுவின் வாழ்வினைப் பற்றிப் பத்துப் பாடல்கள் பாடி, அதை அப்போது வந்த 'தமிழ்க்கலையில்' வெளியிட்டேன். எத்தனைச் சமயங்களில் புகுந்து தேடினும் காணப்பெறும் ஈசன் ஒருவனே என்ற உண்மை எனகு அப்போது புலனாகும். அந்த அடிப்படையிலே கிறித்து பிறந்த நாள், கிறித்தவ ஆண்டுப் பிறப்பு முதலியவற்றையும் அவர்களைப் போன்று நான் வீட்டில் கொண்டாடுவதுண்டு. கிறித்தவ ஆண்டு முதல்நாளில் தேவார திருவாசகங்களைப் படித்து, அவற்றுள் நூலிட்டுத் தெளிவேன். அப்படி ஓராண்டு தெளிந்து பெற்ற விளைவை உடன் பின்னே காட்ட இருக்கின்றேன். இவ்வாறு கிறித்தவ அன்பர்தம் உறவால் அவர்தம் சமய நெறியை நன்கு கற்றுக் கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றேன். அப்படியே எனக்கு மகமதிய நண்பர் இரண்டொருவரும் அமைந்தனர். பெரிய காஞ்சிபுரத்தில் நகை வாணிபம் செய்து வந்த 'பாட்சா' என்பவரும், எங்கள் பள்ளியிலேயே உருது ஆசிரியராக இருந்த அன்பரும் உற்ற நண்பர்களாக இருந்தனர். அவர்களுடன் அவர்தம் சமயம் பற்றி ஆராய்வேன். திரு. பாட்சா என்பவர் பெரிய காஞ்சி மசூதி ஆட்சிப் பொறுப்பில் முக்கியப் பங்கு கொண்டவர். எனவே அவருடன் பலமுறை அந்த மசூதியில்

சென்று அவர்தம் தொழுகையில் கலந்து கொண்டிருக்கிறேன். இவற்றுக்கிடையில் எங்கள் பள்ளியில் எழுத்தாளராக இருந்த திரு. தேவராச முதலியார் அவர்களுடைய நாத்திகவாதப் பேச்சுக்களையும் கேட்டுக் கொள்வேன். அவருக்கு எப்படியோ இளமையிலிருந்தே— பெரியாரைப் பின்பற்றியதாலோ ஏனோ—அந்தக் கொள்கை ஊன்றி விட்டது. 'காஞ்சிப் பெரியார்' என்றே நாங்கள் அவரை அழைப்பது வழக்கம். அவர் கொள்கையை மறுக்கும் வகையில் நான் பலப்பல வாதங்கள் புரிவேன். இப்படிப் பலசமய நெறிகளுக்கு இடையில் நான் என் சைவ சமய ஒழுக்கத்திலிருந்து சிறிதும் வழுவாமல் வாழ்ந்து வந்தேன். அது அனைவருக்கும் வியப்பாகவே இருந்தது.

பழங்காலத்தில் சிறந்தோங்கி வாழ்ந்து காஞ்சி நகரையே தம் கொள்கையின் கீழ் அடக்கிவைத்திருந்த சமணமும் பௌத்தமும் தற்போது அவ்வளவாக இல்லை. ஊருக்கு வெளியே 'சீன காஞ்சி' என்ற கோயில் வேகவதி ஆற்றங் கரையில் உள்ளது. அதன் பொறுப்பாளர் காஞ்சி பச்சை யப்பர் பள்ளியில் பணியாற்றிய அப்பாவு நயனார் என்பவ ராவர். அவர் மகன் 'பானு' பள்ளியில் என் மாணவன். எனவே அவர்களோடு அந்தச் சைனர் 'சினகரத்'துக்கும் அடிக்கடி செல்வேன். கோயில் பெரியது—தூய்மையானது— போற்றி வணங்கத் தக்கது. நாட்டின் பல பகுதிகளிலிருந்து வரும் மக்கள் அக்கோயிலை வணங்காமல் செல்வதில்லை. காஞ்சியின் பல பகுதிகளிலும் ஆழ்ந்திருக்கும் நிலப்பகுதிகளில் சிற்சில சைன பௌத்தச் சிலைகள் இன்னும் அகப்படுகின்றன. மணிமேகலை 'அறப்பெருஞ் செல்வியாய்' வாழ்ந்ததெரு அதே பெயரால் இன்றும் வழங்குகின்றதே. ஆயினும் அங்கே பலருக்கு 'அரப்பணஞ் சேரித்தெரு' என்றால்தான் புரியும். இவ்வளவு உருமாறியுள்ளது அத்தெருவின் பெயர். இத்தனைச் சமயங்களுக்கிடையிலும் தொன்மைச் சமயங்

களாகிய சைவம் வைணவம் இரண்டும் காஞ்சியில் தழைத்தோங்கி நின்றன—நிற்கின்றன—நிற்கும் என்பதும் உறுதி.

காஞ்சியில் சைவ சமயத்தை வளர்க்கப் பல சங்கங்கள் தோன்றி வளர்ந்தன. அவற்றுள் ஒன்று—முக்கியமானது நான் இருந்த காலத்தில் பணியாற்றி வந்தது. அதுவே 'மெய்கண்டார்' கழகம் என்பது. சிவஞான போதத்தை உலகுக்குத் தந்த அறிவொளிச் செம்மலின் பெயரால் அக்கழகம் அமைக்கப்பெற்றுச் சிறக்கப் பணியாற்றிற்று. பச்சையப்பரில் பணியாற்றிய திருவாளர்கள் வச்சிரவேலு முதலியார், திருஞானசம்பந்த முதலியார் ஆகியோர் அதன் உயிர் நாடியாக இருந்தனர். பின்னவர் தம் வாழ்நாளை அதற்கே அர்ப்பணித்தார் எனலாம். நான் எதிலும் ஒதுங்கி இருப்பது போன்று, அதிலும் அதிகப் பங்கு கொள்வதில்லை. ஆயினும் அவர்கள் அழைக்கும்போதெல்லாம் அவர்கள் குறிக்குமிடத்துக்குச் சென்று சொற்பொழிவாற்றி வருவேன். அவர்கள் என்பால் அன்றும் இன்றும் அன்புடையவர் களாகவே உள்ளனர். என் வாழ்வில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியைச் சான்றாக இன்றும் திருஞானசம்பந்த முதலியார் கூட்டங்களில் என் பெயரைச் சொல்லி எடுத்துக்காட்டிக் கொண்டே இருக்கிறார் என்பதையும் ஈண்டு எண்ண வேண்டியுள்ளது.

இவற்றுக்கிடையில் நான் முன்னரே காட்டிய நாராயண சேவாச்சிரமத்தில் ஆண்டுதோறும் குரு பூசைப் பணி செம்மையாக நடைபெறும். பல அறிஞர்கள் சமயச் சொற்பொழி வாற்றுவார்கள். நான் காஞ்சிபுரம் சென்று சேர்ந்த அதே ஆண்டில் திரு. சேதுப்பிள்ளை அவர்கள் அண்ணாமலையிலிருந்து சென்னைக்கு வந்து சேர்ந்தார்கள். என்னைச் சேவாச்சிரமத்து அடிகளார் அழைத்து எப்படியும் அந்த ஆண்டிற்குச் சேதுப்பிள்ளையை அழைத்து வரவேண்டுமென்று கட்டளையிட்டார்கள். நானும் மகிழ்வோடு சென்னை

சென்று அவர்களை வருமாறு வேண்டி ஏற்பாடு செய்து வந்தேன். அவர்கள் அந்த ஆண்டு வந்து ஆற்றிய சொற்பொழிவு மிகமிக உருக்கமாக இருந்தது. அவரை அனைவரும் பாராட்டினர். அதுதான் அவருக்கு முதல் தடவை காஞ்சிபுரப் பயணமும் பேச்சும். அந்தப் பேச்சு முடிவில் நன்றி கூற வந்த முன்னாள் நகர்மன்றத் தலைவர் பிள்ளையார்பாளையம் திரு. சுவாமிநாத முதலியார் அவர்கள் மிக உருக்கமாகவும் அழகாகவும் நன்றி கூறினர். 'இந்தச் சேதுவைக் கண்டால் பாவம் போமே ஜனகன் பெண்ணே—இகபர சித்தியாமே' என்று கவிராயர் இராம நாடகக் கீர்த்தனையில் சேதுவைக் காட்டி இராமன் சீதைக்குத் தலப் பெருமையை விளக்கியதைச் சுட்டி, அப்படியே 'இந்தச் சேதுவைக் கண்டால் யாவும் பெறலாம்' என்று போற்றி, சேதுப்பிள்ளையைச் சிறப்பித்து நன்றி கூறினார். அடிகள் மிகவும் மகிழ்ந்தார்கள்.

முடிவில் பிள்ளை அவர்கள் உடலில் உள்ள நீங்காத நோய்க்கு அடிகளார் மருந்து தந்தார்கள். அதனால் முற்றும் குணமடைந்த பிள்ளை அவர்கள் தாம் வாழ்ந்த நாள்வரை ஒவ்வோர் ஆண்டும் தவறாது மடத்துக் குரு பூசைக்கு வந்து தம் கடமையாகிய சொற்பொழிவை ஆற்றிச் சென்றனர். ஒரு காலத்தில் திரு. கா. சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் தலைமை தாங்க இவர் பேச இருவரும் ஒருவரை ஒருவர் இராமாயணப் பாடல்கள் வழியே ஏத்தியும் தாழ்த்தியும் இரட்டுற மொழிந்தும் பேசிய பேச்சுக்கள் மக்கள் மனத்தை மகிழ்வித்தன. இவ்வாறே ஏகாம்பரநாதர் விழாவில் பன்னிரெண்டு நாட்கள் பல அறிஞர்கள் பேச்சுக்கள் நடைபெறும். நான் அவற்றிலெல்லாம் கலந்து கொண்டு பேசியும் பெரியவர்கள் பேசக் கேட்டும் நிரம்பப் பயன்பெற்றேன். சமய உண்மையை ஓரளவு உணர என் காஞ்சி வாழ்க்கை எனக்குத் துணையாயது.

அறிஞர் கா. சுப்பிரமணிப்பிள்ளை அவர்களை நாடு அறியும். அவர்தம் புலமையை உலகு அறியும். இருந்தும் கடைசிக்காலத்தில் அவர் வாழ்க்கை செம்மையாக அமைய வில்லை. அவரை ஆதரிப்பார் அற்ற நிலையில் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தார். என் வீட்டில் சில நாட்கள் தங்கி இருந் தார். அப்போது நான் அவரிடம் பல பாடங்களைக் கேட்டு அறிந்து கொண்டேன். ஆயினும் அவரால் முழுப் பயன் பெற்றவர் திரு. வச்சிரவேலு முதலியார் அவர்களாவர். எப்படியோ அவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று, அவரிடம் சமய நூல்கள்—சாத்திர நூல்கள் பலவற்றைக் கற்றுக்கொண்டார். இன்று அவர்கள் சமய சாத்திர விற்பன ராக இருப்பதற்கு அதுவே அடிப்படைக் காரணம் என்றால் மிகையாகாது.

ஒரு முறை திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகள் அவர்கள் காஞ்சிபுரம் வந்து தங்கி, பல நாட்கள் சமய, சாத்திரச் சொற்பொழிவுகள் செய்தனர். அவர்தம் ஆழ்ந்த புலமையும் சமயத்தில் தளரா நம்பிக்கையும் நாடறிந்தவை. மிக உயர்ந்த சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் இளங் குழந்தைகளும் புரிந்துகொள்ளும் வகையில் விளக்கிச் சொல்லும் திறனை அவரன்றி வேறு யாரால் பெற முடியும்? பல நாட்கள் அவருடைய சொற்பொழிவைக் கேட்ட நான் தெளிந்த சமய உணர்வினைப் பெற்றேன். அவர்தம் சொற் பொழிவுத்தொடர் சென்னை 'செயிட்காலனி'யில் நடை பெற்ற போதும் நான் சில நாட்கள் பயன் பெற்றேன். பேச்சாற்றல் பெற்றதோடு இறைவனிடத்தில் தளரா நம்பிக் கையும் மன உறுதிப்பாடும் கொண்டு அடிகளார் வாழ்ந்து வந்தார். அவர்தம் நம்பிக்கையும் உறுதிப்பாடுமே அவர்தம் இறுதி நாளினை இனிமையாக அமைத்தன. பழநியில் பங்குனி விழாவில் முருகனை வழிபட்டுத் திரும்பிய அடிகளாரின் நல்லுயிர் பல்லக்கில் முடிய, அடுத்த ஊரில் சென்று திறப்

பதற்குள், இறையருளில் அவர் ஒன்றிய நிலையினை நாடே போற்றிப் பரவிற்று.

காஞ்சியில் மட்டுமன்றி வெளியூர்களில் நடக்கும் பல விழாக்களின் சார்பான சொற்பொழிவுகட்கும் நான் சென்று வந்தேன். அப்போது செய்யாறு என வழங்கும் திருவோத்தூரில் அவ்வை. துரைசாமிப் பிள்ளையவர்கள் உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருந்தனர். என்னை அவர் தம்பி எனவே கொண்டு போற்றுவர். அவ்வூர் விழாப் பேச்சுக்களில் என்னைக் கேட்காமலே நாளும் பொருளும் குறித்து அனுப்பிவிடுவர். மாலை பள்ளிவிட்டுச் சென்றால் மறுநாள் பள்ளிக்குத் திரும்பிவிடலாம். எனவே நானும் மறுக்காது அவர் கட்டளையை ஏற்றுப் பணி செய்வேன். அவ்வாறே ஒரு முறை வட ஆர்க்காடு மாவட்டத் தமிழாசிரியர் மாநாட்டை ஆரணியில் கூட்டி அதற்கு என்னைத் தலைமை தாங்க வைத்தார்கள். இவ்வாறே வேறு பல அன்பர்கள்—திருச்செந்தூர் தொடங்கிச் சென்னை வரையில் பலப்பல சமயச் சொற்பொழிவுகள் ஆற்ற அழைப்பார்கள். நானும் எதையும் தட்டாமல் ஏற்று என்னாலான பணிகளைச் செய்து வந்தேன். ஓய்வு நேரங்களில் காளப்பருடன் இருந்து, அவரை இனிய தேவாரத் திருவாசகப் பாடல்களைப் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்வேன். சில நாட்களில் இரவெலாம் பாட்டொலி கேட்டுக் கொண்டிருக்கும். அந்தச் சமய அடிப்படையிலேதான் என் வாழ்க்கையே அமைந்தது. ஆம்! நான் நம்பிக்கை அடிப்படையிலேயே வாழ்க்கையை அமைத்துக்கொண்டேன். ‘நம்பினார் கெடுவதில்லை நாலு மறை தீர்ப்பு’ என்ற பாரதியார் வாக்கை முழுதும் நம்பினேன். இன்றும் நம்புகிறேன். அந்நம்பிக்கை வீண் போவதில்லை.

இந்த வாழ்க்கை வரலாற்றை நான் ஏர்க்காட்டில் என் குறிஞ்சி மனையில் எழுதிக் கொண்டிருந்தபோது அடிக்கடி உள்ளே ஊர்ப் பக்கம் செல்லுவேன். வழியில் உள்ள கிறித்துவக் கோயிலைக் கடந்தே செல்ல வேண்டும். அதன் உச்சியில் 'The Just Shall have Him on Faith' என்று எழுதப் பெற்றுள்ளது. அது எவ்வளவு உண்மை என்பது எனக்குப் புலனாகும். ஆம். நல்லவர் வாழ்வெல்லாம் அந்த நல்ல நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்து வளர்ந்தது தானே. எனவே நானும் அந்த நம்பிக்கை அடிப்படை யிலேயே வாழ்வை அமைத்துக் கொண்டேன்.

கிறித்து பிறந்த நாளையும் ஆண்டுப் பிறப்பையும் போற்றிய வகையை மேலே காட்டினேன். அந்நாட்களில் தேவாரத்தில் கயிறு சாத்திப் படிப்பதை மேலே கூறினேன். அதில் வரும் பாடல்கள் வழி அந்த ஆண்டு நிகழ்ச்சியை அமைத்துக் கொள்வேன். வீட்டில் என் செல்வி மங்கை வளர்ந்து வந்தாள். அவளுக்கு மூன்று ஆண்டுகள் முடியும் நிலையில் எங்கள் உள்ளத்தில் 'மகன்' இல்லையே என்ற குறை உண்டாயிற்று. முன்னவள் வழி இருந்த மகனும் மறைய, நம் குடிக்கு நல்ல மகன் தோன்ற வேண்டுமே என்ற எண்ணம் தலைதூக்கிற்று. அதுகாலையில்தான் கிறித்தவப் புத்தாண்டு தொடங்கப் பெற்றது. அந்த ஆண்டின் தொடக்க நாளில் நான் சம்பந்தர் தேவாரத்தில் கயிறு சாத்தினேன். கேடிலியப்பருக்குக் கிடைத்த அதே வெண்காட்டுப் பதிகம் எனக்கும் கிடைத்தது. அப்பதிகம் அனைவரும் அறிந்ததே. அதிலும் அப்பாடல் எல்லாரும் அறிந்த ஒன்றே. என்றாலும் எழுதுகிறேன்.

**'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளநினை**
**வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா வொன்றும்**
**வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்**
**தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே'**

என்ற பாடலே அது. வெண்ணெய் நல்லூர்க் கேடிலியப்பப் பிள்ளைக்கு மகப்பேறு இன்மையின் தேவாரத்தில் கயிறு சாத்தி இப்பாடலைப் பெற்றனர் என்றும் உடனே திருவெண் காடு சென்று முக்குள நீரில் மூழ்கி, வெண்காடு விகிர்தனை வழிபட்டனர் என்றும் அதன் காரணத்தாலேயே மெய் கண்டார் தோன்றினார் என்றும் அவரது சிவஞானபோதமே சைவ சித்தாந்தத்தின் அடிப்படை என்றும் உலகம் அறியு மல்லவா. ஆம்! அத்தகைய அருட்பாடல் அன்று எனக்குக் கிடைத்தது.

நானும் கேடிலியப்பரைப் பின்பற்றினேன். குடும்பத் தோடு அந்தச் சனவரித் திங்களிலேயே திருவெண்காடு சென்று இறைவனை வழிபட்டேன். சீகாழியில் இறங்கி, அங் கிருந்து மாட்டு வண்டியில் சென்று ஓர் இரவு அங்கே தங்கி இறைவனுக்கு வழிபாடாற்றித் திரும்பினோம். அப்போது திரு. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் (மாண்புடை பக்தவத்சலம் அவர்தம் மைத்துனர்) அங்கே அறக்காப்பாள ராக இருந்தனர். அவர்கள் எங்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து அளித்தனர். வெண்காட்டு வேந்தையும் அன்னை யையும் முக்குளநீர் தோய்ந்தபின் தரிசனம் செய்து வரம் பெற்றுத் திரும்புகையில் புள்ளிருக்குவேளூர், சீகாழி, சிதம் பரம் ஆகிய தலங்களையும் கண்டு கண்டு வந்து சேர்ந்தோம். அதே நிலையில் சந்திராமணி கருவுற்றாள். பத்தாமாதம் ஆண் மகவு பிறந்தது. அனைவரும் மகிழ்ந்தனர். என்னை அதற்கு முன் கேலிசெய்த திரு. தேவராஜ முதலியார்போன்ற வர்களெல்லாம்கூட வியந்தனர். ஆம்! அந்தமகனுக்கு நான் ‘மெய்கண்டான்’ எனவே பெயரிட்டேன். என் நம்பிக்கை வீண்போகவில்லை என்பதை உலகம் உணர்ந்து கொண்டது.

இந்த நிகழ்ச்சி முதலில் யாருக்கும் தெரியாதிருந்தும், பிறகு பலருக்கும் தெரிந்துவிட்டது. காரணம் மெய்கண்டார்

கழகமும் அதன் அச்சாகிய திருஞானசம்பந்த முதலியாருமே யாவர். அவர்கள் ஒவ்வொரு கூட்டத்திலும் அந்த மெய்கண்டார் பிறப்பின் சிறப்பை விளக்கி, அது வெறும் கட்டுக்கதை அல்ல என்றும் இன்றும் நம்பினால் அதே பயன் உண்டாகும் என்றும் விளக்கி, சான்றாக என் பெயரைச் சொல்லி நான் பெற்ற வாழ்வை விளக்குவார்கள். இன்றும் காஞ்சியில் அவர் பேச்சைக் கேட்டு வருகின்ற அன்பர்கள் அதை என்னிடம் சொல்லிச் சொல்லிச் செல்வர். எனினும் நான் அதைப் பெருமையாகவோ விளம்பரமாகவோ யாரிடமும் சொல்லவில்லை—சொல்வதுமில்லை. எப்படியோ நம்பிக்கையின் அடிப்படை—உண்மையின் எதிரொலி—உலகுக்கு அறிமுகமாகிவிடுகின்றது. ஆம்! அந்த மகனே இன்று வளர்ந்து உடன் இருந்து உற்றுழி உதவுகிறான். 'தீவினை தோயா' என்ற நம்பிக்கையிலேயே என் வாழ்வும் நடைபெறுகிறது. அந்த நம்பிக்கையிலே என் மகன் வாழ்வும் அமைகின்றது.

ஒரு சில திங்கள் கழித்து நாங்கள் மறுபடியும் குடும்பத்தோடு திருவெண்காடு சென்று இறைவனுக்கு வழிபாடாற்றிப் போற்றி, நன்றி தெரிவித்துத் திரும்பினோம். பிறகு நான் அந்தப் பக்கம் எங்கு சென்றாலும் திருவெண்காடு சென்றே வருவேன். என் மகன் வயது வந்த பிறகு அப்பக்கம் சென்றால் திருவெண்காடு சென்றுவரச் சொல்லுவேன். அண்மையில் அவன் மணம் முடிந்த பிறகு இருவரும் வெண்காடு சென்று வணங்கி வந்தனர். அதே வேளையில் என் ஊரில் என் முன்னோர்கள் ஏற்பாடு செய்த அறக்கட்டளைகளெல்லாம் செம்மையுற நடைபெறுகின்றனவா எனக் கண்டு வரவும் எனது ஊர் நிலங்களின் விளைவு பற்றி அறிந்து வரவும் அடிக்கடி அங்கம்பாக்கம் செல்வேன். ஊரில் முன்னிருந்த பல பெரியவர்கள் மறைய மறைய, புதிதாக வருபவர்கள் ஊரின் ஒற்றுமையிலும் வளர்ச்சியிலும் அவ்வளவு அதிக

மாகக் கருத்திருத்தாமையின் ஊர் வளம் குன்றத் தொடங்கி விட்டது. ஒரு காலத்தில் எல்லா வகையிலும் சிறந்திருந்த எங்கள் ஊர், எல்லாவற்றிலும் நிலைகுலையத் தொடங்கிய தன்மையை நினைத்து வருந்தினேன். சில சமயங்களில் ஊரில் உள்ள பெரியவர்களை யெல்லாம் ஒன்று சேர்த்து எப்படியும் ஊரை வளம்பெறச் செய்ய முயல்வேன். பல சமயக் கூட்டங்களுக்கும் கோயில் விழாக்களுக்கும் ஏற்பாடு செய்வேன். என்றாலும் அவற்றாலெல்லாம் பயன் விளையக் காணவில்லை. அடுத்த நெய்க்குப்பம் கிராமத்திலும் எனக்கு நிலபுலன்கள் இருந்தமையின் அதையும் வளமாக்க முயன்றேன். அதற்குள் நெல் விலை உயர உயர மக்களிடம் பயிரிட ஆர்வம் பெருகுமென எதிர்ப்பார்த்தேன். நெய்க்குப் பத்தில் அந்த ஆர்வம் ஒருவாறு இருந்தது என்றாலும் அங்கம்பாக்கதில் அவ்வளவாக இல்லை. இருப்பினும் எப்படி யாயினும் தாழ்ந்த கிராமங்களை தலைநிமிர்த்த முயன்றேன்; முடியவில்லை.

இடையில் மற்றொரு ஏற்பாடும் நடைபெற்றது. எங்களூர் பாலாற்றின் தென்கரையில் உள்ளது. அடுத்த வடகரையில் சாலையும் இரெயில் பாதையும் உண்டு; அதை அடுத்துச் சுமார் 20 ஏக்கர் நிலம் இருந்தது. அதில் பாதி சமுதாய நிலம்; பாதி அரசாங்கத்துடையது. அவற்றைப் பெற்றால் அங்கே மறைந்த என் அன்னையின் பேரால் ஏதாவது கைத்தொழிற் பேட்டையோ கல்விச் சாலையோ அமைக்கலாம் என எண்ணினேன். என் முயற்சி ஓரளவு வெற்றியும் தந்தது. முக்கியமாக உள்ள சில அன்பர்கள் தாமே முன்வந்து, குறித்த ஒரு சிறு விலைக்குத் தத்தம் சமுதாய நிலத்தை எனக்கு எழுதித் தந்துவிட்டனர். மற்றவை வாங்கிய பிறகு அரசாங்க நிலத்தையும் பெற்றுத் தொடர்ந்து செம்மைப்பணி ஆற்றத் திட்டமிட்டேன். எனினும் அந்தப் பணி இன்னும் தொடங்கப் பெறவில்லை. என் ஆயுட் காலத்துக்குள் அப்பணியைத் தொடங்கி நடத்

துவேன் என்ற எண்ணத்தோடு வாழ்ந்து வருகின்றேன். அதற்கிடையில் தற்போது சென்னையிலும் இங்கே ஏர்க்காட்டிலும் வேறு வகையான பணிகளை என் சொந்த முயற்சியில் தொடங்கத் திட்டமிட்டுச் செயலாற்றவும் தொடங்கியுள்ளேன். இந்நிலையில் அந்தப் பாலாற்றங்கரைப் பணி எப்போது தொடங்கப் பெறுமோ அறியேன்.

மகன் பிறந்த மகிழ்ச்சியில் எங்களூர்க் கோயில் விழா வாற்றியது மட்டுமின்றி எங்கள் குலதெய்வமாகிய ஆட்டுப் புத்தூர் அம்மனுக்கும் விழா எடுத்தோம். எந்தச் சிறப்பு நடந்தாலும் அத்தெய்வத்தை வழிபடாது நாங்கள் செயலாற்றுவதில்லை. கடைசியாக என் மகனின் மணத்தின் போதும் அத்தெய்வத்திற்கும் வழிபாடாற்றினேன். நான் அங்கம்பாக்கமாயினும் எங்கள் வீட்டை 'ஆட்டுப்புத்தூரார் வீடு' என்றே அழைப்பர். ஒருவேளை எங்கள் முன்னோரில் யாராவது அவ்வூரிலிருந்து இங்கே வந்திருப்பார்கள் என எண்ணினேன். அங்கேயும் எங்கள் உறவினர் இருப்பதால் சில காலங்களில் செல்வதுண்டு. பொதுவாக இவ்வாறு பலவகையில் சமயநெறியிலும் தெய்வப்பணியிலும் காலங்கழித்து வந்த நான் மேலே படிப்பதைப் பற்றியும் சிந்தித்து வந்தேன். எப்படியும் அந்த ஆண்டில் 'பி. ஓ. எல்.' தேர்வு எழுதி வெற்றி பெற வேண்டும் என்று முயன்றேன். பள்ளியில் விடுமுறை பெற்றுப் பயின்று வந்தேன். மினர்வா பரசுராமன் அவர்கள் எனக்குப் பெரிதும் உதவினர். எல்லாருடைய வாழ்த்தின் வலத்தாலும், நம்பிக்கையின் உறுதியாலும் ஆழ்ந்து பயின்ற வகையாலும் நான் எழுதிய 'பி.ஓ.எல்.' தேர்வில் சிறக்க வெற்றி பெற்றேன். அதே வேளையில் காஞ்சியின் சூழலும் என் பட்டமும் என்னை மேலிடத்திற்கு—சென்னையில் ஏதேனும் ஒரு கல்லூரியில் பணிசெய்யும் நிலைக்குப் போகுமாறு அமைந்து வழிகாட்டின. இறையருள் நம்பிக்கையில் அதன்வழி சென்றேன்.

# 10. சென்னை வாழ்வின் தொடக்கம்

சென்னை வாழ்க்கை இன்பமான நிலையிலேயே தொடங்கப்பெற்றது. சென்னை நகரம் எனக்குப் புதிய தன்றே. எத்தனையோ முறை நாட்கணக்கிலும் மாதக் கணக்கிலும்கூட நான் சென்னையில் தங்கியுள்ளேன். என் மேல் படிப்புக்காக நான் எழும்பூரில் சில திங்கள் தங்கிய துண்டு. அக்காலத்திலெல்லாம் பழகிய பல பெரியவர்கள் என் சென்னை வாழ்க்கைக்கு உறுதுணையாக அமைந்தனர். எனினும் 1944, போர் நடைபெற்றுக்கொண்டிருந்த காலம். 1942இல் சென்னையே 'அல்லோல கல்லோலப்'பட்டுக் காலி செய்யப் பெற்றிருந்த நிலைமாறி, இடம் கிடைக்காத ஒரு சூழல் உருவாகியிருந்தது. எனவே நான் சென்னையில் கால் வைத்தபோது இடநெருக்கடி உண்டாகியிருந்தது. எனினும் இதை நான் இருபத்தைந்து ஆண்டுகள் கழித்து (1969இல்) எழுதும் போது விரிவடைந்த சென்னை நகரத்தில் உள்ள நெருக்கடி அப்போது இருந்ததில்லை.

சென்னையில் மிகப் பழைய பச்சையப்பர் கல்லூரியில் தமிழாசிரியர் பதவி பற்றிய விண்ணப்பம் குறித்த விளம்பரம் வந்தது. நானும் ஒரு விண்ணப்பம் அனுப்பினேன். காஞ்சி யின் பள்ளியை விட்டபோது இப்படி ஒரு வாய்ப்பு வரும் என்று நான் எண்ணவில்லை. என் கிராமத்தில் சென்று பயிர்த் தொழிலை வளர்க்க வேண்டும் என்ற எண்ணமே என் உள்ளத்தில் மேலோங்கி இருந்தது. 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால் உழன்றும் உழவே தலை'' என்ற எண்ணமே என் உள்ளத்தில் சுழன்றுகொண்டிருந்தது. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்றபடி அந்த வாழ்வையே நான் விரும்பினேன். அதனால் எங்கள் நிலங்களைச் செம்மைப் படுத்தும் பணியில் ஈடுபட்டேன். பல அண்டை நிலங்களை அணைத்து, மாற்றிச் சதுரங்களாக்க முயன்றேன். தென்னங் கன்றுகளை வைத்துப் பயிரிட ஏற்பாடு செய்தேன். எங்கள்

முன்னோர்களால் உதவி பெற்ற ஒருவர் நடேச முதலியார் என்பவர். அவர்தான், என் அன்னை இருவரும் காலஞ் சென்றபின் ஊர் நிலங்களையும் பிறவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் மேற்பார்வையில் இந்நிலங்களைப் பயிரிட ஏற்பாடு செய்தேன். நானும் அடிக்கடி ஊர் சென்று வந்திருந்தேன். பயிரிட உதவிய பண்ணை ஆட்களும் ஒத்துழைத்ததன்பேரில் விளைவு நன்கு பெருகியது; விளை பொருள்களின் விலையும் கூடிற்று. எனவே பயிரிட ஊக்கமும் பிறந்தது. இந்த நிலையில், என் நடுத்தர வயதிலே, பள்ளிப் பணிக்கு முற்றுப்புள்ளி அமைந்த காரணத்தால் முழுக்க முழுக்க உழவனாக மாறத் திட்டமிட்டு அதற்கு ஏற்பச் செயல்படத் தொடங்கினேன். சில நிலங்களை மாற்றிக் கிணறுகள் அமைக்கவும் திட்டமிட்டேன். தோட்டங்களை வளர்க்கத் தொடங்கினேன். இதற்கிடையில் என் அன்னை அடிக்கடி சொல்லிவந்த ஒன்றுமட்டும் என் உள்ளத்தில் உறுத்திக்கொண்டே இருந்தது. நான் பிறந்த மூன்றாம் நாளிலே, ½ படி அரிசிக்கும் ஒரு பழந்துணிக்கும் மாற்றாகச் 'சாதகம்' எழுதித் தந்த வள்ளுவர் குறிப்பேடு என் முன் இருந்தது. அதையே என் அன்னையார் அடிக்கடி நினைவூட்டி வந்தனர். என் முன்னோர்கள் வழிவழியாகப் பயிர் செய் கின்றவர்கள். நானும் அத்துறையில் அன்றும் செயல்பட நினைத்ததுண்டு. நான் ஊரிலேயே இருப்பதற்கு வாய்ப் பானமையின், அது கேட்டு அன்னையார் மகிழ்ச்சி கொண் டார்கள் என்றாலும் அவர்களுக்குச் சோதிடத்தில் இருந்த தளரா நம்பிக்கையினால் நான் என்றும் பயிர்த்தொழில் செய்யமாட்டேன் என்றே திட்டமாகச் சொல்லிக் கொண் டிருந்தனர். அதற்கேற்ப என் சூழ்நிலைகளும் அமைந்தன. காஞ்சியும் செங்கற்பட்டும் போட்டியிட்டு, என்னை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் பதவியில் இருக்கவைக்க முயன்று, அதில் காஞ்சிபுரம் வெற்றி பெற்றமையின்

காஞ்சிபுரத்தில் பணி ஏற்றமை அறிந்த ஒன்றே. பின்பு அந்தப் பணிக்கு முற்றுப்புள்ளி நேர்ந்தபொழுது மறுபடியும் ஏர்ப்பின் சுழல வாய்ப்பு உண்டு என எண்ணினேன். அப்போது சாதகங்களை நினைவூட்ட என் அன்னை யாரும் இல்லை. எனக்கும் சாதகங்களில் நம்பிக்கை இல்லை. சாதகக் கணிப்பில் தவறு உண்டென்றோ சாதகமே பொய்யானது என்றோ நான் கொள்வதில்லை. ஆயினும் அதுபற்றி அறிந்து எண்ணிக் கொண்டிருக்க வேண்டியதில்லை என்பதும் யாவும் இறைவன் திருவுளப் படியே நடக்கும் என்பதும் என் உள்ளக் கிடக்கை. எனவே தான் சாதகங்களை நான் நாடுவதில்லை. அதனாலேயே பின்னர் என் பிள்ளைகளுக்கு உரிய சாதகங்களை நான் எழுதி வைக்கவில்லை. எனினும் என்னைப் பொறுத்தவரையில் அன்றுமட்டுமன்று இன்றுவரையிலும் அந்தக் 'கல்லா நல்ல வள்ளுவரின்' சாதகப்படியே யாவும் நடை பெறுகின்றதை எண்ணி எண்ணி வியப்படை கின்றேன். அந்த அடிப்படையிலேயே நான் நினைத்த பயிர்த் தொழிலில் என்னை இணைக்காத சூழல் உருவாகி வந்தது.

திருக்கோயில்களின் நிருவாகப் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளும்பணி என்னைக் காஞ்சியில் நாடிவந்தபோது அதை நான் வேண்டாம் என ஒதுக்கினேன். இந்து அற நிலை யத்தில் திரு. T.M. நாராயணசாமிப் பிள்ளையும், திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியாரும் பணியாற்றிய காலத்தில் என்னை வலிய அழைத்து, காஞ்சி ஏகாம்பரநாதர் ஆலயத்தின் அறங்காவலனாக இருக்கவேண்டும் என வற்புறுத்தினர். நான் சென்னை சென்று நேரில் அவர்களைக் கண்டு பணிந்து, எனக்கு அப்பணியினைத் தரவேண்டா மென்று வேண்டி விடுதலை பெற்றுக் கொண்டேன். இந்த நிலையில் என் மைத்துனர் உக்கல் வடிவேலு முதலியார் அவர்கள் இளையனார் வேலூர் பாலசுப்பிரமணியர் திருக்

கோயிலுக்கு அறங்காவலராக வேண்டுமென்று, பலவகையில் முயன்று—சிலருக்கு ஏதேதோ கொடுத்து, இறுதியில் அப்பதவியைப் பெற்றார். அவரும் அவர் தந்தையாரும் நான் எவ்வளவு சொல்லியும் கேட்க மறுத்தனர். இளமையில் என் பாட்டனாரும் தாயாரும் எனக்கு ஊட்டிய அந்த உணர் வால் நான் அப்பணியினை ஏற்காது மறுத்ததோடு, மற்ற வரையும் அத்துறையில் நுழைய வேண்டாமென வற்புறுத்த வேண்டிய நிலையில் இருந்தேன். ஆயினும் அந்தப் பதவியால் இடையில் பலவகையில் பயன்பெற்ற சிலர் அவரைச் சூழ்ந்து செயலாற்ற, அவரும் அந்தப் பதவிக்கு ஆசைவைத்து முயன்றார்—வெற்றியும் பெற்றார். எனவே நானும் என் மனைவியும் குழந்தைகளும் அவர்களோடு கொண்ட தொடர் பினைத் துண்டித்துக் கொண்டோம். பின்பு அத்தொடர்பு ஓரளவு திரும்ப வந்ததேனும் அது முழு உள்ளப் பிணைப்பாக இல்லாமல், இறுதியில் என் மனைவியின் மறைவுக்குப் பின் அடியோடு அற்றுவிட்டது என்பதையும் இங்கே காட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தச் சூழலில் என் நெருங்கிய சுற்றத்தார் எனக் கருதும் அவர்களும் தூரத்தே நின்று விடவே நான் வேறு வகையில் என் நாட்டத்தைச் செலுத்தவேண்டியவனானேன். ஊரிலேயும் ஒற்றுமை குறைந்த காரணத்தால் பயிர் வகை களைச் செம்மையாகச் செய்ய முடியாத நிலை உருவாயிற்று. இந்த நேரத்தில் வாலாஜாபாத்தில் நான் பயின்ற பள்ளியின் பொறுப்பாளர் அப்பா, வா. தி. மாசிலாமணி அவர்களும் அங்கே செயலாற்றிய அண்ணா நா. ப. தணிகை அரசு அவர் களும் என்னை அங்கேயே வந்து பள்ளியில் தங்கிச் சில பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள வேண்டும் என வற்புறுத் தினர். எனினும் அப்பாவுக்குப் பின் அப்பள்ளியின் நிலை என்னவாகுமோ என்ற உளத் தடுமாற்றத்தாலும் வேறு சிலருக்கு நான் அங்கே நுழைவதால் சில பலன்கள் கிட்டாது

என்று அவர்கள் என் வருகையை விரும்பாததாலும் நான் அதை ஏற்க மறுத்துவிட்டேன். எனினும் அப்பா அவர்கள் எல்லாரிடமும் நான் அப்பள்ளியில் சேருவதற்காகவும் அங்கே ஒரு தமிழ்க்கல்லூரி தொடங்குவதற்காகவுமே காஞ்சிபுரப் பணியைக் கைவிட்டேன் என்று கூறிவந்தனர். ஆயினும் என் சூழல் என்னைச் சென்னைக்கு ஈர்த்தது.

வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக்கும் எனக்கும் நான் பயின்ற அந்த நாளில் இருந்து (2925) இன்றுவரை தொடர்பு இருந்துகொண்டே இருக்கிறது. ஏதோ படித்தோம் விட்டோம் என்று இல்லாமல், நான் அப்பள்ளியில் ஓர் அங்க மெனப் பலரும் எண்ணத் தக்க வகையில் நான் அப் பள்ளியொடு தொடர்பு கொண்டிருந்தேன். இடையில் ஓராண்டு அப்பள்ளியில் பணியாற்றியதையும் அப்போது நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் இந்த நூலில் முன்னரே குறித்துள் ளேன். அதற்குப் பிறகும் என் தொடர்பு பள்ளியில் பிணைந்தே இருந்தது.

அப்பா அவர்கள் பள்ளிக்குப் பார்வையிட யாரை அழைத்து வந்தாலும் (அவர்கள் பெரும்பாலும் சென்னையி லிருந்து வருபவராதலால்) என்னையும் அவர்களோடு ஏதாவ தொரு 'காரில்' வரச் சொல்லுவார்கள். வேறு பிறவிடத்தி லிருந்து வந்தாலும் எப்படியும் என்னை அழைத்துச் சென்று விடுவார்கள். பின் நான் புதுப்பட்டங்கள் பெற்றபோதும் பதவி உயர்வுகள் பெற்றபோதும் அவர்கள் என்னைப் பாராட்டத் தவறவில்லை. மேலும் பள்ளியின் பழைய மாணவர் மன்றம் அமைத்து, அதன் தலைவராக என்னை அமைத்து வாழ்த்தினார்கள். நான் ஐதராபாத் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவனாகச் சென்றபோது (1966) என்னை வாழ்த்தி அனுப்பினார்கள். ஆனால் நான் 1967இல் திரும்பிவந்தபோது அவர்கள் நோய்வாய்ப்பட்ட நிலையில்

இருந்தார்கள். அவர்தம் கடைசிக் காலம்வரையில் அவர்கள் என்னைத் 'தம்பி', 'தம்பி' என அழைத்துப் போற்றிய தன்மையினை என்னால் மறக்க முடியாது.

இடையில் மறைந்த என் அன்னைக்கு நிலைத்த நினைவாக ஏதேனும் கல்வி, கைத்தொழில் பற்றிய நிலையம் ஒன்று தொடங்க வேண்டுமென்ற எண்ணம், அன்னையார் மறைந்த நாளிலிருந்து என் உள்ளத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. அதற்கென. முன் காட்டியபடி புளியம்பாக்கத்தில் இரெயிலுக்கும் கற்பாதைக்கும் அடுத்து, பாலாற்றங்கரையினுள் சமுதாய நிலத்தை வாங்க முயன்றேன். பலர் முன் வந்து குறைந்த விலையில் சுமார் நான்கு ஏக்கர் நிலத்தைக் கொடுத்தனர். இன்னும் மூன்று ஏக்கர் நிலம் உள்ளது. அதையும் வாங்கி, பக்கத்திலுள்ள அரசாங்கத்துக்குரிய எட்டு ஏக்கர் நிலத்தையும் கேட்டு வாங்கி, பதினைந்து ஏக்கரில் வள்ளியூர் என்ற ஊர் அமைத்து ஒரு கல்வி நிலையமும் தொழில் நிலையமும் அமைக்கத் திட்டமிட்டேன். பலர் வாலாஜாபாத்தில் மேற்கே மாசிலாமணி முதலியார் கிழக்கே நான்—ஆக இருவரும் கல்விப்பணி ஆற்றுவது ஊருக்கே நல்லது என்றனர். இந்த நிலையிலும் இதற்கு மருந்தாக அப்பா அவர்கள் இந்த யோசனையைக் கைவிடல் வேண்டி, அவர் பள்ளியில் சில பொறுப்புக்களை ஏற்க அழைத்திருக்கலாம். எப்படியோ, அப்பணி இன்றும் அந்த அளவிலேயே உள்ளது. என்றாவது ஒருநாள் அப்பணி நிறைவேறும் என்ற உளத்தோடு உள்ளேன். எனினும் இதற்கிடையில் என் அன்னையின் பெயரால் சென்னை அண்ணாநகரில் அமைத்துள்ள கல்விக்கூடம் (1968-இல் தொடங்கப்பெற்றது) நன்கு வளர்ந்து என் அன்னையின் பெயரை என்றும் வாழவைக்கும் நிலையில் ஆக்கம்பெற்று வருவதை எண்ணி மகிழ்கின்றேன்.

என்னுடைய வாழ்வின் திருப்பங்கள் நேரும்போது நான் இறைவனையே துணையாகக் கொள்ளுவது மரபு. காஞ்சி

வாழ்க்கையும் ஊர் வாழ்க்கையும் ஒத்துவரா நிலையில் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியின் தமிழாசிரியர் தேவை பற்றிய விளம்பரம் கண்டேன். அதற்கென விண்ணப்பம் செய்ய நினைத்தேன். எனினும் அதற்குரியார் யாரையும் நான் அறியேன் ஆதலாலும் அதற்குரிய வகையில் என்னை ஆற்றுப்படுத்தி வழிகாட்டுவார் யாரும் இல்லை என்ற நிலையாலும் செய்வதறியாது திகைத்தேன். சென்னைக்கு ஒரு திங்களில் சுமார் இருபது முறை சென்று வந்திருப்பேன். எனினும் அந்தச் சூழலுக்கிடையில் நான் இறைவனை முற்றும் நம்பிய காரணத்தால் அமைந்த சூழலே எனக்கு உரியவரிடம் ஆற்றுப்படுத்தியது. அதனாலேயே ஒருவருக்கு என விளம்பரம் செய்திருந்த போதிலும் மூவர் அதற்கெனத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். திரு. அ. ச. ஞானசம்பந்தர், திரு. க. அன்பழகர், நான் ஆகிய மூவரும் 1944 ஜூன் இறுதி வாரத்தில் ஒருவர் பின் ஒருவராகத் தமிழ்த் துறையில் விரிவுரையாளர்களாகச் சேர்ந்தோம்,

அதே வேளையில் புலவர் அன்பு கணபதி அவர்களும் பயிற்றாளராகப் பணி ஏற்றார். எங்கள் அனைவரையும் அத்துறைத் தலைவராகிய மோசூர் கந்தசாமி முதலியார் அவர்கள் அன்புடன் ஏற்றுப் புரந்தநிலையை இன்று நினைத்தாலும் உள்ளமும் உடலும் ஒருசேரச் சிலிர்க்கின்றன. டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் மொ. அ. துரை அரங்கனார் போன்ற பெருமக்களோடு கலந்து பணியாற்றும் பொறுப்பினை மேற்கொண்ட நிலையில் இறைவனையும் அன்னையையும் பச்சையப்பரையும் உளத்தால் போற்றி வாழ்த்தினேன். ஏதோ ஒரு வேகம் உந்த, மாற்றுப் பணிக்கென 75-5-125 ரூபாய் ஊதியத்தில் பச்சையப்பரில் நான் கால் வைத்த அந்த நாளில் எனது ஓய்வு நாள் வரையில் தொடர்ந்து இதே கல்லூரியில் பணியாற்றுவேனென்றோ, தொடர்ந்து பல வகையில் உயர்ந்து வளர்வேனென்றோ,

உலகில் ஒருவனாக வாழ்ந்தமைக்கு ஏற்ற சின்னங்களுடன் பணி யாற்றுவேனென்றோ, அதே வேளையில் சில கல்வி நிலையங் களை உருவாக்குவே னென்றோ நான் கனவிலும் நினைக்க வில்லை. ஓய்வுபெற நிற்கும் இந்த ஆண்டில், இந்த வாழ்க்கைக் குறிப்பை எழுதும் நிலையில் அந்த நாள் என்முன் ஒளிவிடுகின்றது. ஆம்! 1944இல் பச்சையப்பரில் கால்வைத்த நான் பல வாழ்வின் மேடுபள்ளங் களைக் கண்டு பல்வேறு மக்களொடு பழகி, பல்வேறு அனுபவங்களைப் பெற்று வாழ்ந்து இன்று இந்தக் குறிப்பை யும் எழுதுகிறேன்.

# முடிவுரை*

என் காஞ்சி வாழ்வு எட்டு ஆண்டுகளே யாயினும் அந்த எட்டு ஆண்டுகள் என் வாழ்வில் எதிர்பாராத வகையில் பலப் பல அனுபவங்களையும் வாழ்வின் சூழல்களையும் பெற எனக்கு உதவின எனலாம். இளமை கடந்து, காளைப் பருவமாகக் கழிந்த அந்த எட்டு ஆண்டுகளில் நான் காஞ்சி யில் நல்லவரோடு கலந்து பழகி நலம் பெற்றிராவிடின், என் பிற்காலம் எப்படி அமைந்திருக்கும் எனச் சொல்ல முடியாது. கிராமங்களிலிருந்து காஞ்சிபுரத்துக்கு அக்காலத்தில் படிப்பிற் காகவும் பிற செயல்களுக்காகவும் வந்த என் உறவினர் சிலர் நிலைகெட்டமையின் என் அன்னையர் என்னைக் காஞ்சிபுரம் அனுப்பவே அஞ்சினர் என்பதை நூலுள் குறித்துள்ளேன். எனவே அவர்கள் அச்சத்தைப் போக்கும் வகையிலும் மிக எச்சரிக்கையாக நான் நடந்து கொண்டு, நல்ல பெயருடன் காஞ்சியைக் கடந்து சென்னை வந்து சேர்ந்தேன்.

* நூல் வெளியீட்டின்போது (1980) எழுதியது.

இந்த நூலினை நான் என் 55-ஆவது வயதில் (1969) எழுதினேன் எனக் குறித்தேன். அதுவும் நான் தங்கி இருந்த ஏர்க்காட்டு மலை உச்சியில் 'குறிஞ்சி' மாளிகையில் இருந்து எழுதினேன். அந்த மலைவாழ்வும் அதன் இடையில் அமைந்த மக்கள் நிலையும் எனக்கு இதை எழுத ஊக்கம் ஊட்டின. எனது நூல்களில் சில சொற்பொழிவுத் தொகுப் புக்களாக அமைய, சில ஆய்வு நூலாக அமைய, சில பயண நூல்களாகவும் கட்டுரைகளாகவும் அமைந்துள்ளன.

இவற்றுள் சிலவற்றை நான் மலை உச்சியிலிருந்தும், தனி இடங்களிலிருந்தும் எழுதினேன். என் 'இளமையின் நினைவு கள்' உதகை மலை உச்சியில் இருந்து எழுதினேன் என்பதை அந்த நூலிலே குறித்துள்ளேன். அப்படியே 'கவிதையும் வாழ்க்கையும்' போன்ற வேறு சில நூல்களையும் அங்கிருந்தே எழுதினேன். '19ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடையும், வேறுசில நூல்களும் கோடைக்கானல் மலை உச்சியிலும் அதைச் சார்ந்த சண்பசனூரிலும் எழுதப்பெற்றவை. 'சமுதாயமும் பண்பாடும்' ஈரோடு நகரை அடுத்த பெருந் துறை மருந்தகத்து விருந்தினர் விடுதியில் எழுதப்பெற்றது. சில கட்டுரைகள் குற்றாலத்தில் எழுதப் பெற்றன. அப்படியே இந்த நூலையும் ஏர்க்காட்டு மலையில் எழுதி முடித்தேன்.

இந்த நூல் எழுதி இன்றுப் பத்து ஆண்டுகளுக்குமேல் கழிந்து விட்டன. இதை எழுதின உடனே பதிப்பித்திருக் கலாம். இதற்குப் பிறகு எழுதிய என் நூல்கள் சிலவும் வெளி வந்து விட்டன. ஏனோ இதுமட்டும் பத்து ஆண்டுகள் கழித்து வெளிவருகின்றது. இதற்கு என்ன காரணம் என்று என்னாலேயே சொல்லமுடியாது. இப்போதாவது இது வெளி வந்தமை குறித்து நான் மகிழ்கின்றேன்.

இந்நூல் எழுதியபோது எனக்கு வயது ஐம்பத்தைந்து— ஓய்வுபெற வேண்டிய காலம். ஓய்வுபெற்றபின் நிறையப்

படிக்கலாம் அல்லது எழுதலாம் என்று எண்ணிய நேரங்கள் உள. எனினும் நான் ஓய்வு பெறுவதன் முன்பே என் அன்னையின் நினைவாக 'வள்ளியம்மாள் கல்வி அறத்' தினைத் தொடங்கினேன். 1968இல் 5 பிள்ளைகளுடனும் மூன்று ஆசிரியர்களுடனும் தொடங்கிய பள்ளி தற்போது 1600 பிள்ளைகளையும் 65 ஆசிரியர்களையும் கொண்டு வளர்ந்துள்ளது. பள்ளி முதல்வரின் தளரா முயற்சியாலும் ஆசிரியர்தம் உழைப்பினாலும் பெற்றோர்தம் ஒத்துழைப் பாலும் இப்பள்ளி இக் குறுகிய காலத்தில் நன்கு வளர்ந்த தோடு நல்ல தரத்தினையும் நிலைநாட்டியுள்ளது. நான் அனைவருக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தப் பள்ளிப் பணியில் என்னை மூழ்குவித்துக் கொண்ட காரணத்தாலே என்படிப்பும் எழுத்தும் பெரும் அளவு குறைந்துவிட்டன எனலாம். இன்றியமையாத ஆய்வுக் கட்டுரைகள்—சொற்பொழிவுகள் அடிப்படை பற்றி எழுதிய எழுத்துக்கள் தவிர்த்து மற்றவற்றை நான் நினைக்கவே முடியவில்லை. என் பழைய எழுத்துக்களை ஒருநாள் துருவி ஆராய்ந்த போதுதான் இந்த எழுத்துப் பிரதியும், தென்னாட்டுக் கோயில்கள் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய (250 பக்கம்) மற்றொரு எழுத்துப்பிரதியும் கிடைத் தன. உடனே இதை வெளியிடவேண்டுமென நினைத்து ஆவன மேற்கொண்டேன். (ஆங்கில நூலாகிய மற்றொன் றையும் விரைவில் வெளியிட ஏற்பாடு நடைபெற்றுக் கொண்டு வருகிறது.) என், 'எம்.லிட்.' பட்டத்துக்கு எழுதப் பெற்ற (32 ஆண்டுகளுக்குமுன்) தேவாரம் பற்றிய ஆங்கில ஆய்வுக் கட்டுரையும் இன்னும் வெளியிடப் பெறாமலேயே உள்ளது.

இந்த நூலில் ஒரு சிலரையும் கொள்கைகளையும் சற்று வன்மையாகக் காட்டியுள்ளதாக நினைக்கிறேன். இன்று எழுது வேனாயின் இந்த அளவு வேகம் இருக்காது. ஆயினும்

பத்து ஆண்டுகளுக்கு முன் எழுதிய எழுத்தினை அப்படியே விட்டு விடுதலே சரி என்ற எண்ணத்தில் மாற்றம் ஒன்றும் செய்யாமலேயே விட்டுவிட்டேன்.

இந்த நூலை எழுதிய காலத்துக்கும் இதில் காணப் பெறும் காஞ்சி வாழ்வின் காலத்துக்கும் இடையில் கால் நூற்றாண்டு கழிந்தது. அதற்கிடையில் எத்தனையோ மாறு பாடுகள் உண்டாகி விட்டன. அப்படியே இந்த நூல் எழுதிய அன்றைக்கும் இன்றைக்கும்—சுமார் பத்து ஆண்டுகள் இடை வெளியில்—எத்தனையோ மாறுபாடுகள் உண்டாகியுள்ளன. மக்கள் வாழ்க்கை முறை, வாழ்க்கைத் தரம்—அரசியல் நெறி பிறவகைகள் அனைத்திலும் எத்தனையோ மாறுபாடுகள் உண்டாகியுள்ளன. இந்நூலில் வாழ்ந்தவர்களாகக் குறிக்கப் பெற்றுள்ள சிலர் இன்று மறைந்துவிட்டனர், முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர் என் முன்னவள், திரு. காளப்பர், ஆத்மானந்த அடிகளார் போன்றவர்கள். எனவே நூலில் அவர்கள் வாழ்ந்ததாகக் காட்டும் நிகழ்ச்சிகள் பல அவர்தம் கடந்தகால நிகழ்ச்சிகளாக அமைந்துவிட்டன என்பதை இங்கே குறிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்த நூலின் வழியே என் வாழ்க்கையின் ஒரு பகுதியைக் காட்டினேன் என்றாலும், இதனால் யாருக்கும் பயனோ பிறவோ விளையும் என்று நான் கருதவில்லை. பல பேரறிஞர் தம் வாழ்க்கை வரலாறுகள் வையத்தில் உலவுகின்றன. தமிழகத்திலும் திரு. வி. க. போன்ற பேரறிஞர்கள் எழுதிய வாழ்க்கை வரலாறுகள் மக்கள் வாழ்வின் வழிகாட்டிகளாய் கலங்கரை விளக்கங்களாக நின்று நன்கு நிலவும் என்பது உண்மை. அத்தகைய ஒன்று இது அன்று. ஏதோ நான் என் வாழ்வில் பெற்ற அனுபவங்களை எழுதவேண்டும் என்ற ஆசை தூண்டிய காரணத்தாலே இதை எழுதினேன். என்

'இளமையின் நினைவுகளைக் கண்ட சில அன்பர்கள்—காஞ்சி யில் வாழ்ந்த சில நல்லவர்கள், அவர்களொடு தொடர்புடைய 'காஞ்சி வாழ்க்கை'யைப் பற்றியும் என்னை எழுதத் தூண்டிய காரணமும் ஒன்றாக அமைந்தது. ஆயினும் அவ்வாறு எழுதப்பெற்ற இந்த எழுத்து, பத்து ஆண்டுகள் கழித்து வெளிவரும்போது அவருள் சிலர் இல்லை. அவர் களும் இருந்து இந்த நூலின் படியினை அவர்கள் கையில் தந்திடும் வாய்ப்பினைப் பெற்றிருப்பேனாயின் நான் இன்னும் பெரிதும் மகிழ்ந்திருப்பேன். எப்படியோ இன்று இந்த நூல் என் நூல் வரிசையில் ஒன்றாக இடம்பெறுகின்றது. இதைத் தொடர்ந்து பெரும்பாலாக அமைந்த என் சென்னை வாழ்வைப் பற்றி எழுதலாமா வேண்டாமா என எண்ண மிட்டுக் கொண்டிருக்கிறேன். இன்றுள்ள என் வாழ்நாளில் பாதிக்குமேல் சென்னை வாழ்வாகவே அமைந்துவிட்டதோடு இனியும் இச்சென்னை வாழ்வே நிலைபெறுமோ என்னுமாறு செயல்கள் அமைகின்றன. எனினும் சிற்சில சமயங்களில் எல்லாவற்றையும் விடுத்து, வேறு எங்கேனும் தனி இடத்தைச் சார்ந்து இறையருளில் ஒன்றிக் கிடக்கலாமா என்ற உணர்வும் அரும்புவதுண்டு. எது எப்படியாகும் என்று சொல்ல முடியாத வாழ்வுப் பாதையில், என் பிற்காலம் எப்படி அமையும் என நான் அறுதியிட முடியுமா? எல்லாம் அவன் செயலே என அமைதியுற்று வாழ்ந்து வருகின்றேன்.

எங்கோ கிராமத்தில் பிறந்து எப்படியோ வளர்ந்து, பயின்று, எங்கெங்கோ திரிந்து, பச்சையப்பரில் பாதி வாழ்வைக் கழித்து, அன்னையின் பெயரால் அமைந்த பள்ளியின் முழுப்பொறுப்பினையும் ஏற்று, இன்று செயல் புரிகின்ற நான் இனியும் இக்காஞ்சி வாழ்வு பற்றியும் பிற வற்றைப் பற்றியும் அதிகமாகக் கூறி உங்கள் பொன்னான நேரத்தையும் வீணடிக்காது இந்த அளவோடு என் எழுத்தினை இப்போது நிறுத்திக் கொள்ளுகிறேன். அனைவருக்கும் வணக்கம்.

# 1. சென்னை வாழ்வின் தொடக்கம்

கற்றார் வாழ் காஞ்சியில் எட்டு ஆண்டுகள் கழித்தபின், எப்படி நான் சென்னைக்கு வந்து சேர்ந்தேன் என்பதையும் பச்சையப்பரில் எவ்வாறு பணி ஏற்றேன் என்பதையும் ஓரளவு சுருக்கமாகச் சென்ற பகுதியில் காட்டியுள்ளேன். என் வாழ் நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக, என் அறுபத்திரண்டு வயதுவரை என்னை அரவணைத்து ஆதரித்த பச்சை யப்பரில் வாழ்ந்த வாழ்க்கையினை ஓரளவு எண்ணிப் பார்க்க நினைக்கிறேன். முன்பெலாம் உள்ளமை போன்று அல்லாமல் என் வாழ்வு விரிந்து பரந்த சென்னையில் பலருடன், பல நாட்டினருடன் கலந்து அமைந்ததை எண்ணிப் பார்க் கின்றேன். படக்காட்சி போன்று ஒன்றன் பின் ஒன்றாக நிழலிடுகின்றன. முறையாக இன்றேனும் எண்ண நெறி நின்று முப்பது ஆண்டுகளுக்கு மேலான என் வாழ்வின் நிகழ்ச்சிகளை ஓரளவு எண்ணிக் குறிக்கலாம் என மேலே செல்லுகின்றேன். என் முப்பதாவது வயதில் சென்னை வந்து சேர்ந்த நான், பச்சைப்பரில் 30 ஆண்டுகளுக்கு மேலாகப்பணியாற்றியதோடு, நிலைத்து இங்கே தங்கி என் வாழ்வையும் என் மக்கள் வாழ் வையும் அமைத்துக் கொண்ட நிலையினை எண்ணுகிறேன்; எண்ணம் தொடர்கிறது.

காஞ்சியினை நான் விட்டு வந்ததற்குக் காரணத்தைத் தெளிவாக முன் குறிப்பிடவில்லை நான் வித்துவான் தேர்வு முடித்ததும் நான் பயின்ற செங்கற்பட்டு செயிண்டு கொலம் பாஸ் பள்ளித் தலைவரும் காஞ்சி ஆந்திரசன் உயர்நிலைப் பள்ளித் தலைவரும் போட்டியிட்டு, தத்தம் பள்ளிக்கு நான் வர வேண்டும் என முயன்றதை முன் குறிப்பிட்டுள்ளேன். அப்போது காஞ்சி, செங்கற்பட்டு, அரக்கோணம் என்ற மூன்று ஊர்களிலும் உள்ள பள்ளிகள் ஒரே திருச்சபையின் கீழ் இயங்கி வந்தமையின் ஆசிரியர் நியமனங்கள் அனைத்தும் அவர்தம் கூட்டுச்சபையிலேயே முடிவு செய்யப்பெறும்.

காஞ்சிப் பள்ளியின் தலைவர் என்னிடம் முன்னரே இசைவு பெற்றமையின் அச்சபையின் முடிவு அவர் பக்கம் சென்றது. எனவே காஞ்சிபுரம் ஆந்திரசன் பள்ளியில் சேர்ந்தேன். பள்ளியின் தலைவராகிய திரு. ஞானாதிக்கம் அவர்களும் அவர்கள் ஓய்வுபெறும் வரையில் (அப்பள்ளியில் நாற்பது ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றியவர்) என்னை அன்புடன் போற்றிக் காத்தார். நானும் மாணவரிடத்தும் பொதுமக்கள் இடத்தும் நன்கு பழகி மதிப்பினைப் பெற்றமையின் அவர் காத்தலுக்கு உரிமையானேன். அப்பள்ளி கிறித்தவப் பள்ளி யாயினும் பல இந்து விழாக்களைக் கூட அங்கே நடத்த இசைவு தந்தார். திரு.வி.க. அவர்களைக் காஞ்சிக்கு அழைத்து அவருக்கு மணிவிழா ஆற்றியதும் அப்பள்ளி மண்டபத்திலே தான். 1941இல் என் அன்னையர் இருவரும் மறைந்த நிலையில் தொடர்ந்து நீண்ட விடுப்பினையும் தந்து ஆறுதல் கொள்ள இடந்தந்த நல்லவர் அவர். பள்ளியில் தமிழாசியர் பதவி காலியான போது நான் பரிந்துரைத்தவரையே நியமனம் செய்தவர். ஆயினும் அதற்கு அடுத்து அத்தலைமைப் பொறுப்பினை ஏற்றவர் அவருக்கு மாறுபட்டவராக இருந் தார். அத்துடன் புதிதாக வேறு தமிழாசிரியர் வந்தார். என் விருப்பப்படி வந்தவர் திருப்பதி வேங்கடேச்சுரர் தமிழ்க் கல்லூரியில் இடம் கிடைத்தமையால், சென்றுவிட வேறு ஒருவரை நியமனம் செய்ய வேண்டி வந்தது. தகுதி இல்லா திருந்தும் ஒருவரை அப்பதவியில் அமர்த்த முயன்று, அதில் வெற்றியும் பெற்றார் அவர். புதிதாக வந்தவரும் எனக்குப் புதியவர் அல்லர். நான் வாலாஜாபாத் இந்துமத பாடசாலை யில் பயின்ற காலத்து, தம் வீட்டில் என்னை இருத்தி உபசரித்த அன்றைய அப்பள்ளியின் முதல்வரேயாவர், அவரும் அவர்தம் துணைவியாரும் என்னைத் தம் மகன் எனவே போற்றியதை அங்கே குறித்துள்ளேன். (அவர்களுக்கு மகப்பேறு இல்லை) நல்லவர் அத்தகைய தமிழில் புலமை

பெற்றவராயினும் பட்டம் பெற்றுத் தகுதி பெறவில்லை. எனினும் அவர் நியமனம் செய்யப் பெற்றார். தகுதியின்மை யாலும் ஆந்திரசன் பள்ளியில் பல ஆண்டுகள் நான் பணி யாற்றியமையாலும் அவர் புதியதாக வந்தமையாலும் அவருக்குக் கீழ் வகுப்புகள் தரப்பெற்றன. நான் மேல்வகுப்பு களைப் பகிர்ந்து கொள்ளலாம் என்று கூறிய போதிலும் பாடசாலைக் கண்காணிப்பாளர்கள் அதற்குச் சட்டம் இடம் தராது என்று கூறியமையின் கீழ் வகுப்புகளே அவர் எடுத்தார். என்றாலும் தன்னிடம் பயின்ற மாணவன்-சிறுவன் தனக்கு மேலாக (Senior) தான் கீழாக (Junior) இருப்பதா என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் எப்படியோ தோன்றிற்று. எப்படிப்பட்ட நல்லவர் இப்படி மாறிவிட்டாரே என நினைத்தேன். அவர் காஞ்சிபுரத்தில் சொந்த வீட்டிலேயே இருந்தமையின், சென்று அன்னையாரைக் கண்டு ஓரளவு குறையினைக் கூறினேன். அவர்கள் வருந்தினார்கள்; எனினும் அவர்களால் ஒன்றும் செய்ய இயலாது.

தலைமை ஆசிரியர் அவர்களும் இவரும் என்னை எப்படி யாவது பள்ளியிலிருந்து வலிது விலக்க முயன்றனர். அவர்கள் எண்ணம் தீயதாயினும் எனக்கு நன்மையாகவே முடிந்தது. அவர் தம் செயலே என்னை மேலே படிக்கத் தூண்டி 'பி.ஓ எல்' பட்டம் பெற வழிகாட்டிற்று. எனவே அவர் களைப் போற்றி வழிபட்டேன். இடையிடையே நீண்ட விடுமுறைகள் பெற்று இரண்டாண்டுகளில் பட்டப்படிப் பினைத் தனியாக முடித்தேன். அதற்கு இடையில் பள்ளியில் ஆண்டுதோறும் நடைபெறும் அரசாங்கச் சோதனையில் மாவட்டக் கல்வி அதிகாரியும் வட்டக்கல்வி அதிகாரியும் பள்ளிக்கு வந்தனர். பெரும்பாலும் மாவட்டக் கல்வி அதிகாரி தமிழ் வகுப்பிற்குப் பார்வையிட வரமாட்டார்; அது அவர்தம் பதவிக்கு கௌரவம் தராத ஒன்று என எண்ணி

இருப்பார். எல்லாக் கல்வி அதிகாரிகள் நிலையும் அப்படித் தான். எனவே வட்டக் கல்வி அதிகாரியே (Deputy Inspector of Schools) பள்ளி இறுதி வகுப்பு வரையில் தமிழ் வகுப்பு களைப் பார்வையிடுவார். அப்படியே என் வகுப்பினைப் பார்த்த வட்டக் கல்வி அதிகாரி, மேலதிகாரியுடன் சேர்ந்து என்னைப் பற்றி என்ன குறை எழுதலாம் என ஆலோசித்தனர் போலும். ஒன்றும் தெரியவில்லை. எனவே 'இவர் வகுப்பின் தரத்துக்கு உயர்நிலையில்—உயர்ந்த நடையில் பாடம் நடத்துகிறார்' எனக் குறித்தனர். அதாவது நான் பள்ளி வகுப்பிற்குப் பாடம் நடத்தத் தகுதி அற்றவன் (கல்லூரியில் வேண்டுமாயின் பணியாற்றலாம்) என்ற குறிப்புடன் அவர்கள் எழுதினர் போலும். அவர்தம் வாழ்த்தும் பலிக்க, நான் அடுத்த ஆண்டே பச்சையப்பர் கல்லூரியில் பணி ஏற்றேன். எனினும் அதற்கு முன்பே வாலாஜாபாத்திலோ அதன் சுற்றுப்புறத்திலோ அன்னையின் பெயரால் கல்விப்பணி தொடங்க முயன்றதையெல்லாம் முன்னரே குறிப்பிட் டுள்ளேன்.

1944 ஜூன் 27ஆம் தேதி சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் விரியுரையாளனாகப் பணி ஏற்றேன். அதே சென்னையில் இன்று அரசியலில் ஆழ்ந்துள்ள அன்பழகன் அவர்களும் சேர, அங்கேயே இருந்த ஞானசம்பந்தம் அவர் களும் விரியுரையாளராக உயர்த்தப் பெற்றார். புலவர் அன்பு கணபதி அவர்களும் சேர்ந்தனர். எங்களை அன்று கல்லூரி முதல்வர் டாக்டர் B. V. நாராயணசாமி நாயுடு அவர்களும் துறை முதல்வர் மோசூர் கந்தசாமி முதலியார் அவர்களும் அத்துறையில் இருந்த டாக்டர் மு. வரதராசனாரும் மற்றவர் களும் அன்புடன் வரவேற்றனர். என் சென்னை வாழ்வும் தொடங்கியது.

சென்னையில் அக்காலத்தும் (1944) வாடகைக்கு வீடு கிடைப்பது கடினமே. இன்று காணும் பல புறநகர்ப் பகுதி

கள் தோன்றாத காலம். சென்னை நகர மேற்கு எல்லையே பச்சையப்பர் கல்லூரியோடு முடிவடைந்த காலம். அமைந்த கரை ஊராட்சியாக இருந்த காலம். எனவே எனக்கு உடன் தங்க வீடு கிடைக்கவில்லை. ஊரிலும் நிலங்களைப் பார்வையிட வேண்டி இருந்தது. முன் பகுதியில் கூறியபடி திரு நடேச முதலியார் அவர்களே ஊர் விவகாரங்களையெல் லாம் பார்த்து வந்தார். எனவே இடையில் ஒரு மாதம் (சூலை) செங்கற்பட்டில் இரெயிலடிக்கு அருகிலேயே ஒரு வீட்டில் சிறுபகுதியை வாடகை எடுத்து, அங்கிருந்து இரெயிலில் வந்து சேர்ந்தேன். காலை 7 மணிக்குப் புறப்பட்டு மாலை 7 மணிக்குத் திரும்பச் செல்ல வேண்டும். குழந்தை மங்கையர்க்கரசி மூவாண்டு நிரம்பப் பெற்றமையின், மயிலை சேந்தோமிலுள்ள ஒரு விடுதியில் குழந்தைகள் வகுப்பில் சேர்த்து, அங்கேயே தங்கவும் ஏற்பாடு செய்தோம். நாங்கள் சென்னை வந்த பிறகும் இரண்டாண்டுகள் அங்கேயும், பின் அங்கே சைவ உணவு நீங்கப் பெற்றமையின் ஓராண்டு தியாகராயநகர் வித்யோதயாவிலும் தங்கிப் படிக்க ஏற்பாடு செய்தோம்.

செங்கற்பட்டிலிருந்து ஒரு மாதம் வந்து கொண்டிருந்த போது, இங்கே இடம் தேடவும் முனைந்தமையின், பவழக் காரத் தெரு கோடியில் ஒரு மேல்மாடி இடம் கிடைத்தது. அப்போது அதற்கு இருபது ரூபாய் வாடகை (இப்போது இரண்டாயிரத்துக்கு மேலும் இருக்கலாம்). அங்கிருந்து கடற்கரை இரெயில் நிலையம் வந்து சேத்துப்பட்டில் இறங்கிக் கல்லூரிக்கு வருவேன். டாக்டர்மு. வரதராசனார், டாக்டர். துரைஅரங்கனார், கல்லூரி எழுத்தர் பாஷ்ய ராமாநுஜம் ஆகியோர் முயற்சியால் கல்லூரிக்கு அருகிலேயே வைத்திய நாதமுதலித் தெருவில் ஒருதனி வீடே கிடைத்தது. 1949இல் அமைந்தகரையில் சொந்தமாக வீடுகட்டிக் குடிபுகும் வரையில் அங்கேயே குடிஇருந்தோம். நல்ல நண்பர்கள் சூழ நாட்கள் கழிந்தன.

இடம் புதியதாயினும், அனைவரும் நன்கு பழகியமை யால் எனக்கு எந்த மாறுபாடும் தோன்றவில்லை. இடைநிலை வகுப்பு, பட்ட வகுப்பு, பட்ட மேல்வகுப்பு ஆகியவை எடுக்க வேண்டிவந்தது. பாடங்களை முன்பாக நன்கு கண்டு தெளிந்தே வகுப்பிற்குச் செல்வேனாதலால் மாணவர்தம் நன் மதிப்பையும் பெற்றேன். எங்கள் எதிர் வீட்டில் இருந்த பாஷ்ய ராமாநுஜம், டாக்டர், மு.வ. ஆகியோர் தம் குடும்பங் களும் எங்கள் குடும்பமும் ஒன்றாகக் கலந்து பழகி, ஒரே குடும்பம் என்னுமாறு வாழ்ந்துவந்தோம்.

சென்னையில் இருந்தமையின் அடிக்கடி திரு. வி. க., இரா. பி. சேதுப்பிள்ளை ஆகியோரையும் பிறரையும் அடிக் கடி காணும் வாயப்பு கிட்டியது. சேதுப்பிள்ளை பல்கலைக் கழகத்தில் பணியாற்றிவந்தார். எனவே என்னை எம்,லிட்., ஆய்வுப்பட்டத்துச்குப் (M.Litt.) பதிவு செய்து கொள்ளச் சொன்னார். பொருளும் தந்தார். 'தேவாரத்தில் வரலாற்று ஆய்வு' (Historical Studies of Thevaram Hymns) என்பது பொருள். 1945இல் பதிவு செய்து 1947இல் பட்டமும் பெற்றேன். டாக்டர். மு.வ. அவர்களே என்னுடைய மேற் பார்வையாளராக இருந்தார்கள். அப்போது பி.ஓ.எல். (B.O L.) பட்டம் பெற்றவர்கள் எம்.ஓ.எல். (M.O L.) ஆய்வுப் பட்டத்துக்குத்தான் பதிவு செய்யலாம் என விதி இருந்தது. சேதுப் பிள்ளை அவர்கள் அதை மாற்ற முயன்று, பி ஓ.எல், (B.O L.) பெற்ற என்னை முதன்முதலாக 'எம்.லிட்.' (M.Litt.) பட்டத்திற்குப் பதிவு செய்யச்சொல்லிப் பட்டம் பெறவும் வழி காட்டினார்கள். பிறகு சேதுப்பிள்ளை அவர்கள் என்னை டாக்டர் பட்டத்துக்குப் பதிவு செய்துகொள்ளப் பணித் தார்கள். ஆயினும் அதற்கெனப் பலகுறிப்புகள் எடுத்தபிறகு ஓராண்டு கழித்து அவர்களே வேண்டாம் என்றார்கள், 'வருங்காலத்தில் யார் யாரோ எப்படி எப்படியோ இந்த டாக்டர் பட்டம் பெற்றுவிடுவார்கள். அந்தக் கூட்டத்தில்

உன்னையும் சேர்க்க நான் விரும்பவில்லை. நீ டாக்டர் பட்டம் பெறுவதற்கும் மேலான தகுதிபெற்றிருக்கிறாய் அதுபோதும். எனவே நீ டாக்டர் பட்டம் பெறவேண்டாம்' என்றனர். ஆம் 1948இல் அவர் சொல்லிய அந்தச் சொற்கள்-தீர்க்கதரிசனம் - இன்று எவ்வளவு உண்மையாக உள்ளது என்பதை யாவரும் அறிவர். 'இந்து' முதலிய நாளேடுகளில் இத்தகைய பட்டங்களின் அவலநிலை பற்றி வரும் கட்டுரை களை யாரும் இதுவரை மறுக்கவில்லையே.

நான் சேர்ந்த மறுஆண்டே மோசூர் கந்தசாமி முதலியார் அவர்கள் ஓய்வுபெற, டாக்டர். மு.வ. துறைத் தலைவரானார். 1961இல் அவர் பல்கலைக் கழகத்திற்குச் சென்ற பின்பு என்னைத் துறைத்தலைவனாக நியமித்தனர். இடையில் 1958-59இல் மதுரைப் பல்கலைக் கழகம் தொடங்குவதன்முன் னோடியாக, சென்னைப் பல்கலைக் கழகச் சார்பில் அங்கே முதுகலை தொடங்கப் பெற்ற தியாகராசர் கல்லூரியில் துறைத் தலைவனாகச் சென்றேன். பின்பு 1966-67இல் தமிழக அரசு அனுப்ப, ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக் கழகத்தின் துறைத்தலைவனாக ஓராண்டு இருந்தேன். மற்ற ஆண்டுகளில் எல்லாம், என் அறுபத்திரண்டாம் ஆண்டுவரை பச்சையப்பரிலேயே பணியாற்றி ஓய்வு பெற்றேன். முப்பது ஆண்டு—அன்றைய என் ஆயுளில் பாதிப் பொழுதைக் கழித்த அப்பச்சையப்பருடன் கலந்த வாழ்வு நினைத்து நினைத்துப் போற்றுதற்குரியது. ஒரு சிலவற்றை இங்கே சுட்டிக்காட்டலாம் என எண்ணுகிறேன்.

# 2. பச்சையப்பரில் முப்பது ஆண்டுகள்

1944இல் பச்சையப்பன் கல்லூரியில் சேர்ந்தேன். அந்த ஆண்டு மோசூர் கந்தசாமி முதலியார் அவர்கள் துணைத் தலைவர்; டாக்டர். பி.வி. நாராயணசாமி நாயுடு அவர்கள் முதல்வர். இருவருமே எனக்கு முன்பே அறிமுக மானவர்களாதலால் என்னை விரும்பி வரவேற்று வாழ்த்தினர் எனக்கு அளித்த பணிகளும் என் விருப்பத்துக்கு ஏற்ற வகையிலேயே அமைந்தன.

அடுத்த ஆண்டு மோசூரார் ஓய்வு பெற்றார். டாக்டர். மு வ. அவர்கள் தலைமைப் பொறுப்பு ஏற்றார். 1961 வரையில் அவர் தலைமையிலேயே தமிழ்த்துறை இயங்கிற்று. இடையில் ஓராண்டு டாக்டர். துரை அரங்கனார் தலைமைப் பொறுப்பில் இருந்தார். அந்த நாட்களிலெல்லாம் என்பணி அமைதியாக நடைபெற்றது. மாணவர்களும் அன்புடன் பழகினர். தமிழ்த்துறை ஆசிரியர்கள் தவிர்த்து, பிற துறையினரும் என்னிடம் அன்பாகவே பழகினர். பிறர் எனக்கு வேண்டிய உதவிகளைத் தாமே வந்து செய்தனர். நான் மேலும் பட்டம் பெற்ற நிலையிலும் பிற வகையிலும் முயன்று ஆய்வுகளை நடத்தி வந்தேன். உடன் ஓய்வு நேரங்களில் வேறு பொதுப்பணிகளையும் கண்டு வந்தேன்.

அடிக்கடி சமயப் பொதுக் கூட்டங்கள், சொற் பொழிவுகள் ஆகியவை தொடர்பாக வெளிநாடு—வெளியூருக்கும் செல்வதுண்டு. ஆயினும் கல்லூரிப் பணிக்கு இடையூறு இல்லா வகையில் விடுமுறையிலேயே பிற பணி களை மேற்கொள்வேன். அப்போது கல்லூரியில் பி.ஓ.எல். (ஆனர்ஸ்) வகுப்பு இருந்தது. ஆனால் வகுப்பில் ஒருவர், இருவர், நால்வர் எனவே மாணவர் இருந்தனர். நான் சமய இலக்கியம், இலக்கணம் போன்றவற்றை நடத்தி வந்தேன். கீழ் இடைநிலை வகுப்பில் டி (D) பிரிவு தனித்

தமிழ்ப் பிரிவு. அதிலும் மாணவர் குறைவே. அக்காலத்தில் (1944) பச்சையப்பரில் தவிர்த்து வேறு எங்கும் தமிழில் இளங்கலை, முதுகலைப் பட்டப்படிப்பு இல்லை. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் இங்கும்தான் இருந்தன. எனவே அக்காலத்தில் தமிழைப் பயின்றவருள் பெரும்பாலோர் இவ்விருவிடங்களிலுமிருந்து வந்தவரே.

மாணவர்களை வெறும் படிப்பில் மட்டுமின்றி, பேச்சு, நடிப்பு ஆகியவற்றிலும் சிறந்தவராக்க நாங்கள் முயன்றோம். தமிழ்மன்றம் சிறக்கச் செயலாற்றிற்று. அக்காலத்திய பேரறிஞர்கள்-திரு வி க.,இரா.பி. சேதுப்பிள்ளை போன்றவர் கள், பெரியார், அண்ணா போன்றவர்கள் அடிக்கடி வந்து பேசி மாணவர்களை ஊக்குவித்தனர். பல கல்லூரிகளுக்கு இடையே பேச்சுப் போட்டி முதலிய நடைபெறும். சென்னைப் பல்கலைக்கழகம் நடத்திய எல்லாக் கல்லூரி களுக்கும் இயைந்த பேச்சுப் போட்டியின் கடைசிச் சுற்றும் இங்கே நடைபெறும். அப்படியே சில ஆண்டுகளுக்குப் பின்னர் பல கல்லூரிகளுக்கிடையே ஓரங்க நாடகப் போட்டியினை நடத்தினோம். அதற்காகவும் பேச்சுப் போட்டிக்காகவும் சுழற் கேடயங்களும் தனிப்பரிசுகளும் அமைத்தோம். பெரிய சுழற் கோப்பைகளை மாண்புமிகு ‘எம்.ஜி.ஆர்’ போன்றவர்கள் வழங்கினார்கள். அவர்களும், கலைஞர் போன்றவர்களும் கல்லூரி மன்றங்களுக்கு வந்துள்ளனர். பேராசிரியர் அன்பழகன் அப்போது பணி யாற்றியமையின் அன்றைய திராவிட கழகப் பேச்சாளர்களும், அவ்வாறே கல்லூரி மன்றத்தில் இராஜாஜி போன்ற அரசியல் தலைவர்களும் வந்து கலந்து கொள்வர். இக்கல்லூரி மாணவர் பிற கல்லூரிகள், மன்றங்கள் நடத்தும் பேச்சுப் போட்டி எழுத்துப் போட்டியில் கலந்து கொண்டு, தமிழில் நன்கு சிறந்து பலப்பல பரிசுகளைப் பெற்று வந்துள்ளனர். அக்காலத்தில் ‘பச்சையப்பன் கல்லூரிப் படிக்கட்டும்

பைந்தமிழ் பாடும்' என்று பாரோர் போற்றிய நிலையில் இங்கே தமிழ் வளமுற்றிருந்தது.

நாராயணசாமி நாயுடு அவர்களுக்குப்பின் (1947இல் என எண்ணுகிறேன்) ஆங்கிலப் பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி அவர்கள் கல்லூரி முதல்வரானார். தொடர்ந்து 1961 வரையில் இருந்தார். நீண்டகாலம் முதல்வராக 66 வயது வரை இருந்தவர் அவர் என்று அப்போது பாராட்டப் பெற்றவர். அக்காலத்திலும் எங்கள் தமிழ்த்துறை நன்கு இருந்தது. பி ஓ.எல். (ஆர்னர்ஸ்) மாறி, பி.ஏ. (ஆனர்ஸ்) என ஆயிற்று. தமிழுக்குத் தனித்தன்மையாக இருந்த சிறப்புப் பட்டங்கள் மாறி, பிற கலைப் பாடங்களைப் போன்றே உயர் கலைப் பட்டம் தமிழுக்கும் வழங்கப் பெற்றது.

1955இல் கல்லூரி வகுப்புகளில் புது மாற்றம் அமைந்தது. இடைநிலை, பட்டவகுப்புகளுக்குரிய 2+2 ஆண்டுகள் மாற்றம் பெற்றன. பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு என ஓராண்டும் பட்ட வகுப்பு மூன்றாண்டும் என மாறின. எனவே மேலை 'ஆனர்ஸ்' என்ற நிலைமாறி முதுகலை (M.A, M.Sc., M.Com) என்ற இரண்டாண்டு பயிலும் நிலை உண்டாயிற்று. அக்காலத்தில் தமிழைப் பொறுத்த வரையில் வேறு சில கல்லூரிகளிலும் முதுகலை வகுப்பு தொடங்கப்பெற்றது. பின் 1963க்குப்பின் மதுரைப் பல்கலைக்கழகம் தொடங்கியபின் தமிழ் பல கல்லூரிகளில் இடம் பெற்றது. பச்சையப்பரில் 1961இல் திரு. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் ஓய்வு பெற்றபின் பொருளாதாரப் பேராசிரியர் 63 வயதில் வந்த இராஜேஸ்வரன் அவர்கள் இரண்டாண்டுகள் தலைவராக இருந்தார், அவரும் தமிழில் பற்றுடையவர் ஆனமையின் நாங்கள் சிறப்புறவே இருந்தோம். அதே ஆண்டில்தான் (1961) நான் தமிழ்த் துறைத் தலைமைப் பொறுப்பேற்றேன். அந்த ஆண்டின்

இடையேதான் நான் நாட்டு ஒருமைப்பாட்டு மாநாட்டிற்குச் செல்ல விடுமுறை கேட்டபோது, அதைப் பணி மேற்செல்லும் வேலையாகவே கொண்டு வாழ்த்தி வழி அனுப்பினார். அவருக்குப்பின் திரு. சங்கரநாராயணபிள்ளை என்பவர் முதல்வராக வந்தார். அப்போது அவர் விடுதிக் காப்பாள ராக இருந்து அதிலிருந்து விலகி எங்கள் வீட்டிலேயே குடி யிருந்தார். என்னை விடுதிக் காப்பாளராக இருக்க வற்புறுத்தினார். என்னை வற்புறுத்தி, ஆணையிட்டால் என்ன செய்வீர்கள் என்று கேட்டார். நான் வேலையை விட்டு விலகி விடுவதாகவே எழுதி விடுவேன் என்றேன். எனவே என்னை வற்புறுத்தவில்லை. பின் 1965இல் என்னைத் துணை முதல்வராக நியமிக்கப் பச்சையப்பர் ஆட்சிக்குழு முடிவு செய்தது. அப்போது நான் ஏர்க்காட்டில் இருந்தேன். தகவல் அறிந்தவுடன் சென்னைக்கு வந்து அப்போது தலைவராக இருந்த கச்சாபகேச முதலியார் அவர்களிடமும் பிறரிடமும் சொல்லி, என்னை அமைதியாக இருக்க விடுமாறும் ஆட்சி, அதிகாரப் பொறுப்பு என் எழுத்துப் பணிக்கும் பிற தொண்டுகளுக்கும் இடையூறுகளாக அமையும் என்றும் கூறினேன். அவர்களும் உணர்ந்து திரு. சண்முகநாதன் அவர்களைத் துணை முதல்வர் ஆக்கினார் கள். பின் அவர்களே முதல்வராக வந்து தொடர்ந்து பல ஆண்டுகள் பணிபுரிந்தனர். நான் அவர் கீழே தமிழ்த்துறைத் தலைவனாகப் பணியாற்றினேன்; பின் அண்ணா முதல் வரானபின் அவர் கூறியபடி, சொல்லைத் தட்டாமல் துணை முதல்வராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றேன். நான் ஓய்வு பெற்ற பிறகும் திரு. சண்முகநாதன் பல ஆண்டுகள் பணி யாற்றினார்.

இதற்கு இடையில்தான் 1947இல் வாலாஜாபாத்தில் உயர்நிலைப்பள்ளிக்குழு அமைத்து, அதன் செயலாளராக இருந்து உயர்நிலைப்பள்ளியினைத் தொடங்கினேன்.

1955இல் ஷெனாய் நகரில் செயலாளனாக இருந்து 'திரு வி.க.' பள்ளியைத் தொடங்கினேன். பிறகு என் அன்னையின் பெயரால் 1968இல் 'வள்ளியம்மாள் கல்வி அறம்' அமைத்து, கல்லூரியில் இருக்கும்போது, வளர்த்து ஒரு மேநிலைப் பள்ளியாக நடத்திவந்தேன். இவ்வாறு கல்லூரிப்பணிக்கு இடையூறு இன்றி, பிறகல்விப் பணிகளையும் செய்து வந்தேன்.

நான் தலைமையேற்ற துறையின் ஆசிரியர்களிடம் நான் இரண்டினைப்பற்றி வற்புறுத்துவேன். ஒன்று அவர்கள் ஆய்வுப் பட்டம் பெறவேண்டும் என்பது. மற்றொன்று ஒவ்வொருவரும் சொந்த வீட்டில் வாழவேண்டும் என்பது. என் சொல்கேட்ட அனைவரும் நன்கு செயலாற்றினர். இன்று அத்துறையில் ஆய்வுப்பட்டம் பெறாதவர் ஒருவரும் இல்லை; அப்படியே தனக்கென வீடு இல்லாதவரும் ஒருவரும் இலர். மேலும் ஒருசிலர் வேறு பொதுப்பணிகளிலும் ஈடுபட்டுத் தொண்டாற்றினர்.

காலம் செல்லச் செல்ல, தமிழ் பயில மாணவர் அதிக விருப்பம் செலுத்த, வகுப்பு எண்ணிக்கை அதிகமாயிற்று. முதுகலைக்கெனப் பல்கலைக்கழகம் வரையறுத்த முப்பது இடத்துக்கு மேலும் நாற்பதுவரை இடம் பெறவேண்டிய தாயிற்று. ஆடவரும் பெண்டிரும் கலந்து பயின்றனர். அவ்வாறு பயின்றவர்களுள் ஆடவர் ஐவர் உடன்பயின்ற பெண்களையே மணந்து கொண்டனர். அவர்கள் அனைவரும் இன்று சிறக்கவாழ்கின்றதைக் காண என் மனம் மகிழ்ச்சி யுறுகின்றது. அவர்கள் அடிக்கடி இன்றேனும் ஒருசில வேளை களில் வந்து என் வாழ்த்தினைப் பெற்றுச் செல்வர்.

எங்கள் துறை விரிவடைய, புதிய ஆசிரியர்கள் நியமிக்க வேண்டிய நிலை உண்டாயிற்று. மேலுள்ளவர்கள் ஓய்வு பெற்றபோதும் பிற பணிகளின் வழி விலகிய போதும் புதியவர்கள் நியமனம் பெற்றனர். ஒவ்வொரு முறையும்

அறநிலையத்தாரிடம் நான் ஒன்றை வற்புறுத்தினேன். நம் கல்லூரியில் பயின்ற சிறந்தவர்களையே தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதே அது. அப்படியே புதிதாகத் தொடங்கிய கல்லூரிகளுக்கும் தமிழ்த்துறைக்கு நம் மாணவர்களையே இடம் பெறுமாறு முயல்வேன். சில காரணங்கள் அடிப்படையில் ஒருசில இடங்கள் தவிர்த்து நம் மாணவர்களே இன்றளவும் இடம் பெற்றுள்ளனர். நான் ஓய்வு பெறும் போது பச்சையப்பர் தமிழ்த்துறையில் பத்தொன்பதுபேர் இருந்தனர் (நான் வந்தபோது ஒன்பதுபேர்). அப்பத்தொன்பது பேரில் இருவர் தவிர மற்றவர் பச்சையப்பரில் பயின்றவர்களே. (ஒருவர் நான் மதுரையில் இருந்தபோது என்னிடம் பயின்றவர்) அந்த இருவரும் எந்த வழியாகவோ இடம் பெற்றனர். அவர்களையும் நான் மறுக்காது ஏற்று உரியவகையில் மதிப்புக் கொடுத்து வந்தேன். ஒருவர் என்னிடம் மாறிய நிலையிலும் அவரையும் ஒதுக்காது அரவணைத்தே சென்றேன். அப்படியே மாணவர்களைப் பட்டவகுப்பிற்கோ முதுநிலை வகுப்பிற்கோ சேர்க்கும் போதும் தமிழ் பயின்றவர்களையே சேர்க்க முடிவு செய்து, அதன்படியே செயலாற்றினேன். அதனால் மாறுபட்டவர்களும் இருந்தனர்.

1944 முதல் 1976 வரை (இடையில் ஓராண்டு தெற்கேயும் ஓராண்டு வடக்கேயும் சென்றதுபோக) முப்பது ஆண்டுகள் தொடர்ந்து அன்றைய என்வயதில் பாதியை அங்கே கழித்தேன். எனக்கு அறுபது வயது நெருங்கிய காலத்தில் எனக்கு மணிவிழா எடுக்க மாணவர் நினைத்தனர். நான் மறுத்து விட்டேன். டாக்டர் மு.வ. அவர்களும் (எனக்கு இரண்டு ஆண்டு மூத்தவர்) கொண்டாடவில்லை. எனவே பழைய மாணவர் சங்கம் கண்டு, அதன் வழியே இரண்டாண்டுகள் இருநாட்கள், கருத்தரங்குகள்—எங்கள் செயல்பற்றியே—நடத்தி மகிழ்வு கண்டனர்.

நான் தமிழ்த்துறையில் பொறுப்பேற்றபின் சில ஏற்பாடு களைச் செய்தேன். துறைக்கெனத் தனி நூல் நிலையம் கண்டேன். எனினும் நூல்களை வைப்பதற்கு இரும்பு, மர அலமாரிகள் இல்லை. எனவே பட்டவகுப்பு, புகுமுகவகுப்பு களுக்குரிய மொழிபெயர்ப்பு நூலேடுகளை அச்சிட்டு மாணவர்களுக்குத் தந்து, அதில் மிகும் தொகையில் நல்ல அலமாரிகள் (நான்கு என நினைக்கிறேன்) வாங்கி, பலபுதிய நூல்களும் வாங்கி, துறைக்கு நல்லநூல் நிலையம் கண்டேன். உடன் தட்டச்சுக்கென, ஆங்கிலத்திலும் தமிழிலும் ஒவ்வோர் இயந்திரம் வாங்கினேன். கல்லூரி அலுவல் தொடர்பான தமிழ்வழித் தட்டச்சு வேண்டியவர் இதைப் பயன்படுத்துவர். இவையன்றி, துறை ஆசிரியர்கள், முதல்வர், அவர்களுடன் ஆண்டு இறுதியில் ஒருசிறப்பு விருந்துக்கு ஏற்பாடு செய்வர். நல்லவிருந்து; பின் அனைவரும் வேண்டும் ஒரு திரைப்படம் பார்த்தல் என்ற வகையில் அது அமையும். அத்துடன் அன்றைய மதிப்பில் சுமார் 20 அல்லது 25 ரூபாய் அளவில் பைகள், பேனாக்கள் போன்றவை ஒவ்வொருவருக் கும் அன்பளிப்பாக வழங்கப்பெறும். இவ்வாறெல்லாம் இருந்து நன்குவளர்த்து, நான் ஓய்வு பெற்ற வேளையில் அவையனைத்தையும் ஒரு பெருந் தொகையுடன் அடுத்த வரிடம் ஒப்படைத்து வந்தேன்.

எங்கள் பச்சையப்பர் கல்லூரி ஒரு சிறு அரசியல் அரங்க மாகத் திகழ்ந்தது. எனினும் அன்று மாணவர் வரம்பு கடவாமல் பாடங்களை ஒழுங்காகப் பயின்று, பின் அரசியலில் ஈடுபடுவார்கள். எங்கள் மாணவர்கள் இன்று எல்லாக்கட்சி களிலும் உள்ளனர். இன்று தமிழ்நாடு காங்கிரஸ் கட்சிச் செயலராக உள்ள திரு. தெய்வசிகாமணி அவர்கள். துணைத் தலைவராக உள்ள மணிவர்மா, முன்னாள் கவர்னர் இராமச்சந்திரன் போன்றவர்கள் கல்லூரி மாணவர்களே. தி.மு.க.வில் உள்ள துரைமுருகன், தமிழ்க் குடிமகன் போன்ற

வரும் அ.தி.மு.கவில் உள்ள மாண்புமிகு K, A. கிருஷ்ணசாமி, பட்டாபிராமன், தேவராசன் போன்றவர்களும் எம் மாணவர்களே. இவ்வாறு எல்லாக் கட்சிகளிலும் எங்கள் மாணவர்கள் உள்ளமையின் யார் ஆளவந்தாலும் எங்கள் கல்லூரிக்கும் சிறப்பாக எனக்கும் எப்போதும் நன்மையே கிடைக்கும் என்பது துணிபு. கல்லூரி மாணவர்களில் பச்சையப்பர் கல்லூரி மாணவர்களிடத்தில், பிறரிடம் இல்லாத, தாம் பயின்ற கல்லூரியின்பாலும், ஆசிரியர்கள் பாலும் பற்றும் பாசமும் அதிகம் என்பது நாடறிந்த உண்மை. இப்போது தமிழ் நாட்டில் உள்ள கல்லூரிகள், பல்கலைக்கழகங்களிலும் பெரும்பாலும் (ஏன்?—எல்லாவற்றி லும்) பச்சையப்பர் மாணவர் பேராசிரியர்களாகப் பணியாற்றி வருகின்றனர். கோட்டைக்கு ஏதேனும் செயல் வேண்டிச் சென்றால், அங்கே பச்சையப்பர் மாணவர் தாமே முன்வந்து 'நான் பச்சையப்பர் மாணவர்; இன்ன துறையில் படித்தேன் இன்ன ஆண்டில் படித்தேன்' என்று கூறி, எனக்கு என்ன வேண்டுமென்று கேட்டு, வந்து உதவுவார்கள். இப்படியே எங்கும் மாணவர் தம் பண்பினையும் பாசத்தினையும் காண முடியும். பினாங்கில் அத்தகைய மாணவர் காட்டிய பாசத் தினை இந்நூலில் மற்றொரு பகுதியில் (மலேயாவில்) காட்டி யிருக்கிறேன். அப்படியே காஷ்மீரில் மற்றொரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.

எங்கள் குடும்பமும் டாக்டர் மு. வ. அவர்கள் குடும்பமும், எங்கள் நண்பர் இருவர் தம் குடும்பமுமாக 1957 கோடையில் காஷ்மீர் சென்றோம். வடநாட்டு மதுரை தில்லி முதலிய வற்றைக் கண்டபின் பதான்கோட்டிலிருந்து விமான மூலம் ஸ்ரீநகர் சென்றோம். அங்கே மூன்று நாள் தங்கி இருந்தோம். ஒருநாள் அரசினர் விருந்தினர் மாளிகையில் தங்கினோம். அன்று மாலை நாங்கள் அனைவரும் கடைத்தெரு ஓரமாக மெல்லச் சென்று கொண்டிருக்கையில் இராணுவத்துறை

(Military) யைச் சேர்ந்த நான்கைந்து வண்டிகள் வேகமாக எங்களைத் தாண்டிச் சென்றன. (அப்பகுதியில் எப்பொழுதும் அவர்கள் அதிகமாக உள்ளமையின் அதை நாங்கள் பெரிதாக எண்ணவில்லை). ஆனால் அந்த மிலிடரி லாரிகளில் ஒன்று திடீரென எங்கள் அருகில் வந்து நின்றது. அதிலிருந்து நான்கு ஐந்துபேர் அவர்தம் உடையுடன் இறங்கி எங்களை நோக்கி வந்தனர். அருகில் வந்து அவர்தம் முறைப்படி மரியாதை செலுத்தினர். எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அவர்களே பேசினர் 'ஐயா! நாங்கள் பச்சையப்பன் கல்லூரியில் பயின்ற மாணவர்கள். உங்களிடம் சிறப்புத் தமிழ் பயிலவில்லை யாயினும், உங்கள் நினைவு எங்கள் உள்ளத்தில் எப்போதும் இருக்கும். இன்று எதிர்பாராது உங்களை இங்கே கண்டமை யின் மகிழ்ந்து எங்கள் வணக்கத்தைத் தெரிவிக்கவே வந்தோம்' என்று கூறினர். பிறகு நாங்கள் இருவரும் அவர்கள் பயின்ற வகுப்புகள், பாடங்கள், அவர்தம் ஊர் முதலியவற்றையும் அன்றைய அவர்கள் வாழ்க்கையைப் பற்றியும் பேசினோம். பின் அவர்கள் நாங்கள் இருக்கும் இடம், அறை எண் இவற்றைக் கேட்டார்கள். நாங்கள் கொடுத்தோம். அவர்கள் சென்று விட்டார்கள். ஆனால் மறுநாள் காலை 5 மணி அளவில் (அங்கே மே மாதத்தில் காலை 5 மணிக்கு சூரியன் புறப்பட்டு விடுவான்) எங்கள் அறைக்கதவை அழுத்தமாகத் தட்டின ஓசை கேட்டு எழுந்து கதவைத் திறந்தோம். ஆம்! அப்பச்சையப்பரின் பழைய மாணவர் நின்றிருந்தனர். ஒரு கூடையில் நிறைய இட்டலி மற்றொன்றில் தோசை, வடை, உடன் சட்னி, சாம்பார் போன்ற நம் ஊர் காலை உணவுக்குரிய அனைத்தையும் வரிசையாக வைத்திருந்தனர். நாங்கள் ஒன்றும் பேச வில்லை—திகைத்தோம். அவர்கள் 'ஐயா, இங்கேயெல்லாம் நம்நாட்டுக் காலை உணவு கிடைக்காது; எங்கள் மிலிடரி விடுதியில் அளவற்று உள்ளது. எனவே உங்களுக்கெனவே

கொண்டு வந்தோம்; ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று கூறி விடை பெற்றனர். நாங்கள் அன்று பகல் 11 மணிக்கே விமான வழி தில்லிக்குப் புறப்படப் போவதாகச் சொன்னமை யின் மதிய உணவு பற்றி ஒன்றும் பேசாது சென்றனர்; இன்றேல் அதையும் கொண்டு வந்திருப்பர் போலும். காலையில் அவர்கள் தந்த இட்டலி முதலின நாங்கள் (20 பேர்) சாப்பிட்டும் மிக அதிகமாக இருந்தன. உடன் பக்கத்தில் இருந்த மற்றவருக்கும் தந்தோம். பச்சையப்பரில் பயின்ற மாணவர்தம் பாசம் அத்தகையது; அளவிடற்கரியது.

நான் பச்சையப்பரில் பணியாற்றியபோது பல்வேறு பொறுப்புகளை ஏற்றுக் கொண்டேன். துணை முதல்வரான பிறகு சில பொறுப்புகள் தனியாகவிடப் பெற்றன. அதற்கு முன்பே சில ஆண்டுகள் நூல் நிலையப் பொறுப்பும், சில ஆண்டுகள் கூட்டுறவுப் பண்டகசாலைப் பொறுப்பும் சில ஆண்டுகள் விளையாட்டுக் குழாம் பொறுப்பும் ஏற்று வந்தேன். அக்காலத்திலெல்லாம் நான் விதிகளைக் கடுமை யாக மேற்கொண்டவன் என்ற பெயரெடுத்தேன். என்றாலும் அவையெல்லாம் செம்மையாக இயங்கின. மாறுபட்ட சிலர் கூடப் பின்வந்து, அவற்றின் இயக்கம், செயல்பாடுகளைப் போற்றிச் சென்றனர்.

எல்லா வகையிலும் பச்சையப்பரே என்னை உலகுக்கு அறிமுகம் செய்தவர் என்றால் அது பொருந்தும். அக்காலத் தில்தான் நான் அறுபதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதி னேன், நூல்களுக்குப் பாராட்டும் பரிசும் மாநில அரசிடமும் மத்திய அரசிடமும் பெற்றேன். மலேயா சென்றேன்; காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பலவிடங்களில் பேசினேன். இலங்கைக்கு மூன்று முறை சென்றேன். வேறு பத்திரிகைத்துறை, சமயத்துறை போன்றவற்றிலெல்லாம் பணியாற்றினேன் (இவை பற்றித் தனித்தனியே எழுத நினைக்கிறேன்) பலப்பல நல்ல நண்பர்கள்—தலைவர்கள்—

அரசியல்வாதிகள்—ஆன்மிக நெறியாளர்எனப் பலர் எனக்கு அறிமுகமாயினர். இவ்வாறு எல்லாவகையிலும் முப்பது ஆண்டுகள் என்னை ஏற்று வாழ்வு வழங்கிய பச்சையப்பரை ஈன்ற அன்னையினும் பெரிதும் போற்றி மகிழ்கின்றேன். ஒருவித மாறுபாடும் வேறுபாடும் இன்றி (வாழ்விலே வாழ்க்கைத் துணை பிரிந்த நிலை ஒன்றைத் தவிர) அமைதி யாகக் கழிந்த அந்த முப்பது ஆண்டுகள் பற்றி எத்தனை எத்தனையோ பக்கங்கள் எழுதலாம்; எண்ணம் அளவின்றி வளர்கின்றது. (ஒரு சிலவற்றைத் தனித்தனிப் பகுதியாக உடன் எழுதியுள்ளேன்) எனினும் அளவு கருதி—அமைதி கருதி இந்த நிலையோடு இந்த வாழ்வு முறை பற்றிய வரலாற்றை நிறுத்தி மேலே செல்கின்றேன்.

## 3. மதுரை

ஆற்றொழுக்காக அமைந்த என் வாழ்வில், அரிய வாழ்க்கைத் துணையை 1958 சனவரியில் பிரிந்த நிலை ஒரு பெரிய அணையாக—அதிர்ச்சியாக அமைய, அந்தக் கல்வி ஆண்டு முடிய (மே வரை) விடுமுறை பெற்று அமைதியாக இறையருளை உன்னிக் காலம் கழித்து வந்தேன். 1948இல் அமைந்தகரையில் புதுமனை புகுந்து பத்தாண்டுகள் கழிந்த பின் ஓர் இடப்பெயர்வு நேர்ந்ததை என்னால் நினைத்துக் கூடப் பார்க்க இயலவில்லை. ஆம்! அடுத்த ஓராண்டு அங்கயற்கண்ணி ஆட்சி செய்யும் மதுரையில் என் வாழ்வு அமைந்துவிட்டது.

தமிழகத்தில் ஒரே பல்கலைக்கழகமாகிய சென்னைப் பல்கலைக்கழகம் தன் எல்லையின் விரிவினைச் சுருக்க நினைத்ததோ—அன்றித் தமிழக அரசு புதிய பல்கலைக் கழகங்களைத் தமிழ்நாட்டில் நிறுவ நினைத்ததோ—

எப்படியோ அந்த ஆண்டு மதுரைப்பல்கலைக்கழகம் நிறுவத் தமிழக அரசு சட்டம் இயற்றியது 1959இல் நிலையாகச் செயல்படுமுன், மதுரையில் பல முதுநிலை வகுப்புகள் முன்னோடியாக 1958இல் தொடங்கத் திட்டமிட்டது. அந்த அடிப்படையில் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ் முதுகலை வகுப்பு (எம். ஏ ,) தொடங்கினர். அப்போதைய விதிப்படி, அதற்குமுன் சில ஆண்டுகளாயினும் முதுகலை ஆசிரியராயிருந்தவர் ஒருவர் ஆசிரியர் குழுவில் இருந்தால்தான் அந்த முதுகலை வகுப்புத் தொடங்க இயலும். எனவே, என்னைப் பற்றிக் கேட்டறிந்த தியாகராசச் செட்டியார் அவர்கள், கல்லூரிக்கு வருமாறு அழைத்தனர். ஓரிருவர் வந்து அழைத்தபோது, நான் திட்டவட்டமாக வர இயலாது என மறுத்தேன். அக்கோடையில் நான் நீலகிரியில் தங்கியிருந்தேன். அப்போது தியாகராசர் கல்லூரியின் முதல்வராக இருந்த திரு. இராமநாதப் பிள்ளை அவர்கள் அங்கே வந்து என்னைப் பிடித்தனர்; எப்படியும் ஓராண்டா யினும் வந்து, முதுகலை வகுப்பினைத் தொடங்கி நடத்த வேண்டும் என வற்புறுத்தினர். நான் சூன் முதல் வாரத்தில் சென்னை திரும்பிய பின் முடிவு சொல்வதாகக் கூறி அனுப்பி வைத்தேன். பின் சென்னைக்குச் செட்டியார் தம் மூத்த மகனாரும் அக்கல்லூரியின் தாளாளருமாகிய திரு. சுந்தரம் செட்டியார் அவர்கள் வீட்டிற்கு வந்து வற்புறுத்தினர். இங்குள்ள நண்பர்களும் வாழ்வின் மாற்றத்துக்கு இடையில் இடமாற்றம் மனத்துக்கு ஆறுதல் தரும் வகையில் ஓராண்டு சென்று வரல் நலமெனக் கூறினர். எனவே இசைந்தேன். சூன் இறுதி வாரத்தில் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் சேர்ந்தேன்.

நான் அழைக்கப் பெற்றபோது, முதுகலைப் பிரிவு தனியாக இருக்குமெனவும் நான் தலைமையேற்க வேண்டு மென்றும் கூறினர். நான் இருப்பதற்கு அவர்தம் நூற்

பாலைக்குரிய பங்களா ஒன்றினையும் கொடுத்து உதவினர். கருமுத்து தியாகராாசர் அவர்களும் என்னைக் கண்டு அன்புடன் போற்றி மகிழ்ந்தனர். ஆயினும் கல்லூரிப் பதிவேட்டில், தமிழ்த்துறையினை ஒன்றாகக் காட்டி, நான் சாதாரண ஆசிரியனாகும் நிலையில் மூன்றாமிடத்தில் என் பெயரை எழுதி வைத்தனர். அங்குப் பேராசிரியர்களாக இருந்த இருவர்தம் செயல் இது எனவும் ஒருவர் செட்டியாரிடம் மிகுந்த செல்வாக்கு உடையவர் எனவும் எனவே அவ்வாறு நிகழ்ந்தது எனவும் கூறினர். ஆயினும் நான் அதில் கையொப்பமிட இசையவில்லை. மேலும் நான் உடன் சென்னைக்குத் திரும்பி விடுவதாகவும் கூறினேன். எனினும் செட்டியாரின் இளைய மகன் திரு. மாணிக்கவாசகம் செட்டியார் அவர்களும் விவேகானந்தர் அச்சக உரிமையாளர் பழநியப்பர் அவர்களும் தலையிட்டு, துறையினைத் தனியாகப் பிரித்து, முதுகலைக்கு என்னை உரியனாக்கித் தனி அறையும் தந்தனர். பிறகு மாணவர்களைச் சேர்த்து முதுகலை வகுப்பும் தொடங்கப் பெற்றது. கல்லூரியில் இருந்த பத்து மாதங்களிலும் அங்கே நூலகராகப் பணியாற்றிய என் மாணவர் திரு. திருமலை முத்துசாமி அவர்கள் எனக்கு உற்ற துணையாக இருந்தார்.

பாலாற்றங்கரையைவிட்டு, கூவம்நதிக்கரையில் வாழ்ந்து, அன்று வைகைக்கரையினை அடைந்த நிலையினை எண்ணினேன். மதுரை வாழ்வு தாயின் கருவில் தங்கும் குழந்தையின் வாழ்வாகப் பத்து மாதங்களே அமைந்த ஒன்றாயினும் நான் அங்கே பெற்ற வாழ்க்கை அனுபவங்கள் பலப்பல. அவற்றுள் ஒருசிலவற்றை மட்டும் ஈண்டுக் குறிக்க நினைக்கிறேன். கல்லூரியில் முதல்வரும் பிற ஆசிரியர்களும் முதுகலை மாணவரும் பிறரும் என்னுடன் அன்பாகவே பழகினர். மதுரையில் உள்ள கல்லூரிகள், பள்ளிகள் அனைத்திலும் (ஒன்றிரண்டு தவிர) நான் அழைக்கப் பெற, சென்று

சொற்பொழிவாற்றினேன். சுற்றுப்பக்கத்தில் உள்ள சோழ வந்தான், விருதுநகர், காரைக்குடி, குன்றக்குடி போன்ற இடங்களுக்கும் சென்று பேசி வந்தேன். திரு. சுந்தரம் செட்டியார் அவர்கள் அவர்தம் சொந்த ஊராகிய ஆ. தெக் கூருக்குச் செல்லும் போதெல்லாம் என்னை அழைத்துக் கொண்டு செல்வார். ஓரிரு முறை அங்குள்ள அவர்தம் பள்ளி யிலும் சொற்பொழிவாற்றியுள்ளேன். மதுரைப் பெருநகரில் பல சங்கங்களும் என்னை அழைத்துப் பாராட்டின. அங்கே தான் நான் முன்னர் எழுதி வைத்த என் முதல் வாழ்க்கைக் குறிப்பாகிய 'இளமையின் நினைவுகள்' முதல் முறையாக அச்சிடப் பெற்றது. லலிதா அச்சக உரிமையாளர் அன்புடன் அதை அழகுற அச்சிட்டு உதவினர். (அதுவே இந்நூலின் முதற்பகுதியாக சில மாற்றங்களுடன் இடம்பெற்றுள்ளது).

மதுரைத் திருவள்ளுவர் கழகம் அங்கே சிறப்பாகச் செயலாற்றி வந்தது—இன்றும் பொன்விழாவினைக் கொண்டாடிச் சிறப்புறுகின்றது. அங்கே வாரந்தொறும் அறிஞர் தம் சொற்பொழிவுகள் நடைபெறும். அந்நிகழ்ச்சி கள் மீனாட்சி சொக்கேசம் திருக்கோயில் எல்லையிலேயே வடக்காடி வீதியில் நடைபெறும். கழகத்துக்கெனத் தனி இடமும் பாதுகாப்பான அறையும் தரப்பெற்ற நிலையில் அதன் பணி செம்மையாகச் சிறந்தது. மதுரை மாவட்டத் திலேயே சிறந்தவராகப் போற்றப் பெற்ற திரு. பொன்னம் பலத் தியாகராசர் அவர்கள் அதன் தலைவராகவும் விவேகானந்த அச்சக உரிமையாளர் அதன் செயலராகவும் பல புலவர்கள் உறுப்பினராகவும் இருக்க வள்ளுவர் கழகம் வளமார்ந்த தமிழ்ப் பயிரை வளர்த்து வந்தது; இன்றும் வளர்த்து வருகின்றது. அச்சங்கத்தே என்னைப் 'பத்துப் பாட்டி'னைப் பற்றித் தொடர் சொற்பொழிவாற்றக் கூறினர். நானும் இசைந்து, ஏழு வாரங்களில், ஏழு தலைப்புகளில் பத்துப்

பாட்டினைப் பல வகையில் ஆய்ந்து பேசினேன். வழிகாட்டி, நாடும் நகரும், அரசும் குடியும், அகமும் புறமும், காலமும் பொழுதும், அன்பும் பண்பும் என்று தனித்தனி ஆறு தலைப்பு களிலும் பொதுவாகத் தொடக்க நாளில் தமிழ் இலக்கியத் தின் சிறப்பு—இலக்கிய வளம்—பத்துப்பாட்டின் இடம், அதன் அமைப்பு, பொதுச் சிறப்பு ஆகியவற்றை அடக்கிய ஒரு தொடக்கத் தலைப்பிலும் ஏழு சொற்பொழிவுகள் ஆற்றி னேன். அவற்றை அன்பர்கள் தொகுத்து எழுதித் தந்தனர். அவை பின் 'பாட்டும் பயனும்' என்ற நூலாக அடுத்த ஆண்டே (1959) வெளிவந்தது. பலரும் அதை விரும்பிப் பெற்றனர்.

நான் மதுரையில் இருந்தபோது தான் பம்பாய் தமிழ்ச் சங்கத்தாரால் அவர்தம் பாரதி விழாவில் பேச வருமாறு அழைக்கப்பெற்றேன். அதற்கு முன் நான் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் இலங்கையில் பல இடங்களிலும் கல்கத்தாவி லும் சென்று பேசி உள்ளேன். என்றாலும் பம்பாய் சென்ற தில்லை. எனவே வர இசைந்தேன். பின் அதன் வெள்ளிவிழா விலும் கலந்து கொண்டேன். பின்தொடர்ந்து அந்த மராட்டிய அரசாங்கத் தேர்வில் தமிழ்த்துறைக்கு வினாத்தாள் தயாரிப்புக் குழுவின் சிறப்பு உறுப்பினனாகப் பன்னிரண்டு ஆண்டுகள் (ஆண்டுக்கு இருமுறை) சென்ற போது பலமுறை தமிழ்ச்சங்கத்திலேயே தங்கியும் இருக்கிறேன். பம்பாய் தமிழ்ச் சங்கத்தில் நான்கு நாட்கள் நான்கு தலைப்புகளிலே பாரதி யாரைப் பற்றிப் பேசினேன். அப்படியே மதுரைத் திருவள்ளுவர் கழகத்திலும் பத்துப்பாட்டினைத் தவிர்த்து வேறு தனிச் சொற்பொழிவுகள் ஆற்றினேன். வேறு பல இடங்களிலும் என்பேச்சு நிகழ்ந்தது. சில பத்திரிகைகளுக்குக் கட்டுரைகளும் அக்காலத்தில் எழுதினேன். ஒருமுறை ஒரு தமிழறிஞர் கண்ணகி மதுரையை எரித்தது தவறு என்று பத்திரிகையில் எழுதி இருந்தார். அதை நான் மறுத்து, செட்டியார் நடத்திய 'தமிழ்நாடு' பத்திரிகையில் ஒருகட்டுரை

எழுதினேன். இப்படியே என் சிறு சிறு பயணங்கள் பற்றியும்—தேக்கடி, அருவி, (வீழ்ச்சி) போன்ற இடங்களுக்குச் சென்றவை பற்றியும்—கட்டுரைகள் எழுதினேன். அவற்றையெல்லாம் தொகுத்து 'வையைத் தமிழ்' என்ற பெயரிலே ஒரு நூல் வெளியிட்டேன். பின் 1967, 68 ஆகிய இரண்டு ஆண்டுகளில் அந்த நூல் சென்னைப் பல்கலைக்கழகப் பட்ட வகுப்பிற்குப் பாடநூலாக அமைந்தது. அந்த இரண்டு ஆண்டின் நூல் விற்ற வருவாயே எங்கள் வள்ளியம்மாள் கல்வி அறத்துக்கு முதல் மூலதனமாக இருந்தது. அடுத்து எனக்கு ஐம்பத்தைந்து வயது முடிந்தமையின், என் உயிர் ஒப்பந்த எல்லை முடிந்து வந்த தொகையும் எனது தெய்வீக நிதி (provident fund)யும், என் பிற நூல்களின் வருவாயும் ஊரில் உள்ள நிலங்களில் சிலவற்றை விற்ற தொகையும் சேர, அண்ணாநகரில் பள்ளியுள்ள பரந்த நிலப்பரப்பினைப் பெறவும் உயரிய நல்ல கட்டடங்கள் கட்டவும் வாய்ப்பு உண்டாயின. அன்று முதல் என் நூல் வருவாய் அனைத்தும் கல்வி அறத்துக்கே உரிமையாக்கப்பெற்றன.

மதுரை மாநகரில் நான் இருந்தபோது, நான் பயின்ற காலை அண்ணாமலைப்பல்கலைக் கழகத்திலே என் பேராசிரியரான நாவலர் சோமசுந்தர பாரதியாரை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றேன். சில கூட்டங்களில் அவர் தலைமை வகிக்க நான் பேசி இருக்கிறேன். ஒருமுறை ஒரு நாளிதழில் வந்த செய்தியைப்பற்றி அவரிடம் கூறினேன். ஒரு பெரியவர்—பல தமிழ் நூல்கள் எழுதிப் பரிசும் பாராட்டும் பெற்றவர், ஒரு மேடைப் பேச்சில், ஒன்றைச் சொல்லி, 'இது புராணமோ புறநானூறோ அல்ல, பொய்களைக் கொட்டுவதற்கு. உண்மையில் நடந்தது' என்று குறித்ததாகச் செய்தி அறிந்தேன். அதை அவரிடம் சொன்னேன். அவர் எப்போதும் போலுள்ள முடுக்கில் இளையா உள்ளத்தராய் 'அந்த மடையன் அப்படியா சொன்னான்; அங்கேயே அவன் தாடை

யில் இரண்டு அறை கொடுக்காது இங்கே வந்து சொல்லு கிறாயே' என்று எனைக் கடிந்து கொண்டார். ஆம்! புறநானூற்றுப் பாடல்களைப் பொய்க்கதை என்று கூறும் அளவுக்கு அந்த 'அற்புதமனித'னுக்கு உரம் வந்தது. தமிழில் யாரும் எதையும் எப்படியும் சொல்லலாம்; தமிழ் கேட் பாரற்றுக் கிடக்கின்றதல்லவா'! பாரதி இதனால்தான் கொதித்தெழுந்தார். இன்றும் 'அந்த மடையனை'ப் போன்ற புல்லுருவிகள் நாட்டில் நடமாடிக்கொண்டுதானே இருக் கின்றனர்.

நான் அங்கிருந்த போதுதான் தமிழகப்புலவர் குழு உருவாயிற்று. சோமசுந்தர பாரதியார் தலைமையில்தான் மதுரையில் அது 1958-59இல் உருப்பெற்றது. பலபுலவர்கள் அதில் கலந்து கொண்டனர். நான் செல்லவில்லை. எனினும் பாரதியார் வற்புறுத்தலின்பேரில் என் பெயரும் அந்த நாற்பத்தொன்பது பேரில் இடம் பெற்றதறிந்தேன். நான் நேர்மையாக 'யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்' என்ற அப்பர் வழியில் நடப்பவனாதலால் என்னைப் பலர் விரும்பமாட்டார்கள். எனவே என்பெயர் அதில் இடம் பெறச் சிலர் விரும்பவில்லை என அறிந்தேன். பிறகு சில ஆண்டுகள் அதில் உறுப்பினனாக இருந்தேன். சென்னையில் ஒருமுறை நான் தமிழ்த்துறைத் தலைவனாக இருந்தபோது, எங்கள் செலவில் அக்குழுவினை அழைத்து விழா நடத்தினேன். பின் எங்கள் வள்ளியம்மாள் கல்வி அறத்தின் வழியே பள்ளியில் ஒருமுறை பெருவிழா நடத்தி னேன். எனினும் என்நேர்மை சிலருக்கு அங்கே பிடிக்க வில்லை. மதுரை மாநாட்டின் போது நடைபெற்ற புலவர் குழுக் கூட்டத்திற்கு அரசாங்கத்திடம் பயணச் செலவு பெற்றமையால் குழுவிடம் வாங்க மாட்டேன் என்று மறுத்தமை ஒரு சிலருக்குக் குற்றமாகப் பட்டது. அப்படியே வேறொரு கூட்டத்திற்குப் பள்ளிமாணவரோடு, பள்ளியின்

உந்துவண்டியில் சென்றதால் பயணப்படி பெறவில்லை. அதுவும் தவறாயிற்று. மற்றவர்கள் ஒரே கூட்டத்துக்கு மூன்றிடத்தும் படிவாங்குவது முறையெனப்பட்டது. இப்படி வேறு சில வேறுபாடுகள் காரணமாக நான் அக்குழுவிலிருந்து விலகி விட்டேன். 'கூட்டத்தில் கூடி நின்று கூடிப்பிதற்ற லின்றி நாட்டத்தில் கொள்ளாரடி' என்ற பாரதியின் பாட்டின் வழியே நடப்பதுதான் இன்றைய யுகதர்மமாகும் என எண்ணுகிறேன்.

நான் மதுரையில் இருந்தபோது தவறாமல் மாலை வேளைகள் மீனாட்சி கோயிலுக்குச் செல்வேன். அங்கே சுற்று மண்டபங்களிலும் பொற்றாமைக் கரையிலும் சிலநேரம் அமர்ந்திருப்பேன். அங்குள்ள ஓவியங்கள், சித்திரங்கள் என் உள்ளத்தைத் தொடுவனவாக இருந்தன. இத்தகைய தெய்வ நயமும் கலைநயமும் கலந்த கோவில்களைக் காணவரும் பிற நாட்டார் இவற்றைப் பற்றி அறிந்து கொள்ள வாய்ப் பில்லையே என நினைத்தேன். இவற்றை எடுத்துக்காட்ட நல்ல ஆங்கில நூல் இல்லை என எண்ணினேன். எனவே அது பற்றி ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுத வேண்டும் என்ற அவா என்னுள் எழுந்தது. ஒரு சிலர் தமிழ் நாட்டில் உள்ள முக்கிய மான கோயில்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதினால் நன்றாக இருக்கும் என்றனர். எனவே அவ்வாறே திருத்தணி முதல் குமரி வரையில் உள்ளவற்றில் முக்கியமான சில கோயில்களைப் பற்றி ஆங்கிலத்தில் எழுத முடிவு செய்தேன். ஆயினும் நான் மதுரை விட்டு வருவதற்குள் அந்த எண்ணம் நிறைவேறவில்லை. ஓரளவுதான் செய்ய முடிந்தது. எல்லாக் கோயில் அதிகாரிகளுக்கும் எழுதி,கோயில் அமைப்பு, வரலாறு, படங்கள் இவற்றைப் பெற முயன்று, வேலையைத் தொடங்க, பின் ஓரிரு ஆண்டுகள் கழிந்தன. அதற்கிடையில் பம்பாயி லுள்ள பாரதிய வித்யாபவன் மாநிலங்கள் தோறும் உள்ள கோயில்கள் பற்றி வரிசையாக நூல்களை வெளியிட்டு

வந்தனர். அதன் செயலாளராக உள்ள தமிழர் இராம கிருஷ்ணன் அவர்களை நான் அறிவேனாதலால் அவர்களுக்கு இதுபற்றிக் கடிதம் எழுதினேன். நான் பம்பாய் சென்றபோது அப்பாரதிய வித்யாபவனத்தின் முதற்காரணராகிய திரு. முன்ஷி அவர்களை அவர்தம் இல்லத்திலே கண்டு பணிந்து அவர்தம் நல்வாழ்த்தினைப் பெற்று வந்தேன். திரு. இராம கிருஷ்ணன் அவர்களும் அவர்தம் குடும்பத்தில் இணைந்த ஒருவராக அங்கேயே தங்கி இருந்து 'பவன'த்தின் செயல்களை மேற்பார்வையிட்டு வந்தார். அப்போது இந்த நூல் எழுதும் எண்ணம் இல்லையாதலால் அதுபற்றிப் பேசவில்லை. பின் எழுந்த போது, என்னை எழுதப் பணித்தும் ஒருகருத்து வேறுபாட்டால் அந்த இணைப்பு துண்டிக்கப்பட்டது. ஒவ்வொரு தலம் பற்றிக்குறிப்பிடும் போதும் வடமொழிக்கு முதலிடம் தந்து 'தியான சுலோகங்களை' முன் கூட்டியே எழுதவேண்டும் என்றனர். நான் 'எழுதப்பெற வேண்டிய கோயில் தமிழ் நாட்டில் உள்ளமையாலும் தமிழில் தேவாரம் பாடிய மூவர்தம் பாடல்களாலேயே அனைத்தும் திருத்தலங் களாகச் சிறந்துள்ளமையாலும் தமிழுக்கு முதலிடம் தர வேண்டும்' என்றேன், இந்த மாறுபாட்டால் அவர்கள் வேறு யாரையோ கொண்டு வேறுநூல் தமிழ் நாட்டுக் கோயில் களைப் பற்றி வெளியிட்டார்கள் என எண்ணுகிறேன். நான் சிறிது காலம் தாழ்ந்தாலும், திருப்பதிவேங்கடவன் அருளும் பொருளும் உதவ என் ஆங்கில நூலை—'Ancient Temples of Tamil nadu' என்ற நூலை வெளியிட்டேன். நான் 1985இல் அமெரிக்காவுக்கும் பிற மேலை நாடுகளுக்கும் ஜப்பான் முதலிய கீழைநாடுகளுக்கும் சென்ற போது ஆங்காங்குள்ள வரலாற்றாளரும் பிறரும் இந்நூலை விரும்பி ஏற்றனர். நான் நாடுதிரும்பிய பிறகு பலருக்கும் அனுப்பிவைத்தேன். சிறப்பாக ஜப்பானில் உள்ள டோக்கியோ பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர் திரு. காரசிம்மா அவர்கள் தமிழ்நாட்டு வரலாற்

றைக் காலம் காலமாக ஆய்ந்து கரை கண்டவர். பலமுறை தமிழகம் வந்து சங்க முற்காலம் தொடங்கி இன்றைய காலம் வரை ஆண்ட அரசுகள்—சமுதாய வாழ்வு—பிற இயல்புகள் பண்பாடு ஆகியவற்றை ஆய்ந்தவர். அவர்தம் நூல் நிலையத்தே, தமிழ் நாட்டில் கிடைக்காத சிலவரலாற்று நூல்களும் காணப்பெற்றேன் (அவரைப்பற்றி என் ஏழுநாடுகளில் எழுபது நாட்கள் என்ற நூலில் விளக்கமாக எழுதியுள்ளேன்) அவர்கள் இந்நூலைப் போற்றிப் பாராட்டி ஏற்றனர். அண்மையில் சென்னை வந்தபோது, அந்நாட்டுத் தூதுவர் அலுவலகத்தில் தங்கி இருந்த காலை, எனக்குச் செய்தி அனுப்பி வரச்செய்து, கருத்துப்பல மாற்றம் செய்து கொண்டு சென்றுள்ளனர்.

நான் மதுரையில் தியாகராசர் கல்லூரியில் பணியாற்றிய போது ஒருநாள் திரு. செட்டியார் அவர்கள் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களைக் கல்லூரிக்கு அழைத்து வந்தார். வகுப்புதோறும் காட்டிக்கொண்டே வந்தவர், என் அறையில் வந்ததும் என்னை ராஜா அவர்களுக்கு அறிமுகப் படுத்தினார். உடனே அவர் 'இவரா! இவரைத் தெரியுமே! இவர் சென்னையை விட்டு எங்கும் போக மாட்டாரே? எப்படி இங்கே வந்தார்?' எனக் கேட்டார். செட்டியார் அவர்களும், 'வரமாட்டேன் என்றுதான் சொன்னார்; எங்கள் வலுக்கட்டாயத்தின் பேரில்தான் வந்திருக்கிறார்' என்று கூறினார். நானும் என் குடும்பச் சூழ்நிலையைக்காட்டி, 'ஒருமாற்றத்துக்காக இங்கே வந்தேன்' எனக் கூறினேன். எனினும் மனம் நிறைவு பெறவில்லை என்பதை அவர்முகம் காட்டிற்று.

நான் பச்சையப்பரில் சேருவதற்கு ராஜாதான் காரண மாக இருந்தபோதிலும், பின் என்மேல் கசப்பு உண்டாக ஒரு காரணம் இருந்தது. பச்சையப்பரில் டாக்டர் 'மு.வ'க்கு அடுத்த நிலையில் 'அ.மு.ப' என்ற நிலை நாடறிந்த ஒன்றா

யிற்று. ராஜா அவர்கள் முதலில் டாக்டர் மு.வ. அவர்களை அவர்தம் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகப் பொறுப் பேற்றுக் கொள்ளும்படி வேண்டினார். அவர் மறுக்கவே என்னைக் கட்டாயம் அங்கே அனுப்பி வைக்குமாறு அவரிடம் சொல்லி அனுப்பினார். அவர்களும் என்னிடம் வந்து வற்புறுத்தினர். அப்போது பச்சையப்பர் அற நிலையம் 'ராஜா'வின் கைப்பாவையாக இயங்கிற்று. அவர் நினைத்தால் எதையும் செய்ய முடியும். (எனக்குப் பணி தந்தவரும் அவரே) எனவே அவர் கோபத்துக்கு ஆளாகாமல் ஓரிரு ஆண்டுகள் சென்று வந்துவிடுதல் நலம் என்று 'மு.வ' அவர்கள் வற்புறுத்தினார்கள். எனினும் நான் இசையவில்லை. அதை மனத்தில் வைத்துக் கொண்டுதான் அங்கு தியாகராசர் கல்லூரியில் 'இவர் எங்கும் போக மாட்டாரே' இங்கே எப்படி வந்தார்?' எனக் கேட்டிருக்கிறார். அவர் கோபம் பின்னும் இருந்து கொண்டிருந்தது. டாக்டர் மு.வ. அவர்கள் 1961இல் சென்னைப் பல்கலைக்கழகம் சென்ற போது முறையாக நான் அத் தலைமைப் பொறுப்பை ஏற்க வேண்டும். எனினும் அவர்கள் பச்சையப்பர் அற நிலையவழி, அப்பதவிக்கு விளம்பரம் செய்து தக்கவரை நியமிக்க ஏற்பாடு செய்தார். அப்படியே நாளிதழ்களில் விளம்பரங்களும் வந்தன. நான் கலங்கவில்லை. இறைவழியே யாவும் நடக்கும் என நான் அமைதியாகவே இருந்தேன். விளம்பரத்துக்கு யாதொரு விண்ணப்பமும் வரவில்லை. வெளியே உள்ளவர்கள் நான் இங்கே இருக்கின்றமையின் விண்ணப்பம் இடவேண்டாம் என ஒதுங்கி நின்று தம் அன்பைக் காட்டினர். பிறகு அறநிலையச் செயலரும் பிறரும் வற்புறுத்தியதன் பேரில் நான் விண்ணப்பம் தந்தேன். உரியவகையில் துறைத்தலைவனாக நியமனம் பெற்றேன். இத்துடன் இக்கதை முடியவில்லை. நான் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்று, வள்ளியம்மாள் கல்வி அறத்துக்கென அண்ணா நகரில் 4½ ஏக்கர் நிலம் வாங்க

முயன்றபோது அவர்தம் மகனார், அண்ணாமலைப் பல்கலைக் கழக இன்றைய இணைவேந்தர் — அன்று பச்சையப்பர் அறநிலையத்தலைவர், அதைத் தடுக்கப் பெரு முயற்சி செய்தார். ஆயினும் அன்றைய முதல்வர் எம்.ஜி.ஆர் அவர்களும் பிறதுறை அமைச்சர்களும் உறுதியாக நின்றமை யின் நான் அந்த நிலத்தைப் பெற முடிந்தது. அன்று கலைக்கப் பெற்ற அவர்தலைமையில் அமைந்த பச்சையப்பர் அறநிலைய மும் இன்றுவரை அரசாங்க மேற்பார்வையிலேயே — அரசு நியமிக்கும் அரசாங்க ஊழியர்களாலேயே நடைபெற்று வருகிறது. எங்கோ சென்றுவிட்டேன், மன்னியுங்கள்.

ஒருமுறை தியாகராசர் கல்லூரிக்குச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் வந்தார்கள். பல்கலைக் கழகத்தின் 125 வது ஆண்டுவிழா அக்கழக எல்லைக்குட்பட்ட எல்லாக் கல்லூரிகளிலும் கொண்டாடப் பெற்றது. சென்னையில் சிறப்பாக முதலே கொண்டாடப்பெற, பிற கல்லூரிகளால் மெல்ல மெல்லக் கொண்டாடப் பெற்றதென எண்ணுகிறேன். அந்த ஆண்டு, தியாகராசர் கல்லூரியிலும் அக்கொண்டாட் டம் நடைபெற்றது. அதற்கென ஒரு பொருட்காட்சியும் நடைபெற்றது, அதில் நான் பல தமிழ்ப்பாடல்களில், இன்றைய அறிவியல் கருத்துக்கள் பொதிந்துள்ளமையைப் பாட்டு மூலமும் படங்கள் மூலமும் விளக்கிக் காட்சிப் பொருள்களாக வைத்திருந்தேன். அத்தகைய பாடல்களுள் ஒன்று மணிவாசகர்தம் உயிர்த்தோற்ற வளர்ச்சி பற்றியதாகும் (Evolution theory)

'புல்லாகிப் பூண்டாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
'கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்

செல்லாநின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்'

என்ற மணிவாசகர் அடிகளுக்கு ஒப்ப, உயிர்த்தோற்ற வளர்ச்சியினைப் படமிட்டுக் காட்டியிருந்தேன். திரு. முதலியார் அவர்கள் பொருள்காட்சிகளை ஒவ்வொன்றாகக் கண்டு கொண்டே தமிழ்த்துறை அறைக்கு வந்தார். அவரும் என்னை வற்புறுத்தி அங்கே அனுப்பியவருள் ஒருவர். எனவே, அங்கே என்னைக் கண்டதும் 'எப்படி இருக்கிறீர்கள்? புது இடம் பிடிக்கிறதா?' என்று தமிழிலேயே கேட்டார்கள். அவர்தம் ஆங்கில அறிவும் தெளிவும் நாடறிந்தவை. எனினும் நான் அவரைக் காணும் போதெல்லாம் தமிழில்தான் பேசுவேன்; அவர்களும் தமிழிலேயே பதில் சொல்லுவார்கள். என் நலம் வினவியபின் ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே வந்தார். மணிவாசகர் உயிர்த் தோற்ற வளர்ச்சியை ஊன்றிக் கவனித்தார். நான் அதுதான் சமயமென்று அருகில் சென்று 'ஐயா! இதில் ஒரு சந்தேகம் உள்ளது' என்றேன். 'என்ன?' என்றார். 'பல்வேறு உயிர்த் தோற்ற வளர்ச்சிகளைக் கூறிக் கொண்டே வருகின்றவர் மனிதனுக்குமுன் 'கல்லாய்' என்று சொல்லுகிறாரே இது பொருந்துமா?' எனக் கேட்டேன். உடனே அவர்களும் சிறிதும் தயக்கமில்லாமல் 'இது முற்றும் சரியே' எனத் தமிழில் சொல்லிவிட்டு 'It is perfectly allright, it is the fossil stage என்றார். பல உயிர் உடம்புகள் உறைகல்லாய் உள்ளமையை விளக்கினார். இன்றும் ஆய்வாளர்கள் உலகில் பல்வேறு இடங்களில் பல்வேறு உயிர்களில் உறை கற்களைக் கண்டு ஆய்ந்து வாழ்வியலை—அதன் ஆயுளைக் கணக்கிடுதலைக் காண்கிறோமே, மேலும் இத்தகைய கருத்துக்களை வெளியிட வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். நான் முன்பே 1947இல் தேவாரம் பற்றி என் ஆய்வேட்டில் தேவாரத்தில் உள்ள அறிவியல் கூறுகளைத்

தனி அதிகாரமாகத் தொகுத்துக் காட்டியதைக் குறித்தேன். அவர்கள் உடனே அதை நூலாகக் கொண்டு வரவேண்டும் என்று கூறினார். அவர் ஆசையை அன்று இன்றேனும் 1982இல் திருப்பதி வேங்கடவன் அருளாலும் பொருளாலும் வெளிக் கொணர்ந்தேன்.

நான் மதுரையில் வாழ்ந்த காலத்தில் திருமிகு செட்டியாரும் அவர்தம் குடும்பத்தினரும் என்னிடம் மிகுந்த அன்பொடு பழகினர். அவர்தம் குடும்ப விழாக்களில் என்னையும் பங்கு கொள்ளச் செய்வர். அவர்தம் உறவினர்களையும் நன்கு அறிமுகப்படுத்தினர். அருகிலுள்ள சிவத்தலங்களுக்குச் சுந்தரம் செட்டியார் தம் காரிலேயே என்னை அழைத்துக் கொண்டு சென்றார். நான் மதுரைக்குப் போகும்போது கார் வைத்திருந்தேன். மதுரைக்கும் காரில் தான் சென்றேன். நானே ஓட்டியாகவும் இருந்தேன். எனினும் சென்ற சில நாட்களுள் ஒரு விபத்து ஏற்பட்டது. எனவே நான் ஓட்டுவதையும் நிறுத்திக் கொண்டேன். காரினையும் அங்கேயே விற்றுவிட்டேன். எனவே அவர்களுடைய காரிலேயே பல ஊர்களுக்குச் சென்றிருக்கின்றேன். சிலவிடங்களில் அவர்கள் தலைமை வகிக்க நான் பேசுவதும் உண்டு. ஒருமுறை குன்றக்குடி அடிகளார் ஆதீனத்தின்கீழ் உள்ள திருப்புத்தூர் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றார். திருநாவுக்கரசர் மதுரைக்கு வருமுன்பே, திருப்புத்தூரிலேயே இறைவனைப் பாடும்போது, மதுரையை நினைத்து,

மின்காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும்
விருப்பவன் காண் பொருப்புவலிச் சிலைக்கையோன்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி [காண்
நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன் காண்
பொன்காட்டுக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக் காந்தாள் கை காட்டக் கண்டு வண்டு
தென்காட்டும் செழுப்புறவில் திருப்புத்தூரில்
திருத்தளியான் காண் அவன் என் சிந்தையானே

என்று பாடிய பாடல் என் நினைவுக்கு வந்தது. மதுரை சென்ற அன்று தொட்டு இன்று வரை அப்பரைப்போல் வாழ்கின்ற நான் அவர் தம் இப்பாடலை எண்ணி எண்ணி உளம் உருகியதுண்டு. 'என் சிந்தையானே' என்று அப்பரடிகள் பாடியபடி எப்போது நான் பாடி, இறைவனை என் சிந்தையுள் கட்டிப்பிடிப்பேன் என்று நினைத்து நினைத்து இதைப் பாடுவதுண்டு. இவ்வாறே திரு மாணிக்கவாசகம் செட்டியார் அவர்களும், இருவர்தம் கான்முளைகளாகிய சொக்கலிங்கம், தியாகராசன் ஆகியோரும் அவர் தம் கார்களில் பல சுற்றுப்புற இயற்கை இலங்கும் இடங்களுக்கு அழைத்துச் செல்வதுண்டு. அவற்றுள் ஒரு சிலவற்றைப் பற்றி என் வையைத் தமிழில் எழுதியுள்ளேன். செல்வர் சொக்கலிங்கம் நான் அமெரிக்கா சென்றஞான்று, அங்கே காவாய்த் தீவில் உள்ள சைவ சித்தாந்தமடத்தில் அவர் மகளுடன் நான்கு நாட்கள் தங்கி இருந்து, அங்கும் என் அன்பு மாணவனாகவே இருந்ததை நினைவு கூர்கின்றேன் (நான் தியாகராசர் கல்லூரியில் இருந்தபோது அவர் அங்கு மாணவராகப் பயின்றார்)

நான் மதுரையில் இருந்தபோது என் உடனின்று உற்றுழி உதவிய ஒரு சிலரையும் இங்கே நினைக்கக் கடமைப்பட்டுள்ளேன். கல்லூரி முதல்வர் இராமநாதப்பிள்ளை நான் இருந்த போது அன்புடன் அரவணைத்துச் சென்றார். நான் இருந்த வீட்டின் பக்கத்திலேயே அவர் இருந்தமையின், கல்லூரிக்குச் செல்லும் போதும் திரும்பும் போதும் அவர் காரிலேயே அழைத்துச் செல்வார். வருவோர் பலருக்கும் என்னை அறிமுகப்படுத்திவைப்பர். அவர் மகனார் சென்னையில் இருந்தவர், பிறகும் அடிக்கடி என் நலன் விசாரிப்பார். நான் வந்த உடனேயே திரு. இராமநாதப்பிள்ளை அவர்களும் ஓய்வு பெற்று சென்னைக்கே வந்துவிட்டனர். நான் விட்டு வந்த போது எனக்கு ஒரு நல்ல சான்றிதழும் தந்துள்ளனர்.

என் வீட்டிற்கு எதிரே இருந்த கல்லூரி விலங்கியல் பேராசிரியர் ரங்காச்சாரி என்பவரும் அவர்தம் துணைவி யாரும் மகளாரும் அவர்தம் பிள்ளைகளும் அன்போடு பழகினர். எங்கள் பிள்ளைகள் பெரும்பாலும் அவர்கள் வீட்டில் தான் இருப்பர். அவரை எல்லாரும் மிகுந்த வைதீகர் என்பர். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் என் மூத்த அண்ண னாகவே அவர் விளங்கினார். எங்கள் பிள்ளைகள் அவர் வீட்டு அடுப்பங்கரை வரையில் செல்வர். மேலும் அந்த அன்னை யாரின் உடன்பிறந்த பார்த்தசாரதி ஐயங்கார், இங்கே சென்னையில் காவல்துறைத் துணை ஆணையராகப் பணி யாற்றி ஓய்வு பெற்றவர். நான் பள்ளி, கல்லூரிகளை அண்ணா நகரில் அமைத்த போது, எதிர் வீட்டில் இருந்த அவர்கள் எல்லாவகையிலும் துணைபுரிந்தார். பேராசிரியர் ஓய்வு பெற்றுத் தம் சொந்த ஊராகிய திருவரங்கத்திற்கு வந்த பிறகும் எங்களோடு தொடர்பு கொண்டிருந்தார். அவர்தம் மகனாரும் மகளும் சென்னைவரும் போதெல்லாம் வீட்டிற்கு வந்து பிள்ளைகள் நலம் கண்டு செல்வர்.

தமிழ்த்துறையில் பணியாற்றிய பாலுசாமி என்பவரும் பலவகையில் எனக்கு உற்றவராக விளங்கினார். பின் அவர் அண்ணாமலையிலும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் திலும் பணியாற்றிய ஞான்றும் அடிக்கடி வீட்டுக்கு வந்து செல்வார். இப்போதும் சென்னையிலும் வீட்டிற்குவந்து நலம் விசாரித்துச் செல்வார். மதுரைத் தமிழ்ச்சங்கக் கல்லூரி யில் முதல்வராக இருந்த என் மாணவர் நாராயணனும் நான் அங்கே உள்ள வரையில் உற்றவராக இருந்தார். அவர்தம் கல்லூரிக்கு அடிக்கடி அழைத்துச் சென்று மாணவர்களுக்கு அறிவுரை சொல்லப்பணிப்பார். நானும் அடிக்கடி செல்வேன். பள்ளி ஆசிரியராக இருந்த திரு. சாம்பசிவம் என்பார் பல வகையில் எனக்கு உதவியுள்ளார். நாவலர் பதிப்பகம் என்று அமைத்து என் பேராசிரியர் சோமசுந்தர பாரதியார் தம்

நூல்களையெல்லாம் அச்சிட்டார். மேலைச் சித்திரை வீதியில் புத்தகக் கடை அமைத்து என் நூல்களையும் வைத்து விற்பனை செய்தார். என் திருவள்ளுவர் கழகச் சொற் பொழிவுகளை யெல்லாம் குறிப்பெடுத்துப் பின் படி எடுத்து உதவினார். பின் பல்கலைக் கழகப் பேராசிரியரான போதும் அவர் தொடர்ந்து கடிதமூலம் தொடர்பு கொண்டிருந்தார். அவர்தம் பிள்ளைகளும் அவ்வாறே. கல்லூரி ஆங்கிலத் துறையில் பணியாற்றிய தஞ்சையைச் சேர்ந்த உப்பிலி என்பவரும் எனக்குப் பலவகையில் உதவினார்.

மாணவர் எண்மர் முதலாண்டில் பயின்றார்கள் என எண்ணுகிறேன். ஒருவர் பெண். ஆடவருள் காமாட்சி நாதன் என்பவர் குறிப்பிடத் தக்கவர். தற்போது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றுகின்றார். இப்போதும் சென்னைக்கு எப்பொழுது வந்தாலும் வீட்டிற்கு வந்து ஒரு சில மணி நேரம் இருந்து குடும்ப வாழ்க்கை பற்றியும் நம் பள்ளி கல்லூரி பற்றியும் கேட்டு மகிழ்ந்து செல்வார். மற்றொருவர் பிரகாசம் என்பவர். அவர் தற்போது பச்சை யப்பர் கல்லூரியில் பேராசிரியராக உள்ளார். திரைப்பட உலகிலும் கதை, வசனம் எழுதிப் புகழ் பெற்றவர். வேறொருவர் ஜம்புநாதன் என்பவர். சௌராட்டிர மரபினர். எனினும் தமிழ் மீது தணியாத காதல் கொண்டு வாழ்பவர். அவருக்குச் சொந்தமான ‘தினமணித் திரை அரங்கு’ என் வீட்டின் அருகிலேயே இருந்தது. எனவே அடிக்கடி அங்கே வந்து படம் பார்க்குமாறு அழைப்பார். நான் பெரும்பாலும் செல்வதில்லை. பிள்ளைகளை அழைத்துச் செல்வார். பச்சை யப்பர் கல்லூரியில் பணியாற்றிய பேராசிரியர் அப்பாவு ஜெயின் அவர்கள் அப்போது தியாகராசர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியின் முதல்வராக இருந்தார். அவரையும் மறக்க இயலாது. இன்னும் எத்தனையோ புலவர்கள்—வியாபாரி கள்—அலுவலர்கள் என் முன் நிற்கின்றனர். நாள் பல

கடந்து இதை எழுதுவதால் பலருடைய பெயர்கள் மறந்து விட்டன. சுந்தரர் திருத்தொண்டர் தொகையில் கூறியபடி 'அப்பாலும் அடி சார்ந்தார்' என அவர்களையும் எண்ணி எண்ணிப் போற்றக் கடமைப்பட்டவனாவேன்.

இவ்வாறு பல வகையில் அவர்களோடு பழகிய என்னை, நான் கல்லூரியை விட்டு வந்த போதிலும், கோடையில் அவர்தம் கொடைக்கானல் மாளிகைக்கு விரும்பி வரச் சொல்லுவார்கள். மூன்று ஆண்டுகள் அவ்வாறு சென்று அவர்தம் விருந்தினர் மாளிகையில் தங்கி அவர்களோடு உண்டு, கோடைகாலத்தினையெல்லாம் கண்டு களித்தேன். பகல் வேளைகளில் ஒவ்வோராண்டு ஒவ்வோர் இலக்கியத்தை முறையாகச் சொல்லுமாறு பலரும் கூடி அமர்ந்து கேட்பார்கள். இரண்டு அல்லது மூன்று மணி நேரத்துக்கு மேல் வகுப்பெனவே அவை நடைபெறும். சுந்தரம் செட்டியார் குடும்பமும் பக்கத்துப் பங்களாவில் இருந்த முன்னாள் தமிழக முதல்வர் குமாரசாமிராஜா அவர் தம் குடும்பத்தைச் சேர்ந்தோரும் முறையாக வகுப்பில் இருப்பார்கள். சில சமயம் வேறு சிலரும் வருவதுண்டு. ஓரிருமுறை கருமுத்துச் செட்டியார் தம் துணைவியார் திருமதி இராதா தியாகராாசன் கூட வந்திருந்தார்கள் என எண்ணுகிறேன்.

அழகு. சுந்தரம் செட்டியார் மூத்த மருகர்—அங்கே தனி மாளிகையில் தங்கியிருந்தவரும் அடிக்கடி வருவார். திரு. சுந்தரம் செட்டியார் மூத்த மகன் திரு. தியாகராசனும் அவர்தம் துணைவியாரும் தவறாது வந்து, கேட்டுச் சிந்தை திருந்திச் செம்மையுற்றனர் என்று திரு. சுந்தரம் செட்டியார் அவர்களும் அவர்தம் துணைவியார் ஆச்சி அவர்களும் என்னைக் காணும் போதெல்லாம் சொல்லுவார்கள். ஓராண்டு திருக்குறள், ஓராண்டு கம்பராமாயணம், ஓராண்டு பெரியபுராணம் என நினைக்கிறேன். இவ்வாறு மூன்று ஆண்டுகள் தொடர்ந்து கோடையில் ஒரு மாதத்துக்குமேல்

இருந்து, நான் பயன்பெற்றதோடு, தமிழ் இன்பப் பயனை அவர்களுக்கும் அளித்து மகிழ்ந்தேன். அங்கிருந்த நாட்களில் குறிஞ்சி ஆண்டவனை நாள்தோறும் சென்று வழிபட்டேன். அந்த நெடு உயரத்திலிருந்து கீழே தெரியும் ஆவினன்குடியாகிய பழநிமலையினையும் பழநி ஆண்டியினையும் பார்த்து நினைத்து வணங்கி வழிபட்டேன். ஒருமுறை பன்னிரண்டாண்டுக்கு ஒருமுறை மலரும் குறிஞ்சி மலர் நிறைய மலர்ந்திருந்தது. அதைக் காணப்பெறும் பேறு பெற்றமையை எண்ணி எண்ணி இறைவனைப் போற்றினேன்.

இவ்வாறு மதுரை வாழ்வு பலவகையில் எனக்கும் பிறர்க்கும் பயன்பட்டது. என்றாலும் அடுத்த (1959) மார்ச்சு இறுதியிலேயே நான் சென்னை திரும்பி விட்டேன். ஆயினும் என் வீட்டில் நான் இருந்த பகுதியில் நேரே நுழைய முடியவில்லை. நான் மதுரை சென்றபோது, அங்கிருந்த ஒரு அன்பர் பணி நீக்கம் செய்யப் பெற்று சென்னைக்குத் திரும்பினார். எனக்கு மிக நெருங்கியவர் அவர். எனவே என்னிடம் வந்து (ஆகஸ்டில் என எண்ணுகிறேன்) 'நீங்கள் பூட்டி வைத்துள்ள வீட்டில் ஒருசில மாதங்கள் நான் தங்கி வேறு இடம் பார்த்துக் கொள்ளுகிறேன். நீங்கள் வந்தாலும் மார்ச்சில் தானே வரப்போகிறீர்கள்' என்றார். நானும் பூட்டி வைத்திருப்பதை அன்பர் புழங்கத் தரலாம் என எண்ணி, வாடகை ஒன்றும் இன்றி அவரை இருக்கச் சொன்னேன். அவர் நல்லவர்தான். ஏதோ என்வேளை அவரைப் பொல்லாதவராக்கிற்று போலும். வீட்டில் குடியேறியதும் அவர் வாடகை தருபவர் போன்று 'இது சரி இல்லை. அது சரி இல்லை. உடனே செய்ய வேண்டும். நானே சிலவற்றைச் செய்து விட்டேன். அதற்கு ஆன செலவை நீங்கள் அனுப்ப வேண்டும்' என்றெல்லாம் எழுதினார். அத்துடன் அப்போது அவருக்கு அறிமுகமான ஒருவர் மாநகராட்சியின் ஆணையராக இருந்தார். அவரிடம் வீட்டினைப் பற்றிக் குறைகள்

கூறி, கீழ் உள்ளவர்கள் அதிகம் வாடகை தருகிறார்கள். நான் இருக்கும் பகுதி வேறு, மேல் அவர்கள் சாமான் வைத்துள்ள அறைகள் வேறு. இவைகளுக்கெல்லாம் அதிக வரி போட வேண்டும் என்று கூறியதொடு நீண்ட கடிதமும் எழுதினார். நான் திரும்பி வந்தபோது எழும்பூரிலிருந்த அவ்வாணையரை வேறு காரணத்துக்காக காணச் சென்ற போது, இவற்றையெல்லாம் கூறி, அக்கடிதத்தினையும் காட்டினார். பிறகு 'நீங்கள் வந்த பிறகு இதைக் காட்டவே வைத்திருந்தேன்' என்று கூறி நான் படித்தபின் அதைக் கிழித் தெறிந்தார். பின் 'எல்லாரிடமும் விழிப்பாக இருக்க வேண்டும்' என்று கூறி வாழ்த்தி அனுப்பினார். இன்று அந்த இருவருமே இல்லை. முன்னவரைப் பற்றி இன்னும் பல கூறலாம். எனினும் இல்லாதவரைப் பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம் என அமைகின்றேன்.

இவ்வாறு பத்து மாதங்கள் அன்னை வயிற்றில் கரு தங்கியதுபோல் அன்னை அங்கயற்கண்ணியினை நாள் தோறும் கண்டு கொண்டே இருந்து அடுத்த மார்ச்சு மாதக் கடைசியில் சென்னை வந்து சேர்ந்தேன். இருக்க இடம் இல்லாத காரணத்தால் பிள்ளைகள் இருவரையும் கோவை மருகர் இல்லத்திற்கு அனுப்பி வைத்துவிட்டு நான் மட்டும் மேலறையில் தங்கினேன். நாள்தோறும் குடியிருந்த நல்ல வரை வேண்டி வேண்டி விரைவில் காலி செய்யுமாறு கூறினேன். அப்போது செனாய் நகரின் ஒரு பகுதியில் சில வீடுகளைக் கட்டி மாநகராட்சியினர் பலருக்கு ஒதுக்கி வந்தார்கள். நான் மேலே கூறிய ஆணையரைக் கண்டு, அவர் நண்பர் முன்னரே விண்ணப்பம் செய்திருந்தமையால், விரைவில் ஒரு வீடு ஒதுக்கித் தந்து, எனக்கு விடுதலை அளிக்கு மாறு வேண்டினேன். அவர்தம் நண்பரும் அடிக்கடி சென்று கேட்டிருப்பார். அவருக்குச் சொந்தமாக ஒரு வீடு ஒதுக்கப் பெற்றது. நான் துயரிலிருந்து விடுதலை பெற்றேன். சூன்

மாதத்தில் குழந்தைகளை வரவழைத்துப் பள்ளிகளில் சேர்த்து, நானும் பழையபடியே பச்சையப்பரில் என் பணியினைத் தொடர்ந்து தொடங்கினேன்.

# 4. வடக்கு நோக்கி

1966மே மாதம் ஒருநாள். எனக்கு ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக் கழகத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. பிரித்துப்பார்த்தேன். தமிழக அரசின் (அன்றைய சென்னை அரசாங்கத்தின்) பரிந்துரையின் பேரில் நான் அப்பல்கலைக் கழகத் தமிழ்துறைத் தலைவனாக நியமிக்கப் பட்டிருப்ப தாகவும் சூலையில் பல்கலைக்கழகம் திறக்கும் நாளில் வந்து சேரவேண்டும் எனவும் அதில் குறித்திருந்தது. சம்பளம் ஆயிரம் எனவும் தங்குவதற்கு ஒரு மாளிகை ஒதுக்கப் பெற்றுள்ளதெனவும் குறிப்பு இருந்தது. எனக்கு ஒன்றும் புரியவில்லை. தெற்கே மதுரையில் ஓராண்டு கழித்தபின் இங்கேயே அமைதியாக இருக்க எண்ணிய எனககு, இது புதிராக மட்டுமல்ல—தேவையற்றதாகவும் இருந்தது. தமிழக அரசு பரிந்துரை என்று சுட்டி இருப்பதால், அங்கே சென்றால் தகவல் அறியலாம் என எண்ணினேன்.

அன்று மாண்புமிகு பக்தவத்சலம் அவர்கள் தமிழக முதல்வராகவும் கல்வித்துறை அமைச்சராகவும் இருந் தனர். அவர்கள் எனக்கு நன்கு அறிமுகமானவராதலால், மறுநாள்காலை நேரே மயிலை வாரன் சாலையில் அவர்கள் இல்லம் சென்றேன். முன் அறையில் அமர்ந்து கோப்புகளை ஆய்ந்து கொண்டிருந்தார் அவர். சிலர் வெளித் தாழ்வாரத் திலும் ஒருசிலர் உள் விருந்தினர் அறையிலும் தங்கி இருந்தனர். அப்போது முதல்வரின் முதன்மைச் செயலர் கிருஷ்ணையா என எண்ணுகிறேன்—அங்கே இருந்தார்.

என்னைக் கண்டதும் நேரே முதல்வர் அறைக்கு அழைத்துச் சென்றார். நான் முதல்வரை வணங்கி, ஐதராபாத் கடிதம் பற்றிக் குறிப்பிட்டேன். அவர்கள் உடனே 'ஆம்! நான்தான் ஏற்பாடு செய்தேன். பிறமாநிலங்களில் தமிழ்த்துறை வளர நம் அரசாங்கம் மானியம் தருகிறது. அதில் ஒன்று உஸ்மானியா! அங்கு நம் தமிழ்ப் பண்பாட்டினை விளக்க—தமிழின் நலம்போற்றத் தக்கவர் உங்களைவிட வேறுயாரும் இல்லை என அறிவேன். நான் கூப்பிட்டுக் கேட்டால் 'வேண்டாம்' என்று மறுப்பீர்கள். எனவே உங்களைக் கேளாமலே உங்கள் பெயரைப் பரிந்துரைத்தேன். தமிழ் நலத்தினைப் பிறர்காண வேண்டாமா! மறுக்காது சென்று வாருங்கள்' என்றார். உண்மையில் அவர் தமிழுக்குச் செய்ததுபோன்று வேறு எவரும் இதுவரையில் செய்யவில்லை எனலாம். இதுபற்றி என் 'ஓங்குக உலகம்' என்ற நூலில் சற்றே விளக்கமாக எழுதியுள்ளேன். மேலும் இளமை முதலே என் வழிகாட்டியென அவர்கள் விளங்கினார்கள். ஆகவே அவர் சொற்படி செல்ல இசைந்தேன். ஆயினும் அவர்களிடம் ஒரு வேண்டுகோளை முன்வைத்தேன். நான் அங்கே இருக்கும்போது, முதல்வர் தில்லி செல்லுங்கால் ஒரு நாள் ஐதராபாத்தில் தங்கி, அங்குள்ள தமிழரோடு அளவளாவிச் செல்லவேண்டும் என்றேன். அவர்களும் அதற்கு இசைந்தார்கள். அப்படியே ஒருமுறை தில்லி செல்லும் வழியில் காலை 9 மணிக்கு வந்து விமானத்தி விருந்து இறங்கி முழுநாள் இருந்து மறுநாள் காலை 9க்குத் தில்லிக்குப் புறப்பட்டுச் சென்றனர். ஐதராபாத், செக்கந்திராபாத் இரண்டு இடங்களிலும் நான் ஏற்பாடு செய்திருந்த இரு கூட்டங்களிலும் பேசியதோடு, சில தமிழர்களை அழைத்துக் குறைகளையும் கேட்டறிந்தனர். அவர் சொல்காப்பாற்றிய தன்மையினை வியந்து போற்றினர் பல்லோர்.

வேறுவழிஇன்றி ஐதராபாத் புறப்பட ஏற்பாடு செய்தேன். அரசாங்க உத்தரவு ஆனதால் கல்லூரியில் தடையின்றி ஓராண்டு விடுப்பளித்து என்னை வழி அனுப்பி வைத்தனர். டாக்டர் திரு. இலட்சுமணசாமி முதலியார் அவர்களும் என்னை வரச்சொல்லி அங்கு நான் நடந்துகொள்ள வேண்டிய வழிவகைகளை விளக்கி வாழ்த்தி அனுப்பினர். வாலாஜாபாத் அப்பா மாசிலாமணி முதலியார் அவர்கள் ஒரு வழியனுப்பு விழாவே ஏற்பாடு செய்து வாழ்த்தி அனுப்பினார். சூலையில் ஒருநாள் நான் புறப்பட ஏற்பாடு செய்தேன்.

அங்கே உஸ்மானியப் பல்கலைக்கழகத்தே என் மாணவர் ஒருவர் மாணிக்கம் என்பவர் பணியாற்றி வந்தார். அவருக்கு நான்வரும் நாளையும் நேரத்தையும் குறித்துக் கடிதம் எழுதினேன். காலை 8 மணி அளவில் செக்கந்திராபாத் இரெயில் நிலையத்தே அவர் வந்து ஏற்று, எனக்கென ஒதுக்கியுள்ள மாளிகைக்கு அழைத்துச் சென்றார், எனக்கு உடன் துணையாக இருக்கவும் சமையல் முதலியவற்றைப் பார்த்துக் கொள்ளவும் ஒரு பையனை அழைத்துச் சென்றேன். அவன் பெங்களூரைச் சேர்ந்தவன்; ஏர்க்காட்டில் இருந்தவன். ஒழுங்காக இருப்பான் என அழைத்துச் சென்றேன். எனினும் அங்கே சென்றதும் பெருங்குடியனாக மாறிவிட்டமையால்—சாமான் வாங்கக் கொடுத்த பணத்தையெல்லாம் குடித்துச் செலவிட்டமையால்—ஒரு சில நாட்களிலேயே அவனை அங்கிருந்து நேரே பெங்களூர் அனுப்பிவிட்டேன். அப்பெரு மாளிகையில் என் தனி வாழ்வு தொடங்கியது.

பல்கலைக் கழகத்தே முதுகலை வகுப்பு (எம்.ஏ) இருந்தது. எனினும் இரண்டாண்டிலும் ஒவ்வொருமாணவரே சேர்ந்திருந்தனர். பட்ட வகுப்பில் தமிழ் பயில்வோர் நால்வர் அல்லது ஐவர்தாம் இருந்தனர். என்னுடன் அங்கே முன்பே பணியாற்றிய திரு. சிங்காரவேலர் இருந்தார். அவர் பரங்கிப் பேட்டையைச் சேர்ந்தவர்; அண்ணாமலையில்

பட்டம் பெற்றவர். பல நாட்களாக அங்கேயே பணியாற்றி, சொந்தமாக வீடும்கட்டிக்கொண்டு சிறக்க வாழ்கின்றனர். முறையாக அவருக்குத்தான் இந்தத் தலைமைப் பதவி தந்திருக்க வேண்டும். எனவே நான் சென்றதில் அவருக்கு மனக் கசப்புத்தான். சில சமயங்கள் பல நடவாத நிகழ்ச்சி களைச் சொல்லி என்னைப் பயமுறுத்துவார் என்றாலும் பழகப்பழக எனக்கு உற்றவராகி என்வழி ஏவல்கேட்டுச் செயலாற்றி வந்தார். உடன் மாணிக்கம் அவர்களும் பணியாற்றினார். அத்துடன் அரசர் கல்லூரியிலும் அவர் பணி இருந்தது. என் மாணவரல்லாததாலும் அவர் இருவருக்கும் சிலவற்றில் வேறுபாடு இருந்தமையாலும் என்னை முற்றும் கவனித்து வந்தார்; வேண்டிய உதவிகளைச் செய்வார். நானும் அடிக்கடி இருவர் வீடுகளுக்கும் சென்று அவர்தம் குடும்பங்களுள் ஒருவனாகப் பழகினேன். இவர்களை அன்றி இரு நகரங்களிலும்—ஐதராபாத், செக்கந்திராபாத்—மூன்று கல்லூரிகளில் தமிழ் இருந்தது. என் மாணவர்கள், முருகன், சீனிவாசன் என்பவர்களும் மேரிகொர்னீலியஸ் என்ற பெண்மகளும் ஆசிரியர்களாக இருந்தார்கள். மேரி கொர்னீலியஸ் பின் சென்னை செல்லம்மாள் கல்லூரியில் ஆசிரியர் பணி ஏற்று அண்மையில் ஓய்வு பெற்றுள்ளனர். அனைவரும் வெவ்வேறு கல்லூரிகளில் பணியாற்றியபோதிலும் பல்கலைக்கழகத்திற்குக் கட்டுப்பட்டே செயலாற்றினார்கள். எனவே அனைவரையும் அடிக்கடி அழைத்து—பருவத்துக் கொருமுறை பாடங்கள் பற்றியும் பிறவற்றைப் பற்றியும் கலந்து பேசி மகிழ்வது வழக்கம். அதுவரை இந்த வழக்கம் அங்கே இல்லையாதலால், அனைவரும் இதை மகிழ்வொடு ஏற்று, கலந்துரையாடிக் களிப்பெய்தினர். சிலசமயம், ஒருசில பாடங்களை முதுகலை வகுப்பிற்கு அவர்களுள் ஒருவரை எடுக்கச் சொல்லுவதுண்டு. நானும் அவர்கள் கல்லூரி களுக்குச் சென்று அங்கே தமிழ் பயிலும் மாணவர்களுடன்

பேசி அவர்களை ஊக்குவது உண்டு. முதுகலையில் ஒவ்வொரு மாணவரே இருந்தமையின் அதிகத் தொல்லை இல்லை. அம்மாணவருள் ஒருவர் நான் காஞ்சியில் இருந்தபோது இருந்த, சேனைத்துறைக் கணக்குப் பகுதியில் ஓய்வுபெற்ற சாரங்கபாணி நாயுடு அவர்களின் மகள் வழிப் பெயர்த்தி ஆவார்கள். மற்றொருவர் ஓர்உயர் அதிகாரியின் மகளார். இருவர்தம் பெற்றோரும் என்னை அவர்கள் வீடுகளுக்கு அழைத்துப் பேசி விருந்தளிப்பர்.

செக்கந்திராபாத்தில் பலதமிழர்கள் வாழ்கின்றனர். 'Deccan Herald' என்ற ஆங்கிலத் தினசரிப் பத்திரிகையினை ஒரு தமிழர் நடத்தி வருகின்றார். முன் காஞ்சி பச்சையப்பர் பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்த திரு. மணி. கோடீஸ்வர முதலியார் அவர்கள் அங்கிருக்கும் மாபூப் கல்லூரி எனும் உயர்நிலைப் பள்ளியின் முதல்வராக இருந்தார். இப்பள்ளி முற்றும் தமிழரால் நிர்வகிக்கப் பெறுவது. அப்படியே பெண்களுக்கெனத் தனிப்பள்ளியும் (கீட்ஸ் பள்ளி) தமிழரால் நிருவகிக்கப்பெறுகின்றது. இருபள்ளிகளுக்கும் நான் அடிக்கடி சென்று அங்குள்ள தமிழாசிரியர்களைக் கண்டுபேசி மாணவர்களுடன் கலந்து மகிழ்வேன். ஒரு பள்ளியின் தமிழாசிரியர் அண்ணாமலையில் என்னுடன் பயின்ற வடஆர்க்காட்டைச் (முனுகப்பட்டு) சேர்ந்த திரு. இராசாபாதர் என்பவராவர். ஓய்வு பெற்றபின் அவர் தற்போது எண்பதைத் தாண்டிய நிலையில் சென்னை அயன்புரத்தில் தங்கி வாழ்ந்து வருகிறார்.

நான் அங்கே சென்றதன் நோக்கம்—அல்லது என்னை அனுப்பப்பெற்ற நோக்கம் அப்பல்கலைக்கழகத்தே தமிழில் 'டாக்டர்' பட்டம் பெற வாய்ப்பினை ஏற்படுத்த வேண்டும் என்பதே. அப்படியே மாணிக்கம் அவர்களும் செங்கைவேல் முருகன் அவர்களும் என்வழியே பதிவுசெய்து கொண்டார்கள். திரு. சிங்காரவேலு அவர்கள் பூனா பல்கலைக்கழகத்தே

முன்னரே பதிவுசெய்து ஆய்வு செய்துவந்தார், பின் பட்டமும் பெற்றார். என்னிடம் பதிவு செய்தவருள் முருகன் அவ்வளவு ஆர்வம் காட்டவில்லை. வேறு மகளிர் இருவரும் பதிவு செய்ய சனவரியில் விருப்பம் தெரிவித்தனர். நான் மார்ச்சில் சென்னைக்குத் திரும்ப முடிவு செய்தமையின், அடுத்த ஆண்டு தக்கார் வழியே ஆய்வு செய்யுமாறு ஆற்றுப்படுத்தினேன். மாணிக்கம் அவர்கள் நான்விட்டு வந்த பிறகும், என்னிடமே தொடர்ந்து ஆய்வு செய்து பட்டத்தினைப் பெற்றார், அவ்வாண்டு பயின்ற இருமாணவர்களும் சிறப்புறத் தேர்ச்சி பெற்றனர். முதுகலை முடித்துப் பட்டம் பெற்றவர் தற்போது சென்னையில் உள்ள நேஷனல் மகளிர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிகிறார். அவர் தம் மகளார் தற்போது எங்கள் வள்ளியம்மாள் கல்லூரியில் பயின்று வருகிறார். மற்றவர்களைப் பற்றித் தற்போது நான் அதிகம் அறிந்து கொள்ளும் வாய்ப்பு இல்லை.

நான் அங்கே பல்கலைக் கழகத்தே பணியாற்றி னேனாயினும் பெரும்பாலும் நகரிலுள்ள தமிழ் மக்களோடு நன்கு கலந்து பழகினேன். மணி. கோடீஸ்வர முதலியார் அவர்கள் சொந்த வீடுகட்டிக்கொண்டு (மாரட்பள்ளியில்) நலமுற வாழ்பவர், என்னை அடிக்கடி வீட்டுக்கு அழைத்து விருந்தளிப்பர். தினத்தாள் உரிமையாளரான சகோதரர்களும் இருபள்ளிகளின் தாளாளர்களும் அடிக்கடி வந்து என்னுடன் கலந்து உரையாடுவர். நானும் நாளிதழ் அலுவலகத்துக்கும் அவர்தம் வீடுகளுக்கும் அடிக்கடி செல்வேன். அக்காலத்தில் ஆந்திர அரசின் தலைமைச் செயலாளராகத் தமிழர்-அந்தணர் ஒருவர் இருந்தார். அவரைச் சென்று கண்டு மகிழ்வேன். அவரும் அடிக்கடி வரச்சொல்லி தமிழ் இலக்கியங்கள் பற்றிக் கேட்டுக் கேட்டு மகிழ்வார். மாபூப் கல்லூரி முதல்வரான, மன்னார்குடியினைச்சேர்ந்த திரு. இராஜகோபால் என்பவரும்

என்னிடம் அன்புடன் பழகுவார், பல்கலைக்கழகத்திலேயே மொழியியல் துறையில் பணிபுரிந்த திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் ஆங்கிலத்துறையில் பணிபுரிந்த பரமேச்சுரன் அவர்களும் என் உற்ற நண்பர்களாயிருந்தனர். இவர்கள் இருவரும் நான் விட்டுவந்த பிறகும், அவர்கள் சென்னை வரும்போதெல்லாம் என்னை வந்து கண்டு அளவளாவிச் செல்வர். திரு. பரமேச்சுரன் அவர்தம் அன்னையார் நான் தனியாக இருந்தமையாலும் அவர்கள் வீடு எதிரில் இருந்தமை யாலும் பலகாரங்களை அடிக்கடி கொடுத்தனுப்புவார்கள், மற்றும் தெலுங்கு, மராத்தி, கன்னடம் பயிற்றும் ஆசிரியர் களும் என்னிடம் நன்கு கலந்து பழகினர். இவர்களுக் கெல்லாம் மேலாகப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர். D. S. செட்டி என்ற சதாசிவ செட்டியார் அவர்கள் என்னைப் பரிந்தேற்று அன்புகாட்டினார். அவர்தம் மாளிகைக்கு அழைத்து விருந்தளித்தார். பல்கலைக்கழகக் குழுக்கள் அனைத்திலும் என்னை உறுப்பினராக்கினார். பதவியை விட்டநிலையிலும் விடுமுறையில் நான் பயனுள்ள வகையில் செயலாற்ற, பல்கலைக்கழகமானியக்குழுவிடமிருந்து பயண நல்கை வாங்கித்தந்தார்கள். அதைப்பயன்படுத்தியே தமிழ் நாட்டின் கொங்கு நாட்டு எல்லை முற்றும் சுற்றி வந்து ஆங்காங்குள்ள மலைவாழ்மக்களின் வாழ்க்கைமுறைகளை எல்லாம் அறிந்து தெளிந்து 'மலைவாழ்மக்கள் மாண்பு' என்ற நூலினையும் எழுதினேன். அதை அவர்களுக்கே உரிமையாக் கினேன். நான் விட்டுவந்தபோதும் ஒரு நல்ல சான்றிதழைத் தந்து எப்படியும் மறுமுறை வரவேண்டும் என வாழ்த்தி அனுப்பினார்கள். பின் ஓரிருமுறை சென்றபோது, அவர் களைக் கண்டு மகிழ்ந்து வந்திருக்கிறேன்.

நான் சென்ற அந்த ஆண்டு, இரெயில்வே அதிகாரம் சில மாற்றங்கள் செய்தது. மத்திய ரெயில்வே, தென் இந்திய இரயில்வே இரண்டும் பெரும் பிரிவுகளாக இருந்தன. எனவே

அவற்றின்செயலைச் செம்மைப் படுத்த நினைத்து, எல்லை யைச்சுருக்கினர். மத்திய ரெயில்வேயிலிருந்தும் தென்ரெயில்வே யிலிருந்தும் சிற்சில பகுதிகளைப் பிரித்து, தென் மத்திய ரெயில்வே (South Central Railway) எனப் பெயரிட்டு அதன் தலைமையிடமாகச் செக்கந்தராபாத்தினை அமைத்தனர். அதனால் சென்னையில் பணியாற்றிய பல அதிகாரிகள்—தமிழர்கள் அங்கே வந்து சேர்ந்தனர். அவர்களும்—அவர் களுள் முக்கிய தலைவராகப் பொறுப்பேற்ற அந்தணாளரும் என்னைப் பலமுறை அவர்தம் குடியிருப்பிற்கு வரச்சொல்லி, பேசவைத்துப் பெருமைப்படுத்தினர். இப்படிப் பல்கலைக் கழகப் பணி அளவில் சிறியதாக அமையினும், அங்கிருந்த தமிழர் அனைவர் உள்ளத்திலும் ஒரு எழுச்சியினை உண்டு பண்ணினேன். இடையில் என் வேண்டுகோளுக்கு இணங்கி முதல்வர் பக்தவத்சலம் அவர்கள் என்பொருட்டே அங்குவந்து இரு இடங்களிலும் பேசியமை எனக்கு மேலும் பெருமை தந்தது. அங்கு அப்போது பிரம்மானந்த ரெட்டி முதல்வராக இருந்தார். அவர் பச்சையப்பரில் பயின்றவராதலால், நான் அங்கிருந்து வந்ததறிந்து, அவர்தம் தனி அலுவலர் மூலம் என்னிடம் பேசி, என்னை வரப் பணித்து, கலந்து விருந் தளித்து மகிழ்ந்தார். அப்படியே நான் இருந்த வீட்டிற்கருகே பின் முதல்வரான திரு சின்னாரெட்டியின் மாளிகை இருந்த மையின் அவரும் அவர்தம் அன்னையாரும் என்னை அவர்கள் வீட்டிற்கு வரச்சொல்லிப் பாராட்டினர். அவர்கள் தோட்டத்தில் விளையும் திராட்சைப் பழங்களை அவ்வப் போது எனக்குக் கொடுத்தனுப்புவார்கள். இன்னும் எத்தனையோ அன்பர்கள் நினைவுக்கு வருகிறார்கள்; பெயர்கள்தாம் நினைவில்லை.

இதற்கிடையில் தமிழ்நாட்டு அரசியலில் பெரும்மாறுதல் ஏற்பட்டது. 1967 தொடக்கத்தில் தேர்தல் நடைபெற்றது.

அதில் திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றிபெற, அறிஞர் அண்ணா அவர்கள் முதல் அமைச்சரானார்கள். இடையில் சென்னை வந்த நான் அவர்களைச் சென்று கண்டேன். அவர்கள் இளமை முதல் எனக்கு உற்றவர்கள். நான் தொடங்கிய வாலாஜாபாத் பள்ளிக்கு இரு நாடகங்கள் நடித்துப் பொருளுதவி செய்தவர். காஞ்சியில் அடிக்கடி கண்டு மகிழ்ந்தவர். 1938இல் என்தேர்தலில் மாட்டு வண்டியில் வந்து எனக்காக 'ஓட்டு' கேட்டவர். அவர் என்னைக் கண்டதும் 'உங்களுக்கு இங்கே நிறைய வேலைகள் உள்ளன. இந்த ஆண்டு முடிந்தவுடன் மே மாதத்தில் திரும்பிவந்து விடுங்கள்' என்றார். நான் என்ன சொல்லுவாரோ—தொடர்ந்து இருக்கச் சொல்லுவாரோ என்ற அச்சத்தோடு சென்றேன். அவர் என் கருத்துப்படியே வரப்பணித்ததைக் கேட்டு மகிழ்ந்தேன். ஆம்! அவர் முதலமைச்சராக இருந்து தமிழுக்கும் தமிழருக்கும் பலப்பல செய்ய எண்ணினார். நாடும் நாமும் கொடுத்துவைக்கவில்லை. மிகச் சில நாட்களே முதல்வராக இருந்து மறைந்தார்.

அவர்கள் முதல் அமைச்சரானபோது, அவர் பச்சையப்பரில் பயின்றவராதலால் அவருக்கு ஒருபெரும் பாராட்டு நடத்தினர். பாராட்டு விழாவில் அண்ணா அவர்கள் 'இக்கல்லூரியில் இதுவரையில் எல்லாத் துறையினரும் முதல்வராக வந்திருக்கிறார்கள். தமிழாசிரியர்தான் வரவில்லை' என்றாராம். என்னைப் பற்றித்தான் அவர் சொன்னார் என அதைக் கருத்தில் வைத்தே பின் பச்சையப்பன் அறநிலையத்தார் என்னை உயர்த்தினர். கல்லூரி முதல்வரும் துணைமுதல்வரும் என்னினும் இளையவர். எனவே புதியதாக மற்றொரு துணைமுதல்வர் பதவியை உண்டாக்கினர். எனக்கு அப்போது வயது 58. எனவே அந்தப் புதிய பதவியில் என்னை இருத்தி, தொடர்ந்து என் அறுபத்

திரண்டு வரையில் (மாலைக் கல்லூரியைச் சேர்த்து) இருக்கப் பணித்தனர். நான் ஓய்வு பெற்றபின் அந்தப் பதவியும் இல்லையாயிற்று.

நான் ஐதராபாத்தில் இருந்தபோது சில புதிய நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள மராட்டிய நாட்டிற்கும் உத்திர பிரதேசத்துக்கும் சென்றுள்ளேன். எங்குச் சென்றாலும் துணைவேந்தர் அவர்கள் பரிந்துரைத்து, அப்பணிகளை பல்கலைக்கழகப் பணியாகவே கருதி (On Duty) என்னை வழி அனுப்பி வைப்பார்கள்.

அக்காலத்தில் மூன்றாண்டுக்கு ஒருமுறை இந்தியப் பல்கலைக்கழகங்களிலுள்ள கீழ்த்திசை மொழி பயிற்றுவோர் மாநாடு (Oriental Conference) நடைபெறும், அந்த ஆண்டு 1966-67இல் அம்மாநாடு உத்திரப்பிரதேசத்தில் (U. P.) உள்ள அலிகார் முசுலீம் பல்கலைக்கழகத்தே நடைபெற்றது. அதற்கு இந்தியநாட்டு ஒவ்வொரு பல்கலைக்கழகமும் பலமொழி பயிற்றும் பேராசிரியர்களைத் தத்தம் செலவில் அனுப்ப வேண்டும். உஸ்மானியாவில் தமிழ்,தெலுங்கு, இந்தி, மராத்தி, கன்னடம் ஆகிய மொழிகள் உள்ளன, எனவே அவற்றின் துறைத் தலைவர்கள் மாநாட்டுக்கு அனுப்பப்பெற்றனர். தில்லிக்குச் செல்லும் வழியில் ஆக்ராவில் இறங்கி வேறு இரயிலில் அலிகார் செல்லவேண்டும் என எண்ணுகிறேன். அப்படியே நாங்கள் ஐவரும் மாநாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றோம். தமிழ் நாட்டில் மதுரைப் பல்கலைக்கழகம் அப்போதுதான் தொடங்கப்பெற்றது. எனவே அதிலிருந்து யாரும் வரவில்லை என எண்ணுகிறேன். அண்ணாமலையிலிருந்து யாரும் வந்ததாக நினைவில்லை. சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து தமிழ், இந்தி, மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகியவற்றிற்கு டாக்டர் மு. வ., சங்கராசு நாயுடு. நாயர், மாரியப்பபட் ஆகியோர் வந்திருந்

தனர். தெலுங்கிற்கு அப்போது தக்கவர் இல்லைபோலும். இந்த நால்வரும் நான் இங்கிருந்தபோதே மிகவும் நெருங்கிப் பழகியவர்கள், நான் இத்தகைய மாநாட்டிற்குச் செல்வதும் இதுவே முதல் தடவை—கடைசியும் இதுதான்—பிறகு எந்தப் பல்கலைக் கழகத்திலும் பணியாற்றவில்லை அல்லவா! நான் ஐதராபாத்தில் இருந்து வந்த நண்பர்களோடு தங்கினேன். எனினும் பெரும்பாலும் சென்னை நண்பர்களோடுதான் அந்த மூன்று நாட்களையும் கழித்தேன். மாநாடு பலபிரிவு களாகப் பிரிக்கப்பெற்று, பலபொருள்களைப் பற்றி ஆய்வு செய்ய வழிவகுத்திருந்தது. தில்லி, காசி முதலிய வடநாட்டுப் பல்கலைக் கழகங்களிலிருந்து தமிழ் பயிற்றுவோரும் வந்திருந் தனர். பலப்பல பொருள்களைப் பற்றிப் பற்பல கட்டுரைகள் படிக்கப்பெற்றன. அவற்றைப் பின்னர் தொகுத்து நூலாக்கித் தருவார்கள் என்றனர். எனினும் அத்தகைய நூலினை நான் பெறவில்லை. பிறமொழியாளர்தம் நிலையும் இதுவே. பொதுவாக இந்திய மொழிகள் எவ்வாறு வளம்படுத்தப் பெறவேண்டும் என்றும் அதற்கு முதலிடம் பல்கலைக் கழகங்கள் தரவேண்டும் என்றும் அரசாங்கம் அதற்கு ஆவன செய்ய வேண்டும் என்றும் தீர்மானங்களும் நிறைவேற்றப் பெற்றன. இப்படி ஒவ்வொரு மாநாட்டிலும் தீர்மானங்கள் நிறைவேறும் போலும். ஆயினும் அவை செயலாக்கப் பெறவில்லையே.

வடஇந்தியாவிலும் மராட்டிய நாடு, கன்னடநாடு போன்றவற்றிலும் அவ்வப்பகுதி மொழிகள் முதன்மொழி யாக்கப் பெற்று, அனைவரும் கட்டாயம் படிக்கவேண்டும் என்றும் விதிகள் ஏற்படுத்தியுள்ளனர். கன்னடநாட்டில் ஆங்கிலம், இந்தி, கன்னடம் மூன்றும் பயின்று) பின் தமிழர் வேண்டுமாயின் தமிழைப் படிக்கவும் வழிசெய்யப் பெற் றுள்ளது. மாராட்டிய நாட்டில் 'உயர் மட்டம், கீழ் மட்டம்' (Higher Level & Lower Level) என இருபிரிவாகத் தமிழ்

மொழி பிரிக்கப்பெற்று, தமிழையே படிக்க விரும்புபவர் உயர் மட்டப் பாடதிட்டத்தின் படியும் மாரத்தியர் கீழ் மட்ட வகையிலும் பயிலலாம். அல்லாதார் மாற்றியும் பயிலலாம். மராத்தியர் அனைவருக்கும் மராத்தி கட்டாயமாக்கப் பெறுவது போன்று தமிழர் அனைவரும் தமிழைக் கட்டாயம் பயிலும் நிலைஉள்ளது. (இத்தேர்வுக் குழுவின் சிறப்பு உறுப்பினனாகப் பன்னிரண்டு ஆண்டுகள் நான் இருந்தமையின் அது பற்றி நன்கு அறிவேன். இது பற்றிப் பின் சிறிது விளக்கமாக எழுதுவேன்). ஆனால் இங்கே தமிழ் நாட்டிலோ அந்த நிலையில்லை. தமிழ் நாட்டில் தமிழ் பயிலாமலேயே பள்ளி, கல்லூரிப் படிப்புகளை முடித்து எந்தப் பட்டம் வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம். இந்த அவல நிலை இந்தியாவின் வேறு மாநிலங்களிலும் உலகில் வேறு எந்த நாட்டிலும் காண முடியாத ஒன்று.

ஒருமுறை டாக்டர் இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் தமிழை முதல் மொழி என்று கொண்டுவர முயன்றார். அதுவும் பெயருக்குத்தான் முதன்மொழியே தவிரக் கட்டாயம் இல்லை. பிற பதினான்கு மொழிகளோடு ஒன்றாகத்தான் இது அமையும். (இதை என் 'கல்வி எனும் கண், என்ற நூலில் விரிவாக எழுதியுள்ளேன் ) திரு.முதலியார் அவர்கள் அத்தீர்மானத்தைப் பல்கலைக்கழக அறிஞர் குழுவில் (Academic Council) கொண்டுவந்தார். நான் அப்போது அதில் நியமன உறுப்பினனாக இருந்தேன். அவர் பெயரளவில் ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாக்கி, பிற மொழிகளோடு ஒன்றாகத் தமிழை முதல் மொழியாக்கி ஏட்டில் வடிப்பதையே விரும்பாத 'பச்சைத் தமிழர்கள்' கூட அக்கூட்டத்தில் எதிர்த்தனர். மக்கள் தமிழ் உணர்வு கொண்டிருந்த காலம் அது. எனவே தன் நிலைகாக்க அத் தீர்மானத்தை எப்படியும் நிறைவேற்ற முயன்று, முதலியார்

வெற்றி பெற்றார், ஆனால் அதே நிலைதான் இன்றும் உள்ளது. தமிழ், பிற தெலுங்கு, மலையாளம், கன்னடம், உருது, இந்தி, பிரஞ்சு, ஜர்மன் போன்ற மொழிகளுடன் ஒன்றாகவே தமிழ்நாட்டில் வாழ்ந்து வருகின்றது. பல்கலைக் கழகங்களும் அரசாங்கமும் நினைத்தால் இன்றே தமிழைக் கட்டாயமாக்கலாம், மனம் இருந்தால்தானே! எங்கோ சென்றுவிட்டேன். என் தமிழ்ப்பித்து அப்படி ஈர்க்கின்றது. மன்னியுங்கள்.

மூன்று நாள் அலிகாரின் மாநாட்டில் பங்குகொண்ட தோடு, நகரினையும் சுற்றுப் புறங்களையும் கண்டோம். அலிகார் பூட்டுக்குப் பேர்போன இடமல்லவா! பல பூட்டுக் கடைகளைக் கண்டோம். சில பூட்டுக்கள் வாங்கினோம். நான் அது முதல் எங்கள் பள்ளி, கல்லூரி ஆகியவற்றிற்கு வேண்டிய நல்ல பூட்டுகளை அங்கிருந்தே வரவழைத்துக் கொள்வேன். இன்னும் அலிகார் சுற்றுப்புறங்களையும் பசுமை நிறைந்த கோதுமைப் பயிர்களையும் பிறவற்றையும் கண்டோம். பின் அங்கிருந்து குறுக்கே 'மதுரா' என்னும் கிருஷ்ணன் பிறந்த வடமதுரைக்குச் செல்லத்திட்டமிட்டோம். எனவே மாநாடு முடிந்தவுடன் எங்களில் சிலர் திரும்பினாலும் நானும் இன்னும் ஒருசிலரும் மதுரைக்குச்சென்றோம். திரும்பு வதற்குத் தில்லியிலிருந்தே பதிவு செய்திருந்தமையின் நேர் பாதையில் உள்ள மதுராவில் இரெயிலைப் பிடிப்பதும் எளிதாக அமைந்தது. மதுரா நெருக்கமான ஊர்; தங்க நல்ல இடம் கிடையாது. நான் முன்பே, காஷ்மீர் சென்றபோது (1957) குடும்பத்துடன் மதுரை முழுவதையும் சுற்றிப் பார்த் திருக்கிறேன். எனினும் இப்போதும் மற்றவர்களோடு மதுரை யினையும் கண்ணன் இளமை நிலையில் காட்டிய காட்சி களையும் கண்டு, அன்று இரவே இரெயிலில் புறப்பட்டு ஐதரா பாத்துக்குக் கிளம்பினோம்.

நான் ஐதராபாத்தில் இருந்தபோது மற்றொரு முறையும் வடநாடு (U.P) செல்ல நேர்ந்தது. முதலாவது அங்குள்ள முஸ்லீம் பல்கலைக் கழகத்துக்குச் சென்றோம். அடுத்த பயணம் காசியில் உள்ள இந்துப்பல்கலைக் கழகத்துக்குச் செல்ல அமைந்ததாகும். காசி இந்துப்பல்கலைக் கழகத்திலே தமிழ் படிக்க வசதி உண்டு. எனவே அதற்கெனப் பாடநூற் குழு ஒன்று அமைக்கப் பெற்றது. அப்பொழுது அங்கே என் மாணவர் சித்தலிங்கையா பேராசிரியராகத் தமிழ் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். வேலூரைச் சேர்ந்த பச்சையப்பர் கல்லூரியில் தத்துவம் பயின்ற சிவராமன் என்பவர் அங்கே தத்துவப் பேராசிரியராக இருந்தார். வேறு சில துறைகளில் சில தமிழர்கள் இருந்தார்கள்.

காசி இந்துப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பாடநூற் குழுவில் நானும் தில்லிப் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஆறுமுகம் அவர்களும் திரு. சித்தலிங்கையாவுடன் உறுப்பினராக இருந்தோம். அக்குழுவின் கூட்டம் ஆண்டுதோறும் நடைபெறும். நான் மூவாண்டு உறுப்பினனாக இருந்தபோதிலும் இருமுறையே அக்கூட்டத்திற்குச் சென்றேன். முதற் கூட்டம் நான் ஐதராபாத்தில் இருந்தபோது நிகழ்ந்தது. எனவே அதற்கென நான் சென்றேன். முன்போல அன்பர் பலருடன் இப்பயணம் அமையவில்லை. தனியாகவே சென்றேன். வழியில் நாகபுரியில் நல்ல கமலா பழங்கள் கிடைத்தன. மாலை ஏழு மணி அளவில் 'இட்டார்சி' சந்திப்பில் இறங்கினேன். அங்கிருந்து அலகாபாத் வழியாகக் காசி செல்ல வேண்டும். அப்போதெல்லாம் தெற்கே சென்னையிலிருந்து வாரணாசியாகிய காசிக்கு இரெயில் கிடையாது. பம்பாயிலிருந்து காசி செல்லும் இரெயில்தான் நான் செல்லவேண்டும். ஏற்கெனவே பதிவு செய்திருந்த போதிலும் இடம் பெறுவது கடினம் என்றனர். அந்த வண்டி இரவு பத்து மணிக்குத்தான் வரும். எனவே அங்குள்ள உணவுச் சாலையில் உணவு

கொண்டேன். அச்சாலையில் தமிழ் நாட்டவர் ஒருவர் இருந்தார். உணவும் தமிழ் நாட்டு உணவாகவே இருந்தது. சென்னையிலிருந்து தில்லி செல்லும் இரெயில்கள் இரவு ஏழு மணி 9 மணி என்ற அளவில் அங்கே வருவதால் அங்கே தமிழ் நாட்டு உணவு தயாரிப்பார்களாம். நானும் உணவு உண்டு இரவு பத்து மணிக்கு வரும் பம்பாய் வண்டியை எதிர்நோக்கி இருந்தேன். வண்டியும் வந்தது. நல்லவேளை எனக்கு ஒதுக்கிய இடமும் கிடைத்தது. ஏறிப் படுத்துக்கொண்டேன். காலை 7 மணிக்கு மாணிக்கப்பூர் என்ற விடத்தில் காலைச் சிற்றுண்டி. நம் நாட்டு இட்டலி அங்கே இல்லை. அலகாபாத்தில் இருக்குமாம். அங்கே 11 மணிக்குத்தான் செல்லும். அப்போது உணவு வேளை. அங்கே தென்இந்திய உணவே கிடைக்கும் என்றனர். எனவே வெறும் பானம் மட்டும் மாணிக்கப்பூரில் அருந்தி, வாங்கிவைத்திருந்த கமலாவில் இரண்டு உண்டு அமைந்தேன்.

பகல் 11 மணி அளவில் அலகாபாத்தில் வண்டி நின்றது. தில்லியிலிருந்தும் பம்பாயிலிருந்தும் வரும் பல ரெயில்கள் கிழக்கே வாரணாசி, பாட்னா, கல்கத்தா போன்ற இடங்களுக்கு இங்கே வந்து செல்வதால் அது ஒரு நெருக்கமான இடமாக இருந்தது. கங்கையும் யமுனையும் சங்கமமாகும் அத் திரிவேணியை—அகன்ற பேராற்றை ரெயிலில் கடக்கும்போது கண்டேன். நல்ல பழங்களும் கிடைத்தன என எண்ணுகிறேன். பின் ரெயிலிலேயே உணவு கொண்டு வரச்சொல்லிச் சாப்பிட்டேன். காசிக்குப் பகல் 2.30க்குத்தான் செல்லும். கங்கை நதிப்புரத்துக் கவின் கண்டு கொண்டே நான் பயணமானேன். உடன் வந்த பயணிகள் ஆங்கிலத்தில் அவ்வவ் விடங்களைப்பற்றி விவரமாக விளக்கினார்கள். வழியில் ஓரிரு இடங்களில் வண்டி திடீரென நின்றது. ரயிலடி ஒன்றும் இல்லை. ஒருசிலர் இறங்கி நடந்து சென்றனர். எனக்கு ஒன்றும் புரியவில்லை. உடன் வந்தவர் விளக்கினார்,

இறங்கியவர்கள் ஊர்கள் அருகில் இருப்பதால் அங்கே கம்பியை இழுத்து வண்டியை நிறுத்தி, அவர்கள் இறங்கிச் செல்கிறார்கள் என்றும், அப்பகுதியில் இது சாதாரணமாக நடக்கும் ஒன்று என்றும் கூறினார். நான் அதிர்ந்தேன். இந்தியாவின் உரிமை இந்த அளவிற்குச் செல்லுகிறதோ எனத் திகைத்தேன். அப்படியே பலர் 'டிக்கெட்' எடுக்காமலே பயணம் செய்வார்கள். நாங்கள் சென்ற முதல்வகுப்புப் பெட்டியிலும் அப்படியே ஒருவர் இருந்தார். 'டிக்கெட்' பரிசோதகர்களோ வேறு இரெயில்வே அதிகாரிகளோ இவற்றையெல்லாம் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை; கவலைப் படவும் இல்லை.

இரெயிலில் வந்த அன்பர்கள் சில உண்மைகளைக் கூறினார்கள். 'இந்தி' நாட்டுமொழி எனக் கூச்சலிடும் அப் பகுதியில் வாழும் செல்வந்தர் பிள்ளைகளெல்லாம் ஆங்கிலப் பள்ளிகளிலேதான் பயில்கின்றார்களாம். சேத்கோவிந்ததாஸ் போன்றவர் குடும்பக் குழந்தைகளும் இந்தியைவற்புறுத்தும் பல பெரிய அரசியல் தலைவர்தம் குழந்தைகளும் ஆங்கிலப்பள்ளிகளில்தான் பயில்கின்றனராம். பலர் பிள்ளை கள் மேல்நாடுகளுக்குச் செல்கின்றனராம். இவற்றைக் கேட்க நான் மிகவும் வருந்தினேன். ஆனால் இன்று தமிழ் நாட்டிலும் இதே நிலைதானே உள்ளது. அன்று (25 ஆண்டு களுக்குமுன்) இத்தனை ஆங்கிலப்பள்ளிகள் இங்கே ஏது?

பொதுவாக மக்கள் வாழ்க்கை இரங்கத்தக்கதாகவே உள்ளது. பலர் ஏழைகள். அன்றாடம் வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடும் குடும்பங்களே அதிகம். ஆயினும் அவர்களில் பலர் சோம்பேறிகளாம். அது அவர்களைப் பார்க்கும்போதே தெரிந்தது. இரெயிலில் செல்லும்போதே அப்பகுதிவாழ் மக்கள் நிலையை ஓரளவு காணமுடிந்தது. இவற்றை யெல்லாம் கண்டு கொண்டே பிற்பகல் 3 மணி அளவில்

வாரணாசி சென்றடைந்தேன். இரயிலடியில் திரு. சித்த லிங்கையா வந்திருந்தார். அவருடன் அவர் வீட்டிற்குச் சென்றோம். அந்த வீடும் அதை அடுத்துள்ள சில வீடுகளும் நம் திருப்பனந்தாள் * காசிமடத்துக்குச் சொந்தமானவை. தமிழருக்குக் -குறைந்த வாடகைக்கே விட ஏற்பாடு செய் துள்ளமை கண்டு மகிழ்ந்தேன்.

*

குமாரசாமி மடத்துக்கு அன்று இரவு செல்லுமுன் மாலையில் கங்கையில் நீராடினேன். எங்கும் காணாத வகையில் கங்கை இங்கே வடக்கு நோக்கிச் (உத்தரவாகினி) செல்லுவது பெருஞ்சிறப்பாகும். காசியிலுள்ள பல கட்டங் களில் நம் தமிழருக்கும் ஒரு கட்டம்; அது கேதார கட்ட மாகும். அங்குள்ள கங்கையிலேயே நான் அன்றுமாலை மூழ்கினேன். கேதார ஈச்சுவரரைத் தரிசனம் செய்தேன். நாள்தோறும் மாலையில் அக்கோயிலில் தேவார திருவாசகம் பாடும் ஓதுவார்கள் உள்ளனர். நான் சென்றபோதும் பாட்டிசைத்தனர். இது காசி மடத்தின் மேற்பார்வையில் உள்ளது. அங்குள்ள அனைவரும் தமிழரே. பின் காசி மடத்துக்குச் சென்றோம். நான் முன்பே திருப்பனந்தாளுக்கு எழுதி இருந்தமையின் எனக்கென ஓர் அறை ஒதுக்கி வைத்திருந் தனர். அங்குள்ள மேற்பார்வையாளர் நல்ல பண்பாளராக இருந்தார். நான் சித்தலிங்கருடன் இருந்தமையால் அங்கே வேண்டாம் எனச் சொல்லிவிட்டேன். அப்போதுதான் மடத்திலிருந்து கேதார ஈச்சுரருக்கு அடுத்த கால அபிடேகத் துக்குரிய பால், பழம் முதலிய பொருள்கள் வாத்தியத்துடன் எடுத்துச் செல்லப் புறப்பட்டன. நான் தமிழ்நாட்டில் கூடக் காண முடியாத இந்தச் சிறந்த மரபினையும் காசி மடத்தின் பெருமையினையும் எண்ணினேன். இதன் மூலகர்த்தாவாகிய குமரகுருபரரை எண்ணி, போற்றி வழிபட்டேன்.

மறுநாள் கூட்டம். அன்று காலையிலேயும் கங்கை நீராட்டம், கடவுள் வழிபாடு. பின் சற்றே தொலைவிலுள்ள இந்துப் பல்கலைக்கழகத்துக்குச் சென்றோம். தில்லியிலிருந்து ஆறுமுகமும் வந்து விட்டார். கூட்டம் 10 மணிக்கு; 12க்கு முடிந்தது. அந்தப் பரந்த பல்கலைக்கழக இடத்தைச் சுற்றி வரவே இயலாது. மாளவியாவின் பரந்த மனம் போல அது சிறந்து நின்றது. எண்ணற்ற கட்டடங்கள். எங்கும் கலை மணம். திரு. சிவராமன் அவர்கள் அங்குள்ள ஆசிரியர் விடுதி ஒன்றில் தங்கி இருந்தார். அன்று அவர்கள் வீட்டில் விருந்து. பல்கலைக்கழகப் பல பிரிவுகளையும் சுற்றிப் பார்த்து மாலை 5 மணிக்குத் திரும்பினோம். மறுபடியும் கங்கை நீராடி காசி விஸ்வநாதரையும் அன்னை அன்னபூர்ணியையும் தரிசனம் செய்தோம். நானே தொட்டு, நீரிட்டு, பூவிட்டுத் தமிழில் பாடி விசுவநாதரைக் கும்பிட்டேன். 'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழொடு இசை பாடல் மறந்தறியேன்' என்ற அப்பர் அடிகள் என் நினைவுக்கு வந்தன. ஆம்! அந்தக் காலத்தில் ஏழாம் நூற்றாண்டில்—தமிழ்நாட்டுக் கோயில்கள் அனைத்தும் காசிவிசுவநாதர் கோயிலைப் போன்றே யாரும் தொட்டு, நீராட்டி, பூவிட்டு, பாடிப் பரவும் வகையில் அமைந்திருந்தன. பின் ஏழு மணிக்கு மறுபடி மணிகர்னிகா போன்ற இடங்களையும் பிறவற்றையும் கண்டு கொண்டு கேதாரஈச்சுவரரை வணங்கினோம். மறுநாள் காலையிலேயே ஆறுமுகம் தில்லிக்குப் புறப்பட்டார். எனக்குப் பதினொரு மணிக்குத்தான் வண்டி. வந்தவழியே திரும்ப வேண்டும். காலையில் கடைத் தெருவனைத்தையும் சுற்றிப் பார்த்தேன். விடியலில் மறுபடியும்—மூன்றாம் முறை கங்கையில் மூழ்கி நலம் பெற்றேன். பின் உணவு உண்டு, திரு சித்தலிங்கையா வுடன் ரயிலடிக்கு வந்து, அவர் வழியனுப்பப் புறப்பட்டு, சென்ற வழியே திரும்பி ஐதராபாத் வந்து சேர்ந்தேன். அவ்வாறே மறு ஆண்டும் என் பயணம் அமைந்தது. அப்போது சென்னையிலிருந்து சென்று வந்தேன்.

நான் ஐதராபாத்தில் இருந்தபோது மற்றொரு புதுப்பணி வந்து சேர்ந்தது. பூனாவிலிருந்து ஒரு கடிதம் சென்னைப் பச்சையப்பர் முகவரிக்கு அனுப்பப்பெற்று, என் ஐதராபாத் முகவரிக்குத் திருப்பி அனுப்பப் பெற்றது. பிரித்துப் பார்த்தேன். மராட்டிய மாநிலத்துப் பள்ளி இறுதித் தேர்வு, இடைநிலைத் தேர்வு ஆகியவற்றில் தமிழில் வினாத் தயாரிக்கும் பணியில் சிறப்பு மேற்பார்வையாளராக இருக்கு மாறுவேண்டி இருந்தது. அது எனக்குப் புதியது ஆனமையின் வேண்டாமென மறுக்க எண்ணினேன். பின் அதனுடன் வந்த குறிப்பினைப் பார்த்தபோது. அங்கு வாழும் தமிழ் மக்கள் தமிழைக் கட்டாயம் எழுத வேண்டியநிலையில் உயர் மட்டம், கீழ்மட்டம் என்ற இருவகை நிலையில் வினாத் தாள்கள் அமைய வேண்டும் எனவும், வேற்று மொழியை முக்கியமாகக் கொள்ளின் கீழ்மட்டத்தினையும் அல்லார் உயர் மட்டத்தினையும் கொள்ள வேண்டும் என இருந்தது. தமிழ் நாட்டிலேயே இந்த நிலை இல்லாதபோது, அந்நிய மாநிலத்தில் இந்த அளவு தமிழ் போற்றப்படுவதால், கட்டாயம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என முடிவு செய்தேன். மேலும் ஐதராபாத்திற்கு அனுப்பும்போது மாண்புமிகு பக்தவத்சலம் 'செல்லும்மிடமெல்லாம் ஒல்லும் வகையில் தமிழ் பரப்புக' எனக் கூறியதும் நினைவுக்கு வந்தது. உடனே இசைவதாகவும் என் புது முகவரி இது என அந்த முகவரி யினையும் குறித்துப் பதில் எழுதினேன். பள்ளி இறுதித் தேர்வுக்கும் செயற்பாட்டிற்கும் உரிய மையம் பூனாவில் இருந்தது. பழைய பம்பாய் மாநில எல்லையில் உள்ள பள்ளி களை இது கட்டுப்படுத்துவதாகவும், புதிதாகச் சேர்ந்த விதர்ப்ப நாட்டு எல்லையில் உள்ள பள்ளிகளுக்கு நாகபுரியில் வேறு மையம் உள்ளதெனவும் அறிந்தேன். உடன் பூனாவிற்கு என் இசைவினைத் தெரிவித்தேன். உடனே இரண்டொரு நாளில் நான் வரவேண்டிய நாளும் இடமும் குறித்துக் கடிதம்

வந்தது. உடனே நான், எனக்கு அந்த இடம் புதியதாகை யால் யாரேனும் ஒருவரை இரயிலடிக்கு அனுப்பினால் உரிய இடத்துக்கு வருதல் நலமாகும் எனவும் எழுதினேன்.

குறித்தபடி ஒருநாள் இரவு புறப்பட்டு மறுநாள் காலை 7 மணி அளவில் பூனா போய்ச் சேர்ந்தேன். இரெயிலை விட்டு இறங்கி நடைபாதையில் சென்று கொண்டிருந்த போதே ஓர் இளைஞர் வந்து 'தாங்கள் S.S.C போர்டுக்குத் தானே போகிறீர்கள்' என்று கேட்டார். எனக்கு வியப்பாக இருந்தது. நான் 'நீயராப்பா' என்று கேட்டேன். 'நான் அங்கே பணி புரிகின்றவன்; எங்கள் செயலர் தாங்கள் இந்த ரெயிலில் வருவதாகக் கூறி. என்னைச் சென்று அழைத்து வரச் சொன்னார். எனவே வந்தேன்' என்றார். 'என்னை எப்படி அடையாளம் கண்டு கொண்டாய்' என்றேன். அவர் ஒன்றும் சொல்லாது புன்னகை செய்தார். எப்படியாயினும் அவர் செயல் பாராட்டத் தக்கதாகவே இருந்தது. உடன் ஓர் 'ஆட்டோ'வில் சிவாஜி நகரிலுள்ள அந்த அலுவலகம் சென்றேன். எனக்கென மேல் மூன்றாம் தளத்தில் ஓர் அறை ஒதுக்கப் பெற்றிருந்தது. பக்கத்திலேயே குளியல் அறை. உடன் வந்தவர் 'தாங்கள் இந்த அறையில் தங்கிக் காலைக் கடன்களை முடித்து, குளித்து இருங்கள். நான் ஒரு மணி நேரம் கழித்து வருகிறேன்' என்று சொல்லிச் சென்றார். நான் அனைத்தையும் முடித்து அமருவதற்கும் அவர் இட்டலி, வடை, காப்பியுடன் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. மணி 9 இருக்கும். சிற்றுண்டி கொண்டேன். பத்து மணிக்குக் கூட்டம் என்றும் மற்றொருவர் பம்பாயிலிருந்து வருவார் என்றும் கூட்ட அறை எண் இதுவென்றும் கூறிச் சென்றார். 9-30 இருக்கும், பம்பாயிலிருந்து வயதான ஒரு அம்மையார் என் அறைக்குள் வந்தார். அவர்கள் என்னை முன்பு பம்பாய்க் கூட்டத்தில் பார்த்திருப்பதாகவும். தானே மற்றொரு தேர்வாளர் என்றும், நான் அங்கே இருப்பதைக்

கீழே சொல்லக் கேட்டு வந்ததாகவும் கூறினார். பிறகு நாங்கள் இருவரும் செயலர் அறைக்குச் சென்றோம். அம்மையார் அவருக்கு என்னை அறிமுகப்படுத்தினார். நான் அவரை வணங்கி, அவர்தம் அலுவலர் (attendar) என்னைக் கண்டு அழைத்து வந்ததைச் சொல்லிப் பாராட்டினேன். பிறகு எங்கள் பணி தொடர்ந்தது. அதுவரையில் நான் செய்யவுள்ள பணியினைச் செய்த சீனிவாச ஐயர் அவர்கள் பம்பாயில் உள்ளவர் என்றும், மூப்பின் காரணமாக அவர் முடியாமையால் என் பெயரைப் பரிந்துரைத்தார் என்றும், அவர் நான் பம்பாய் வந்தபோது, என்னோடு பழகியுள்ளவர் என்றும் கூறினார்கள். அவர்கள் பம்பாயில் ஒரு பள்ளியில் பணியாற்றியதோடு இவ்வினாத்தாள் குறிப்பில் ஐயரோடு பல ஆண்டுகள் செயல்படுகின்றார் எனவும் அறிந்தேன். பழைய வினாத் தாள்களையும் மாதிரிக்காகக் காட்டினார்கள். பாடநூல்களையும் கண்டேன். பிறகு பணி தொடங்கி இரண்டு நாட்கள் இருந்து முடித்து ஐதராபாத் திரும்பினேன். அப்போது சுமார் மூவாயிரம் பேர் அத்தேர்வுகளை எழுதினார்கள் என்றும் இதனினும் கூடுதலாக நாகபுரிப் பகுதியாகிய விதர்ப்பத்தில் எழுதுகிறார்கள் என்றும் சொன்னார்கள். நான் உண்மையில் மகிழ்ந்தேன். அருகிலே உள்ள உணவு விடுதியில் நல் உணவும் கிடைத்தது. சிற்றுண்டி அலுவலகத்திலேயே பெற வாய்ப்பு இருந்தது. இரண்டு நாள் பணி முடிந்தபின் செயலாளர், தலைவர், பிறரிடம் நன்றி கூறிப் புறப்பட்டேன். முன் அழைக்க வந்தவரே, எனக்கென முன்னரே பயணச் சீட்டு எடுத்து வைத்திருந்து, ரயிலடிக்கு வந்து ஐதராபாத் விரைவு வண்டியில் என்னை ஏற்றி வழி அனுப்பினார்.

இந்தப் பணி, பின் தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் 1979 வரை நடைபெற்றது. ஆண்டுக்கு இருமுறை தேர்வு.

எனவே இருமுறை நான் செல்ல வேண்டும். நான் மறுமுறை சென்றபோது அங்குள்ள பூனாநகர் சங்க அன்பர்கள், பூனாவில் மூவாயிரம் மாணவர் பயிலும் பள்ளி நடத்தும் தமிழர்கள் என்னைக் காண அலுவலகம் வந்தனர். அடுத்து வரும்போது அவர்கள் வீடுகளிலும் பள்ளியிலும் தங்கலாம் என்றும் தமிழ்ச் சங்கத்தில் பேச வேண்டுமென்றும் வேண்டு கோள் விடுத்தனர். அடுத்து நான் செல்லும் போதெல்லாம் அங்கு முக்கியமாக இருந்த 'வழுவூர்த்தம்பி' என்பார் என்னை ரயிலடிக்கே வந்து அழைத்துச் செல்வார். மற்றொரு அன்பர் நல்ல நாடக ஆசிரியர்—நடிகர்—சபாபதி என்பார் என்னுடன் இரவு நேரங்களில் பேசிக் கொண்டிருப்பார். அவர்தாம் அப்பள்ளியின் தாளாளர். தமிழர் பெரும் பகுதியாக வாழும் அந்த இடம் சென்னையைப் போன்றே இருந்தது. அடுத்த கூட்டத்திற்கெல்லாம் ஐதராபாத்தினை விட்டு வந்தமையின் நான் சென்னையிலிருந்தே செல்ல வேண்டி இருந்தது.

நான் ஐதராபாத்தில் தங்கி இருந்தபோது அங்கே பல இடங்களைச் சுற்றிப் பார்த்தேன். சார்மினார் பகுதியும் 'ஆபிட்ஸ்' பகுதியும் செக்கந்திராபாத் பள்ளிகளும் ஐதராபாத்தில் நான் அடிக்கடி செல்லுமிடங்களாயின. அப்பொழுது நடந்த பொருட்காட்சியைக் கண்டு களித்தேன். நைசாம் மாளிகையினைக் கண்டேன். உந்து வண்டியில் இருநகரங்களைச் சுற்றியுள்ள கோல் கொண்டா போன்ற வரலாற்று இடங்களைக் கண்டேன். காணாதன ஒன்றும் இல்லை என்னுமாறு அன்பர்கள் எனக்கு உதவினர். கடைசி யில் பிரியும்போது பல்கலைக்கழக அன்பர்களும் பிற பொது மக்களும் ஆங்காங்கே கூட்டம் அமைத்து வாழ்த்து வழங்கி அனுப்பினர். துணைவேந்தர் திரு. ரெட்டி அவர்கள் மிகவும் வருந்தி, 'நீங்கள் தொடர்ந்து இங்கேயே இருப்பீர்களென நம்பினேன். அடிக்கடி வாருங்கள்' என வாழ்த்தி அனுப்பினார். நல்ல சான்றிதழும் தந்தார். நானும் அடுத்து

இரண்டு மூன்று முறை சென்றபோதும் அவரை அவர் வீட்டில் கண்டேன். அப்போது அவர்கள் ஓய்வு பெற்றிருந் தார்கள். அவர் பெயராலேயே அமைந்த சதாசிவ நகரில் தனிக்குடில் அமைத்து ஓய்வு நாளை அமைதியாகக் கழித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் ஒன்றிய சென்னை மாகாணத் தின் கல்வித்துறையில் துணை இயக்குநராக இங்கே பணி யாற்றியவர். ஆந்திர மாநிலம் பிரிந்தபோது, அந்த மாநிலத் திற்கு விரும்பிச் சென்றவராவர்.

இவ்வாறு நான் பச்சையப்பரில் இருந்தபோது பல்கலைக் கழகத்தால் தெற்கே மதுரைக்கும் மாநில அரசால் வடக்கே ஐதராபாத்திற்கும் அனுப்பப் பெற்றேன். இரண்டிடங் களிலும் ஒவ்வோராண்டு கழிய, மற்றைய முப்பது ஆண்டுகள் (1944-76) பச்சையப்பரிலேயே கழித்தேன். முதல் முறை மதுரை செல்லும்போது துணைப் பேராசிரியராக இருந்தேன். தொல்லை இல்லாமல் வந்து சேர்ந்தேன். ஆயினும் ஐதராபாத்திற்குச் சென்றபோது துறைத்தலை வனாக இருந்தேன். நான் சென்றதால் அப்பதவிக்கு உயர்த் தப்பட்ட ஒருவரும் துணைப் பேராசிரியராக இருந்து பேராசிரி யராக உயர்த்தப் பெற்ற ஒருவரும் நான் திரும்பிவராத வகைக்கு முயன்றனர். அங்குள்ள துணைவேந்தருக்கும் மற்ற வர்க்கும் என்னை அங்கேயே நிறுத்திக் கொள்ளுமாறு கடிதம் எழுதியதாகக் கூறினர். இங்கே திரும்பிச் சேராதிருக்க வழி உண்டா என ஆய்ந்திருப்பர். ஆயினும் அந்த ஆண்டு பச்சை யப்பன் அறநிலையத் தலைவராகப் பொறுப்பேற்றிருந்த திரு. டாக்டர் வேணுகோபால் அவர்கள் — டாக்டர் இலட்சுமணசாமி முதலியார் மகனார், என்னை மே மாதமே சேரச் செய்தார். அத்துடன் புதிதாக அந்த ஆண்டு அவர் ஆணை வழி திறக்கப்பெற்ற காஞ்சி, கடலூர் கல்லூரிகள் சென்னை கந்தசாமிக் கல்லூரி ஆகியவற்றிற்குத் தமிழாசிரியர் களைத் தேர்ந்தெடுக்கும்போது அறநிலை உறுப்பினரோடு

என்னையும் இருக்க வைத்து என் கருத்தினைக் கேட்டே வந்தவர்களுள் தக்கவரைத் தேர்ந்தெடுத்தனர். பிற அறநிலைய உறுப்பினர்களும் முதல்வரும் என் வருகை அறிந்து மகிழ்ந்தார்கள்.

தமிழ்நாட்டு அரசியலிலும் மாறுபாடு ஏற்பட்டதை முன்னரே குறித்தேன். அன்றைய முதலமைச்சர் அண்ணா அவர்களையும் என்னை அனுப்பி வைத்த முந்தைய முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்களையும் கண்டு, அவர்கள் வாழ்த்தையும் பெற்று, மீண்டும் பச்சையப்பரில் பழையபடி என் பணியினைத் தொடங்கினேன். பிறகு ஓய்வு பெறும் வரையில்—1976 வரையில் அறுபத்திரண்டு வயது வரையில் நான் வேறு எங்கும் வெளியூர் செல்லவில்லை. அத்துடன் 1968லே என் அன்னையின் பெயரால் அறம் அமைத்துப் பள்ளியும் தொடங்கிவிட்டமையின் அந்தப் பணியும் சேர்ந்து என்னை எந்தப் பகுதியும் செல்லவிடாது தடுத்து நிறுத்தின. 1974இல் டாக்டர் மு.வ. அவர்கள் மறைந்த பின்பு மதுரைத் துணைவேந்தர் நான் எனவே அங்குள்ள சில பத்திரிகைகள் வெளியிட்ட போதிலும் அமைச்சர்களிடமும் அந்த எண்ணம் இருந்த போதிலும், நான் உள்ளதே அமையுமென்றிருந்து பச்சையப்பர் பணியினையும் வள்ளியம்மாள் கல்வி அறப்பணியினையும் தொடர்ந்து மேற்கொண்டு வந்தேன்.

# 5. மலேயா

**1948** ஏப்பிரல் மாதம் ஒரு நாள் காலையில் என் வீட்டிற்கு மாண்புமிகு அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் என்னை உடனே வரச் சொன்னார்கள் என்ற செய்தி வந்தது. உடன் காலை 8.30க்கு அங்கே சென்றேன். அவர்கள் உடனே

'இன்னும் ஒரு வாரத்தில் நீங்கள் மலேயா செல்ல வேண்டி யிருக்கும் தயாராக இருங்கள்; பிற ஏற்பாடுகளெல்லாம் நாங்கள் பார்த்துச் செய்கிறோம்' என்றார்கள், காரணம் பிறகு சொன்னார்கள். மற்றவர்கள் வழியே கேட்டறிந்தேன். மலேயாவில் பல்கலைக்கழகம் புதிதாக அமைக்கப் போகிறார்களாம். அங்கே இந்தியர்—சிறப்பாகத் தமிழர்கள் அதிகமாக உள்ளமையின் இந்திய மொழி ஒன்றினை அப் பல்கலைக் கழகத்தில் அமைக்க ஏற்பாடாம். ஆகவே எந்த மொழியை வைக்கலாம் எனக் கண்டறிய, இந்திய அரசாங்கவழி முன்பே ஒரு பெரியவர் அனுப்பப்பெற்றார் என்றும் அவர் சென்று வந்து 'வடமொழி'யே வைக்க வேண்டும் என்று பரிந்துரைத் தார் என்றும் கூறினர். அன்று இந்திய அரசின் முதல் அமைச்சராக இருந்த நேரு அவர்கள் அக்கூற்றை ஏற்றுக் கொள்ளவில்லை. அங்கே பெரும்பாலோர் தமிழர்களே ஆதலால் அதுபற்றித் தமிழகத்தின் கருத்தை அறிய விரும்பி, அன்றைய முதல்வர் ஓமந்தூராரைக் கேட்டுள்ளார். அவர்கள் திரு. பக்தவத்சலம் அவர்களோடு கலந்து என்னை அனுப்ப முடிவு செய்ததாக அறிந்தேன். ஏற்கனவே அங்கே இருந்த மலேயா தமிழ்ச் சங்கத்தார் எனை வருக என அழைத் திருந்தனர். எனவே ஒரே பயணத்தில் இருவர் தம் விருப்பத்தினையும் நிறைவேற்றலாம் என எண்ணிச் செல்ல இசைந்தேன்.

பயணத்திற்கு வேண்டி 'விசா' முதலியவற்றை அரசாங்கமே ஏற்பாடு செய்தது. அப்போது அங்கே இந்தியத் தூதுவராக திரு. 'ஜான் திவி' என்ற தமிழ் நலம் சான்ற குடும்பத்தைச் சார்ந்தவர் சிங்கப்பூரிலும் திரு. நடராஜப் பிள்ளை அவர்கள் கோலாலம்பூரிலும் இருந்தனர். அவர்கள் மூலம் அங்கிருந்தும் 'விசா' வந்தது. இங்கே அரசாங்கமும் முன்னின்று வாங்கித் தந்தது. 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ'. அப்போது

எனக்குக் கல்லூரி விடுமுறையாக இருந்தமை எனக்குச் சாதக மாக அமைந்தது. இல்லையாயினும் அரசாங்கம் தனி விடுமுறை வாங்கித் தர இருந்தது. ஆனால் அதற்குத் தேவை இல்லாமல் நான் ஏப்பிரல் பிற்பகுதியில் புறப்பட்டு, சுமார் ஒன்றரை மாதம் சிங்கப்பூர் தொடங்கி பினாங்கு வரையில் பல ஊர்களைச் சுற்றி, கருத்தறிந்தும் சொற்பொழி வாற்றியும் சூன் முதல் வாரத்தில் திரும்பிவிட்டேன். அப்போது மலேயாவும் சிங்கப்பூரும் இணைந்தே இருந்தன. (இன்று தனித்தனியாகப் பிரிந்து தனித்தனி ஆட்சியில் இயங்கு கின்றன) நான் அங்கே செய்த பயணம் பற்றித் 'தமிழன் கண்ட மலேயா' என்ற நூலை வெளியிட்டேன். அது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தே பட்ட வகுப்பிற்கும் பிற பல்கலைக்கழகங்களிலும் பாடமாக இருந்தது. என் சொற் பொழிவுகளை 'மலேயாச் சொற்பொழிவுகள்' என வெளி யிட்டேன்.

அப்போது விண் வழிப் பயணம் கிடையாது. எனவே கப்பல் வழியேதான் செல்ல வேண்டும். அந்த வேளையில் சென்னைக்கும் சிங்கப்பூர் மலேயாவுக்கும் சென்று வந்த இரு கப்பல்களில் ஒன்று மட்டும் செயல்பட்டது. அதுவும் எதுவோ பழுதுகாண சிங்கப்பூருக்குப் பயணிகள் இன்றே செல்ல இருந்தது. அதில் முதல்வகுப்பில், நான் ஒருவன் மட்டும் செல்ல அரசாங்கம் ஏற்பாடு செய்தது. ஒரு நாளில் அக்கப்பலில் 'ரஜுலா'வில் நேராகச் சிங்கப்பூருக்குப் பயணம் ஆனேன்.

எனது முதல் வெளிநாட்டுப் பயணம் இது. எனவே பல அன்பர்கள் கப்பல் துறைக்கு வந்து என்னை வழி அனுப்பினர். ஏழு நாட்கள் கப்பல் பயணம் அந்த அனுபவம் பற்றியும் பலவற்றையும் என் 'தமிழன் கண்ட மலேயா'வில் விளக்கமாக எழுதியுள்ளேன். சிங்கப்பூரில் இந்தியத் தூதரக

அதிகாரி ஒருவர் வந்து வரவேற்றார். மலேயா தமிழ்ச் சங்கச் செயலாளர் அருணாசலம் செட்டியார் அவர்கள், நிகழ்ச்சி முறையில் சிங்கப்பூரினைக் கடைசியாகக் குறித்திருந்தார். எனவே சிங்கப்பூர் கப்பல் துறையில் அச்சங்கத்தைச் சேர்ந்தவர்களும் தூதரக அதிகாரியும் பிறரும் வந்திருந்தனர். அவர்கள் ஆற்றுப்படுத்த நான் நேராக மலாக்காவிற்குப் புறப்பட்டேன்.

ஒன்றரை மாதங்கள் மலேயா, சிங்கப்பூரில் தங்கிப் பலப் பல ஊர்களைக் கண்டு, (மலேயாவின் ஒன்பது மாநிலங்கள்—கீழ்மாநிலங்கள் இரண்டைத் தவிர்த்து—அங்கு தமிழர் அதிகம் இல்லை) வாரத்துக்கு ஒருமுறை தமிழக அமைச்சர் அவர்களுக்குக் கடிதம் எழுதி அனுப்பினேன். சிங்கப்பூர் 'தமிழ் முரசு'ம் கோலாலம்பூர் 'தமிழ் நேசனு'ம் (இரண்டும் தினசரிகள்) என் பயணத்தை முறைப்படி நாள்தோறும் வெளியிட்டன. நான் பலவிடங்களைப் பார்த்துத் தெரிந்து தமிழே மலேயாப் பல்கலைக்கழகத்தில் வைக்கத் தகுதி பெற்றது என்ற திட்டமான முடிவை எழுதினேன்; வந்த பிறகும் நேரில் விளக்கிக் கூறினேன். ஆம்! அடுத்து அங்கே பல்கலைக்கழகம் தொடங்கப்பெற்றபோது இந்திய மொழித் துறை என்ற பிரிவினை அமைத்து, அதில் தமிழையே இடம் பெறச் செய்தனர். இதையே நான் 1985இல் மலேயா சென்றபோது கோலாலம்பூர் 'தமிழ் நேசன்' (11-7-1985) 'மலேயாப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பிரிவு அவசியம் என்று வலியுறுத்திய பேராசிரியர் பரமசிவானந்தம் வருகை' என்று என் படத்துடன் மூன்று பத்தித் தலைப்பிட்டு என் வாழ்வையும் பிறவற்றையும் தெளிவாக எழுதி வெளியிட்டது. எனவே என் மலேயா பயணம் பயன் தந்தது என மகிழ்ந்தேன். பிற நிகழ்ச்சிகளுள் ஒரு சிலவற்றைக் குறிக்க நினைக்கிறேன்.

என்னுடைய முதல் பணி மலாக்காவில் தொடங்கிற்று. பின் பல ஊர்களைக் கண்டேன். கோலாலம்பூரில் ஒரு வாரம் தங்கினேன். பினாங்கில் நான்கு நாள்; சிங்கப்பூரில் நான்கு நாள். பிற ஊர்கள் ஒவ்வொரு நாள் என ஒன்றரை மாதம் நாடு முழுதும் சுற்றினேன். மலாக்காவில் மூன்று நாள் தங்கியபோது, அது அந்நாட்டின் மிகப் பழைய ஊர் என்பதையும் அங்குள்ள குன்றின் மேல் உயர் தளத்தில்தான் சமயம் பரப்ப வந்து தூய சேவியர் அடக்கமானார் என்றும் பின் அவர்தம் பொன்னுடலை இந்தியாவுக்குக் கொண்டு சென்றார்கள் என்றும் கேட்டறிந்தேன். அந்த வெற்றிடமான ஆழ்ந்த பள்ளத்தினைக் கண்டபோது, உளம் நைந்தேன். எங்கோ பிறந்து இறைவன் திருத் தொண்டே வாழ்க்கையாகக் கொண்டு, அல்லும் பகலும் அயராது உழைத்து, நாடுவிட்டு நாடு, ஊர் விட்டு ஊர் உலகெங்கணும் சுற்றி, இறைவன் புகழ் பாடி அவன் அருள் பரப்பி வாழ்ந்த ஒரு நல்லவர் மறைய, அடக்கம் செய்யப்பெற்ற இடம் கண்ட போது, இத்தகைய நல்லவர்களன்றோ உலக முழுதும் அவர் தம் சமயம் பரவிற்று எனப் போற்றினேன். வாயிலை விட்டு இறங்காது, வந்தால் 'பிரசாதம்' வழங்கும் நம் நாட்டுத் துறவியர் அந்த நிலைவிட்டு, இவ்வாறு சமயத்தொண்டு செய்வார்களாயின் பல உண்மைகளை உள்ளடக்கிய, எல்லாச் சமயங்களையும் ஏற்றுக்கொள்ளும் மெய்ச்சமயமாகிய சைவம் எப்படி உலகில் வளர்ந்தோங்கும் என எண்ணினேன். தென்னாட்டில் சிறந்த சித்தாந்த சமயம் இத்தகைய நற்றொண்டர் இல்லாமையால் நலிந்து வருவதை நினைந்து வருந்தினேன். 'எதுவரினும் வருக அலது எது போயினும் போக, உனது இணையடிகள் மறவாதபேறொன்று மாத்திரம் எனக் கடைதல் வேண்டும் அரசே' என்ற இராமலிங்க அடிகளாகிய சமரச ஞானியின வாக்கு என் நினைவுக்கும்வந்தது. ஆம்! என் மலேயாச் சொற்பொழிவுகளில் வள்ளலார் பற்றியும் அவர்தம் பாடல்கள் பற்றிய பேச்சும் இருந்தன.

மலாக்கா அருணாசலம் செட்டியார் அவர்கள் மலேயா தமிழ்ச் சங்கச் செயலராக இருந்தமையின், மலாக்காவில் மட்டுமின்றி, மலேயா, சிங்கப்பூர் முழுதும் என் பயண எல்லை வரையில் என்னோடே—இருந்து என்னோடு எல்லா ஊர் களுக்கும் வந்து ஆவன செய்தார்கள். அவருடன் அவர் தம் துணைவியாரும் அவர்தம் ஐந்து வயதான பேரப்பிள்ளையும் கூடவே வந்தனர்.

மலாக்காவிலிருந்து இடையில் இரண்டொரு ஊர்களில் தங்கி தலைநகரமாகிய கோலாலம்பூரை அடைந்தேன். அழகிய அந்த ஊருக்கு அப்பெயர் பொருந்தும் நிலை எண்ணினேன். அது மலாய் மொழியில் அமைந்த பெயரோ அன்றி இங்கிருந்து சென்ற தமிழர் இட்ட பெயரோ என வியந்தேன். 'கோலம்+ஆலும்+ஊர்' எனக் கண்டு அழகு குடியிருக்கும் ஊர் எனப் பொருள் கொண்டேன். அதை அங்கு பேசிய எனது முதல் பேச்சிலேயே விளக்கி கூறினேன்

மலேயாவில் தமிழகத்து மக்கள் மிகுதியாக உள்ளனர். யாழ்ப்பாணத் தமிழர்களும் மிகுதியாகக் காணப்பட்டனர். மலேயா இரெயில்வே தலைமை அகம் அங்கேதான் இருந்தது. அதில் பணிபுரிவோரில் சிறப்பாக உயர்நிலை அதிகாரிகளில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் யாழ்ப்பாணத் தமிழர்களே யாவர். இவ்வாறே மலேயாவின் பிற இடங்களிலும் அவர் கள் ஓரளவு வாழ்ந்து வந்தனர். அவர்களுள் பெரும்பாலும், மலேயா சுதந்திர நாடான போது, தாமே விரும்பி இலண்டனுக்கு மாறிச் சென்றனர். அந்நாடு சுதந்திரம் பெற்ற போது, அதை ஆண்ட ஆங்கிலேயர் பிற நாட்டு மக்களை, விரும்பினால் அவர்தம் தாய்நாடு செல்லலாம் அன்றி இங்கிலாந்துக்கு வரலாம் எனக் கூறினர். யாழ்ப் பாணத்தார் பெரும்பாலோர் இலண்டனை விரும்பி அடைந்தனர்.

யாழ்பாணத் தமிழரில் உயர்நிலையிலுள்ள சிலர் என் சொற்பொழிவினைக் கேட்டனர். அவர்தம் இல்லங்களில் விருந்து அளித்தனர். அனைவரும் நல்லவராகவும் பண்புள்ள வராகவும் இருந்தனர். எனினும் தமிழ்நாட்டுத் தமிழர்களுக்கும் அவர்களுக்கும் அவ்வளவு தொடர்பு இல்லை. அந்நாட்டு மலாய் மக்கள் நம் தமிழரைக் காட்டிலும் அவர்களை அன்புடன் போற்றி ஏற்றனர், காரணம் ஒன்றே. நம் தமிழர்கள் எத்தனை செல்வம் பெறினும் அதனை உடனே தாய் நாட்டிற்கு அனுப்புவதிலே கண்ணும் கருத்துமாயிருந்தனர். ஆனால் யாழ்ப்பாணத்தார் அதையே தாயகமாகக் கொண்டு, பெற்றதை அங்கே வைத்துக் கொண்டு வாழ்ந்தனர். அதனாலேதான் பிறகு நாட்டைவிட்டுச் செல்ல நேர்ந்த நிலையிலும் அவர்கள் தாய்நாடு செல்லாது இலண்டனை நாடிச் சென்றனர். நான் 1985இல் இலண்டன் சென்றபோது பல யாழ்ப்பாணத் தமிழர் இல்லங்களுக்குச் சென்று விருந் துண்டு அவர்களை வாழ்த்தி வந்திருக்கிறேன்.

மலாய் நாட்டு மக்களைப் பற்றியும் சிறிது சொல்ல வேண்டும். மலாய் மொழி எனும் எழுத்தற்ற மொழியே அந்நாட்டு மொழியாகும். இன்று அவர்தம் மொழிக்கு எழுத்துக்கள் வழங்கப்பெற்றுப் பள்ளிகளில் பயன்படுத்தப் பெறுகின்றது என்பர். அம்மொழிக்கென தனியாக இயக்ககம் மலேயாவிலும் சிங்கப்பூரிலும் உள்ளது. ஏன்? நம் தமிழ்மொழிக்கும் கூடத் தனியாக இயக்ககம் உண்டு. ஆம்! நான் என் பயண நூலில் கூறியபடி 'நன்றி கெட்ட தமிழகம்' தன் தாய்மொழியாம் தமிழைக் கொலை செய்தாலும் மலேயா, அமெரிக்கா போன்ற நாடுகளில் அத்தெய்வத் தமிழ் வாழும் என்பது உறுதி.

நான் சென்ற அந்நாளில் (1948) மலாய் நாட்டு மக்கள் பெரும்பாலும் காடுகளில் வேட்டையாடினர். 'எங்கோ ஒரு

சிலர் சில பதவிகளில் இருந்தனர். அவையும் மாவட்ட எல்லையிலமைந்த உயர் பதவி கூட இல்லை. எனினும் அவர்கள் மனநிறைவோடு வாழ்ந்து வந்தனர், 'நாகரிகம்' என்ற பெயரில் நாட்டில் உலவும் அநாகரிகமும் பண்பாடற்ற செயல்களும் அவர்கள் அறியாதவை. பல ஊர்களுக்குச் செல்லும் வழிகளில் அவர்களைக் கண்டு அவர்களோடு பேசினேன். அவர்கள் தமிழிலும் நன்கு பேசுகிறார்கள். இன்று, அவர்கள் ஆளும் நிலையில் உயர்வுற்று பல உயர் நிலைகளில் இருப்பதை அண்மையில் சிங்கப்பூர், மலேயா சென்ற போது கண்டு மகிழ்ந்தேன்.

கோலாலம்பூரில் செட்டியார் — நகரத்தார் அதிகம் இருந்தனர். பெரும்பாலும் அவர்கள் விருந்தினனாகவே இருந்தேன். 'தமிழ் நேசன்' என்ற தினப்பத்திரிகையை அவர்கள் நடத்தி வந்தனர். வேறு இரண்டொரு வாரப் பத்திரிகைகளும் அன்று வெளிவந்தன. எனினும் அவர்கள் மலேயா நாட்டுக் கல்விமுறை அவர்கள் நாட்டுக் கெனத் தனியாக அமையவில்லை. பெரும்பாலும் 'லண்டன் மெட்ரிக்' பள்ளிகளே எங்கும் இருந்தன. அந்த நாளிலேயே அந்நாடு முழுவதும் பள்ளிகள் காலை 8 மணிக்குத் தொடங்கிப் பிற்பகல் 1 மணிக்கு முடிவுறும். நம் நாட்டைப் போன்று நல்ல வெய்யில் வேளையில் இளங் குழந்தைகளை வாட்டுவதில்லை. நிலநடுக்கோட்டுக்கு அருகே இருப்பினும் அந்நாட்டில் வெப்பம் அதிகமாவதில்லையாம். நான் சென்ற அந்தக் கோடையில் அதை நன்கு கண்டேன்.

கோலாலம்பூரில் நகரத்தார் மிகுதியாக இருந்தனர் என்றேன். எனவே அவர்கள் வழிபடும் கோயில்களும்— பெரிதும் சிறிதுமாகப் பல இருந்தன. நான் சென்ற இடங்களி லெல்லாம் பல கோயில்களைக் கண்டேன். ஒருசில கோயில் களில் நிலைத்த அடுப்பின்மேல் பெரிய பெரிய அண்டாக்கள் அப்படியே பொருந்தி இருந்தன. அவற்றை எடுக்க முடியாது.

பெருவிழாக்களில்—சிறப்பாகத் தைப்பூசம் போன்ற விழா நாட்களில் ஆயிரக்கணக்கானோருக்கு உணவு படைத்தல் முறையாம். அப்போது சோறு, குழம்பு, இரசம் முதலியன செய்யவே அந்த ஏற்பாடு. கீழ்ப்பக்கத்தில் திறந்து எடுக்கச் சிறு வாயில்களும் குழாய்களும் இருந்தன. விழா முடிந்தபின் அவற்றை ஆள் உள் இறங்கித்தான் துப்புரவு செய்வார்கள். எங்கோ 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்ற ஔவை வாக்கின்படி பொருள் பெருக்க வந்த இடத்தில் நகரத்தார் இவ்வாறு பொருளோடு—அப்பொருள் கொண்டே அருளையும் பெருக்கும் செயல் கண்டு வியந்தேன்! போற்றினேன்!

கோலாலம்பூரினைச் சுற்றிப் பல இடங்களைக் கண்டேன். அவற்றுள் என்னைமிகவும் பற்றி ஈர்த்தது பத்து குகைகளாம். (Pathu caves). மிக மிகப் பழங்காலத்தில் அக்குகையின் கற்கள் உருகி இருக்க வேண்டும். உருகி அப்படி அப்படியே சங்கிலி போலத் தொங்கிக் கொண்டிருக்கும் அக்காட்சி மனித உள்ளத்துக்கு எட்டாத—மதிப்பிட முடியாத காட்சியாக இருந்தது. அப்படியே பூங்காவும் பிற சுற்றுச் சூழல்களும் மனத்துக்கு மகிழ்ச்சி அளித்தன. வண்ண மலர்ச் செடிகளும் பலவகைப் பழ மரங்களும் பயன் தந்தன. நம் நாட்டில் இல்லாத பலவகைப் பழங்களை அங்கே கண்டேன். உண்டேன். பல விருந்துகளில் பழங்களே முக்கிய விருந்துப் பொருள்களாக இருக்கும். இத்தகைய பழங்களை அவர்கள் நாடோறும் உண்பதால் உடல் உரம் பெற்றவர்களாக வாழ்கின்றனர்.

கோலாலம்பூரில் அரசாங்க அலுவலகங்களையும், இரெயில்வே அலுவல்கங்களையும் பிற அலுவலகங்களையும் சுற்றிப்பார்த்தேன். எங்கும் தமிழர்கள் சிறக்க இடம் பெற்றிருந்தனர். அங்கே இருந்த இந்திய நாட்டுத் தூதரகக் கிளையின் பொறுப்பாளர் திரு. நடராஜப் பிள்ளை என்

கூட்டத்துக்கு ஒரு நாள் வந்திருந்தார். பிறகு ஒரு நாள் அவர் தம் வீட்டிற்கு விருந்துக்கு அழைத்தார்; விருந்துண்டேன். இவ்வாறு ஒரு வாரம் கோலாலம்பூர் ஆகிய அந்நாட்டுத் தலைநகரிலே தங்கிப் பிற ஊர்களையும் காணப் புறப்பட்டேன். கோலாலம்பூரில் மலேயா தமிழ்ச் சங்கத் தலைவர் திரு. கா. இராமநாதன் செட்டியார் இருந்தார். அவர் முன்பு சென்னையில் சைவசித்தாந்த சமாசத்தின் செயலாளராக இருந்தபோது எனக்கு நன்கு அறிமுகமானவர். அவர் பல கூட்டங்களுக்குத் தலைமை வகித்தார்; பேசினார். புறப்படும் போது அவர் வாழ்த்தி வழி அனுப்பிவைத்தார். கோலாலம்பூர் நாட்டின் நடுப்பகுதியில் உள்ள ஊர். எனவே தென் மேற்கில் இருந்த மலாக்கவிலிருந்து வந்த நான் வடக்கு நோக்கி என் பயணத்தைத் தொடங்கினேன். தொடங்கு முன் கோலாலம்பூருக்கு 20கல் தொலைவில் உள்ள 'சுவெட்டென்ஹாம்' என்னும் துறைமுக நகரினையும் சிரம்பான் நகரினையும் கண்டு அங்குள்ள தமிழ்ச் சங்கங்களிலும் பேசினேன். நான் பதினைந்து அல்லது இருபது நாள் கழித்துத் தெற்கு நோக்கி, சிங்கப்பூர் செல்லு முன் அங்கே வரும்போதும் வேறு சில நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்தனர். அக்காலத்தில் மலேயாவை ஒன்பது சுல்தான்கள் ஆண்டுவந்தனர். மலேயா மக்களும் முகம்மதிய மதத்தைச் சார்ந்தவர்களே. நண்பர்கள்—சிலாங்கூர் என நினைக்கிறேன் ஒரு சுல்தானிடம் என்னை நேர் காணலுக்கு அழைத்துச் சென்றனர். அவரும் அன்புடன் ஏற்று, அவர் குடும்பத்தவர் அனைவரையும் எனக்கு அறிமுகம் செய்துவைத்து, நல்ல விருந்தும் அளித்தார்—அவர் பயன்படுத்திய செங்கோல் ஒன்றையும் அளித்தார். இவ்வாறு கோலாலம்பூர் மக்களிடம் வாழ்ந்த நான் வடக்கே பினாங்கு நோக்கிப் புறப்பட்டேன். இடையிடையே பல சிற்றூர்களில் சில மணி நேரம் தங்கினேன். சுங்கிச்சிபுட்டில் ஒரு நாள் தங்கினேன். அவ்வூரில்

பின் அந்நாட்டு அமைச்சராக இருந்த தமிழர் சம்பந்தம் என்பவர் இருந்தார். அவரும் அவர் தம்பிகளும் அண்ணா மலைப் பல்கலைக்கழகத்தில் பயின்றவர்கள். அன்போடு பழகினார். பின்னும் வேறு சில ஊர்களைக் கண்டு 'ஈப்போ' என்னும் நகரை அடைந்தோம். ஆம்! எல்லா இடங்களுக்கும் திரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் தம் குடும்பத்துட னேயே வந்தார். எல்லாப் பயணங்களும் கார் வழியே நடைபெற்றன.

மலேயாவில் முக்கிய பொருள் 'ரப்பர்'. வழிநெடுகக் காடு களில் ரப்பர் மரங்களில் ரப்பர் எடுக்கும் மக்களைக் கண்டு பேசினேன். அவர்கள் அனைவரும் தமிழர்களே. ஏன்? மலேயாவை வளமான நாடாக்கியவர்களே தமிழர்கள்தாம். இன்று சீனர்கள் அதிகமாக உள்ளாரேனும் ஒரு காலத்தில் மலேயா மற்றொரு தமிழ் நாடாகவே இருந்தது. ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் மிக வறுமையான நிலையில் இருந்தனர். தோட்ட முதலாளிகள் அவர்கள் தங்க அறைகள் கட்டி, பள்ளிக்கூடங்கள் வைத்து, பிற ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். என்றாலும் அவர்கள் வாழ்க்கைத் தரம் மிகக் குறைவாகவே இருந்தது. பாரதியார் 'தேயிலைத் தோட்டத்தே' நம்மக்கள் நைகின்ற நிலையில் பாடிய பாடல் ஒப்ப இன்றேனும் அவர்கள் வாழ்க்கைத் தரம் உயர முதலாளிகள் இன்னும் பல செய்ய வேண்டும் என எண்ணி னேன். சில முதலாளிகளிடமும் சொன்னேன். அங்குள்ள பள்ளிகளிலெல்லாம், பெரும்பாலும் தமிழர்களே அங்கே இருந்தமையின், தமிழே பாடமாக—பயிற்று மொழியாக இருந்தது. அவர்கள் நிலை என்று உயருமோ என்ற எண்ணத் துடனேயே என் பயணத்தைத் தொடங்கினேன்.

'ஈப்போ' அழகான ஊர்—தூய்மையானதும் கூட. நான் மலேயாவில் கண்ட ஊர்களில் இது போன்ற தூய்மையான ஊரைக் கண்டதில்லை. அங்கே 'ஈப்போ தமிழ்ச் சங்கம்'

என்றும் ஒன்று இருந்தது. அதன் தலைவரும் அங்கே ஒரு வணிக அலுவலகத்தில் பணிபுரிந்த இராமநாதன் செட்டியார் என்பர். ஈப்போவில் அவர்கள் சங்கத்துக்காக ஒரு தமிழ் இதழினையும் அச்சடித்து வெளியிட்டனர் (மாதம் இரு முறை என எண்ணுகிறேன்) அவர்கள் தமிழ்ச் சங்கத்தில் என்னைப் பேசுமாறு சொன்னார்கள். நான் பேசச் சென்றேன். பெருமண்டபம்—நிறைந்த கூட்டம். கூட்டம் தொடங்கு முன் என்னை வரவேற்ற அச்சங்கச் செயலாளர் நான் விரும்பாத ஒரு செயலைச் செய்தார். ஆம்! என் பேச்சில் தமிழ் நலம் மிகுவதையும் 'கேட்டார்ப்பிணிக்கும் தகையதாய்—கேளாரும் வேட்பதாய்' உள்ளதையும் பிற சிறப்பியல்புகளையும் கூறி, எனக்கு ஒரு 'பட்டம்' அளித்தார். என் கலியாணத்திலேயே பட்டம் கட்டிக் கொள்ள விரும்பாதவன் நான். தமிழ் நாட்டில் அதற்குமுன் எனக்குப் பட்டம் அளிக்க வந்தவர்களை வேண்டி மறுத்தவன் யான். பின்னால் ஒரு முதலமைச்சர் தலையீட்டால் ஒரு பட்டமும் ஒரு பெருமடத்தினரால் பல ஆண்டுகள் முயன்று மறுத்து மறுத்துப் பின் இசைந்து பெற்ற பட்டமும்கூட எனக்கு உண்டு. ஆயினும் நான் அவற்றை வெளியே காட்டவும் இல்லை. போட்டுக் கொள்ளவும் இல்லை. கடந்த சில ஆண்டுகளில் தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகங்கள் இரண்டும் அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றும் எனக்குத் தர ஏற்பாடு செய்த பட்டங்களையும் அன்புரை கூறி மறுத்தவன் நான், (இந்த ஆண்டு நம் தமிழக முதலமைச்சர் நல்ல வேளை பட்டம் இல்லாது, திரு வி. க. விருதினை அளிப்பதாலும் திரு. வி.க. வுடன் நான் கொண்ட தொடர்பு காரணமாகவும் ஏற்றுக் கொண்டேன். ஒரு வேளை பட்டமாயின் மறுத்திருக்கக்கூடும்.)

திடீரென 'ஈப்போ' தமிழ்ச் சங்கத்தார் பட்டம் அளித்துப் பட்டாடை போர்த்தி மகிழ்ந்தாலும் என்னால்

அவர்களொடு மகிழ முடியவில்லை. பட்டம் பெறவும் அதற்கென விழா அமைக்கவும் தாமே பொருட் செலவும் செய்து நடத்தவும் முன்னின்று செயல்படுவார் வாழும் இக் காலத்தில் நான் பயித்தியக்காரனாக ஒதுக்கப்படுவேன் என அறிவேன். எனினும் மணிவாசகர் கூறியபடி 'உற்றாரை யான் வேண்டேன், ஊர்வேண்டேன், பேர்வேண்டேன்' என வாழ்கின்றவன் நான்.

ஈப்போ தமிழ்ச் சங்கத்தார் அறிவிக்க, பலர் மகிழ்ச்சியில் ஆரவாரிக்க அந்நாட்டில் அவர்களுக்கிடையில் நான் என்ன செய்ய முடியும். பின் நான் பேசியபோது அதுபற்றி ஒரு குறிப்பும் கூறாது, என் தலைப்பில் மட்டும் பேசி முடித்தேன். வீட்டிற்கு வந்ததும் திரு. செட்டியார் அவர்களிடம் நான் கொண்ட கொள்கையினைக் கூறினேன். நான் அரிதின் முயன்று பயின்று பெற்ற பல்கலைக் கழகப் பட்டங்களையே போட்டுக் கொள்ளாததைக் கூறினேன். அவரும் என் கொள்கையை ஏற்றுக்கொண்டார்,

பின் ஈப்போவிலிருந்து வடக்கு நோக்கிப் புறப்பட்டு, பல ஊர்களைக் கடந்து, பினாங்குத் தீவினை வந்தடைந்தோம். மலேயா நடுவில் இருக்க வடகோடியில் பினாங்கும் தென் கோடியில் சிங்கப்பூரும் தனித்தனி தீவுகளாக மலேயாவோடு இணைந்திருந்தன. சிங்கப்பூருக்கு மட்டும் தரை வழியும் இரெயில் வழியும் இருந்தன. பினாங்கிற்குச் சிறுசிறு கப்பல்—தோணிகளின் மூலமே செல்ல வேண்டும். நாங்கள் சென்ற கார் அப்படியே தோணியில் ஏற்றப் பெற்று பினாங்கினைச் சேர்ந்தது. இவ்வாறே சிங்கப்பூரிலிருந்து மலாக்கா வந்த போது, அந்த உந்துவண்டியினை இவ்வாறே தோணியில் எல்லாப் பயணிகளோடு ஏற்றிக் கரை சேர்ந்ததை நினைத்தேன்.

பின்ராங்கு சிறியதீவு. சுமார் ஆறுகல் (9 கிலோ மீட்டர்) சுற்றளவு உள்ளது என்றனர், சுற்றிலும் வர நல்ல சாலைகள் இருந்தன. எங்கும் பழமரங்கள். அங்கே அதுவரை காணாத 'மங்குஸ்தான்—ரங்குஸ்தான்' போன்ற பழங்கள் தவிர 'டொரியான்' பழம் என்று ஒரு வகை பெரு மரங்களில் காய்த்துத் தொங்கின. அவற்றைக் கீழே விழாமல் தடுக்க, பெரிய வலைகள் மரக்கிளைகள் உயரக் கட்டி இருந்தன. விழுந்தால் உடைந்து பாழாகிவிடுமாம். அதை வீட்டில் கொண்டு வந்து ஒரு பழத்தை உடைத்துச் சுளை எடுத்தார் கள். அது பலாப்பழம் போல முள்ளுடையதாய் உள்ளே சுவையும் கொட்டையும் உடையதாய் இருந்தது. அதை அறுக்கும் போது ஒரே நாற்றம். சகிக்க முடியவில்லை. ஆனால் சுளையை எடுத்து உண்டபோது அது போன்ற சுளையை அதுவரையில் அனுபவித்ததில்லை என்று சொல்லத் தோன்றிற்று. இப்படித் தோற்றத்தாலும் மணத்தாலும் புறத்தே கொடியதாகத் தோன்றினாலும் உள்ளே இனிய இன்பம் இயைவதை எண்ணி, மாறாகப் புறத்தே இனிக்கப் பேசி உள்ளே உறுமும் மனித இனத்தை நினைத்தேன்; இப்பழ நிலை மனிதனுக்கு வராதா என மருகினேன்.

பினாங்கில் கூட்டத்தில் பெருமக்கள் பலர் கூடி இருந்தனர். பெருங் கூட்டம். கூட்ட முடிவில் பலர் வந்து பேசிச் சென்றார்கள். எனினும் வயதான ஒருவர் வந்து, 'ஐயா! நான் உங்கள் மாணவன்—தங்களைக் காண வந்தேன்' என்றார். அவர் என்னினும் மூத்தவராக இருந்தமையின் திகைத்தேன்—நான் மெய்கண்டாருமல்லன்—அவரும் அருள் நந்தியாருமல்லர், பிறகு அவரே என் திகைப்பைப் போக்கி னார். 'நான் பச்சையப்பரில் நாற்பதுக்கு முன் படித்தேன் (நான் 44ல் சேர்ந்தேன்). இன்று காலை செய்தித்தாளில், பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் இங்கே பேச வருகிறார் என்று கண்டேன். நான் இங்கிருந்து எழுபது கல்

(112 கி. மீட்டர்) தொலைவில் உள்ள சிற்றூரில் பணியாற்று கிறேன். உங்களைக் காணவே இங்கே வந்தேன். உங்கள் பேச்சினைக் கேட்டதில் பெரிதும் மகிழ்ந்தேன் என்று வாழ்த்தினர். பழங்காலத்திய பச்சையப்பரில் பயின்ற மாணவர்தம் பண்பாட்டினையும் பயின்ற கல்லூரியிடம் கொண்ட பாசத்தினையும் அறிந்து எண்ணி எண்ணி வியந் தேன். அவரை வாழ்த்தி அனுப்பிவைத்தேன். அடுத்து அங்கே வந்த ஒருவர் அருகில் உள்ள தம் கடைக்கு என்னை வருமாறு அழைத்தார். செட்டியாரும் கூடவே இருந்தார். சென்றோம். அது 'Shop' என்று சொல்லும் பல பொருள் விற்பனைக் கடை. எங்களை உட்காரவைத்துவிட்டு, உள் சென்று அவர் நல்ல கைக்கெடிகாரத்தைக் கொண்டு வந்து என்கையில் கட்டினார். நான் வரும்போது சிங்கப்பூரிலிருந்து ஒரு கடியாரம் வாங்கி வரலாம் என்று எண்ணி இருந்தேன். வெறுங்கையைக் கண்ட அவர் என்ன நினைத்தாரோ—அவர் கடையிலிருந்த நல்ல கடியாரம் ஒன்றினை எடுத்து என் கையில் கட்டினார். கூடவே வந்த செட்டியார் அதன் விலை என்னவென்று கேட்டார். அவர் சிரித்துக் கொண்டு 'இவருக்கு என் அன்புப் பரிசு அன்பிற்கு விலை ஏது?' என்று பதில் கேள்வி கேட்டார். எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. அவர் மேலும் 'இது என் சொந்தக் கடை. இது வரையில் இங்கே இவ்வளவு அழகாகத் தமிழ் பேசித் தமிழை விளக்கித் தமிழர்களை மகிழ்வித்தவர் யாருமில்லை, நான் ஒரு தமிழன். எனவே மகிழ்ந்தளித்தேன்' என்றார். இத்தகைய நல்லவர்கள் ஒரு சிலராவது உள்ளமையினால் தான் தமிழ் இன்றளவும் வாழ்கிறது என்ற எண்ணத்தோடு அவரை வணங்கி விடைபெற்றேன். அதைச் சுமார் நாற்பது வருடங்கள் கட்டியிருந்தேன். 1985இல் நியுயார்க்கில் ஒரு புதுக் கடியாரம் வாங்கிய பொழுதே அதை மாற்றினேன். அதையும் எங்கள் பள்ளியின் காட்சிச் சாலையில் ஒரு காட்சிப் பொருளாகவே வைத்துள்ளேன்.

பினாங்கினையும் சுற்றுப்புற ஊர்களையும் அங்குள்ள மக்களையும் கண்டு கொண்டே, அவர்களிடம் பேசியும் பழகியும் அவரவர் கருத்துக்களைப் புரிந்து கொண்டே மெல்லத் தெற்கு நோக்கிப் புறப்பட்டோம். திரும்பவும் கோலாலம்பூரில் சில நாட்கள் தங்கி மறுபடி சிங்கப்பூர் நோக்கி எங்கள் பயணம் தொடர்ந்தது. இசையில் கண்ட ஊர்கள் பல—பேசிய அன்பர்கள் பலர். கடைசியாக மலேயாவின் கோடி நகரான 'ஜோகூர் பாரு' என்ற ஊரில் வந்து ஒரு நாள் தங்கினோம். அங்கே கூட்டங்கள் ஒன்றுமில்லை. அண்மையில் உள்ள சிங்கப்பூர் நாகரிக வாடை அங்கே வீசியது. புதுமையான போலி நாகரிக வாழ்க்கை பற்றிய வரலாற்றையெல்லாம் அங்கிருந்த அன்பர் (திரு. அழகப்பர் என நினைக்கிறேன்) சொன்னார். இரவு உணவு உண்டபின் அமைதியான—அலைவற்ற அக்கடற்கரையில் இருந்த சிமெண்ட் பலகையில் உட்கார்ந்து பேசினோம். அருணாசலம் 'செட்டியார் இடையில் பிரிந்து மலாக்காவிற்கும் சென்று சிங்கப்பூருக்கு நேரே வருவதாகக் கூறி இங்குள்ள அன்பருக்குத் தொலைபேசி மூலம் என் வருகையை உணர்த்தினர். இங்கு வரு முன்போ—வந்த பின்போ எனக்கென இருந்த காரினையும் அனுப்பிவிட்டேன். அவர் மலாக்கா எடுத்துச் சென்றார். அங்குள்ள இரெயில் பயணம் பற்றி அறியவே, அதை அனுப்பி இரெயிலில் வந்தேன். இன்று இங்குள்ள இரண்டடுக்கு மூன்றடுக்குப் படுக்கைளெல்லாம் அன்றே அங்கு இருந்தன். அன்பர் அந்நாட்டு மக்கள் நிலையினையும் சிங்கப்பூரில் வரவர சீனர் ஆதிக்கம்—பெரிதும் வாணிபத்தில்—அதிகமாகி வருவதையும் போருக்குப்பின் தமிழர் நிலை குறைந்து வருவதையும் குறித்து விளக்கினார். மற்றும் அவ்வூரில் அதிகமாக உள்ள—சிங்கப்பூர் செல்வந்தர்களுக்குப் பழக்கமான—சேக்கிழார் நாகரிகமாகக் கூறிய 'பதி இலாக் குலத்து வந்தவர்' தம் பான்மையும் விளக்கினார்.

பொருளே குறிக்கோளாக இல்லாது சில வரையறுத்த பண் பாட்டு நெறி பற்றி அவர்கள் வாழ்வதையும் குறிப்பிட்டார். இவ்வாறு வெகுநேரம் பலவற்றைப் பற்றிப்பேசி இருந்து உறங்கச் சென்றோம்.

மறுநாள் காலை சிங்கப்பூருக்கு அந்த அன்பரே தம் காரில் அழைத்து வந்து எனக்கென அமைந்த மாளிகையில் விட்டு வாழ்த்திச் சென்றார். அங்கே 'தமிழ்முரசு, நாளிதழைச் சிறக்க நடத்தி வரும் சாரங்கபாணி அவர்களும் டாக்டர் சங்கர் அவர்களும் (பச்சையப்பன் கல்லூரியின் பழைய பேராசிரியர் அனந்த நாராயணன் அவர்தம் மகனார்) வந்திருந்தார்கள். வேறுபல அன்பர்களும் கூட இருந்தனர். அன்று மாலை இராமகிருஷ்ண மடத்தில் பேசுவதெனவும் அடுத்த இரண்டு நாட்கள் வெவ்வேறு இடங்களில் பேச வேண்டும் எனவும் குறித்தனர். அதற்குள் மலாக்கா சென்ற செட்டியார் அவர்களும் வந்து சேர்ந்தார்.

நான் சிங்கப்பூர் வந்ததைக் கேட்டறிந்த இந்திய தூதுவர் ஜான் திவி அவர்கள் தொலைபேசியில் பேசி, மறுநாள் அவர்கள் வீட்டிற்கு விருந்திற்கு வரவேண்டுமெனக் கூறினார் கள். அப்படியே மறுநாள் சென்றபோது மகிழ்வோடு ஏற்று, போற்றி விருந்தளித்தனர். அவர்தம் துணைவியார் சிறந்த தமிழ்க் குடும்பத்தில் வந்தவராதலாலும் அவரும் தமிழ் நலம் பேணும் தன்மையராதலாலும் அங்கே தமிழ் மணம் வீசக் கண்டேன். பின் திரு. சங்கர் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். ஒரு நாள் முழுவதும் அங்கேயே தங்கியிருந்தேன். நிகழ்ச்சிகள் முறைப்படி நடைபெற்றன, நான் வந்த பணி பற்றியும் பல வகையில் பலரிடம் நேர்முகமாகவும் குறிப்பாகவும் மறைமுகமாகவும் எல்லா இடங்களிலும் பேசிய படி இங்கேயும் பேசினேன். பலருடைய உள்ளக்கிடக்கை யினை அறிந்தேன். தமிழ் உள்ளம் சார்ந்த சாரங்கபாணி

அவர்கள் தம் தமிழ் முரசில் நான் வந்த காரணத்தையும் அதற்கெனத்தாம் கொண்ட கருத்தினையும் விளக்கித் தம் தினசரியில் எழுதினார்கள்.

சிங்கப்பூர் கடைகளையும் பிறவற்றையும் சுற்றிப் பார்த்தேன். 'ஜோகூர்பார்' அன்பர் சொன்னது மெய்தான் எனப்பட்டது. வாணிபம் பெரும்பாலும் சீனர் கையில் இருந்தது. (சிங்கப்பூர் தனியானபின் தமிழர் வாணிபம் தழைத்தோங்கி வருவதை 1985, 1989இல் சென்றபோது கண்டேன்)

அங்குள்ள தமிழர்தம் அழகார் கோயில்களையும் கண்டு வழிபட்டேன். பல புதிய அன்பர்கள் அறிமுகமாயினர். டாக்டர் சங்கர் அங்கே புகழ் பெற்ற வைத்தியரானமையின் அவரைக் காண எப்போதும் பலர் வந்து கொண்டிருந்தனர். சீனப் பெண்கள் வாழ்வு பற்றியும் பிற சிங்கப்பூர் புறநாகரிக வாழ்வு பற்றியும் தமிழர் நிலை பற்றியும் டாக்டர் சங்கர் சொல்லுவார், இவ்வாறு பலப்பல வகையில் அங்கே அமைந்த வாழ்க்கைமுறை—நான் சென்றதற்கென ஆய்ந்து கேட்டு உணர்ந்தவை—செல்வ வளம்—தமிழர் நிலை முதலிய வற்றை அறிந்தபின் நான் தாயகம் திரும்பும் நாளும் வந்தது.

திரும்புவதில் கப்பலில் இடர்ப்பாடு இருந்தது. சென்னைக்கும் சிங்கப்பூருக்கும் இடையில் செல்லும் கப்பல் சரியாக இயங்கவில்லை. ஒரு பண்டக் கப்பல் மறுநாள் கராச்சிக்கு—பாகிஸ்தான் செல்ல இருந்தது. அதில் உயர் அலுவலர்கள் செல்வதற்கென முதல் வகுப்பு வசதியுடன் இரு அறைகள் இருந்தன. திரு. ஜான் திவி அவர்கள் அதில் ஒரு அறையினை எனக்கு ஒதுக்க ஏற்பாடு செய்தார். மற்றொன்று பாகிஸ்தான் அரச ஊழியர் ஒருவருக்கு ஒதுக்கப் பெற்றது. எனவே உரிய வேளையில் புறப்பட வாய்ப்பு வந்தது. பல அன்பர்கள் துறைமுகத்துக்கு வந்திருந்தனர்.

எல்லா அன்பரிடத்தும் பணிந்து அன்புடன் விடைபெற்றுக் கப்பல் ஏறினேன். ஏழாம் நாள் நேரே சென்னை வந்து சேர்ந்தேன்.

சேர்ந்த இரண்டொருநாளில் மாண்புமிகு பக்தவத்சலம் அவர்களிடம் நான் சேகரித்த குறிப்புகள் அனைத்தையும் தொகுத்து என் கருத்தினையும் எழுதித்தந்தேன். அவர்கள் மிகவும் மகிழ்ந்தார்கள். முதல்வருடன் கலந்து, தில்லியோடு—மாண்புமிகு நேருவோடு பேசி மலேயா பல்கலைக் கழகத்தில் தமிழே இந்திய மொழியாகும் என அறிவித்தனர். என் பச்சையப்பர் கல்லூரி மறுநாள் திறந்தமையின் பழையபடி என் பணியினைத் தொடங்கினேன்.

# 6. பத்திரிகைப் பணி

பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிய போதே, வேறுசில பொதுப்பணிகளையும் மேற்கொள்ளும் நிலை இருந்தது. ஒரு பகுதியாகிய பத்திரிகைத்துறையில் அக்காலத்தில் நான் ஆற்றிய பணியினைப் பற்றி எண்ணலாம் என எண்ணுகின்றேன்,

நான் காஞ்சியில் இருந்தபோது, தொடங்கி நடத்திய 'தமிழ்க்கலை' இதழ் நான் அங்கிருந்தபோதே பல காரணங்களால்—சிறப்பாக போர்க் காலத்துத் தாள்விலை உயர்வு காரணத்தால் நிறுத்தப்பெற்றது. நான் வைத்திருந்த தமிழ்க்கலை அச்சகத்தையும் என்னுடன் சேர்ந்து பணியாற்றியவருக்கு மதிப்பிட்டுத் தந்து வந்துவிட்டேன். அது பற்றியெல்லாம் இந்நூலின் முற்பகுதியில் விளக்கமாக எழுதியுள்ளேன். ஆயினும் சென்னை வந்த பின் மீண்டும் அதைத் தொடங்கி நடத்தலாம் எனக் கருதினேன். அச்சகத்தின்

பொருள்களைத் தந்தது மட்டுமன்றி, அச்சகத்தின் பெயர், தமிழ்க்கலை உரிமை அனைத்தையும் நானே கொண்டிருந் தேன். அதனாலேயே சென்னை அமைந்தகரையில் 1949இல் நான் சொந்தமாக அமைத்த வீட்டிற்கும் 'தமிழ்க்கலை இல்லம்' என்றே பெயரிட்டேன். பின் 'தமிழ்க்கலை மன்றம்' அமைத்தபோதும் நான் அதன் செயலாளனாகவும், டாக்டர் மு. வ. அவர்கள் தலைவராகவும் இருந்தமையின் அப்பெயர் அமைத்தலுக்கும் அதன் வழி வந்த முத்திங்கள் இதழுக்கும் மறுப்புத் தெரிவிக்கவில்லை. பின் நான் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தே ஆட்சிக்குழு உறுப்பினனாக இருந்த போது, இதே பெயரில் அங்கே தொடங்கிய முத்திங்கள் இதழினையும் ஏற்றுக் கொண்டேன். முன்னது சின்னாள் வாழ்வுடன் நின்றது. பின்னது நிலை அறியேன்?

நான் சென்னையில் 'தமிழ்க்கலை' தொடங்க நினைத்த போது என் உடனிருந்த பேராசிரியர் அன்பழகன் அவர்கள் ஊக்கம் தந்தார்கள். அவரும் 'புதுவாழ்வு' என்ற திங்க ளிதழைச் சில காலம் நடத்தி வந்தார். அவர்தம் அரசியல் செல்வாக்கில் அது நன்கு நடைபெற்றதாயினும் ஏனோ நிறுத்தப்பெற்றது. என் தமிழ்க்கலையை எங்கே அச்சிடுவது என எண்ணினேன். திங்கள் தோறும் குறித்த நாளில் வெளியிட்டு அஞ்சலில் குறித்த நாளில் குறைந்த செலவில் அனுப்பவேண்டும். அவ்வாறு நாள் தவறாமல் அச்சிட்டுத் தருபவர் யார் உளர் என எண்ணினேன். அப்போது நான் சைவசித்தாந்த சமாசத்தின் துணைச் செயலாளனாகவும் அது வெளியிட்ட திங்கள் இதழ் 'சித்தாந்தத்தின்' துணை ஆசிரிய னாகவும் இருந்தேன். அந்த இதழ் சாது அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. அதற்கென அடிக்கடி சாது அச்சுக்கூடம் செல்வேன். அப்போதெல்லாம் இராயப் பேட்டை முனிவர் திரு. வி. க. அவர்களுடன் பல மணி நேரம் பேசிக்கொண்டிருப்பேன். அவர்கள் என் இளமையிலேயே

இருமுறை எங்கள் கிராமத்துக்கு வந்ததையும் என் அன்னை யின் இறுதி நாள் வாழ்த்தினை வழங்கியதையும் அவரோடு என் இளமை தொட்டு இருந்த தொடர்பினையும் முன்பே குறித்துள்ளேன். அவர்கள் எனக்கு வழங்கிய ஆங்கில நற்சான்று இதழினையும் இன்றும் போற்றிப் பாதுகாத்து வருகின்றேன். ஒரு நாள் நான் அவர்களோடு பேசிக்கொண் டிருக்கையில் என் 'தமிழ்க்கலை'யினைப்பற்றி அவரிடம் கூறினேன். அவர்கள் உடனே தயக்கமின்றி 'ஏன்? இங்கேயே அச்சிடலாமே' என்று கூறி, அச்சகப் பொறுப்பில் இருந்த நாராயணசாமி என்பவரை அழைத்து அதற்கு ஏற்பாடும் செய்துவிட்டார். பின் அதற்குரிய அரசாங்க இசைவும், அஞ்சலக இசைவும் பெற்று முறையாகத் தொடங்கிச் சென்னையிலிருந்து தமிழ்க்கலையினை நடத்தினேன். அதில் டாக்டர் மு. வ., டாக்டர் ரா. பி. சேதுபிள்ளை போன்றவர் கள் அவ்வப்போது கட்டுரைகளும் வாழ்த்தும் எழுதி என்னை ஊக்கினார்கள். என் உடன் ஆசிரியர்கள் ஒரு சிலரும்— ஏன்?—என் மாணவரில் சிலரும் கூடக் கட்டுரைகள் கவிதைகள் எழுதினர்; இதழ் பரவுவதற்கு உதவியும் புரிந்தனர். இவ்வாறு நல்ல முறையில் ஐந்து ஆண்டுகள் சென்னையில் தமிழ்க்கலை திங்கள் இதழாக வெளிவந்தது. பிறகு நான் என் புது இல்லம் புகுந்தபோதும், வேறு பள்ளிகள் தொடங்க முயன்ற நிலையிலும் நாட்டில் பல்வேறு இதழ்கள் புற்றீசல் போலப் புறப்பட்டமையாலும் தமிழ்க்கலை வெளியீடு நின்றது. எனினும் 'தமிழ்க்கலைப் பதிப்பகம்' என்ற பெயரில் இன்று வரை என் நூல்கள் வெளியாகிக் கொண்டே இருக்கின்றன.

நான் தமிழ்க்கலை நடத்தியபோது சென்னை மாநிலம் மொழிவாரி மாநிலமாகப் பிரிய ஏற்பாடு நடந்து கொண்டி ருந்தது. சென்னையை ஆந்திரத்துடன் இணைப்பது, அல்லது கூவம் ஆறு அன்றி பூவிருந்தவல்லி நெடுஞ்சாலையை எல்லையாக வடக்கும் தெற்கும் ஆந்திரம், தமிழ்நாடு

அடைவது, அல்லது மத்திய அரசின் கீழ் கொண்டுவருவது என்று பலவகையில் மாண்புமிகு பிரகாசம் உட்படப் பல தலைவர்கள் வற்புறுத்தினர். இதற்காக பொட்டி ஸ்ரீராமுலு என்பவர் உண்ணாவிரதம் இருந்து உயிர் துறந்தார். எனினும் அவர்கள் வேண்டுகோளை இந்திய அரசு ஏற்றுக்கொள்ள, வில்லை. நான் தமிழ்க்கலையில் தொடர்ந்து திருப்பதிமுதல் சென்னைவரையில் ஊர் ஊராக மக்கள் தொகை-மொழி பற்றி கட்டுரைகள் பல திங்கள் எழுதி வெளியிட்டேன். 1931இல் தான் மொழிவாரி மக்கள்தொகை எடுக்கப்பெற்றது. எனவே அந்த அடிப்படையில் வெளியிட்டேன். பிறகு 1941இல் மொழி வாரி இல்லை. என்னுடைய கணக்கும், படங்களும் பிற குறிப்புகளும் முதல்வர் இராஜாஜி அவர்களுக்குப் பெரிதும் பயன்பட்டன என அன்று பொதுப்பணித்துறை அமைச்சராக இருந்த மாண்புமிகு பக்தவத்சலம் அவர்கள் அடிக்கடி சொல்லுவார்கள். இன்றைய மராட்டிய மாநில ஆளுநர், அன்றைய சென்னை மாநிலக் கல்வி நிதி அமைச்சர் மாண்புமிகு சுப்பிரமணியம் அவர்களும் அவைபற்றிப் பாராட்டி, தேவையான இடங்களில் அவற்றைப் பயன்படுத் தினார்கள், எனவே இராமருக்கு அணில் பணி செய்தமை போன்றுஎன் தமிழ்க்கலையின் சிறு பணியும் தமிழ்நாடு நலம் பெற உதவிற்று என அறிந்து மகிழ்ந்தேன்.

சித்தாந்தம் இதழில் துணையாசிரியராக இருந்தேன் எனக் குறித்தேன். ஆம்! அக்காலத்திலெல்லாம் நான் சைவ சித்தாந்த சமாசத்தில் நெருக்கமாக ஈடுபட்டேன். 1934 டிசம்பரில் திருவதிகையில் திரு. வி.க. தலைமையில் சைவ சித்தாந்த சமாசம் நடைபெற்றது. அப்போது செயலாள ராக இருந்த பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் அதைச் சிறப்புற நடத்தினார்கள். அவர்தம் வாழ்வே சமாசம் என அமைந்தது. 150 கோவிந்தப்பநாயக்கன் தெரு அவரது இல்லம்; சமாச அலுவலகமும் அதுவே. அவர் காலத்தில்

பன்னிரு திருமுறைகள், திருப்புகழ் முதலிய சைவ நூல்களும் நாலாயிரம், சிந்தாமணி போன்ற பிறநூல்களும் அடக்க விலைக்கு வெளியிடப்பெற்றன. சைவத் தமிழ் மக்கள் அவருக்குப் பெரிதும் கடமைப் பட்டவராவர்.

நான் 1931இலிருந்து சைவசித்தாந்த மாநாடுகளுக்குச் சென்றுபோதிலும் 1934 திருவதிகை மாநாட்டில்—திரு. வி.க. தலைமையில் அதில் முற்றும் ஈடுபட்டேன். சிந்தாந்தத்தில் பல கட்டுரைகளும் கவிதைகளும் எழுதினேன். எனவே சென்னைக்குக் குடி வந்ததும் எனக்குத் துணைச் செயலாளர், துணை ஆசிரியர் பொறுப்பு இரண்டும் தரப்பெற்றன. சிவகாசி மாநாட்டில் இளைஞர் மாநாட்டுத் தலைவனாகவும் தொண்டாற்றினேன். நான்கைந்து ஆண்டுகள் தொடர்ந்து சித்தாந்த இதழினை—திரு பாலசுப்பிரமணிய முதலியார், திரு. வி.க. ஆகியோர் அரவணைப்பில் சிறப்பாக வெளியிடும் பேறு பெற்றேன். அக்காலத்தில் "சித்தாந்தச்" சந்தா தாரர்களும் அதிகமாயினர். பெரும்பாலும் தலையங்கம் எழுதும் பொறுப்பையும் பிழைதிருத்தும் பொறுப்பையும் என்னிடம் விட்டுவிட்டனர். அப்போது அமைந்தகரையி லிருந்து இராயப்பேட்டைக்கோ, மயிலைக்கோ, மவுண்ட ரோடுக்கோ போகவர பஸ் கிடையாது. நான் 15இல் செண்டிரல் சென்று, அங்கிருந்து 3, 4, 5 எண்ணுள்ள பஸ்கள் ஒன்றில் செல்வேன். சற்றே கடினமாயினும் மகிழ்ச்சியோடு அப்பணியினை மேற்கொண்டு செயலாற்றிவந்தேன். பின் பாலசுப்பிரமணிய முதலியார் மயிலைக்குக் குடி பெயர்ந்த பொழுதும் தொடர்ந்து சமாசத்தை நடத்திவந்தார். ஆயினும் அவர்கள் காலத்துக்குப் பின் அது நிலை குலைந்தது. இப்போது அது மயிலை வாடகை அறை ஒன்றில் அலுவலகம் அமைத்து ஓரளவு செயல்பட்டு வருகின்றது.

அக்காலத்தில் கூட்டுறவு இயக்கம் சிறக்கச் செயலாற்றி வந்தது. இக்காலத்தைப் போலன்றி, பல பெரியவர்கள்

செல்வர்கள் கூட்டுறவு இயக்கத்துக்கெனவே வாழ்ந்தனர். மாவட்டந்தோறும் தக்கவர்கள் தலைமையேற்று கூட்டுறவு இயக்கத்தையும் அதன்வழி இயங்கிய வங்கிகளையும் திறம்பட நடத்தினர். அன்றைய சென்னை மாநிலத்தை 'ஜஸ்டிஸ்' கட்சி ஆண்டபோது (1925-31 இருக்கலாம்) கூட்டுறவும் இந்துசமய அறநிலையமும் அமைக்கப்பெற்றன. மக்கள் நலமும் சமய நெறியும் நன்கு போற்றிப் பாதுகாக்கப்பெற்றன. கூட்டுறவு இயக்கத்தை நன்கு வளர்த்தவர்களுள் முக்கிய மானவர் கீழைச்சேரி திவான்பகதூர் தெய்வசிகாமணி முதலியார் ஆவார்கள். மாநில அளவில் பல பெரியவர்கள் பங்கு கொண்டு திறம்பட நடத்தினர்.

நான் சென்னை வந்து வாழ்ந்தபோது அதற்கெனத் தனி இடம் ஒன்றும் அமைக்கப் பெற்றது. கோட்டைக்குப் பின்புறவாயிலுக்கு எதிரே 'மவுண்டுரோடு' தொடக்கத்தே ஐந்து மாடிக்கட்டடமாக இன்றும் அது காட்சி அளிக்கின்றது. அதன் அமைப்பிலும் வளர்ச்சியிலும் அன்று சிதம்பரம் கனகசபைப் பிள்ளை, பின்னலூர் வாகீசம்பிள்ளை, ஈரோடு வேங்கிடசாமிநாயகர், கோவை பழநியப்ப முதலியார் போன்றவர்கள் முக்கிய பங்காற்றினர், செங்கற்பட்டு வேதாசலமுதலியார், திருச்சி தேவர், தஞ்சை நாடிமுத்துப் பிள்ளை, வடஆர்க்காடு கலவை சிங்காரவேலு முதலியார், வடநாங்கூர் மாணிக்கமுதலியார், தென்னார்க்காடு ரெட்டியார் ஆகியோரும் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்கள் அக்காலத்தில் 'கூட்டுறவு' என்னும் மாத இதழினையும் நடத்தினர். தமிழ்நாட்டு எல்லாக் கிளைகளுக்கும் அது அனுப்பப் பெற்றது. மேலும் சங்கச் செய்திகள் மட்டுமன்றி, கூட்டுறவு பற்றிச் சிறந்த கட்டுரைகளும் அதில் இடம் பெற்றன. அத்தகைய இதழினைப் பொறுப்பேற்று நடத்த ஓர் அலுவலர் அவர்கள் நிலையத்தில் இருந்தாரேனும் அதற்கென ஓர் ஆசிரியர் குழுவும் அமைத்தனர். என்னை

அதில் ஓர் உறுப்பினனாக இருக்கப் பணித்ததோடு, நான் தமிழாசிரியனாக இருந்தமையின், அதன் 'புரூப்' திருத்தல், கட்டுரைகள் தெளிவு செய்தல் போன்ற பணிகளை என்னிடம் ஒப்படைத்தனர். நான் 1966இல் ஐதராபாத் செல்லும் வரையில் அந்த ஆசிரியர் குழுவில் பணியாற்றினேன் என எண்ணுகிறேன் (திட்டமாக நினைவில்லை).

இவற்றுக்கெல்லாம் மேலாகப் 'பாரததேவி' நாளிதழின் பொறுப்பாசிரியனாகவும் மேலாளனாகவும் செயலாற்றிய செயல் முக்கியமானதாகும். மாண்புமிகு பக்தவத்சலம் அவர்கள் 1952இல் தேர்தலில் தோல்வியுற்ற ஞான்று, அவர் அப்பாரததேவியை நடத்தும் பொறுப்பினை ஏற்றார். அதனை நடத்திய நுங்கம்பாக்கம் ஐயர் அவர்கள் விரும்பி அதனை அவரிடம் ஒப்படைத்தார். அன்று தமிழ்நாடு காங் கிரஸ் கமிட்டியில் செயலாளராகவும் பாராளுமன்ற உறுப் பினராகவும் இருந்த ஆதம்பாக்கத்தில் வாழ்ந்த இராம கிருஷ்ண ஐயர் அதன் வெளியீட்டாளராகவும் உரிமை உடைய வராகவும் பதிவு செய்யப் பெற்றார். அவர் 'ஐயர்' என்று நான் குறித்தாலும் அவர் அப்பெயரைப் போட்டுக் கொள்வ தில்லை; பூணூலும் அணிந்து கொள்ளவில்லை என எண்ணு கிறேன். மாண்புமிகு பக்தவத்சலமும் அவரும் எனக்கு மிகவும் நெருங்கியவர்களாதலின் என்னை அழைத்து என்னை மேலாளராகப் பொறுப்பேற்றுச் செயல்படச் சொன்னார் கள். நான் என்னுடைய கல்லூரிப் பணி செய்வதால் இயலா நிலையினைச் சுட்டினேன். அப்போது 'பாரததேவி' காலை இதழாக நாள்தோறும் வெளிவந்தமையின் பிற்பகல் இரண்டு மணிக்குமேல் வந்து இரவு 9 மணிவரை இருந்து பத்திரிகையை ஒழுங்கு படுத்தியும் அலுவலகச் செயல்களை மேற்பார்வை யிட்டுச் செல்லவும் கேட்டனர். அதுவும் இயலாத ஒன்று; என் பெயரையும் அங்கே குறிக்க முடியாத நிலை. எனவே அவர்கள் இருவரும் அன்று பச்சையப்பரை நடத்திச் சென்ற

முக்கியமான இராசா. சர். முத்தைய செட்டியார் அவர்களை அழைத்து, எனக்கு இசைவு தருமாறு சொல்லி (எழுத்தில் அன்று) பிற்பகலில் எனக்குப் பாடம் இல்லாவகையிலும் கல்லூரியில் ஏற்பாடு செய்யச் சொன்னார்கள். அப்போது இராஜாஜி முதல்வராக இருந்தார்கள். (காங்கிரஸ் பெரும்பான்மை இழக்க, அதைச் சரி செய்யவும் காங்கிரசில் இணைப்பினை நிலைநாட்டவும் அவர் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெறா நிலையிலும் காமராசர் அவர்கள் அவர்களை வலிய அழைத்து அமைச்சரவை அமைக்குமாறு வேண்டினார். அவரும் அப்பொறுப்பை ஏற்றுத் திறம்படச் செயலாற்றியதோடு, மாநிலப் பிரிவின்போது சென்னையினைத் தமிழ்நாட்டுக்கே உரியதான ஒருபெரும் செயலைச் செய்து வெற்றி கண்டார்). யார் ஆளினும் அவர்களுக்கு ஆவன செய்யும் ராசா. சர் அவர்களும் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றினார். எனக்குப் பகல் ஒருமணியொடு கல்லூரிப் பணி முடிவடையும். உடன் (மவுண்டுரோடு—இன்றைய காஸ்மாபாலிடன் கிளப்புக்குப் பின்புறம்—இன்று அங்கிருந்து ஒரு நாளிதழ் வருகின்றது என நினைக்கிறேன்) பாரததேவி அலுலகம் சென்று கணக்குகளையெல்லாம் கண்டு முடித்து ஐந்து மணிக்கு அலுவலர்கள் சென்றபின்பு, இதழ் பற்றிக் கருத்திருத்துவேன். அனைத்தையும் செம்மை செய்து முடிக்க இரவு 9 அல்லது 10 மணி கூட ஆகலாம். பிறகு அலுவலக உந்துவண்டியிலேயே (Car) என் வீட்டிற்குக் கொண்டு வந்து விடப்பெறுவேன். இவ்வாறு திரு. பக்தவத்சலம் அவர்களுடன் இணைந்து பாரததேவியினை ஒரு சில மாதங்கள் நடத்தினேன்.

ஒருநாள் திடீரெனப் பக்தவத்சலம் அவர்கள் என்னை அழைத்து 'இனி நீ பொறுப்போடு இதைப் பார்த்துக் கொள்ள வேண்டும். நாளையிலிருந்து நான் வரமாட்டேன்' என்று கூறினார். அவர்கள் தினந்தோறும் காலை 10 அல்லது

11 மணியிலிருந்து மாலை 4 அல்லது 5 வரை இருந்து எல்லா வற்றையும் கவனித்துச் செல்வார்கள். அப்போது பண நெருக்கடி அதற்கு அதிகமாக இருந்தமையின் பலரிடம் சென்று (நானும் உடன் செல்வேன்), அதற்குப் பங்கு பெற (share) ஏற்பாடு செய்வார்கள். அத்தகையவர் இவ்வாறு சொன்னதும் எனக்கு வியப்பாக இருந்தது. அவர்களிடம் அதுபற்றிக் கேட்பதற்கு முன், அவர்கள் அலுவலகத்துப் படி களில் இறங்கிக் கொண்டிருந்தனர். திரு. இராமகிருஷ்ண ஐயர் அவர்களும் அப்போது வரவில்லை. நான் ஏன் அவர் அவ்வாறு கூறினார்? நான் மேல் என்ன செய்ய வேண்டும்? என என் அறையில் அமர்ந்து நெடிது நினைத்திருந்த அதே வேளையில் 'பி.டி.ஐ' யில் அதுவரையில் வந்த செய்தியினைத் துண்டித்துத் துணை ஆசிரியர் ஒருவர் என்னிடம் கொண்டு வந்தார். அதைக் கண்டேன். முதலிலேயே ஒரு முக்கிய செய்தி இருந்தது. 'இராஜாஜி அவர்கள் தம் அமைச்சர் அவையை விரிவுபடுத்தி, மாண்புமிகு பக்தவத்சலம், திருமங்கலம் இராசாராம், திருமதி. சோதி வெங்கடாசலம் ஆகிய மூவரை யும் அமைச்சர் அவையில் இணைத்துக் கொண்டார்) என்ற செய்தியே அது. நான் மகிழ்ந்தேன். இதற்காகத்தான் அவர்கள் அப்படிச் சொன்னார்கள் என்பது புரிந்தது. உடன் வந்த திரு. இராமகிருஷ்ணஐயர் அவர்களும் செய்தியைச் சொல்லி, இனி நான் அதிகப் பொறுப்புடன் செயலாற்ற வேண்டும் எனக் கேட்டுக் கொண்டனர். பின் பொருளா தார நெருக்கடியால் அந்த நிறுவனமே மூடப்பட்டது. நான் அதன் வளர்ச்சிக்கெனத் தந்த தொகையினையும் பின் பெற விரும்பவில்லை. பங்காளர்களாகச் சேர்ந்தவர்களுக்கு ஓரளவு விற்ற தொகை பகிர்ந்து அளிக்கப் பெற்றது.

பின் திரு. பக்தவத்சலம் அவர்கள், 1967க்குப் பிறகு, திரு. ராஜம் அவர்கள் சுதேசமித்திரனைப் பொறுப்பேற்று நடத்திய காலை, அதன் ஆசிரியராக அமர்ந்து தொண்டாற்

றினார்கள். ஆம்! அவர்கள் கடைசியாக ஒன்றும் செய்ய இயலாது படுக்கையாகப் படுத்த நாள்வரை ஏதேனும் தொண்டு செய்து கொண்டுதான் இருந்தார்கள். அவர்கள் சுதேசமித்திரனில் தொண்டாற்றிய போதும் என்னை அடிக்கடி வரச் சொல்லுவார்கள். நான் நிலையாக அங்கே எந்தப் பணியினையும் ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும், அவ்வப்போது சென்று அவர்கள் இட்டபணியினைச் செய்து வந்தேன்.

இச் சுதேசமித்திரன் திரு.சீனிவாசன் அவர்கள் பொறுப்பில் நடந்த காலத்திலும் நான் அதில் அடிக்கடி கட்டுரைகள் எழுதுவேன். அங்கே பணியாற்றிய திரு. கோதண்டராமன் (பின் புதுவை அரவிந்த ஆச்சிரமத்தில் சென்று தங்கியவர்) அடிக்கடி வரச் சொல்லிக் கட்டுரைகள் எழுதச் சொல்லுவார். நூல்களுக்கு மதிப்புரை எழுதச் சொல்லி வரும் நூல்களைத் தருவார். அடுத்து அன்று இராசன் எலெக்டிரிக் பிரஸ் (சுங்குராமன் தெரு) நடத்திய 'அமுதசுரபி'யில் அதன் உரிமையாளர்களாகிய திரு. கிருஷ்ணசாமி, ராஜன், சுப்பிரமணியம் ஆகிய சகோதரர்கள் என்னை அதில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதச் சொன்னார்கள். அப்போதும் இன்று உள்ள 'விக்கிரமன்'தான் ஆசிரியர் போலும். 'அமுதசுரபி' பலர் கை மாறிய நிலையிலும் அவர் தொடர்ந்து ஆசிரியராக உள்ளார். அதில் நான் சீவகன் வரலாற்றைத் தொடர்ந்து எழுதி வந்தேன். பின் அது தனி நூலாக அமைய, பல்கலைக்கழகமும் அதைப் பட்டவகுப்பிற்குப் பாடநூலாக அமைத்தது. அதில் வந்த தொகையினை அன்று நான் செயலாளனாக இருந்து தொடங்கிய செனாய் நகர் திரு.வி.க. உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடையாக அளித்து விட்டேன். (இன்றும் அதன் ஆட்சிக்குழுவில் இடம் பெற்றுள்ளேன்).

இவையன்றி, கவிஞர் கண்ணதாசன் அவர்கள் தாம் நடத்திய தென்றல் இதழில் கட்டுரைகள் எழுதச் சொன்னார்கள். 'தினசரி' என்னும் நாளிதழை நடத்திய

திரு. சொக்கலிங்கம் அவர்களும் தம் நாளிதழ் சிறப்பு மலர் களுக்குக் கட்டுரை எழுதச் சொல்வார்கள். அப்படியே நான் மதுரையில் இருந்தபோது கருமுத்துக் குடும்பத்தார் நடத்திய 'தமிழ்நாடு' நாளிதழிலும் என் எழுத்து வரவேண்டும் எனப் பணித்தார்கள். அவரவர்கள் விருப்பப்படி அவ்வப்போது சிற் சில கட்டுரைகளை எழுதி வந்தேன். திரு. கவிஞர் கண்ண தாசன் அவர்கள் வீட்டிற்கு வந்த கட்டுரைகளை வாங்கிச் செல்வதோடு, அவர்தம் பிறந்தநாள் விழாக்களிலும் பங்கு கொள்ளச் சொல்வார்கள்.

இவையன்றி வேறுசில இதழ்களுக்கும் கட்டுரை எழுதி னேன். இலண்டன், இலங்கை, மலேயா நாடுகளில் வெளி யான பத்திரிகைகள், இதழ்கள் ஆகியவற்றிலும் என் கட்டுரைகள் இடம் பெற்றன. வடநாட்டுத் தமிழ்ச்சங்க மலர் களிலும் சில இடம் பெற்றன. சில சிறப்பு மலர்களுக்கும் என் கட்டுரைகள் வேண்ட அனுப்பப் பெற்றன. வானொலியில் சிறக்கப் பணியாற்றிய திரு. அகிலன் அவர்கள் அடிக்கடி என் பேச்சினை வானொலி வழி ஒலிபரப்ப ஏற்பாடு செய்தார்கள். ஒன்றிரண்டு அவர்தம் மலர்களில் வந்தன என எண்ணு கிறேன். இவ்வாறு பல வகையில் என் பத்திரிகைப்பணி, கல்லூரிப் பணிக்கு ஒரு சிறிதும் இடையூறு நேரா வண்ணம் நன்கு நடைபெற்றது. அவ்வாறு இதழ்களில் வந்த கட்டுரை களில் பலவற்றைத் தொகுத்துப் பிறகு நூல்களாகவும் வெளி யிட்டேன். 'கொய்த மலர்கள்', 'எல்லோரும் வாழவேண்டும்' 'நாலும் இரண்டும்', 'வானொலி வழியே' 'சிறுவர்களுக்கு' என்பன போன்றவை நூல்களாக வெளிவந்தன. என் பம்பாய், கல்கத்தா பேச்சுக்களும், மதுரையில் வாழ்ந்தபோது பேசிய, எழுதிய எழுத்துக்களும், பேச்சுக்களும் நூல் வடிவங்கள் பெற்றதை முன்பே குறிப்பிட்டுள்ளேன். இவ்வாறு என் பொதுப்பணி எழுத்துப்பணி ஓரளவு மக்கள் நலம்பெறு வகையில் நடைபெற்றது.

# 7. கல்விப் பணிகள்

பச்சையப்பரில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, ஆசிரியராக இருந்து மாணவர்களுக்குப் பாடம் சொல்லியும் பண்பை உணர்த்தியும் வழிகாட்டிக் கொண்டிருந்த ஆண்டு களில் வேறு வகையில் பொதுமக்கள் நலம்கருதி, கல்விப்பணி கள் சிலவும் மேற்கொள்ள வேண்டிய நிலை உண்டாயிற்று. அவற்றுள் முக்கியமானவை வாலாஜாபாத் உயர்நிலைப் பள்ளி அமைப்பு, செனாய்நகர் திரு.வி.க. பள்ளி தொடக்கம், அன்னை வள்ளியம்மாள் கல்விஅற வளர்ச்சி என்ற மூன்றும் முக்கியமானவை.

இளமையில் வாலாஜாபாத்தில் இந்து மத பாடசாலை யில் எட்டாம் வகுப்பு வரையில் பயின்ற நான் (1928) பின் மேலே தொடர அஞ்சினேன்; அன்னையும் இசையவில்லை என்பதை இந்நூலின் முதற்பகுதியில் குறித்துள்ளேன். அப்போது ஏன் இவ்வூரில் ஓர் உயர்நிலைப் பள்ளி இருக்கக் கூடாது என எண்ணினேன், பின்பு அதே பள்ளியில் ஓராண்டு (1934-35) பணி புரிந்தபோதும் அப்பா மாசிலாமணி முதலியார் அவர்களிடம் உயர்நிலைப்பள்ளி தொடங்க வற்புறுத்தினேன். ஆனால் அவர்கள் ஏனோ அதில் ஆர்வம் காட்டவில்லை. 'அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா' என்ற ஔவை வாக்கை எண்ணி அமைதி பெற்றேன். ஆகுநாள் வந்தது. செயலாற்றத் தொடங்கினேன்.

1944இல் நான் சென்னையில் பணியேற்றேன். அதற்கு முன் காஞ்சிபுரம் பள்ளியினை விட்ட காலை, என் நூல்கள் பிற பொருள்கள் அனைத்தையும் இந்துமத பாடசாலை யிலேயே இட்டு, கலந்து, நானும் பெரும்பாலும் அங்கேயே விடுதியில் தங்கினேன். அப்போது நான் வாங்கிய புளியம் பாக்கம் மூன்று ஏக்கர் நிலத்தில் பள்ளி தொடங்கவும் அதை

விரிவாக்கவும் திட்டமிட்டேன். பக்கத்தில் உள்ளவர் தம் மூன்று ஏக்கர் வெற்றிடத்தைக் கொடுக்க மயங்கினர்—அன்றி மறுத்தனர். அவர்கள் தந்திருந்தால், அதற்கு அடுத்திருந்த அரசாங்க நிலமாகிய ஆறு ஏக்கரையும் எளிதில் பெற்று, பன்னிரண்டு ஏக்கரில் பல பணிகள்—பள்ளி—தொழிற்கூடம், கலைக்கூடம் போன்றவை தொடங்கப் பெற்றிருக்கும். ஆயினும் இடையில் உள்ளவர்கள் இசையாமையால் என் எண்ணத்தைக் கைவிட நேர்ந்தது. ஒருவேளை அவர்கள் தந்து, என் பணியை அங்கே தொடங்கி இருந்திருப்பேனாயின் எனக்குச் சென்னை வாழ்வே வந்திருக்காது. அண்ணாநகரில் அன்னையின் பெயரால் பள்ளி கல்லூரிகள் தோன்றியிரா. பச்சையப்பரில் வாழ்ந்த பசுமையான வாழ்வும் அதன் வழியே பெற்ற பலருடைய நட்பும் பிறவும் சேர்ந்திருக்கா. புளியம் பாக்கத்தில் எண்ணம் பொசுங்கிய அதே வேளையில் பச்சை யப்பரில் வந்து சேருமாறு ஆணையிட 1944இல் சென்னை வந்து சேர்ந்தேன்.

அப்போது வாலாஜாபாத் ஊர்மன்றத் தலைவராக திரு. தேவராசன் என்பவர் இருந்தார். அவர் இந்துமத பாடசாலையில் என்னுடன் பயின்றவர். முயற்சியால் செல் வரானதோடு, ஊர் மன்றத்தலைவராகவும் சிறக்கப் பணி யாற்றினார். அவர் சென்னையிலேயே பிற வணிக வழிச் செய லாற்றி இங்கே பல நாட்கள் தங்குவார். அவரிடம் அடிக்கடி சென்று 'நம் ஊரில் உங்கள் நாளில் ஓர் உயர்நிலைப் பள்ளி அமைக்க முயலுங்கள்' என வற்புறுத்துவேன். எனக்கும் அவருக்கும் நெருங்கிய நண்பராகிய பேரறிஞர் அண்ணா அவர்களும் என் வேண்டுகோள் முறையானதே என்று கூறி அவரை நெறிப்படுத்தினார். தாமும் அப்பணிக்கு உதவுவ தாகக் கூறினார். அப்படியே வாலாஜாபாத்தில் இரு நாடகங் கள் தாமே நடித்து அதன் வசூல் முழுவதையும் பள்ளி

நிதிக்கே ஈந்தார். நாடகங்களுள் ஒன்று 'நீதி தேவன் மயக்கம்' என்பதாகும்.

உடன் திரு. தேவராசன் வாலாஜாபாத்திலும் சுற்றுப்புற ஊர்களிலும் உள்ள முக்கியமானவர்களை அழைத்து உயர் நிலைப்பள்ளி பற்றிப் பேசினார். அப்போது செங்கற்பட்டு மாவட்ட மன்றம் கலைக்கப் பெற்று திரு. புருடோத்தம முதலியார் தனி அலுவலராகச் செயலாற்றினார். பனகல் அரசரிடம் பணிபுரிந்த அந்த நாள் தொட்டு, அவர் சென்ற இடமெல்லாம் சிறக்கப் பணியாற்றியவர். அவர் செங்கற் பட்டு மாவட்டப் பொறுப்பை ஏற்றபோது, அந்த மாவட்ட அமைப்பு எல்லையில் இரு உயர்நிலைப் பள்ளிகளே இருந்தன. ஆனால் அவர் இருந்த மூன்று ஆண்டுகள் பதினேழு புதிய உயர்நிலைப்பள்ளிகளை உண்டாக்கினார். அதில் முதல் பள்ளி எங்கள் வாலாஜாபாத் பள்ளியேயாகும்.

திரு. தேவராசன் அவர்களும் நானும் அவரை அணுகினோம். அவர் எனக்கு முன்பே அறிமுகமான வராதலால் உடன் செயல்படத் தொடங்கினார். பேரறிஞர் அண்ணா அவர்களும் அவர்தம் உற்ற நண்பர். எனவே பணிக்கு உரிய செயல்கள் தொடங்கப் பெற்றன. இருபத்தை யாயிரம் ரூபாயும் ஆறு ஏக்கர் நிலமும் தந்தால் மாவட்ட மேற்பார்வையிலேயே பள்ளி தொடங்கலாம் என்று ஏற்பாடாயிற்று. திரு. தேவராசன் அவர்களைத் தலைவராகவும் என்னைச் செயலாளனாகவும் கொண்டு ஒரு பள்ளிக் குழு அமைக்கப் பெற்றது. இடத்துக்கு என்ன செய்வது எனத் தயங்கினோம். அப்போது மாண்புமிகு பக்த வத்சலம் அவர்கள் பொதுப்பணித்துறை அமைச்சராக இருந் தார். இளமை முதலே என்னை அவர் அறிவார் ஆதலால் அவரிடம் சென்றோம். வாலாஜாபாத் ரெயில்நிலை

எல்லையை அடுத்துப் பெருநிலப் பரப்பு இருந்தது. அதை எங்களுக்குத் தந்து உதவுமாறு அவரை வேண்டினோம். மக்கள் நலம் போற்றும் அந்நல்லமைச்சர் உடனே அன்று மாவட்ட ஆட்சியராக இருந்த திரு. வேங்கடேஸ்வரனை அழைத்து அந்த ஆறு ஏக்கரை எங்கள் பள்ளிக் குழுவிடம் ஒப்படைக்குமாறு கூறினர். மாவட்ட ஆட்சியரும் நல்ல உளமுடையவர். உடனே செயல்பட்டார். நிலம் எங்கள் கைக்கு வந்தது. திரு. தேவராசன் தன் பொறுப்பிலும் பஞ்சாயத்தின் பொறுப்பிலும் சில ஆயிரங்கள் தந்தார். (அந்தக் காலத்தில் ஆயிரம் என்பது பெருந்தொகையாகும்). நானும் அப்போது பத்தாம் வகுப்புப் பாடநூலாக அமைந்த 'கடவுளர் போற்றும் தெய்வம் கண்ணகி' என்ற நூல்வருவாயினை முற்றும் அதற்குத் தந்தேன். உறுப்பினர் பலரும் உதவினர். குறைவை அண்ணாவின் நாடகங்கள் நிறைவு செய்தன. எனவே உரிய தொகையும் உற்ற இடமும் கிடைத்தமையின் திரு. புருடோத்தமரை அணுகினோம். அவர்களும் உடன் ஆவன செய்து 1947இல் பள்ளியினைத் தொடங்க முயற்சி செய்தார். அவ்வாண்டில் ஒரு நல்ல நாளில் மாண்புமிகு பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் அண்ணா அவர்தம் வாழ்த்துரையுடனும் பல நல்லவர் தம் முன்னிலையிலும் வாலாஜாபாத் உயர்நிலைப்பள்ளி தொடங்கப் பெற்றது. (இன்று ஆடவருக்கு இரண்டும் மகளிர்க்கு ஒன்றும் என மூன்று பள்ளிகள் அங்கு உள்ளன) பின், கட்டடத்துக்குக் கால்கோள் விழா, கட்டடத் திறப்பு விழா முதலியன சிறப்பாக நடைபெற்றன. அவற்றுள் ஒன்றில் அன்றைய தமிழக முதல்வராக இருந்த மாண்புமிகு குமாரசாமி ராஜா அவர்கள் தலைமையேற்றுக் கலந்து கொண்டார்கள். எல்லா விழாக்களிலும் மாண்புமிகு பக்தவத்சலம் அவர்களும் பேரறிஞர் அண்ணா அவர்களும் தவறாமல் கலந்து கொள்

வார்கள். இன்று அப்பள்ளி பல கட்டடங்கள் உடையதாய், அறிவியல் ஆய்வுக் களங்கள், கணிப்பொறி போன்றவை உடையதாய் மாவட்டத்தில் நல்ல பள்ளிகளுள் ஒன்றாக உள்ளது என்பதை அறிய மகிழ்ச்சி பிறக்கிறது.

இதுவன்றி, நான் பயின்ற இந்துமத பாடசாலை விழாக் களில் நான் தவறாது கலந்து கொள்வேன். அப்பா அவர்கள் சென்னையிலிருந்து விழாவிற்கு அழைத்து வரும் பொறுப்பை யும் அவர்களுக்கு வரவேற்புக்கென இதழ் (பாட்டில்— அப்போது நான் பல பாடல்கள் எழுதியுள்ளேன்) தயாரிக்கும் பொறுப்பையும் என்னிடம் ஒப்படைப்பார்கள். நானும் மகிழ்வோடு செயலாற்றுவேன்.

பின், அங்கே ஒரு மகளிர் உயர்நிலைப்பள்ளி உண்டாக்க வேண்டுமென விரும்பினோம். கல்வித்துறையும் அரசாங்கமும் உடன் இசைவு தந்தனர். அரசாங்கப் பள்ளியாகவே அதை அமைக்க ஏற்பாடு. ஆயினும் அதற்குப் போதிய இடமில்லை. அப்பா அவர்கள் முயற்சியால் பெருநிலப்பரப்பினை சுமார் முப்பது ஏக்கர் நிலத்தினை வாலாஜாபாத் ஊர் எல்லையின் மேற்கே காஞ்சிக்குச் செல்லும் பாதையின் இருமருங்கிலும் வாங்கி இருந்தார்கள். எனவே அவர்கள் மகளிர் பள்ளி நடத்த இடம்தர முன் வந்தார்கள். பெண்கள் பள்ளியும் தொடங்கப் பெற்றது. அப்படியே அங்கேயே ஓர் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும் தொடங்கப் பெற்றது. பின் அப்பா அவர்கள் மறைவுக்குப் பிறகு அவர்கள் பெயராலேயே, அவர்கள் அமைத்துச் சென்ற குழுவினர் ஓர் உயர்நிலைப் பள்ளியை அமைத்துள்ளனர். அனைத்தும் மேநிலைப்பள்ளி களாக இன்று அவ்வூருக்கும் பக்கத்தில் உள்ளாருக்கும் சிறக்கப் பணியாற்றுகின்றன.

நான் 1944இல் சென்னை வந்தபோது சேத்துப்பட்டில் வாடகை வீட்டில் குடியிருந்தேன். அப்போது 1946இல்

அமைந்தகரையில் ஒரு சிறு இடம் விலைக்கு வாங்கினேன். அப்போது அது நகர எல்லையில் கூடச் சேரவில்லை. எனவே குறைந்த விலைக்கே பெற்றேன். அதில் வீடு கட்டி 1949 சூன் முதல் தேதி குடியேறினேன். அப்போதுதான் செனாய்நகர் அமைப்பும் உருவாகி, பல வீடுகள் அமையப் பலரும் குடியேறினர். நான் 1949இல் அங்கே வந்த பிறகு அந்த எல்லை விரைவாக வளர்ச்சி அடைவதைக் கண்டேன். எனினும் அந்த எல்லையில் ஓர் உயர்நிலைப் பள்ளி இல்லையே என எண்ணினேன். பல நாட்கள் எண்ணி, பல நண்பர்களையும் கண்டு பேசினேன். டாக்டர். மு. வ. அவர்களுடனும் இந்த எல்லையில் உள்ள வேறு ஆசிரியர்களுடனும் கலந்து பேசினேன். தற்போது திரு.வி.க, பூங்கா உள்ள பரந்தஇடம் மட்டுமன்றி வேறு சில இடங்களும் காலியாகவே இருந்தன. என் வீட்டுப் பக்கத்திலும் பல இடங்கள் இருந்தன. ஆயினும் அவை தனியாருடையவை. அவற்றை விலை கொடுத்து வாங்குவது எளிதன்று. அப்போது (1954) விலை அதிகம் இன்றேனும், அச்சிறு தொகையும் பெறவழியில்லை. அரசாங் கத்தைக் கேட்க நினைத்தேன். அப்போதும் திரு. பக்தவத் சலம் அவர்களை அணுகினேன். அவர்கள் மாநகராட்சிக்குச் சொந்தமான இடங்கள் இருப்பின் நீண்ட நாள் குத்தகைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்றனர். அத்துடன் அன்று மாநகராட்சி ஆணையாளராக இருந்த திரு சுப்பராயன் அவர்களுக்கும் தொலைபேசியில் சொல்லி, தக்க ஏற்பாடு செய்யுமாறு கூறினர். நானும் அவ்வழியே முயன்றேன்.

இங்கேயே சிறந்த வகையில் நேரியமுறையில் செங்கல் வாணிபம் செய்து வந்த ஆதிநாராயணசாமி ரெட்டியார் அவர்களைப் போன்றோர் உதவ வந்தனர். அவர்தம் மகனார் திரு. நந்தகோபால் அவர்கள் உடன் உதவி நின்றார். பின் நாங்கள் வேண்ட, டாக்டர் சுந்தரவதனம் அவர்கள் அப்பள்ளிக் குழுவின் தலைவராக இருக்க இசைந்தனர். அப்

பொழுதெல்லாம் பள்ளி தொடங்குவதற்கும் அதற்கெனப் பல தேவைகளைப் பெறுவதற்கும் ஒரு குழு பதிவு செய்யப் பெற வேண்டும் என்ற விதி இருந்தது. வாலாஜாபாத் பள்ளிக் குழு போன்று தொடங்க உதவி விட்டு நிறுத்த வேண்டுமாயின் பதிவு தேவை இல்லை. பள்ளியைத் தொடர்ந்து நடத்த வேண்டுமாயின் பதிவு செய்யவேண்டிய தேவை உண்டாயிற்று, திரு. டாக்டர். சுந்தரவதனம் அவர்களைத் தலைவராகவும் என்னைச் செயலாளராகவும் திரு. நந்தகோபால் அவர் களைப் பொருளாளராகவும் கொண்டு வேறு நான்கு உறுப் பினர்களையும் இணைத்து, 'செனாய்நகர் உயர்நிலைப் பள்ளிக் குழு' என்ற பெயரில் பதிவு செய்து கொண்டோம். பிறகு மாநகராட்சியை இடத்துக்காக அணுகினோம்.

திரு. சுப்பராயன் அவர்கள் மாநகராட்சி ஆணை யாளராகவும் இதே பேட்டையில் வாழும் திரு. மீரான் அவர்கள் தலைமைப் பொறியாளராகவும் இருந்தனர். திரு. பக்தவத்சலம் அவர்கள் கூறியபடி ஆணையாளர் எங்களுக்கு உதவினார்கள். எனினும் இடஒதுக்கீடு முதலிய வற்றைத் தலைமைப் பொறியாளரே செய்ய வேண்டி யுள்ளமையால் எங்களை அவர்களிடம் ஆற்றுப்படுத்தினர். நானும் திரு. நந்தகோபாலும் பல முறை மாநகராட்சிக்குச் செல்வோம். பெரும்பாலும் அங்கு வருவதைக் கண்ட நண்பர் ஒருவர் 'நீங்கள் என்ன இங்கே மாநகராட்சியில் பணி புரிகிறீர் களா? நாள்தோறும் உங்களைப் பார்க்கிறேனே' என்று கேட் டார். அத்தகைய எங்கள் முயற்சி திரு. மீரான் அவர்கள் விரைந்த செயல்பாட்டின் வழி நிறைவேறிற்று.

செனாய்நகர் மேற்குப் பகுதியில் சுமார் ஐந்து ஏக்கர் நிலம் இருந்தது. ஆனால் அதை அடுத்துச்சுமார் நூறு குடிசை கள் இருந்தன. அவர்களை அப்புறப்படுத்தினால்தான் அந்த இடத்தில் ஏதேனும் செய்ய இயலும். அது தவிர்த்து வேறு

தக்க இடமும் இங்கே இல்லை. இதை உணர்ந்த திரு. மீரான் அவர்கள் அந்த குடிசைவாழ் மக்களுக்கென மாற்றுஇடம் வேறு எங்கேயோ ஒதுக்கித் தந்து அவர்களை உடனே காலி செய்யுமாறு ஆணையும் பிறப்பித்தார். நாங்களும் அவர்கள் பிரித்து எடுத்துச் செல்வதற்கென ஒவ்வொருவருக்கும் செல வாகும் தொகையினைக் (சுமார் 150 என நினைக்கிறேன்) கொடுத்தோம். ஒரே ஒரு நாளில் எல்லாக்குடிசைகளும் பிரித்து எடுத்து மாற்றப் பெற்றன. ஆயினும் எப்படியோ அன்று நின்ற மூன்று குடிசைகள் அப்படியே உள்ளதோடு, அதைச் சார்ந்து இன்னும் சில குடிசைகளும் பின்பு உருவாயின. பிறகு நானும் பல காரணங்களால் செயலர் பணியினை விட்டு வெறும் உறுப்பினனாக மட்டும் இருந்தேன், இருந்து வருகிறேன். பள்ளி வளரத் திரு. மீரான் அவர்கள் செய்த உதவி பெரிதும் போற்றுதற்குரியது.

பள்ளிக்குப் பெயர் வைக்க நினைத்தபோது 'திரு. வி. க.' பெயர்தான் வந்தது. குழுவில் டாக்டர். மு. வ. அவர்களும் நானும் திரு. வி. க அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்கள். அப்போதுதான் அவர்கள் மறைந்து விட்டார்கள். எனவே அவர் பெயரால் ஒரு நிலைத்த நினைவுச் சின்னம் எழுப்ப நினைத்தோம். அதற்கென அவர் பெயரால் முன் வசூல் செய்த தொகையே (சிறிதாயினும்) முதல் தொகையாக அமைந்தது. எங்கள் விருப்பத்தை டாக்டர். சுந்தரவதனம் அவர்களும் பிற உறுப்பினர்களும் ஏற்றுக் கொண்டனர். எனவே திரு. வி. க. பள்ளி 1955இல் உருவாயிற்று. நான் என் கல்லூரி வேலைகட்கு இடையே மிக உழன்று இப்பள்ளியினை உருவாக்கப் பாடுபட்டேன். திரு. நந்தகோபால் அவர்களும் உடனிருந்து உழைத்தார். மேலும் அவர் தந்தையாரும் எங்கள் உழைப்பிற்கு முழு உதவி அளித்து ஆதரித்தனர். அரசாங்க இசைவும் பெற்றோம். பலர் நன்கொடை அளிக்க முன் வந்தனர். ஒரு சிலர் தம் பெயரால் வகுப்பறைகள்

கூரை வேய்ந்து கட்டித் தந்தனர். அப்போது முதன் முதல் ஆறாம் வகுப்பைத் தொடங்க ஏற்பாடு செய்தோம். அதில் முதல் மாணவனாக என் மகன் மெய்கண்டானைச் சேர்த்தேன். பிறகு கீழ் வகுப்புகள் அமைந்தன. மேல் வகுப்புகள் ஒவ்வொன்றாய் வளர்ந்தன.

பேடுபள்ளமாக இருந்த நிலப்பரப்பினைச் செப்பனிட அரசாங்க விவசாயத்துறையினர் பெரிதும் உதவினர். திரு. நந்தகோபால் அவர்தம் தமையனார் இராதாகிருஷ்ணன் என்பவர் அத்துறையின் முக்கியப் பொறுப்பில் இருந்தார். அவர்தம் உதவி அதற்குத் துணைபோயது. திரு. பக்தவத்சலம் அவர்களும் பொதுப்பணித்துறை வழி உதவினார். திரு. மீரான் அவர்களும் மாநகராட்சி வழியே நலம் பல புரிந்தனர். இவ்வாறு 1955இல் சிறிய அளவில் திரு. வி.க. பள்ளி தொடங்கப் பெற்றது.

திறப்பு விழாவினைச் சிறப்புற நடத்தத் திட்ட மிட்டோம். மாண்புமிகு திரு. காமராசர், திரு. பக்தவத்சலம், திரு. சுப்பிரமணியம் ஆகிய மூவரும் திறப்பு விழாவிற்குத் தலைமையேற்றும் பள்ளியினைத் தொடங்கியும் படத் திறப்பினைச் செய்தும் எங்களை வாழ்த்தினர். அன்று அவர்கள் நட்ட வேப்ப மரங்கள் இன்று வளர்ந்து நல்ல நிழலிட்டு, பள்ளி முன்பு அழகுடன் பசுமையாக விளங்கு கின்றன. அத்திறப்பு விழா பெருவிழாவாக அமைந்தது. செனாய்நகர் வாசிகளுக்கு அது ஒரு கிளர்ச்சி விழாவாகவே அமைந்தது. டாக்டர். சுந்தரவதனம் அவர்கள் அவ்வப்போது தேவையான பொருள் உதவியினைச் செய்ததை நினைவு கூர்தல் வேண்டும். அவர்தம் உறவினர் ஒருவர் வீட்டைப் (சென்னை தங்கசாலையில் உள்ளது) பள்ளிக்கு எழுதி வைக்க உதவினர். டாக்டர் மு. வ. அவர்கள் தம் நூல்கள் சில வற்றின் வருவாயினைப் பள்ளிக்கு என எழுதி வைத்தார்.

நானும் அப்போது புகுமுக வகுப்பிற்குப் பாடமாயமைந்த என் நூலின் வருவாயினைப் பள்ளிக்குத் தந்தேன். இன்னும் வெளியே உள்ள பல அன்பர்கள் பெரும் பொருள் தந்து உதவினர். எனவே அடுத்த ஆண்டே எட்டு வகுப்பு அறைகள் கொண்ட ஒரு கட்டடத்தைத் தொடங்கினேன். தெருப் பக்க எல்லையினை முள்வேலியிட்டு அமைத்தோம். கட்டடம் விரைந்து வளர்ந்தது. அடுத்த ஆண்டே அரசாங்கம் ஆய்வுக்களம் அமைக்க உதவிய தொகையினைக் கொண்டு, பக்கத்திலேயே மற்றொரு கட்டடமும் உருவாயிற்று. இரண்டினையும் திரு. நந்தகோபாலும் நானும் பொறுப்புடன் நாள்தோறும் சென்று பார்த்து வந்தமையால் அதிகச் செலவு இல்லாமலேயே கட்டடங்கள் அமைந்தன. எங்கள் வகுப்பறைகளுக்கு அரசாங்க மானியமும் கிடைத்தது. இடையில் இந்த எல்லையில் செங்கல் வாணிபம் செய்து தழைத்த நல்லவர் குருசாமி நாயுடு அவர்கள் அமைந்தகரையில் நெடுஞ்சாலைக்கு அருகே அவர் கட்டியிருந்த, பத்துக் குடியிருப்புகள் அமைந்த ஒரு கட்டடத்தையும் நிலத்தினையும் இனாமாகப் பள்ளிக்கு எழுதித் தந்தார். பின் அவர்கள் பள்ளிக் குழுவில் இடம் பெற்றும் உதவி செய்தார்.

பின் 1958இல் என் வாழ்வில் மாற்றம் ஏற்பட்டது. என் வாழ்க்கைத் துணைவியார் நோய்வாய்ப்பட்டு மறைந்த காரணத்தால், கல்லூரிக்கும் தொடர்ந்து விடுமுறை பெற்றதோடு, இப்பள்ளியின் செயலர் பதவியினையும் வேண்டாமென விட்டுவிட்டேன். இடமாற்றம் கருதி அக்காலத்தில் தான் ஓராண்டு, நான் மதுரை சென்றிருந்தேன். எனினும் இன்றுவரை அந்த ஆட்சிக் குழுவின் உறுப்பினனாக இருந்து வருகிறேன்.

பள்ளி வளர வளர, ஒரு மாற்றம் அமைத்தோம். பெரும் பொருள் உதவி செய்த டாக்டர். சுந்தரவதனம் அவர்களைப்

போற்றவும் நன்றி காட்டவும் நினைத்து, ஒன்று முதல் ஐந்து வகுப்புவரை பிரித்து, அதைச் 'சுந்தரவதனம் ஆரம்பப்பள்ளி' எனப் பெயரிட்டோம். அதற்கெனத் தனிக் கட்டடமும் கட்டி, அது தனியாகச் சுமார் ஐநூறு மாணவர்களுடன் (மாநகராட்சி தந்த இடத்திலேயே ஒரு பக்கத்தில்) நன்கு நடைபெற்று வருகின்றது. திரு வி. க. பள்ளியும் முறையாக நடைபெற்று வருகின்றது.

இவ்வாறு தனிப்பட்ட முறையில் செயல்பட்டு இரு பள்ளி களைத் தொடங்கியதோடன்றி, திரு. புருடோத்தம முதலியார் அவர்களுடன் செங்கற்பட்டு மாவட்டத்தில் பலப் பல பள்ளிகளை—உயர்நிலைப் பள்ளிகளைத் தொடங்க உடனிருந்து உதவினேன். பெருநகர் போன்ற ஊர்கள் சிலவற்றிற்கு நானும் அவருடன் சென்று பள்ளி அமைப்புக்கு ஆவனசெய்து, உரிய முறையில் பள்ளிகளைத் தொடங்கி வைத்தோம். எல்லாப் பள்ளிகளும் செம்மையாக நடைபெறு கின்றன.

இடையில் செங்கற்பட்டு மாவட்டக் குழுவின் (District Board) உட்குழுவாக அமைந்த கல்விக் குழுவில் (Education Committee) உறுப்பினனாக மூன்றாண்டுகள் பணியாற்றி னேன். மாவட்டங்களில் உள்ள ஆரம்பப்பள்ளி, மேநிலைப் பள்ளிகளைப் பார்வையிட்டும் தேவையான வகையில் ஆக்கப் பணிக்கு அடிகோலியும் வழிகாட்டியும் உறுப்பினர்கள் செயல் பட்டோம். அப்போது திரு. செய்யூர் V. K. இராமசாமி முதலியார் அவர்கள் மாவட்டக் குழுவின் தலைவராகவும் ஆத்தூர் சீனிவாச ஐயர் எங்கள் உட்குழுவின் தலைவராகவும் இருந்தனர். கல்வித்துறையில் பணிபுரிந்த நான் ஒருவனே அவ்வுட்குழுவில் உறுப்பினனாக இருந்தமையின் என் கருத்துக் களை அவர்கள் ஏற்றுப் பல நல்ல மாற்றங்களையும் செய் தனர். பள்ளிப் பணிகள் இன்னும் பல; விரிப்பில் பெருகும் என இத்துடன் அமைகின்றேன்.

சென்னைப் பல்கலைக்கழகத்தே அறிஞர் குழுவில் தொடர்ந்து ஒன்பது ஆண்டுகள் ஆளுநர் நியமனத்தின் அடிப் படையில் பணிபுரிந்தேன். நான் ஒருமுறை (1938இல்) மாவட்டக் குழுவிற்குத் தேர்வில் நின்று வெற்றி பெற்ற அன்றே வேறு எதற்கும் போட்டியிடுவதில்லை என முடிவு செய்திருந்ததை இந்த நூலின் முற்பகுதியிலேயே குறிப்பிட் டுள்ளேன். எனவே இதற்கும் கல்லூரி வழியே போட்டி இட்டு வெற்றி பெற்றிருக்கலாம். பல அன்பர்கள் அப்படியும் வற்புறுத்தினர். போட்டி இல்லாமலேயே செய்யலாம் எனவும் கூறினர். ஆனால் நான் அவற்றை ஏற்றுக் கொள்ள வில்லை; வேறு வாக்களிக்கும் எந்தப் போட்டியிலும் கலந்து கொள்ளவில்லை. இந்த அறிஞர் குழுவில், ஆளுநர் நியமன மானமையின் ஏற்றுக் கொண்டு ஒன்பது ஆண்டுகள் பணி புரிந்தேன். அப்பொழுதுதான் தமிழ், இரண்டாம் பகுதி நிலையிலிருந்து முதல் பகுதிக்கு (Part I) மாற்றப் பெற்றது. அப்போது நான் தமிழுக்குப் பல்கலைக்கழகப் பாடநூற்குழுத் தலைவனாகவும் இருந்தேன். ஆங்கிலப் பாடநூற் குழுவின் தலைவராகக் கோவை பு. சா. கோ. (P.S.G.) கலைக்கல்லூரி முதல்வர் திரு. B. R. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இருந்தார்கள். இந்தப் பகுதி மாற்றத்திற்கு அவர்களும் உதவினார்கள். டாக்டர் முதலியார் அவர்கள் துணைவேந்தராக இருந்தனர் அவர்கள் அந்த மாற்றத்தைக் கொண்டு வரமுயன்றபோது, எத்தனை பேர்—தமிழர்களே—எதிர்த்தனர் என எண்ணி வருந்தினேன். இந்த மாற்றத்தின் நோக்கம் தமிழ், தமிழ் நாட்டில் கட்டாயமாக்கப் பெற வேண்டும் என்பதே. ஆயினும் அப்போது அந்த எண்ணத்தை அத்தீர்மானத்தில் புகுத்தவில்லை. காலம் பதில் சொல்லும் என விட்டு விட்டோம் (இன்னும் பதில் சொல்லவில்லை). ஆனால் அதற்கே 'பச்சைத் தமிழர்' எனத் தம்மைக் கூறிக் கொள்ளும் சில ஆங்கிலப் பேராசிரியர்கள்கூட எதிர்ப்புத் தெரிவித்தனர்.

அதே வேளையில் சீனிவாசராகவன் போன்ற ஆங்கிலப் பேராசிரியர்கள் ஆதரவு தந்தனர். இச்சிக்கலைத் தீர்க்க, என்னையும் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களையும் துணை வேந்தர் அவர்கள் வரவழைத்துப் பேசினர். ஒருமணி நேரம் பேசி முடிவு செய்தே அறிஞர் குழுவில் அவர்கள் தீர்மானம் இடம் பெற்றது. (அப்பொழுது பேரறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சராக இருந்தார்கள்). இரண்டொரு நாள் கழித்து, அவரிடம் இதுபற்றிச் சொன்னபோது, தமிழின் நிலையினையும் தமிழரின் போக்கினையும் எண்ணி வருந்தி னார்கள். இன்று வரையில் தமிழ் முதல் பகுதியாக—தேர்வி லும் முதலிடம் பெற்று விளங்குகிறதே ஒழிய—ஆங்கில முதல் மொழியாக இருந்த நிலையினைப் பெறவில்லை. தமிழ் பிரஞ்சு, லத்தின், இந்தி, உருது போன்ற பல மொழிகளோடு-பதினான்கு மொழிகளோடு ஒரு மொழியாகவே உள்ளது. ஆங்கிலம் இரண்டாம் பகுதியான நிலையிலும் அது கட்டாய மாக எல்லாரும் பயிலும் மொழியாக உள்ளது. பள்ளிகளிலும் அப்படியே (இதுபற்றி வேறு இடத்தில் எழுதியுள்ளேன்). இவ்வாறு பல்கலைக்கழகத்தே கல்வித்துறையில் ஓரளவு கலந்து பணியாற்றினேன். அத்துடன் பாடநூற்குழு, அகராதிக்குழு, சொற்பொழிவாளர் தேர்வுக் குழு போன்ற வற்றிலும் உறுப்பினனாகவும் தலைவனாகவும் இருந்து பணி யாற்றியுள்ளேன். இவ்வாறே அண்ணாமலை, மதுரை, உஸ்மானியா, தில்லி, பஞ்சாப், காசி பல்கலைக் கழகங் களிலும் பல குழுக்களில் உறுப்பினனாக இருந்து செயலாற்றி வந்துள்ளேன்.

தமிழ்நாட்டு மூன்று பல்கலைக்கழகங்களிலும் நினைவுச் சொற்பொழிவுகள் ஆற்றி அவற்றைத் தனி நூல்களாகவும் வெளியிட்டுள்ளேன். பச்சையப்பரில் இருந்தபோதுதான் பல நூல்களை நான் எழுத முடிந்தது. ஒருசிலவற்றிற்கு மத்திய

அரசும் மாநில அரசும் பரிசுகள் வழங்கியுள்ளன. தமிழ்நாடு மட்டுமன்றிப் பிற மாநிலங்களிலும் இந்தியா மட்டுமன்றி உலகில் அமெரிக்கா, ஜப்பான், இங்கிலாந்து உட்பட பல நாடுகளிலும் தமிழர்தம் மொழி, பண்பாடு, சமயம், கலை ஆகியவை பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றி அவற்றை நூல்களாகவும் அச்சிட்டுள்ளேன். மலேயா சொற்பொழிவுகள், மணிபல்லவம், கங்கைக்கரையில் காவிரித் தமிழ், வையைத் தமிழ், வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள் போன்ற நூல்கள் சில. இவ்வாறு ஒல்லும் வழியான் செல்லும் வாயெல்லாம் சென்று, நின்று, என்னால் கூடிய கல்விப் பணியினையும் அதனோடு கலந்த தமிழ்ப் பணியினையும் செய்து வந்த காலம் அது. ஆயினும் இவற்றிலெல்லாம் எந்த வகையிலும் என் கல்லூரிப் பணிக்கு இடையூறு வராமல் பார்த்துக் கொள்வேன். இத்தகைய பணிகளுக்கிடையில் பச்சையப்பரில் முப்பது ஆண்டுகள் உருண் டோடிவிட்டன.

# 8. பிறபணிகள்

**ப**ச்சையப்பர் கல்லூரியில் நான் முப்பது ஆண்டுகள் பணியாற்றியபோது நடந்த நிகழ்ச்சிகள் பல. கல்லூரியிலும் வெளியிலும் நான் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள் எண்ணற்றன. அவற்றுள் ஒருசிலவற்றை முன்னரே தொகுத்துக் காட்டியுள்ளேன். வேறு சிலவற்றை இங்கே கூறலாம் என எண்ணுகின்றேன்.

தொடக்கத்தில் பல சமய மாநாடுகளில் பங்கு கொண்டேன். சைவ சித்தாந்த சமரசத்தின் ஆண்டு விழாக்களில் தவறாமல் கலந்து கொள்வேன். அவற்றுள் சிவகாசி மாநாட்டு இளைஞர் மாநாட்டில் தலைமையேற்றேன். ஆயினும் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் மறைவுக்குப்பின்

சமாசம் சற்றே நிலையில் தளர்ந்தமையின், சரியாக நடை பெறவில்லை. என்னுடைய தொடர்பும் அருகிவிட்டது. எனினும் சமயச் சொற்பொழிவுகள் தொடர்ந்து மேற் கொண்டேன். திருச்செந்தூர் வைகாசி விழாவின்போது நடைபெறும் சொற்பொழிவுகளில் என் பங்கு உண்டு. அப்படியே காஞ்சி ஏகாம்பரநாதர் விழாச் சொற்பொழிவு களிலும் நான் கலந்து கொள்வேன். மயிலை கபாலி திருக்கோயில் விழாச் சொற்பொழிவுகள், கந்தகோட்ட விழாச் சொற்பொழிவுகள் எனச் சென்னையிலேயும் என் பணிகள் நடைபெற்றன. என் ஆய்வுப்பட்டம் தேவாரம் பற்றியது ஆதலால் பலரும் தேவாரம் பற்றிப் பேச விரும்புவர். நானும் தேவாரத்தில் உள்ள பல கருத்துகளை இக்கால அறிவியல் கருத்துகளோடு பொருத்திக் காட்டியும், மூவரும் மணிவாசகர் சேக்கிழார் போன்றாரும் எழுதியவற்றில் உள்ள கருத்துகளை யும் எளிய வகையில் எடுத்துக் காட்டுவேன்.

எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டு குறித்து மேலே செல்ல லாம் என எண்ணுகிறேன். குழந்தை கருவில் வளரும் நிலை யினை அப்பர் அடிகள்,

> 'கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
> கருநரம்பும் வெள்எலும்பும் சேர்ந்து ஒன்றாகி
> உருவாகிப் புறப்பட்டுஇங்கு ஒருத்தி தன்னால்
> வளர்க்கப் பட்டு'

என்று நன்கு விளக்குகின்றார். இதில் முக்கியமானது 'கரு நரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்து'என்ற தொடர். முதலில் உண்டானது 'நரம்பா—எலும்பா' என்பதை அறிவியல் துறையினர் சென்ற நூற்றாண்டின் இறுதியில்தான் ஆய்ந்து கண்டு முடிவெடுத்தனர், முதலில் நரம்பும் பின் எலும்பும் உண்டாயின என்று. இந்த உண்மையினை அப்பர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே சொல்லிய சிறப்பு போற்றக்கூடிய

தன்றோ! அப்படியே அப்பர் 'மின்னி இடித்தவன் காண்' என்று மின்னலின்றி இடியில்லை என்ற இன்றைய விஞ்ஞானி கள் கண்டுபிடித்த உண்மையினை அன்றே காட்டிவிட்டார். மற்றும் சமுதாய வாழ்வு, பயிர் வளத்தால்—பயிர் நீர் வளத்தால் அமைவது என்ற உண்மையினைக் குறிப்பாக இறைவன் மேல் ஏற்றி 'ஏரி நிறைந்தனைய செல்வன்' கண்டாய் என்கின்றார். அப்படியே சுந்தரர் 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' என்ற இவை போதும் என்ற மன நிறைவு ஏற்படின் நாட்டில் எந்தவித மாறுபாடும் இராது என்பதையும் அப்போது இறைவனை ஏத்தி வரும் இடர் எதுவாயினும் களையலாம் என்றும் விளக்கு முகத்தான்

'இம்மையேதரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர்க் கெடலுமாம்'

என்கின்றார். இவ்வாறு பலப்பல உண்மைகளை விளக்கு முகத்தானே என் சமயச் சொற்பொழிவுகள் அமையும்.

பெரு மாநாடுகள் மட்டுமன்றி, சிறுசிறு கிராமங்களுக்கும் கூடச் சமயச் சொற்பொழிவு, கூட்டுறவு பற்றிய சொற் பொழிவு, சமுதாய வளர்ச்சி பற்றிய சொற்பொழிவுகள் ஆகியவற்றில் பங்கு கொண்டுள்ளேன். அப்படியே சென்னை நகரிலும் தமிழ் நாட்டுப் பிற இடங்களிலும் உள்ள பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றிலும் சென்று நான் பேசியது உண்டு. சிறுசிறு கிராமங்களிலும் சங்கங்கள் அமைக்கவும், அவற்றின் வழியே சமுதாய இணைப்பு, ஒன்றிய வாழ்வு இவைபற்றி விளக்கவும் பலவகை வழிகளில் ஊர்தொறும் சென்று உதவியதும் உண்டு. அப்படியே நான் வழிபடும் தெய்வ மாகிய தணிகை முருகனை ஆண்டின் முதல் நாளில் சென்று பாட்டிசைத்துப் பரவி வருவதும் உண்டு. அவற்றுள் ஒருசில நூல்களாகவும் வெளிவந்தன. பின் அப் புத்தாண்டு வழிபாடு, வெறும் ஆரவார நிலையை எய்தியதால், அந்த முறையினை

விட்டுவிட்டேன். என் பிறந்த நாளில் மட்டும் சென்று வழி பட்டு வரும் வழக்கத்தை இன்றளவும் மேற்கொண்டிருக் கின்றேன்.

பல கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் சென்று பேசிய நிலையினைக் குறித்தேன். அவற்றுள் சில பற்றிய குறிப்புகள் என் நினைவுக்கு வருகின்றன. சூனாம்பேடு தமிழ் மன்றத்தில் அவ்வூரிலிருந்து சென்னைக்கு வந்து இரெயில்வேயில் பணி யாற்றிய திரு. சானகிராமன் அவர்கள் விருப்பப்படி பேச இசைந்து சென்றேன். அவர்தான் வரவேற்றார். அப்போது அவர் ஒரு நிபந்தனையிட்டார். என்பேச்சில் தேவார திருவாசக அடிகள்—மேற்கோள்கள் வராமல் பேசவேண்டும் என்றார். நான் பெரும்பாலும் தேவாரத் திருவாசக அடிகளை எடுத்துக் காட்டுவது உண்டு. அதற்கென அவ்வாறு கட்டளையிட்டார். நான் அவர் விழைவை நிறைவேற்றிய தாகவே கருதுகிறேன்.

அப்படியே திருக்குறள் மாநாடுகளிலும், பல தனிக் கூட்டங்களிலும் திருக்குறளைப் பற்றிப் பேசுவது உண்டு. சிறப்பாகக் காமத்துப்பாலில் வள்ளுவர் காட்டிய வாழ்க்கை நெறி பற்றியே என்னைப் பேசச் சொல்லுவார்கள். மற்றவர் கள் பிற தலைப்புகளை விரும்பி எடுத்துக் கொள்வதாலும், நான் வள்ளுவர் காமத்துப்பால் பற்றிக் கட்டுரைகளை— ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதியுள்ளமையினாலும் அவ்வாறு வேண்டுவர். நானும் அவர்தம் விருப்பத்தை ஓரளவு நிறைவேற்றுவேன். நான் சொற்பொழிவுகளுக்குச் செல்லும்போது என் மாணவர் இரண்டொருவர் உடன் வருவர். அவர்களையும் பேசச் சொல்வேன்.

பல்கலைக் கழகங்களிலும் மூன்றிடங்களிலும் சொற் பொழிவாற்றியுள்ளேன். இதுபற்றி முன்னரே குறிப்பிட் டுள்ளேன். சென்னை, அண்ணாமலை, மதுரை ஆகிய மூன்று

பல்கலைக் கழகங்களிலும் பலப்பல அமைப்புக்களில் உறுப்பினனாகவும் இருந்து, ஒல்லும் வகையில் உற்ற பணிகள் பல புரிந்துள்ளேன்.

கல்லூரியிலே பாடம் சொல்லித் தருவதைத் தவிர்த்து, மன்றங்கள் வழியே மாணவர்களைப் பேசப்பழகும் வாய்ப்பினை அளிப்பதும் உண்டு. இந்தமுறை எல்லாக் கல்லூரிகளிலும் இன்றும் நடைபெறுகின்ற நிகழ்ச்சிதான். என்றாலும் கல்லூரி மாணவர் மன்றம், தமிழ் மன்றம் ஆகியவற்றிற்கு நடக்கும் தேர்தல், பச்சையப்பரில் முக்கியமானதாக அமையும். வெளியே உள்ள அரசியல் போராட்டங்களைப் போன்று, கல்லூரியிலும் போராட்டங்கள் நடைபெறும். சில அரசியல் கட்சிகள் மறைமுகப் பொருள் கொடுத்தும் பிறவகையில் தலையிட்டும் விளையாடுவதுண்டு. பச்சையப்பர் கல்லூரி அந்நாளில் தமிழுக்குத் தலையாய இடம் எனப் பெயர் பெற்றது. 'பச்சையப்பன் கல்லூரிப் படிக்கட்டும் பைந்தமிழ் பாடும்' என்ற பழமொழியே வழக்கத்தில் இருந்தது. எனவே தமிழில் மாணவர் ஆர்வம் காட்டி இருப்பர் என்பது புலனாகும். அதன்வழியே இங்கே பயின்று பயிற்சிபெற்ற அன்றைய மாணவருள் சிலர் இன்று அரசியலில் சிறந்த பேச்சாளராகவும் செயலாளராகவும் உள்ளனர். இங்கே எல்லாக் கட்சிகளுக்கும் இடம் இருக்கும். அப்போது திராவிடகழகத்தில் இத்தனைப் பிரிவுகள் இல்லை. பெரியாரும் அண்ணாவும் ஒன்றாக இணைந்து பணியாற்றிய நிலையிலும் இருவரும் பின்பிரிந்த நிலையிலும் இருவருமே கல்லூரிக்குப் பெரும்பாலும் ஆண்டுக்கு ஒருமுறை தவறாது வந்து பேசுவர். அப்படியே ராஜாஜி போன்ற அன்றைய காங்கிரஸ் தலைவர்களையும் அழைப்பர். சுருங்கக் கூறின், பச்சையப்பர் கல்லூரி மற்றொரு தமிழ் நாட்டுச் சட்டமன்றம் போன்று செயலாற்றிற்று எனலாம்.

கல்லூரி மாணவர் மட்டுமன்றி, பிற கல்லூரி மாணவர்களும் பேச்சுப்போட்டி முதலியவற்றிற்கு இங்கே அழைப்பது உண்டு. அப்படியே பல்கலைக் கழகம் (அப்போது சென்னை மட்டும்தான்) மாநிலம் தழுவிய பேச்சுப் போட்டிகள் நடத்தும். அதில் மூன்று, நான்கு சுற்றுகள் நடைபெறும். தமிழில் கடைசிச் சுற்று, பச்சையப்பரிலேயே நடைபெறும். எனவே பல்கலைக் கழகச் சிறப்புப் பேச்சாளர் இந்த மண்டபத்திலே தேர்ந்தெடுக்கப்பெறுவர். இதில் ஆடவர், பெண்டிர் இருவரும் பங்கேற்று வெற்றி பெறுவர்.

சென்னைப் பல்கலைக்கழகம் எல்லாப்பாடங்களுக்கும் பயிற்றும் ஆசிரியர்களுக்குப் புதுவகையிலும் தெளிந்த முறையிலும் பயிற்சி வகுப்புகள் பதினைந்து இருபது நாட்களுக்கு, ஆண்டுக்கு ஒருமுறை நடத்த ஏற்பாடு செய்தது. ஐந்து ஆண்டுகள் அப்பயிற்சி வகுப்புகள் தொடர்ந்து நடைபெற்றன. அதற்குத் தமிழைப் பொறுத்தவரையில் பச்சையப்பர் கல்லூரியே இடமாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது. அதற்கும் நானே பொறுப்பேற்க வேண்டிய நிலை (Director)யும் உண்டாயிற்று. தமிழில் அதற்குப் 'புத்தொளிப் பயிற்சி' என்று பெயரிட்டேன். அது இன்று வழக்கத்தில் வந்துள்ளது. அப்பயிற்சி வகுப்பில் சென்னைப் பல்கலைக்கழக எல்லைக்குட்பட்ட கல்லூரிகளிலிருந்து ஒவ்வொரு பேராசிரியர் தேர்ந்தெடுத்து அனுப்பப்பெறுவர். இருபது கல்லூரியிலிருந்து ஆண்டுதோறும் வருவர். அவர்கள் வந்துபோக, தங்க வேண்டிய செலவுகளையும் பல்கலைக் கழகமே தந்து உதவியது.

அப்பயிற்சி வகுப்புகளில் பங்கு கொள்ளும் ஆசிரியர்கள் கருத்தரங்கு முதலியன நடத்துவதோடு, நானும் உடனாக இரண்டொரு முதுநிலைப் பேராசிரியர்களும் வகுப்புகளை நடத்துவோம். அவற்றுடன், வெளியிலிருந்து சில அறிஞர்

களை அழைத்துப் பேச வைப்போம். பல்வேறு முறைகள் ஆராயப் பெறும். ஒருமுறை மகாவித்துவான் வேணு கோபாலப்பிள்ளை அவர்கள் வந்தார்கள். இலக்கணத்தில் அவர்கள் சிறந்த புலமைபெற்றவர்கள். பல சொற்களைப் பற்றி ஆராய்ச்சி நடைபெற்றது. 'நாள்கள்' அல்லது 'நாட்கள்' என்பது ஆராயப்பெற்றது. இன்று பலரும் 'பல நாட்கள்' என்றுதான் எழுதுகின்றனர். 'நாட்கள்' என்றால் 'அன்று தயாரித்த கள்' என்றுதானே பொருள்படும். 'நாள்' என்பதன் பன்மை ஆகாதே என்ற வாதம் எழுந்தது. நீண்ட ஆய்வுக்குப்பின் இரண்டும் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. 'புதியன புகுதலும் பழையன கழிதலும், வழுவல காலவகை யினானே' என்ற நன்னூலின் புறநடைச் சூத்திரத்துக்கு ஏற்ப, 'நாட்கள்' நன்கு பழக்கத்தில் உள்ளமையாலும் பொருளை நன்கு விளக்குகின்றமையாலும் அதையும் கொள்ள வேண்டும் என முடிவுசெய்யப்பெற்றது. இப்படியே நாள்தோறும் பல சொற்கள், பல பொருள்கள் பற்றி ஆய்வு நடைபெறும். தமிழ்ப் பாடங்களை நடத்தும் முறை பற்றியும் விவாதிப்பர். உரைநடை, செய்யுள், இலக்கணம் போன்ற வற்றை மாணவர் உளங்கொள எவ்வெவ்வாறு பயிற்ற வேண்டும்? எப்படி எப்படி அவர்கள் கட்டுரை, மொழி பெயர்ப்பு ஆகியவற்றைச் செய்ய வேண்டும் என்பன பற்றியும் கலந்தாய்வும் கருத்தரங்குகளும் நடைபெறும். மொத்தத்தில் தமிழைக் கல்லூரி மாணவர் விரும்பிக் கற்றுப் போற்றும் வகையில் அமைய வழிகாண அப்பயிற்சி வகுப்புகள் வழி செய்தன என்பது பொருந்தும். எனினும் ஏனோ அத்தகைய வகுப்புகளைத் தொடர்ந்து பல்கலைக்கழகங்கள் நடத்த வில்லை. தமிழ்நாட்டில் உள்ள எந்தப் பல்கலைக்கழகமும் அதை நடத்துவதாகத் தெரியவில்லை. நான் என் நூல் ஒன்றில் (கல்வி எனும் கண்) குறித்தபடி, கல்லூரி ஆசிரியர்களுக்கு,

உயர்நிலை, மேனிலைப்பள்ளி ஆசிரியர்களுக்கு உள்ளமை போன்று ஓராண்டு ஆசிரியர் பயிற்சி தேவை என்பதை இன்னும் நாடும் அரசும் உணரவில்லை; என்று உணருமோ அன்றே கல்லூரிக் கல்வி செம்மையுறும். இதுமட்டுமன்று, இன்னும் இத்தகைய நல்ல பழக்கங்களை—பாடம் நடத்துவதிலும் தேர்வு நடத்துவதிலும் பல்கலைக் கழகங்கள் பின்பற்றுவதில்லை. பின் எவ்வாறு மாணவர்கள் சிறந்த வகையில் தேர்ச்சி பெறுவர்? அனைத்திந்தியத் தேர்வுகளில் அவர்கள் எங்கோ பின் தள்ளப் பெறுவதற்கு இது முக்கிய காரணமாக அன்றோ அமைகின்றது.

நான் 1944இல் கல்லூரியில் சேர்ந்தபோது சாதாரணச் சொற்பொழிவாளனாகத்தான் சேர்ந்தேன். 1945இல் 'எம்.லிட்' பட்டத்துக்கு என்னைப் பதிவு செய்யச் சொன்னார்கள். 1944இல் துறைத் தலைவராக இருந்த மோசூர் கந்தசாமி முதலியார் அவர்கள் ஓய்வு பெற்றபின் 1945இல் டாக்டர் மு. வரதராசனார் தலைவராகப் பொறுப்பேற்றார்கள். அவர்கள் சொற்படியும் பல்கலைக்கழகப் பேராசிரியர், என் ஆசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை சொற்படியும் 'எம்.லிட்' பட்டத்துக்கு 1945இல் பதிவு செய்தேன். 'தேவாரத்தில் வரலாற்று ஆய்வு' என்பது அதன் தலைப்பு. 1947இல் அப்பட்டம் பெற்றபின் டாக்டர் பட்டத்துக்குப் பதிவு செய்து, பின் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்தம் அறிவுரைப்படி விட்டுவிட்டேன். (இது பற்றி முன்னரே குறித்துள்ளமையின் இங்கே அதிகம் எழுதத் தேவை இல்லை). நான் டாக்டர் பட்டம் பெறாவிட்டாலும் 'டாக்டர்' பட்ட வகுப்பு அமைப்பதற்கென்றே நான் ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக் கழகத்துக்கு மாற்றப்பெற்றேன். என்னிடம் மூவர் பதிவு செய்தனர். ஆயினும் நான் ஓராண்டில் திரும்பி விட்டமையின் ஒருவரே விடாது முயன்று என் வழியே 'டாக்டர்' பட்டம் பெற்றார். பின் அவர் அப்பல்கலைக்

கழகத் தமிழ்த் துறைத் தலைவராகி அண்மையில் ஓய்வு பெற்றார் என அறிகிறேன்.

உஸ்மானியா மட்டுமன்றி, தில்லி, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களிலும் 'டாக்டர்' பட்ட மதிப்பீட்டுக்குழுவிலும் ஆய்வுக் குழு, தேர்வுக் குழுவிலும் இடம் பெற்றிருந்தேன். அப்போது மதுரைப் பல்கலைக் கழகத்தே 'எம்.ஏ.' பட்டத் தேர்விற்கே ஓர் ஆய்வுக்கட்டுரை எழுத வேண்டும் என்ற நிலை இருந்தது. ஓராண்டு அக் குழுவின் பொறுப்பில் இருந்த நானும் பேராசிரியர் ஞானசம்பந்தம் அவர்களும் முப்பது மாணவர்தம் ஆய்வுக் கட்டுரைகளை ஆய்ந்து நேர்முகத் தேர்விற்கு வருமாறு பணித்தோம். இப்படியே அக்குழுவில் இருந்த மற்றவர் களும் மூன்று குழுக்களாக இருந்து ஆராய்ந்தனர். எங்கள் குழுவிடம் வந்த முப்பதுபேர் தம் ஆய்வுக் கட்டுரைகளை ஆய்ந்து, அவர்களை அதுபற்றியே சில கேள்வி கள் கேட்டபோது மூவர் தவிர மற்றவர் சரியான பதிலே சொல்லவில்லை. ஒரு சிலர் அவற்றைத் தாம் எழுதவில்லை என்றும் அவர்தம் உறவினர்—பேராசிரியர்களாக உள்ளவர் கள் எழுதித் தந்தார்களென்றும் ஒப்புக் கொண்டனர். ஒரு சிலர் ரூபாய் ஐந்நூறு, அறுநூறு தந்து எழுதி வாங்கிவந்த தாகவும் கூறினர். இந்த அவல நிலையினை எண்ணி, அன்று துணைவேந்தராக இருந்த டாக்டர் மு. வ. அவர்களிடம் சொல்லி, அந்த ஆண்டோடு அந்த ஆய்வுத்தாள் எழுதும் முறையினை நிறுத்தி விட்டோம். இன்று உயரிய 'டாக்டர்' பட்டம் முதல் இத்தகைய குறுக்கு வழியில் நடைபெறும் கொடுமையினைச் சிலர் 'இந்து' நாளிதழிலும் பிறவற்றிலும் எழுதிவருவதைக் காண்கிறோம்.

இடையில் காஞ்சியில் பச்சையப்பர் ஆடவர் கல்லூரி தொடங்க ஏற்பாடாயிற்று. அதன் தலைவராக அவ்வூரைச்

சேர்ந்த என்னை அனுப்ப அறநிலையம் விழைந்தது. ஆயினும் நான் திரும்பவும் அங்கே செல்ல விரும்பவில்லை. என் அன்னையர் இருவரை ஒரே ஆண்டில் பறிகொடுத்து வேகவதியில் இருக்கவைத்து. விடுதலை வேண்டிப் பின், சென்னை வந்த எனக்குக் காஞ்சிக்குத் திரும்பிச் செல்ல விருப்பமில்லை. என் விருப்பத்தை அறிந்த அறநிலையத்தார் என்னை விட்டு வேறு ஏற்பாடு செய்தனர். எனினும் அதன் தொடக்க விழாவிற்கும் கட்டடத் திறப்பு விழாவுக்கும் பிற விழாக்களுக்கும் நான் தவறாமல் செல்வேன். தொடக்க விழாச் பொற்பொழிவினை டாக்டர் ஆர்க்காடு இராமசாமி முதலியார் அவர்கள் ஆற்றித் தொடங்கிவைத்தனர். அவர்தம் ஆங்கிலச் சொற்பொழிவைப் பேரறிஞர் அண்ணா அவர்கள் மொழிபெயர்த்தனர். பின் கட்டடத்திறப்பு விழாச் சொற்பொழிவினை டாக்டர் ஆர்க்காடு இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் ஆற்றி, அக்கட்டடத்தினைத் திறந்து வைத்தனர். அவர்தம் ஆங்கிலச் சொற்பொழிவை நான் மொழிபெயர்த்தேன். பின் அவர்தம் மகனார் டாக்டர் வேணுகோபால் அவர்கள் பச்சையப்பன் அறநிலையத்தின் தலைவராக இருந்தபோது (1967) காஞ்சி மகளிர் கல்லூரி தொடங்கப் பெற்றது. அப்போதுதான் நான் ஐதராபாத்தி லிருந்து திரும்பி வந்து பச்சையப்பரில் சேர்ந்தேன். திரு டாக்டர் வேணுகோபால் அவர்கள், அந்தக் காஞ்சிக் கல்லூரிக்கு மட்டுமன்றி, சென்னையில் அமைந்த செல்லம்மாள் கல்லூரி, கந்தசாமி நாயுடு ஆடவர் கல்லூரி ஆகியவற்றிற்குத் தமிழ்த்துறை ஆசிரியர்களைத்தேர்ந்தெடுத்த போது என்னையும் உடன் வைத்தே என் பரிந்துரையின் பேரிலேயே அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். இவ்வாறு அறநிலைய உறுப்பினர், தலைவர் என்னிடம் நான் பணி யாற்றிய அந்த முப்பது ஆண்டுகளிலும் மிகுந்த அன்புடனேயே பழகினர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் பழமையான

வர்களில் திருவாளர்கள் இராதா கிருஷ்ணப் பிள்ளை, கச்சாப கேச முதலியார், நடராசப் பிள்ளை, வேங்கடசாமி நாயுடு, துரைசாமி முதலியார், சீதாராமன் போன்றவர்கள் முக்கிய மானவர்கள். பின்னால் வந்த ஆட்சியாளர்கள் அனைவருமே என்னிடம் அன்பும் மதிப்பும் வைத்தே நடத்தி வந்தனர். அனைவரையும் தலைதாழ்ந்து வணங்கக் கடமைப் பட்டுள்ளேன்.

நான் கல்லூரியில் சேர்ந்தபோது இருந்த பல ஆசிரியர்கள் என்னை நன்கு பரிந்தேற்று மகிழ்ந்தனர். நான் கடைசியாக விட்டுவரும் வரையிலும் அத்தகைய பரிவும் பாசமும் அவர்கள் அனைவரிடமும் இருந்த நிலையினை எண்ணி இன்றும் மகிழ்கின்றேன். அப்படியே என்னிடம் பயின்ற மாணவர்களும் பிறதுறை மாணவர்களும் தனியான மதிப்பும் மரியாதையும் என்னிடம் கொண்டிருந்தனர். சில சமயங்களில் இரண்டொருவர் மாறுபட்டாலும், கடைசியில் அவர்களும் அன்புடனேயே நடந்து கொண்டனர். இப்படி உடன் ஆசிரியர்களிடத்தும் மாணவரிடத்தும் முப்பது ஆண்டுகள் கழிந்ததை எண்ணி அடிக்கடி மகிழ்வேன்.

நான் தமிழாசிரியனாக இருந்தாலும் சில முக்கியமான பொறுப்புக்கள் என்வசம் அவ்வப்போது ஒப்படைக்கப் பெற்றன. நூலகத்தைக் காக்கும் பொறுப்பினைச் சில ஆண்டுகள் மேற்கொண்டேன். அப்போது சிறந்த நூலகர் திரு. செங்கல்வராயன் அவர்கள் இருந்தார்கள். எந்த நூல் புதிதாக வாங்கி வந்தாலும், அவர் படிக்காது உள் அனுப்ப மாட்டார். ஆராய்ச்சி மாணவர், ஆசிரியர்கள் கல்லூரியில் மட்டுமன்றிப், பல்கலைக் கழகத்திலிருந்தும் இங்கு நூல் களோடு தொடர்பு கொள்ள வருவார்கள். அவர்கள் கேட்கும் நூல்களை—உட்கார்ந்த இடத்திலேயே இடம், வரிசை எண் இவற்றைச் சொல்லி எடுத்துப் பார்க்கச் சொல்வார் இவர்.

அப்போது அந்நூல் நிலையத்தில் சென்னை நிலையங்களில் இல்லாத பல நல்ல - தொன்மைவாய்ந்த—வரலாற்றுச் சிறப்புடைய பழைய நூல்கள் இருந்தன. அவற்றை அவர் பொன்னே போல் போற்றிப் பாதுகாத்துவந்தார். ஆனால் இன்று அவை அனைத்தும் உள்ளனவா என்பது தெரிய வில்லை.

நூல் நிலையம் மட்டுமன்றி, மாணவர் கூட்டுறவுச் சங்கம், கல்லூரிச சிற்றுண்டிச்சாலை, விளையாட்டுக் கழகம் போன்றவையும் சிற்சில ஆண்டுகளில் என் பார்வையில் இருந்தன. நானும் என் பொறுப்பைத் தட்டிக் கழிக்காது, அவ்வப்போது அங்கங்கே சென்று, என்னால் ஆனவற்றைச் செய்து, அவை அவை செம்மையுறச் செயலாற்றிவந்தேன். துணைமுதல்வராக மூன்றாண்டுகள் பொறுப்பினை ஏற்ற போதும் எனக்கு ஒதுக்கிய பணிகளைக் குறையின்றிச் செய்து வந்தேன். எனக்கு முன்னரே துணைமுதல்வர் பதவியும் அதன்வழி முதல்வர் பதவியும் வந்தது பற்றியும், நான் வேண்டாம் என ஒதுக்கியது பற்றியும் முன்னரே குறிப்பிட் டுள்ளேன்.

நான் ஒய்வு பெற்றபின் மாலைக் கல்லூரியில் ஓராண்டு பணிபுரியப் பணித்தார்கள் (1975-76). எனக்கு, என் அன்னை யின் பெயரால் அமைத்த அறப்பணி பற்றிய கல்விக் கூடங் களின் வளர்ச்சியில் போதிய கருத்திருத்த வேண்டிய நிலை யிலும், முப்பதாண்டு என்னை ஏற்றுப் போற்றிய வளர்ப்புத் தாயின் சொல்லைத் தட்டாமல் ஓராண்டு அப்பணியினையும் ஏற்றுச் செயலாற்றினேன். அப்போது பயின்ற மாணவர் பலரும் இன்று வரை என்னிடம் அன்பும் பாசமும் உடையவர் களாகவே இருக்கிறார்கள்.

இவ்வாறு என் வாழ்வில் பாதியினை இன்பமாகக் கழித்த பச்சையப்பர் வாழ்வு என்னைப் பல வகையில் உயர்த்தி உலகுக்கு அறிமுகம் செய்து வைத்தது. அரசியல், ஆன்மீகம், சமுதாயம் இன்னபிற துறைகளில் உள்ள பெரியவர் களெல்லாம் எனக்கு இக்காலத்தில் அறிமுகமாயினர். வெற்று ஆளாக சென்னை வந்த எனக்கு இருக்க வீடும்-என் மக்கள் மூவருக்கும் தனித்தனி வீடும் அமைக்க வழிவகுத்தன. இந்தப் பணி ஆண்டுகளில் ஊரில் உள்ள நிலங்களை விற்றே இவ்வீடுகளை அமைத்தேன் என்றாலும் அதற்கு மூல காரண மான நிலம் பெறவும் பிற வசதிகள் பெறவும் இக்காலத்தில் முடிந்தது. பச்சையப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் என்றால் ஒரு பெருமதிப்பு எங்கும் இருந்தது. பின் என் அன்னையின் கல்வி அறப்பணிக்கு இடம் பெற்று, கட்டடங் கள் கட்டி வளர்ச்சி பெறும் நிலையிலும் பச்சையப்பரை மறவா வகையில் என் வாழ்நாள் நன்கு கழிந்து வருகிறது. என் வாழ்நாளில்—அறுபது ஆண்டுகளில் (ஆனந்த முதல்—ஆனந்தவரை) -பாதி முப்பது ஆண்டுகள் என்னை அரவணைத்து, ஆக்கநெறி வகுத்து என் வாழ்வை வழிப் படுத்திய பச்சையப்பரை என்றும் வாழ்த்தக் கடமைப்பட்டுள் ளேன். வாழ்க பச்சையப்பர்! காஞ்சியில் பிறந்த பச்சையப்பர், காஞ்சியைச் சேர்ந்த என்னைக் காப்பாற்றிய நிலை பெரிது; சிறந்தது; போற்றுதற்குரியது.

## பொருள்மொழிக் காஞ்சி

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே, முனிவின்
இன்னாது என்றலும் இலமே, மின்னோடு
வானம் தண்துளி தலைஇ ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேரியாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியில் தெளிந்தனம் ஆதலின், மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

புறம் 192—கணியன் பூங்குன்றனார்

## ஆசிரியர் அ. மு. ப. அவர்கள் எழுதிய நூல்கள்—85க்கு மேல்

### தற்போது உள்ளன

| | | |
|---|---|---|
| இளமையின் நினைவுகள் | 2 | 50 |
| கொய்த மலர்கள் | 4 | 50 |
| துன்பச்சூழல் (நாவல்) | 2 | 00 |
| மக்கட் செல்வம் | 2 | 00 |
| பெண் | 1 | 50 |
| மனிதன் எங்கே செல்கிறான் | 1 | 50 |
| தாயின் மணி வயிற்றில் | 1 | 00 |
| தொழில் வளம் | 5 | 00 |
| வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள் | 3 | 00 |
| மலைவாழ் மக்கள் | 5 | 00 |
| சிறுவர்களுக்கு | 2 | 50 |
| வானொலி வழியே | 3 | 00 |
| நாலும் இரண்டும் | 2 | 50 |
| 19ம் நூற்றாண்டு உரைநடை | 8 | 00 |
| புதிய கல்விமுறை | 3 | 00 |
| பல்கலைக் கழகச் சொற்பொழிவுகள் | 20 | 00 |
| சாத்தனார் | 6 | 00 |
| கவிதை உள்ளம் | 5 | 00 |
| மு. வ. தமிழ்த்தொண்டு | 5 | 00 |
| வையைத் தமிழ் | 3 | 50 |
| கங்கைக் கரையில் காவிரித் தமிழ் | 5 | 00 |
| தமிழ்நாட்டு விழாக்கள் | 4 | 00 |
| காஞ்சி வாழ்க்கை | 5 | 00 |
| கவிதையும் வாழ்க்கையும் | 20 | 00 |
| வழுவிலா மணிவாசகர் | 7 | 00 |

### புதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| ஏழுநாடுகளில் எழுபது நாட்கள் | 36 | 00 |
| திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன் | 16 | 00 |
| வரலாற்றுக்குமுன் வடக்கும் தெற்கும் (புதிய பதிப்பு) | 16 | 00 |
| தமிழர் வாழ்வு | 16 | 00 |
| ஓங்குக உலகம் | 16 | 00 |
| தாய்மை | 20 | 00 |
| கல்வி எனும் கண் | 12 | 00 |
| ஆனந்த முதல் ஆனந்த வரை | 40 | 00 |

### உடன் வர இருப்பன

சான்றோர் வாக்கு (குறள் வழி)

நல்லவை ஆற்றுமின்—(வானொலிப் பேச்சும் பிறவும்)

| | | |
|---|---|---|
| அருந்திறலாளர் அ. மு. ப. (மாணவர் தொகுத்தவை-1992) | 20 | 00 |